ஸ்ரீ

ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத்வால்மீகிராமாயணவசனம்

# ஆரண்ய காண்டம்.

யாவரும் எளிதிலுணர்ந்துகொள்ளும்பொருட்டு
ஸ்ரீமத உபய வேதாந்த
ஏடுரிம்படி திருமலை லக்ஷ்மிகுமார கோடி கன்னிகாதானம்,
வித்துவான் அஷ்டாவதானம்,
மேலபாககம்,
தாத தேசிக தாதாசாரிய சுவாமியவர்களால்,
வடமொழியினின்றும், தென்மொழியில் வசனநடையாய்
மொழிபெயர்ப்பித்து,

ஆவுல - கிருஷ்ணசாமி நாயுடு,
நகர் - அந்தல - மூர்த்தி நாயுடு,
குளத்தூர் - முத்துசாமி நாயுடு,
என்னும் மூவர்களால்,

சென்னை மவுண்டுரோடு கார்டியன அச்சுக்கூடத்தில
பதிப்பிக்கப்பட்டது.

கலி. சகூஅகூக்கு - விஷுஹு - கடகமீ.

1881.

ஸ்ரீ

# படத்தின் அட்டவணை







ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீரகுநந்தன பரபரஹமணேநம:

# ஸ்ரீமத்வால்மீகிராமாயணம்

# ஆரண்யகாண்டம்.

தியானஸ்லோகம்

నీలాంభోదనిభంనిశాచరచమూ నిర్మూలనోద్యోగినం
కోదండంశరధింశరంసునిశితం నిస్త్రింశమాబిభ్రతం ||
వైదేహీ సహితంజటాలమజినం చీరంవసానంశుభం
తాదృక్షేణచలక్ష్మణేనసహితం శ్రీరామచంద్రంభజే ||

நீலாமபோதநிபம நிசாசரசமூ நிரமூலநோதயோகிநம
கோதணடமசரதிமசரமஸுநிசிதம நிஸத்ரிமசமாபிப்ரதம
வைதேஹீஸஹிதமஜடாலமஜிநம சீரமவஸாநமசுபம
தாதருக்ஷேணசலக்ஷமணேநஸஹிதம ஸ்ரீராமசநதரமபஜே

பரஹமாணட புராணததல நூறறெழுபதது நானகாவது அததியாயததில்
கபக்ஷதரநதேவம வநமாலாவிபூஷிதம, ஸ்ரீராமமபாலகநதயாயேத பால
ணடே முனீஸ்வரா:, ஸீதாதேவியுதமவீரம ஸாவாபரணபூஷிதம, ஸீதாபதிம்
நதயாயே தயோதயாகாண்ட உததமே, ஜடிலஞ்சீரவஸநந தணடகாரணய
ஸிநம, முனிவேஷதரமதயாயே தாரணயேகாணட உததமே, ஸுகரீவாதியுதம்
ஸமபஸ மாஙகாவருதமீஸ்வரம, மஹேஸ்வரஸமநதயாயேத கிஷகிநதாகாண்ட
தமே, சநதரபிமபஸமாகாரம வாஞசிதாாதத பரதாயகம, ஹநூமதஸேவிதநத
யேத சுநதரேகாணட உததமே, ராவணநிரிஹநதாரம் பரஹ்மருத்ராதிஸேவிதம்,
தாதேவியுதமயௌததே ராமநதயாயேத தருதமபுஜே; அகஸத்யாதிமுனிஸ்துத்யம்
ஞ்சிதாாதத ப்ரதாயகம, ஸாவதேவோததரமதயாதே துததரேகாணட உததமே;)
ற காணடங்கள தோறும தியான பேதஙகள கூறபபட டிருக்கினறமையினு,
யோததியாகாணடததி லெழுதபபட்ட சுலோகமே ஆரணயகாண்டததின தியான
லோகமெனவணாக

## பாலகாண்டத்தின் தியானஶ்லோகம்.

ఖేలాన్దోలితకాకపక్షులసితం నీలాళకం బాలకం
లోలాంగం వనమాలికామధిగళే డోలాయితాం బిభ్రతం ॥
ఫాలాఞ్చన్మృగనాభిసారతిలకం కాలాన్తకాద్యైర్నుతం
లీలామానుషవిగ్రహం రఘుపతిం శీలాఞ్చితంచిన్తయే ॥

கேலாநதோளிதகாகபக்ஷலஸிதம நீலாளகமபாலகம
லோலாஙகமவநமாலிகாமதிகளம டோலாயிதாமபிபரதம.
பாலாஞசனமருகநாபிஸாரதிலகம காலாநதகாதயைாநுதம
லீலாமாநுஷவிகரஹமரகுபதிம ஶீலாஞசிதஞசிநதயே

## அயோததியாகாண்டத்தின் த்யானஶ்லோகம்.

కన్దర్పాభంకమలనయనం కంబుకణ్ఠంకటాక్షైః
కారుణ్యాక్తైఃకలితవచసాం కామితంకల్పయన్తం ॥
భూషాభేదైర్వివిధరుచిరైః భూషితంభూషితాఙ్గ్యా
సీతాదేవ్యాదరహసితయా సేవితంరామమీడే ॥

கநதாபபாபமகமலநயநம கமபுகணடமகடாக்ஷைஃ
காருணயாகதைஃகலிதவசஸாம காமிதமகலபயநதம.
பூஷாபேதைாதிவ்ஷருசிரைஃ ாபூஷிதமபூஷிதாஙகயா
ஸீதாதேவயாதரஹஸிதயா ஸேவிதமராமமீடே.







ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# ஆரண்யகாண்டம்.

## முதலாவது சருக்கம்

*சக்கரவர்த்தித் திருமகனார் ரிஷிகளது ஆஶ்ரமங்களிற் சென்றருளி அவர்களால் பூஜிக்கப் பட்டனரென்பது.*

அநந்தரம் மிகவும் தீரராகிய சக்கரவர்த்தித் திருமகனார் ஸீதா லக்ஷ்மணர்களுடன் தண்டகாரண்யத்தி லுட்புகுந்து, தர்ப்பங்களாலும், மரவுரிகளாலும் நிறைந்துள்ளனவும், பிரஹ்ம தேஜஸ்ஸினால் விளங்கப் பட்டனவும், விண்ணிடையில் விளங்குகின்ற ஸூரியமண்டலம்போலக் கண்ணுற்றுப் பார்ப்பதற் கரியனவும், ஸர்வபூதங்களுக்கும் தஞ்சமாயின வும், மிகச் சுத்தி செய்யப்பட்ட அங்கணங்களை யுடையனவும், பலவகை மிருகங்களாலும், பலவகைப் பறவைகளாலும் சூழப்பட்டனவும், யாவ ராலும் பூஜிக்கப்பட்டனவும், நிரந்தரம் ஆடுகின்ற அப்ஸரஸர்களை யுடை யனவும், விசாலங்களாயுள்ள அக்கினிஹோத்திர மாளிகைகளாலும், ஹோமபாத்திரங்களாலும், மான் புலிகளின் அஜினங்களாலும், யாகவேதி யில் பரப்பப்பட்ட தர்ப்பங்களாலும், பலாசின ஸமித்துகளாலும், பூர்ணகும்பங்களாலும், காய் கனி கிழங்குகளாலும் விளங்குகின்றனவும், காட்டிலுள்ள பற்பல சிறந்த விருக்ஷங்களால் சூழப்பட்டனவும், பூதபலி வைஶ்வ தேவாதிகளினால் பூஜிக்கப்பட்டனவும், வேதகோஷங்களினு லொலிக்கப்பட்டனவும், காட்டிலுள்ள பலவகை மலர்களாலும், கமலங்க ளுடன் கூடிய தடாகங்களினாலும், மணங்கமழ்ந்தும், குளிர்ந்து முள்ளன வும், ஐம்புலன்களை வென்றவர்களும், மரவுரி மானுரிகளை யுடுத்தவர் களும், வெய்யோன் வைஶ்வாநரர்களை நிகர்த்தவர்களும், உடைசுருங்கின வர்களும், பிரஹ்மத்தை யறிந்தவர்களும், நெடுநாள் வாழ்ந்தவர்களு மாகிய முனிவர்களினால் திகழப்பட்டனவுமாகிய முனிவர்களின் ஆஶ்ரம மண்டலங்களைக் கண்ணுற்று, கட்டிய நாணை யவிழ்த்துக் கார்முகத்தைத் தோளில் பூட்டிக்கொண்டு விநயத்துடன் அங்கங்கே எழுந்தருளினர். திவ்விய ஜ்ஞானமுடைய அங்கங்குள்ள மஹரிஷிகளும், சந்திர னுதய மானாற்போலத் திகழ்ந் தெழுந்தருளிய பெருமாளையும், பிராட்டியாரை யும், இளையபெருமாளையுங் கண் டெழுந் தெதிர்கொண்டு வந்து, இவர்

களது சேர்த்தியையும், அழகினையுங் கண்டு தீங்குவருமோவென் றச்சங் கொண்டு தீமை நீங்கி நன்மையுற்றாக கூடி வாழ்கவென் றுசீர்வாதஞ் செய்த தழைத்துக்கொண்டு வந்து பூஜித்துப் பெருமாளுடைய ஸௌகுமார்யத்தையும், அழகினையும், அவயவங்களின் இசைவையும், காந்தியையும், சிங்காரத்தையும் கண்டு வியப்புற்று, பிராட்டியாரையும், இளையபெருமாளையுங் கண்டு கண் கொட்டாமல் பார்த்துத் திகைத்து நின்றனர்கள். பின்பு முதன்மையாயுள்ள முனிவர்கள் பெருமாளைப் பர்ணசாலையி லெழுந்தருளப்பண்ணி, கந்தமூலபலங்களையும், அர்க்ய பாத்யாசமனீயங்களையும் கொண்டு வந்து விதியின்படி பூஜைசெய்து அவரை நோக்கி, ஸ்ரீராமசந்திரரே! நீரே எங்களுடைய தருமங்களைப் பாதுகாப்பவரும், யாங்கள் தஞ்சமடையத் தக்கவரும், எங்களால் பூஜை செய்துகொள்ளத் தக்கவரு மாகின்றீர், துஷ்டநிக்ரஹ சிஷ்டபரி பாலனஞ் செய்து உலகங்களைப் பாதுகாக்கின்ற அரசனே குருவாகின்றா னல்லனோ? (நாவிஷ்ணுః ப்ருதிவீபதிః) என்றிருப்பதால் விஷ்ணுவின் அம்சமின்றிப் பாதுகாக்குங் குணமுள்ளதாகாமையினாலும், (அஷ்டாபிர் லோகபாலாநாம் மாத்ராபிர்நிர்மிதோ ந்ருபః) என்றிருப்பதால் இந்திர னுடைய அம்சமுடைய னுதலாலேதானே போகங்களை யனுபவிக்கின்ற மையாலும், இராஜராஜனும் பூஜைக் குரிய னாகின்றான்; ஸ்ரீமந்நாராயண னுடைய நாலிலொன்று அம்சமுடைய ராகியே யன்றோ? தேவர் அவ தரித் திருக்கின்றீர், ஆதலின், நீர் உலகங்களைப் பாதுகாத்து உலகங்களி னால் வணங்கப்பட்டவராகி, எல்லாப் போகங்களையும் அநுபவிக்கின்றீ ரென்பதற் கையமுளதோ? தேவர் திருமாளிகையி லெழுந்தருளி யிருக் கினும், காட்டி லெழுந்தருளி யிருக்கினும், நித்ய விபூதியி லிருக்கினும், லீலாவிபூதியி லிருக்கினும், தேவரே எங்களுக் கிறையவர், ஆதலின், உம்முடைய நாட்டிலுள்ளவர்களும், ஸம்ஸாரவிஷயங்களைத் துறந்து, உம் முடைய விஷயத்திலேயே குடிகொண்ட மன முடையவர்களும், காமக் குரோதங்களை வென்றவர்களும், பிறரைச் சபித்த தழிக்கும் செயலை விட்ட வர்களும், (தாஸபூதாஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:) என் கிறபடி உம்மைத் தொண்டு பூண்டவர்களும், உமக்குப் பிள்ளைகள் போன்றவர்களுமாகிய எங்களை நீர் பாதுகாத் தருளக் கடவீரென்று கைகுவித்துக்கொண்டு வேண்டிப் பற்பல ஆகாரங்களினால் ஸீதா ராம லக்ஷ்மணர்களைப் பூஜித்தனர்கள். மற்றுமுள்ள முனிவர்களும் விதியின் படி பெருமாளைப் பூஜித்து மகிழ்ந்தனர்கள்.

ஆரண்யகாண்டத்தில் முதலாவது சருக்கம்

முற்றிற்று.

---

## இரண்டாவதுசருக்கம்.

### பெருமாள் காட்டிடையில் விராதனைக் கண்டது.

அநந்தரம் பெருமாள் அன்றிரவை யங்குப் போக்கி, மறுநாளுதயத்தில் முனிவர்களைப் பணிந்து விடை பெற்றுக்கொண்டு பலவகை மிருகங்கள் நிறைந்தும், புலி கரடி செந்நாய் முதலியவைகள் சூழ்ந்தும் முறிக்கப்பட்ட மரஞ் செடி கொடிகளை யுடையதும், காற்ற கரிய மடுவுகளை யுடையதும், கூவுகின்ற பற்பல பக்ஷிகளை யுடையதும், பயந் தருவதுமாகிய காட்டினுட்சென்று, ஸீதா லக்ஷ்மணர்களுடன் கூடி யங்கே மலையின் சிகரம்போலப் பருத்துப் பரந்தவனும், கோரமாகக் கூவுகின்றவனும், மிகவும் ஆழ்ந்த கண்களை யுடையவனும், பெரிய தலையை யுடையவனும், பருத்த வயிற்றை யுடையவனும், அருவருப்புறத் தக்கவனும், பயங்கரனும், குருதியினால் நனைக்கப்பட்ட புலித்தோலை யுடுத்தவனும், வாயினைத்திறந்து உலகினை விழுங்க முயலும் யமன் போன்றவனும், எஃகினால் செய்யப்பட்ட நெடிய சூலத்தில் மூன்று சிங்கங்களையும், நான்கு புலிகளையும், இரண்டு செந்நாய்களையும், பத்து மான்களையும், தந்தங்களுடன் கூடிய பெரிய யானையின் தலை யொன்றினையும் கோத்தேந்திக்கொண்டு சிங்கநாதம் செய்பவனுமாகிய விராதனென்னும் ராக்ஷஸனைக் கண்டனர். அந்த ராக்ஷஸனும் இவர்களைக் கண்டு சினங்கொண்டு, காலாந்தகன்போல வோடி வந்து ஸீதையை இடையிற் பற்றி எடுத்துக்கொண்டு திரும்பி யொதுங்கி, ஸ்ரீராம லக்ஷ்மணர்களை நோக்கி, மானிடர்களே! நீங்கள் யாவர்கள் ஜடைதரித்து மரவுரியுடுத்து முனிவேடம் பூண்டு தண்டகாவனத்தை யடைந் திருப்பவர்களாயினும், பெண்ணொருத்தியை யுடன் அழைத்துக்கொண்டு வந்திருக்கின்றீர்கள்; என்னுடைய இவ்வனத்தை யடைந்தும் நீங்கள் உய்வீர்களோ? நீங்கள் தவசிகளா யிருக்கையில், பெண்ணுடன் வாழ்வ தெவ்வண்ண மொக்கும்? இவ்வண்ணம் நீங்கள் அதருமஞ்செய்து பாவிகளாகின்றமையின், முனி தூஷகர்களாகின்றீர்கள், நீங்கள் யாவரோ உரைசெய்மின்; யான் விராதனென்னு மரக்கன், நானிவ்விடத்தில் ரிஷிகளது மாம்ஸங்களைப் புஜித்துத் திரிகின்றேன்; யான் உங்களையும் கொலை செய்து, உங்களுடைய ரத்தத்தையும் பானஞ் செய்வேன்; இந்தப் பெண் எனக்கே பாரியை யாகுவாள்; என்றிவ்வண்ணம் அச்சமற்றுச் செருக்குற்று மொழிந்தனன். ஸீதாபிராட்டியாரும் அம்மொழியைக்கேட்டுப் பெருங்காற்றில் வாழைமரம்போல நடுங்கினள். இவ்வண்ணம் விராதனால் அபஹரிக்கப்பட்டு நடுங்குகின்ற ஸீதையைப் பெருமாள் கண்ணுற்று மிகத் துன்பமடைந்து இளையபெருமாளை நோக்கிப் பாராய் லக்ஷ்மணா! ஜனகமஹாராஜன் திருமகளும், தசரத

சக்கரவர்த்தி மருமகளும, என்னுடைய பாரியையுமாகியும், ஸீதை விராதனால் அபஹரிக்கப்பட்டு வருந்துகின்றனள்; நாம் இவ்வகையாகிய தீமைகளையுற நிற்பபோமென்பதை யறிந்தேயனறோ? கைகேயி என்னைக் காட்டி லுறையும்படி வரங்கேட்டனள்; அவளுடைய கோரிக்கை இப்பொழுதே விரைவில் நிறைவேறி விட்டது, கைகேயி தீர்க்காலோசனையுடைய ளாதலாலேயே தன் மகனுக்கு ராஜ்ஜியம் வாய்ப்பதுமாத்திரத்தில த்ருப்தியடையாமல் யான் காடு செல்லும்படிச் செய்தனள். இப்பொழுது கைகேயி தன் மன மீடேறி மகிழ்ந்தனள். ஸீதை பரபுருஷனால் பரிசிக்கப்பட்டவ ளென்பதினும், எனக்குக் கடுந்துயர முளதோ? யான் தந்தையையு மிழந்து, ராஜ்ஜியத்தையுந் துறந்து, பாரியையும் பறி கொடுக்கும்படி நேர்ந்த தந்தோ? என்றிவ்வண்ணம கண்ணீர் ததும்பத் துன்புற் றுரை செய்கையில், இளையபெருமாள் அதுகேட்டு மந்திரத்தினால் தடையுற்று நெட்டுயிர்ப்பு விடுகின்ற நச்சரவம்போலச் சினங்கொண்டு பெருமாளை நோக்கி, எம்மையனே!—

అనాథఇవభూతానాం నాథస్త్వంవాసవోపమః
మయాప్రేష్యేణకాకుత్స్థ కిమర్థంపరితప్యసే ||

*அநாதஇவபூதாநாம நாதஸ்த்வமவாஸவோபமஃ*
*மயாப்ரேஷ்யேண காகுஸ்தத கிமர்த்தமபரிதப்யஸே*

தேவர் ஸர்வபூதங்களுக்கும் நாதனாகிய ஸ்ரீமந்நாராயணனாகியும், இந்திரனுக்கு நிகரான பராக்கிரம முடையவராகியும், திறமையற்றவனைப் போல ஏன் தவிக்கின்றீர், தேவருக்குத் தொண்டனாகிய யானிருக்கையிலும், ஸந்தாப முறுவ தொக்குமோ? இந்த விராதன் சினமுற்ற என்னாலெய்யப்பட்ட கணையினா லடிபட்டிறந்து வீழ்கையில், இவனுடலிலுள்ள ரத்தத்தை இந்தப் பூமியே பானஞ் செய்யப் போகின்றது, முன் யான் பரதனிடத்திற்கொண்ட சினத்தை இப்பொழுது இந்த விராதனிடத்தில் விடுவேன்; இப்பொழுது என்னால் தொடுத்தெய்யப்பட்ட சரம் விராதன் மார்பில விழக் கடவது; அவன் மார்பினின்றும உயிர் வெளியிற் செல்லக் கடவது; அவனு முடனே தரையில சுழன்று வீழக் கடவன்; என்றுரைத்துத் தேறறினார்.

ஆரண்யகாண்டத்தில இரண்டாவது சருக்கம
முற்றிற்று.

---

பெருமாளு பிராட்டியார் இளையபெருமாள் இவர்கள் தன்புறுவது மனுஷ்ய பாவனையென்று முன்பே கூறி யிருக்கின்றோம, பிராட்டியாரை விராதன் தொட்டமையால கறபழியாதோவெனில, அழியாது; பெண்களாக ஒருவனைக் காமித்துத்

தொடுவார்களாயின், கற்பழியுமே யல்லது, ஆபத்தை யடைந்த காலத்தில் இவர்க ளிஷ்டமின்றி, வலுவில் பிறர்களால் தொடப்பட்டமாத்திரத்தில் கற்பழியாது; ஆகையாலேயே சுந்தரகாண்டத்தில் பிராட்டியார் ஸ்ரீமதாஞ்சநேயர் முதுகி லேறிக்கொண்டு ஸ்ரீராமபிரானிடம் சேர்வதற் குடன்பட்டிலர்; இவ்வண்ணமே யிங்குப் பிராட்டியார் உரைசெய்திருக்கின்றனர் (ஸராமம் லக்ஷ்மணம்) என்பது முதலா யுள்ள ச்லோகங்களின் உண்மையாயுள்ள பொருள் யாதெனில், அங்கே என்பதற்கு இடையென்னும் பொருளுமன்று, மடியென்னும் பொருளுமன்று, ஸமீபமென்பது பொருள்; (அங்கேநாதாய) என்பதற்கு, அங்கே அநாதாய என்று பதம், சீதையை எடாமல் என்று பொருள்; (ஸபார்யௌ) ஸபையில் பூஜிக்கத்தக்கவர்கள்; (க்ஷீணஜீவிதௌ) பிறருயிரை மாய்த்தவர்கள், (கதமபாபௌ, முனிஸ்ருஷகௌ) ஏன் பாவிக ளாகுவீர்கள்; (அதர்மசாரிணௌ) அதர்மத்தை நாசஞ் செய்பவர்கள்; (பாபயோ:) பாவஞ்செய்கின்ற கைகளால், (பார்யா) காந்தியினால் சிறந்தவள்; (பரஸ்பர்சாத்) விராதன் சமீபத்திற் சென்றிருப்பதால், என்று சிலர் பொருளுரைத்துப் பெருமானை விராதன் புகழ்ந்ததாகவும், ஸீதையைப் பரிசிக்காமலே நின்றதாகவும் கூறுகின்றனர்கள். இப்பொருள் நியாயமாகத் தோற்றாது; கிரமமான பொருளில் குற்ற மில்லாமையின், இவ்வளவு பிரயாஸம் பயனற்றது, ஸம்ப்ரதாயார்த்தம் ஏதெனில், பிராட்டியார் விராதனிடத்தில் யாதுசெய்வரோ வென் றச்சங்கொண்டு நடுக்குற்றிலர்; மகன் கொடியனாயிருக்கினும், தாய் அம்மகன்மீ தருள்கொண்டு, இவன் பர்த்தாவினால் சிக்ஷிக்கப்படுவனே என்றஞ்சி நடுக்குறுவதை யுலகில் யாம் கண்ணாற் கண்டிருக்கின்றோ மல்லோமோ? இவ்வண்ணமே லோகமாதாவாகிய பிராட்டியாரும் விராதன் இவ்வண்ணம் தீச்செயல் புரிந்து பெருமானால் கொலைசெய்யப்படுவனே என்றச்சங் கொண்டே நடுக்குற்றனள், ஆகையாலேயே அவனைக் காண்கையிலும், தன்னை யவன் பற்றுகையிலும் அச்சமுற்றிலள்; அவனுடைய கொடிய மொழியைக் கேட்டபின்னே யன்றோ? நடுங்கினள்; ஆதலின், இப்பொருளே யுண்மையெனக் கொள்க.

பெருமாளும் பிராட்டியாரை விராதன் கொண்டுபோய்விடுவனோ என்றாவது, நம்மை இவன் கொலைசெய்து விடுவனோ என்றாவது, அவனைக் கொலைசெய்யுந் திறமை இல்லையே என்றாவது பரிதாப முற்றிலர், இப்பொழுது யான் ராஜதருமங்களைத் துறந் திருக்கின்றமையின், இப்பொழுது ராஜதருமத்தை யங்கீகரித்து வில்லெடுத் திவனைக் கொலை செய்வது தருமமாகுமோ வென்னும் ஐயத்தினாலும், இவனை யான் கொலைசெய்து விடுவேனோவென்று ஸீதை இவ்வண்ணம் அச்சங்கொண்டு நடுங்குகையில், இவளை நிராகரித்து அவனை எவ்வண்ணங் கொலைசெய்வேனோ வென்பதினாலும், பெருமாள் பரிதாபமுற்றனரேயன்றி, வேறில்லை; ஆகையாலேயே பிராட்டியாரை விராதன் எடுத்துக்கொள்ளும்போது துன்புறாமல், பிராட்டியார் நடுங்குவதைக்கண்ட பின், துயரங் கொண்டனர். இளையபெருமாளும் பெருமானை நோக்கித் தேவர் ஸ்ரீமந் நாராயணனே யாதலின், தேவேந்திரன் போலத் தேவரும் மூவுலகங்களுக்கும் நாத ராகி யிருக்கையில், அற்பமாகிய கோஸலராஜ்ஜியத்தை மானிடபாவனையில் துறந் திருக்கினும், அநாதர்போ லாகுவீரோ? நாதரே யாதலின், இவனைக் கொலைசெய்வது தருமமே என்றருளி, மேலும் பிராட்டியார் தாக்ஷிண்யத்தினாலும், தேவர் ஒருவேளை இவனைக் கொல்ல மனமுறீராகில், தேவர்க்குத் தாஸனாகிய அடியேனுக்கு ஆஜ்ஞை செய்வீராகில், யானே இவனைக் கொலை செய்வேனெனவும் விண்ணப்பஞ் செய்தனர். ஆதலின், இதுவே பெருமாள் திருவுளமென் றுணர்க. பெருமாளும் இளையபெருமானை நோக்கி, தம்பி! பாராய்; (விராதாங்கே) விராதனுடைய வாழ்வில் (ப்ரவேசிதாம்)

## மூன்றாவது சருக்கம்.

### விராதன் ஸ்ரீராம லக்ஷ்மணர்களை எடுத்துத் தோளில் தாங்கி நடந்தது.



அநந்தரம் மீளவும் விராதன் ஸ்ரீராம லக்ஷ்மணர்களை நோக்கி, மானிடர்களே! நீங்கள் யாவர், எங்குச் செல்லுகின்றீரென யான் கேட்கையிலும், பதிலேன் உரைக்கின்றிலீர்கள்; பதிலுரைமின் என்று வினவினன். பெருமாளவனை நோக்கி, அடா விராதா! யாங்கள் இக்ஷ்வாகு குலத்திற் பிறந்தவர்கள்; யாங்கள் நற்செயலினர்களாதலின், இவ்வநத்தை யடைந்து சஞ்சரிக்கின்றனம்; யாங்கள் உன்னையு மறிய விரும்புகின்றோம்; நீ யாவன்? இவ்வரணியத்தில் ஏன் திரிகின்றனை, உரையாயென றருளிச்செய்தனர். விராதனும் பெருமாளை நோக்கி, ராஜனே! யானுரைக்கின்றேன் கேளாய், யான் ஜயனென்பவனுக்குச் சதஹ்ரதை என்பவளிடத்திற் பிறந்தேன்; என் பெயர் விராதனென்பார்கள், யான் தவஞ்செய்து பிரஹ்மதேவனிடத்தில் சஸ்திரங்களினால் அழிவுறாத வாறும், பிளப்புஞ் சிதைப்பும் அடையாதவாறும், வரம்பெற்றிருக்கின்றேன்; ஆதலின், நீங்கள் என்னை எதிர்க்காமல் இந்தப் பெண்ணை விட்டு விட்டு விரைவாக வந்தவழி பற்றிச் செல்லுக; இவ்வண்ணம் நீங்கள் ஓடி விடுவீர்களாயின், உங்களை யான் கொலை செய்யேனென்று மொழிந்தனன். பெருமாள் அதுகேட்டுச் சினமுற்று அவனை நோக்கி, அடா அற்பப் பயலே! நீ வலுவில் யமனைத் தேடுகின்றனைபோலும், போரில் என்னெதிரில் நின்றபின்பும் பிழைத்துச் செல்வாயோ? மரண முறுவாய்; நிற்க, என்றருளிச் செய்து, கோதண்டத்தில் நாணை ஏற்றிட்டு, விரைவாகக் கூரிய கணைகளைத் தொடுத்து, கருடவேகம், வாயுவேகங்களை யுடையனவும், தங்கக்கட் டமைந்தனவுமாகிய

---

ஆதரங்கொண்டிருக்கின்ற ஸீதையை; கைகேயி என்னப்படும் மாயையும், யானருகிலிருக்கின், க்ஷத்ரதருமத்தைத் துறவே னாதலின், தன் மக்களாகிய உயிர்கள் ஸம்ஸார மென்னும் ராஜ்ஜியத்தைப் பெறுவாகளாயினும், என்னால் திருத்தப்பட்டு விரைவில் தன்னைக் கடந்து செல்வார்கள்; என்று ஆலோசனை செய்தே யல்லவோ? என்னைக் காடு புகும்படிப் பிரித் தனுப்பினள்; ஆதலின், அவளுடைய எண்ணம் இந்த விராதன் விஷயத்தில் இப்போழ்தே நிறைவேறுகின்றதன்றோ? (மமமாதாஸுமத்யமா) மம, மா, தாஸு, மத்யமா என்று பதம்; என்னுடைய திருவாகிய ஸீதையும், அந்த மாயை முதலானோர்களது நடுவிற் சேர்ந்தவளோ? இவளும் இவனைக் கொலை செய்வதில் வருந்துகின்றன ளல்லளோ? என ஸீதைக்கு (பரஸ்பர்சாதது) பகைத்த கொடிய இந்த விராதன் பிழைப்பதாலும், (நதுஃகதரம) மிகவும் மகிழ்வு, (அஸ்தி) உளது, இவள் தந்தையைப் பிரிந்து வந்ததற்கும், ராஜ்ஜியத்தை விட்டு வந்ததற்கும் துன்புறாது, இவனைக் கொலை செய்வதில் துன்புறுகின்றனளே என்று கருத்துக் கொண்டே யருளிச் செய்தன ரெனவு மறிக;—

றந்த ஏழு பாணங்களையுமெய்து விராதன்மேல் நாட்டினர். அந்தச் சரங்
ளும விராதனுடலைப பிளந்து குருதிதோய்ந்து தரையில் வீழ்ந்தன;
விராதனும சினமுற்றுச சீதையை விட்டு விட்டுக காலாந்தகன்போலச்
சூலத்தை ஏந்திக்கொண்டு ஸ்ரீராம லக்ஷ்மணர்களை எதிர்த் தோடி வரு
கையில், ஸ்ரீராமலக்ஷ்மணர்களும சரமாரிபொழிந் தவனை யடித்தனர்கள்.
அந்த விராதனும அதற்கு நகைத்து நின்று உடலை உலுக்குகையில்,
அந்தப் பாணஙகள் யாவும உதிர்ந்து வீழ்ந்தன; விராதன் வரதானத்தி
னால் இவர்களுடைய பிராணங்களுக கிறககாமல உயிரை நிலைககச
செய்துகொண்டு சூலத்தைச சுற்றி இவர்களமே லெய்தனன. பெருமா
ளதனை யாகாயத்திலேயே இரணடு பாணஙகளினால மூன்று துண்டாகச்
செய்தருளுகையில், வச்சிராயுதத்தினா லறுக்கப்பட்ட மேரு சிகரம்
போல அந்தச சூலம தரையில வீழ்ந்தது; உடனே விராதன
சினமுற றுருகி யோடி வருகையில், ஸ்ரீராம லக்ஷ்மணாகளும் கரு நாகங்
கள் போன்ற வாளகளை யுருவிககொண்டு வீசினர்கள். அவன அதனை
லக்ஷியஞ் செய்யாமல் ஸ்ரீராம லக்ஷ்மணாக ளிருவர்களையுமெடுத்துத் தன
தோளகளில வைத்துககொண்டு செலலுகையில், பெருமா ளிளையபெரு
மாளை நோக்கி, அடா தமபி! இவன நாம போகவேண்டிய வழியிலே
தானே செலலுகினறனன; ஆதலின், இவன நம்மைச் சுமந்து செல்லுக;
இடையில கொலவோமென் றருளிச செய்தனா. அவனும இவர்களைக
குழந்தைகளைப போலவே எளிதாகத தாங்கிக்கொண்டு சிங்கநாதம்
செய்து பலவகை மரங்களடர்ந்து மஹாமேகம் போன்றதும, பலவகைப்
பறவைகளினு லொலிக்கப் பட்டதும, பறபல விலங்குகள் சூழ்ந்துளளது
மாகிய அந்தத தணடகாவனத்தி னிடையிற சென்றனன.

ஆரணயகாண்டத்தில மூன்றாவது சருககம
முற்றிற்று.

---

## நா ன் கா வ து ச ரு க க ம்.

பெருமாளும இளையபெருமாளும விராதனைக
கொலைசெய்து புதைத தருளியது.



இவ்வண்ணம் விராதன ஸ்ரீராம லக்ஷ்மணாகளைத் தோளி லெடுத்துக
கொண்டு செல்லுகையில், பிராட்டியார் கண்டு கைகளை யுயா வெடுத்துக்
கொண்டு, அந்தோ? என் பிராணநாதர் தம்பியுடன் கொடிய வரக்கனு
லெடுத்துக்கொண்டு போகப படுகின்றனரோ? என்னைச் செந்நாய் புலி கரடி
முதலிய கொடிய மிருகஙகள தின்னும்; அடா அரக்கர் கோமானே! அவர்

களை விட்டு விட்டு, என்னையே எடுத்துக்கொண்டு செல்லடா என்று கூ
கையில், ஸ்ரீராம லக்ஷ்மணர்க ளிருவரும் அதுகேட்டு விராதனை விரைவி
கொலைசெய்யக் கருதிய பெருமாள் விராதனுடைய வலது தோளையும்
இளையபெருமாள் இடது தோளையும், வாள்களினால் வெட்டி விட்டனர்
உடனே விராதன் தோள்கள் அறுப்புண்டு, அசனியா லடிபட்ட மலை
போலத் தரையில் சாய்ந்து வீழ்ந்தனன் ஸ்ரீராமலக்ஷ்மணர்களும் அவனை
கால்களினாலும், முழங்கால்களினாலும், முஷ்டிகளினாலும் மிதித்தும்
இடித்தும், குத்தியும், உயரவெடுத்துத் தரையிலடித்தும், தரையில் புரட்டி
யும், துகைத்தும் கொன்றனர்கள் இவர்களால் விராதன் இவ்வண்ணம்
பீடைசெய்யப்பட்டும் இறக்காமல் வருந்துவதைப் பெருமாள் கண்டு
இளையபெருமாளை நோக்கி, அடா லக்ஷ்மணா ! இவன் வரதானத்தால் நம
மாயுதங்களால் மரணமுறுகின்றிலன் , ஆதலின், இவனைக் குழிதோண்டி
புதைத்துச் செல்வோமென றருளிச் செய்தனர். விராதன் அந்த வாக்கி
யத்தைக் கேட்டுப் பெருமாளை நோக்கிப் புருஷ சிங்கமே ! இந்திரனுக்கு
நிகரான பலமுடைய உம்மால் யான் அடிக்கப் பட்டேன் , யான் மோஹ
தினால் முன்பு தேவரை யறிந்திலேன் , இப்போது தேவர் ஸ்ரீராமரெனவும்
இவர் இளையபெருமாளெனவும், இவர் பிராட்டியாரெனவும், நன்குணர்
கின்றேன் , யான் சாபத்தினால் இவ்வண்ணம் கொடிய அரக்கனாயினேன்
யான் தும்புருவென்னும் கந்தருவன் , குபேரனு லிவ்வண்ணம் சபிக்கப்
பட்டேன் , சாபமுறுங் காலையில் யான் வைச்ரவணனை வேண்டுகையில்
அவன் என்னை நோக்கி, ஸ்ரீராமசந்திரர் போரில் உன்னைக் கொலைசெய்வார்
அப்பொழுது நீ சாபந்தீர்ந்து வானேறக் கடவையென்று மொழிந் திருந்
னன். யான் அவனிடத்தில் சேவைபண்ணும் வேளையில், யான் ரம்பை
யிடத்தில் மோஹங்கொண்டு சேர்ந்திருந்தமையின், எனக் கிவ்வண்ணம்
சாபம் நேர்ந்தது , தேவருடைய அருளினால் அந்தக் கொடிய சாபத்தினின்
விடுபட்டேன் , இனி யான் என்னுடைய லோகம்போய்ச் சேர்வேன்
உங்களுக்கு மங்கல முளதாகக் கடவது. இங்கிருந்து ஒன்றரையோஜனை
தூரத்தில் சரபங்கமஹாமுனி ,எழுந்தருளி யிருக்கின்றனர் , தேவர்கள்
அங்கெழுந் தருளுவீர்களாயின், அவரே உங்களுக்கு நன்மை யளித் தருளு
வார் ; என் சரீரத்தையும் குழியில் தள்ளிப் புதைத்துச் செல்க ,—

రక్షసాం గతసత్త్వానా మేష ధర్మస్సనాతనః
అవటే యే నిధీయన్తే తేషాం లోకా మహోదయాః ॥

ரக்ஷஸாங்கதஸத்வாநா மேஷதர்மஸ்ஸநாதந:
அவடேயேநிதீயந்தே தேஷாம்லோகாமஹோதயா:.

சவத்தைக் குழியில் புதைக்கவேண்டு மென்பதே ராக்ஷஸ தர்
மந்த ராக்ஷஸர்கள் குழியில் புதைக்கப் படுகின்றனர்களோ ? அவ

அழிவற்ற உலகங்களை யடைகின்றனர்கள்; என்றிவ்வண்ணமுரைசெய்து விட்டு வானேறினன். பெருமாளும் அந்த வாக்கியத்தைக் கேட்டு இளைய பெருமாளை நோக்கி, லக்ஷ்மணா! யானை போன்ற இந்த விராதனுடைய உடலைப் புதைக்கப் பெரிய குழியைத் தோண்டக் கடவையென்றுரைத்து, விராதன் கழுத்தைக் காலினால் மிதித்து நின்றனர். அனந்தரம் இளைய பெருமாளும் அந்த விராதனருகில் மண்வெட்டி முதலிய கருவிகளினால் பெரிய குழி தோண்டிக் கழுத்தைத் திருகிக் கொன்று குழியில் தள்ளினர். அப்பொழுது பயங்கரமாகக் கூவுகின்ற அந்த விராதனை ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவருமெடுத்துக் குழியில் தள்ளி, இவன் வரத்தினால் சஸ்திராதிகளுக்குச் சாகாவிடினும், இவனைக் கொல்லவுபாயம் இதுவேயென்று தேர்ந்து மகிழ்ந்தனர்கள். அந்த விராதனும் தான் நற்கதி பெறுவதன் பொருட்டுத் தானே தன்னைப் புதைக்கும்படி வேண்டிக் கூவி இறந்துகொள்கையில், அவ்வனமெங்கும் அவ்வொலியினாலொலித்தது; ஸ்ரீராமலக்ஷ்மணர்களும் அவ்வண்ணம் அவனைப் பள்ளத்தில் தள்ளிச் சிலைகளினால் அக்குழியை நிறைத்து மூடி மகிழ்ந்து, பிராட்டியாரையும் அழைத்துக்கொண்டு விண்ணினிடையில் சந்திரசூரியர்கள்போலக் கானிடையில் சஞ்சரித்துத்திகழ்ந்தனர்கள்.*

ஆரண்யகாண்டத்தில் நான்காவது சருக்கம்

முற்றிற்று.

---

## ஐந்தாவது சருக்கம்

சரபங்கர் பெருமாளைக் கண்டு மகிழ்ந்த பின்பு

விண்ணுலகடைந்தது.



இவ்வண்ணம் பெருமாள் விராதனைக் கொலை செய்து விட்டுப் பின்பு, சீதையை யாலிங்கனஞ்செய்துகொண்டு துன்புறற்கவென்று தேற்றி, இளைய பெருமாளை நோக்கி, அடா தம்பி! இந்த வனம் மிகக் கொடியது, காட்டு

---

* சீதாபிராட்டியார் ஸ்ரீராமலக்ஷ்மணர்களை விராதன் கொலைசெய்வானோவென்றச்சங்கொண்டிலர்; விராதனை யவர்கள் கொன்றுவிடுவார்களென்றே அச்சங்கொண்டு அவர்களைத் தம்மிடத்தில் அழைப்பதன் பொருட்டே தம்மைப் புலி முதலானவை தின்னுமென்று கூவினர். பின்பவர்கள் மீளாமையினால், விராதனை நோக்கி, அடா! இவர்களை நீ எடுத்துக் கொண்டுபோய் அழியற்க; அவர்களை விட்டுவிட்டு, (மாம்) செல்வத்தையுற்று வாழ்க; என்றுரைத்தனர். ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் இவரது பாவத்தை யறிந்தே விரைவாக அவனை வெட்டிக்கொன்றனர்கள். சீதை துன்பப்படுகின்றனரோ என்று அவனைக் கொல்லும் பக்ஷத்தில், முன்பே அவனைக் கொலைசெய்திருப்பார்களென்றுணர்க.

மனிதர்களு மொருவ ரிலர்; ஆதலின், விரைவாகச சரபங்கமஹாமுனி யிடம் செல்வோமென்று அருளிச்செய்து, விரைவாகச சரபங்காஶ்ரமஞ் சேர்ந்து பார்க்கையில், அங்கே தேவலோகத்தினின்றுந் தேவேந்திரன தேர்மீதேறிவந்து அங்கே தேரினின்று மிறங்கிக் கால் தரையில் படாமலே நின்று, சிறந்த வாடையா பரணங்களை யணிந்து, தனனைப் போனறவர்களி னால் சூழப்படடுத் திகழவும, சிறந்த குதிரைகள கட்டி வானிடையிலேயே நிற்கினற அந்த இநதிரனுடைய ரதம் நிற்கவும, முழுமதி மணடலம் போனற வெண்குடை விளங்கவும, தெய்வப பொதுமகளிர்க ளிருவாகள இந்திர னிருபுறத்திலும நினறு வெணசாமரை வீசவும, கந்தர்வாபஸரஸாதி தேவர்கள வானில் நினறு இந்திரனைப் புகழவும், பின்பு சரபங்கமஹாமுனி இநதிரனுடன ஸல்லாபம் செயதுகொண டிருககவும் கணடு, இளையபெரு மாளை நோக்கி, அடா லக்ஷ்மண! பாராய் ஆகாயததில ஆதித்த னுதித்தாப போல ரதம் திகழகின்றது, முனபு யாம் இந்திரனுடைய தோககுதிரைக்கள எவவாறிருக்குமெனக் கேட்டிருககினறனமோ? அத்தன்மையனவாகிய குதிரைகளே இந்தத் தேரில கடடப்பட டிருககினறன; இந்த ரதத்தைச சுற்றி நிறகினறவாகளும், குழைக ளணிநதும, யௌவன முறறும, வாள களைப் பிடித்தும, நீணடகனற மாரபினில அககினிபோல ஒளிர்கின்ற மாலைகளைப் பூணடும, பீதாம்பரஙகளை யுடுததும, வீரமுமறும, இருபத் தைந்து வயது பொருநதியும், நூறு நூறு கணககுகளை யடைந்தும், நாற புறங்களிலும திகழகினறனர்கள. பெரும்பாலும தேவர்கள எப்பொழுதும இருபததைந்து வயதுடையவாகள போலவே விளஙகுவாாகள; இவ்விடத் திலேதானே நீ சீதையுடன முகூாததகாலம நிறகக கடவை. இவன் யாவனோ அதனை யறிகினறேனென றருளிச்செயது, சீதையுடன இளைய பெருமாளை யீங்கே நிறுத்திவிட்டுத் தாம் மாததிரம சரபங்காஶ்ரமத்திற குளளெழுந தருளுகையில், இந்திரனும இவரைக கணடு சரபங்கமஹா முனியை நோககி, ஏகாநதமாக மாதவர் சீமானே! ஸ்ரீராமபிரா னிஙகே எழுந்தருளுகின்றனா, இவா இப்பொழுது எனனைக் காண்பது தகுதி யற்றது; இவர் தம பிரதிஜ்ஞையை முடிதத பினபு, என்னைக் காணக; பிற ரொருவராலும் செயறகரிய காரியங்கள இம்மஹாநுபாவராலேயே செயற் குரியனவாகி யிருக்கின்றன; ஆதலின், இவர் இக்காரியங்களை முடித்த பின்பு, யானும் இவரைக் கண்டு மகிழவேனென றுரைத்து விடை பெற்றுக்கொண்டு தேரூர்நது வானேறினன், இந்திரன் சென்ற பின்பு, உபகரணங்கள நிறைநத அக்கினிஹோத்திரஞ் செய்துகொண் டிருக்கின்ற சரபங்கமஹாமுனிவரிடம் பெருமா ளெழுந்தருளிப் பிராட்டியாருடனும், இளையபெருமாளுடனும் அவரைப் பணிந்து, அவரால் பூஜிக்கப் பட்டவர்க ளாகிப் பர்ணசாலையிலிறங்கி மகிழ்ந்து, பினபும் சரபங்கமஹாமுனிவரை நோக்கி, ஸ்வாமி! இப்பொழு திங்கு விண்ணினின்றும் வந்தெய்தினவன் யாவனென வினவி யருளினர். சரபங்கமஹாமுனியும் பெருமாளை நோக்கி

ஸ்ரீராமசந்த்ரரே! தேவேந்திரன் என்னைப் பிரஹ்மலோகத்திற் கழைத்துக் கொண்டு போவதன் பொருட்டு வந்திருந்தனன்; யான் பிறர் செயற்கரிய தவஞ்செய்து, அவ்வுலகஞ் செல்லும் புண்ணியத்தைப் பெற்றிருக்கின்றேனாதலின், இப்பொழுது மஹாத்துமாவாகிய உமமுடன் ஸல்லாபஞ்செய்து மகிழ்ந்து விண்ணுலகஞ் செல்வேன்; நீர் ஸமீபத்தில எழுந்தருளுவதை யுணர்ந்தே யான இந்திரனுடன பிரஹ்மலோகஞ் சென்றிலேன; யான் தவத்தினால் வென்ற பிரஹ்மலோகங்களையும், தேவலோகங்களையும், தேவர்க கர்ப்பணஞ்செய்வேன; ஏற்றுககொள்க; தேவர்கட்கு அர்ப்பணஞ் செய்யாத செயல்கள பயன்படா வல்லவோ? என்று அருளிச் செய்தனர். சரபங்கமஹாரிஷியினால் இவ்வண்ண முறைசெய்யப்பட்ட பெருமாளும் அவரை நோக்கி, மாதவா கோமானே! யானே தேவருடைய கர்மபலங்களை யந்தர்யாமியாயிருந் தனுபவிப்பேன; யான் இப்பொழு திக்காட்டில் வாஸஞ் செய்யத்தக்க இடம யாதோ? அதனை யருளிச்செய்வீரென்று வினவினார். சரபங்கமகாயோகியும், மீளவும் பெருமாளைநோக்கி, ஸ்ரீராமசந்திரரே! இந்தக் காட்டிடையில் ஸுதீக்ஷ்ணரென்னும் மஹாமுனி எழுந்தருளியிருக்கின்றனர், நீங்கள் அங்கெழுந்தருளுவீர்களாகில், அவர் உங்களுக்கு நன்மைசெய்தருளுவர்; இந்த நதிக் கெதிராகச் சென்றால் அவருடைய ஆச்ரமஞ் சேர்வீர்கள், இங்கே காணப்படுகின்றதே? இதுவே நீங்களெழுந் தருளத்தக்க நலவழி; நீர் இங்கே முகூர்த்தகால மெழுந்தருளியிருக்கக்கடவீர். யானிந்த மூப்புற்ற சரீரத்தைப் பாம்பு புரையை விடுவது போல விட்டு வானேறுவேனென்று அருளிச்செய்து, செந்தீயை வளர்த்து விதியின்படி நெய்யாகுதிசெய்து அத்தீயில் குதித்து ஆஹுதியாகி எரிந்தனர். உடனே யவர் அந்த மூப்புற்ற சரீரத்தை எரித்து, திவ்விய ரூபங் கொண்டு அந்தத் தீயினின்று மெழுந்து திகழ்ந்தனர். பெருமாளும் இளையபெருமாளுடனும், பிராட்டியாருடனும், அதனைக் கண்ணுற்று வியப்படைந்து மகிழ்ந்தனர். சரபங்கமஹாமுனிவரும், ஆஹிதாக்கினிகளின் லோகங்களையும், ரிஷிகளின் லோகங்களையும், தேவலோகங்களையுந் தாண்டிப் பிரஹ்மலோகம்போய்ச் சேர்ந்து, பரிஜன பரிவாரங்களுடன் கூடி எழுந்தருளி யிருந்த வாணிமணாளனைக் கண்டு பணிந்தனர். பிதாமஹரும் இவரைக் கண்டு உனக்கு நல்வரவாகக் கடவதென் றுரைத் தாதரஞ்செய்து மகிழ்ந்தனர்.

ஆரண்யகாண்டத்தில் ஐந்தாவது சருக்கம்

முற்றிற்று.

## ஆறாவது சருக்கம்.

பெருமாள் சரணமடைந்த ரிஷிகளுக்கு அபய மளித்தது.



சரபங்கமஹாமுனிவர் பிரஹ்மலோகஞ் சேர்ந்த பின்னர், வைகானஸர், வாலகில்யர், ஸம்ப்ரக்ஷாளர், மரீசிபர், அச்மகுட்டர், பத்ராஹாரர், தந்தோலூகலர், உன்மஜ்ஜகர், காத்ரசய்யர், அசய்யர், அபராவகாசகர், ஸலிலாஹாரர், வாயுபக்ஷர், ஆகாசநிலயர், ஸ்தண்டிலசாயிகள், வரதோப வாஸிகள், ஆர்த்ரபடர், ஸஜபர், தபோநிஷ்டர், பஞ்சதபர் என்னும் பேதங் களை யுடையவர்களும், பிரஹ்மதேஜஸ்ஸுடன் விளங்குபவர்களும், யோகத் திறமை யுடையவர்களும், ஐம்புலன்களை வென்றவர்களுமாகிய மஹாயோகி கள் பெருமாள் சரபங்காச்ரமத்தி லெழுந்தருளி யிருப்பதை யுணர்ந்து, எல்லோருங் கூடி யங்கெழுந்தருளிய பெருமாளைக் கண்டு இவரை நோக்கிக் கேளாய் ஸ்ரீராம! நீர் இக்ஷ்வாகு குலத்திற்கும், இந்தத் தேசங்களுக்கும், பிரதானரும், நாதரு மாகின்றீர், தேவர்களுள் தேவேந்திரன்போல நீர் புகழினாலும், தோள்வலியினாலும் புகழப்பட்டிருக்கின்றீர், தந்தையி னிடத்தில் பத்தியும், ஸத்தியமும், தருமமும், உம்மிடத்தில நிறைந்து விளங்குகின்றன, தரும முணர்ந்தவரும், தருமத்தில் சிரத்தை யுடைய வரும், பரமபுருஷருமாகிய உம்மைச் சரணமடைந்து யாங்கள் ஒன்றை வேண்டுகின்றோம், நீர் சுயமாகவே எங்களைப் பாதுகாக்கச் சித்தராகியிருக் கையில், யாங்கள் உம்மை யநாதரைப்போல வேண்டுவது தகுதியற்றது; ஆயினும், யாங்கள் ஆர்த்தியினால் செய்யும் இப்பிழையைப் பொறுத் தருள்க, யாவனொருவன் அரசனாகி யாறிலொரு பங்கு கப்பம் வாங்கிக் கொண்டும், பிரஜைகளைப் பிள்ளைகளைப்போலப் பாதுகாக்கின்றிலனோ? அவனுக்கு மிகப் பாவம் விளையும், யாவனொருவன் தன்னாட்டி லுள்ளோர் களைத் தன்னுயிர்களைப் போலவும், தன் மக்களைப் போலவும், பாதுகாத் தளிக்கின்றனனோ? அவன் அழிவற்ற புகழினைப் பெற்று, கடையில் பிரஹ்மலோகஞ்சேர்ந்து, பிரஹ்மாவினாலும் பூஜிக்கப் படுவான், அன்றி யும், உயிர்களைத் தருமத்தினால் பாதுகாக்கின்ற அரசன் முனிவர்கள் செய் யுந் தவங்களின் நாலிலொருபங்கு பெற்று ரிஷியெனப் படுவான்; எங்க ளெல்லோர்க்கும் நீர் நாதராயிருக்கையிலும், யாங்கள் ராக்ஷஸர்களினால் கொல்லப்படுகின்றனம்; எழுந்தருளுக; ராக்ஷஸர்களினால் கொல்லப் பட்ட முனிவர்களது சரீரங்களைக் கண்ணுறுக; சில அரக்கர்கள் பம்பாநதி யின் கரையில் வாஸஞ் செய்பவர்களையும், இந்த மந்தாகினியினருகின் வஸிப்பவர்களையும், சித்திரகூடத்தில் வாழ்பவர்களையும், வெகுவாகக் கொல்லுகின்றனர்கள்; இவ்வண்ணம் யாங்கள் படும் அவஸ்தையைப் பொறுக்கின்றிலோம்; ஆதலின், தஞ்சமடையத்தக்க உம்மையே சரண

மாக வந்தடைந்தனம்; ஆதலின், நிசாசரர்களால் கொல்லப்படுகின்ற எங்களைப் பாதுகாத்தருளாக; இவ்வுலகினில் இந்தத் துன்பத்தைப் போக்க வேறொருவரும் தஞ்சமாகார், ஆதலின், எங்களெல்லோரையும் ராக்ஷஸர்களிடத்தினின்றும் பாதுகாத்தருளாக; என்று மொழிந்து சரண மடைந்தனர்கள் பெருமாளும் அந்த முனிவர்களது வாக்கியத்தைக் கேட்டு அவர்களெல்லோரையும் நோக்கி, முனிவர்களே! பெரியோர்களாகிய நீங்கள் சிறுவனான என்னை நோக்கி, இவ்வண்ணம் அருளிச் செய்யத் தக்கவர்களல்லீர்கள், யான் உங்களுக்குக் குற்றேவல் செய்யத்தக்கவனாகின்றேன், அரசன் எல்லோரையும் பாதுகாக்கவேண்டுமாதலின், என்னுடைய காரியத்தினாலேயே யான் இந்த வனத்திற்கு வரத்தக்கவன்; தந்தையின் வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்பவனாகவும், இந்த வனமெய்தினேன், தற்செயலாய்த் தேவர்களுடைய காரியத்தைச் செய்பவனாகவுமாயினேன், ஆதலின், யான் இந்த வனத்தில் வாஸஞ்செய்வதினால் என்னுடைய தருமமும், பிதருவாக்கிய பரிபாலனமும், சரணாகதர்களாகிய உங்களுடைய ஸம்ரக்ஷணமும் சித்தித்ததன்,—

తపస్వినాం రణే శత్రూన్ హన్తుమిచ్ఛామి రాక్షసాన్ ।
పశ్యన్తు వీర్యమృషయస్స భ్రాతుర్మే తపోధనాః ॥

*தபஸ்விநாம் ரணே ஶத்ரூன் ஹந்துமிச்சாமி ராக்ஷஸான்*
*பஶ்யந்து வீர்யம்ருஷயஸ்ஸ ப்ராதுர்மே தபோதநா:.*

கேட்டருளீர் தபோதனர்களே! உங்களுக்குப் பகைவர்களாகிய அரக்கர்களெல்லோரையும் போரில் கொலை செய்யச் சங்கற்பித்தேன், இனி என்னுடைய ஆண்மையையும், என் தம்பியினுடைய வலியையும் பாரீர்கள்; என்றருளிச்செய்து, தபோதனர்களெல்லோர்க்கும் அபயமளித்து, அவர்களால் பூஜிக்கப்பட்ட செயலுடையராகிய பிராட்டியார் இளையபெருமாளர்களுடன் சுதீக்ஷ்ணமகாமுனிவரது ஆஸ்ரமத்தை நோக்கி, எழுந்தருளினார்.

ஆரண்யகாண்டத்தில் ஆறாவது சருக்கம்
முற்றிற்று

## ஏழாவது சருக்கம்

### பெருமாள் ஸுதீக்ஷ்ணமுனிவரால் பூஜிக்கப்பட்டது

அநந்தரம் பெருமாள் ஸீதா லக்ஷ்மணர்களுடனும், அந்த முனிவர்களுடனும், சுதீக்ஷ்ணமஹாமுனிவரது ஆஸ்ரமத்தைநோக்கிப் புறப்பட்டு

பற்பல நதிகளைத் தாண்டிப் பெரிய மலைகளைக் கண்டு அதனைக் கடந்து சென்று, அதற்குமேல் பற்பல மரங்களடர்ந்துள்ள அந்த ஸுதீக்ஷ்ணாஶ்ரமத்தி னுட்புகுந்து, ஜடாமண்டலதாரியும், தபோவருத்தருமாகிய ஸுதீக்ஷ்ணமஹாமுனிவரைக் கண்டு பணிந்து அவரை நோக்கி, மாதவரே! யான் சக்கரவர்த்தி குமாரனான ராமனாகின்றேன்; தேவரைக் காண்பதன்பொருட் டிங்கெய்தினேன்; ஆதலின், தேவரெனக் கிதமருளிச்செய்க; என்றருளிச் செய்தனர். ஸுதீக்ஷ்ணமஹாமுனிவரும் பெருமாளைக்கண்டு ஆலிங்கனஞ் செய்துகொண்டு பெருமாளை நோக்கி, அடா வீரனும், தனமிகனுமாகிய ஸ்ரீராமசந்திரா! உனக்கு நல்வரவாகக் கடவது இந்த ஆஶ்ரமத்தில் நீ பொன்னடி சார்த்தினமையின், இப்பொழுதே இந்த ஆஶ்ரமம் நாதனுடையதுபோலும், நீ இங்கெழுந்தருளுவதை எதிர்பார்த்தே இந்தச் சரீரத்தை விட்டு வானேறியிலேன்; நீ ராஜ்ஜியத்தைத் துறந்து, திருச்சித்திரகூடஞ் சேர்ந்திருக்கையில், தேவேந்திர னிங்கெய்தி உன்னுடைய செய்தியையுமுரைத்து, யான் தவங்களினால் பற்பல பொன்னுலகங்களைப் படைத்திருக்கின்றேனெனவும், எழுந்தருளீரெனவு முரைத்து அழைத்தனன், அந்த நல்லுலகங்களில் என்னிடத்தில் அருளினால் ஸீதா லக்ஷ்மணர்களுடன் விஹாரஞ் செய்தருள்க; என்று காமபலஸங்கத்தைத் துறந்து, தம்முடைய கருமங்களை பகவானுக்கு ஸமர்ப்பணஞ் செய்தனர். பெருமாளும் அம் மஹாயோகியை நோக்கிப் பகவானே! யானே அந்த லோகங்களை யங்கீகாரஞ் செய்வேன்; யான் இப்பொழு திங்கே வாஸஞ் செய்வதற்குரிய தேசத்தை யருளிச் செய்க; சரபங்கமஹாமுனிவர் தேவரிடஞ் செல்லும்படி யருளிச்செய் திருக்கின்றனரென் றருளிச் செய்தனர். ஸுதீக்ஷ்ண மஹாமுனியும் மீளவும் ஸ்ரீராமசந்திரனை நோக்கி, ஸ்ரீராமா! இந்த என்னுடைய ஆஶ்ரமமே மிகவும் வாஸயோக்கியமா யிருக்கின்றது; ஆனால் சிங்கம் புலி முதலிய கொடிய விலங்குகள் அடிக்கடி இங்கெய்தித் திரிகின்றன; இவ்விடத்தில் அந்த மிருகங்களினால் மாத்திரமே பயமன்றி, வேறொருவராலும் பயம் நேர்ந்திலது, என்றருளிச் செய்தனர். பெருமாள் அந்த வாக்கியத்தைக் கேட்டவுடன் வில்லை எறிட்டுக் கணைதொடுத்துச் சித்தஞ் செய்துகொண்டு அம்முனிவரை நோக்கி, மஹாயோகி! யானிங்கே வாழ்ந்து, கொடிய மிருகங்களைக் கணையினா லடிப்பேன்; அப்பொழுது தேவர் அதைக் கண்டு வருத்தமுறுவீர், இவவண்ணம் தேவர் வருத்தமுறுமாறு செய்வதை விடக் கொடுமை யுளதோ? ஆதலின், யான் இவ்விடத்தில் நெடுங்காலம் வாழ விரும்புகின்றிலேன்; என்றருளிச் செய்த

ணர். பின்பு, மாலைப்பொழுதாயினமையின, ஸந்தியாவந்தனம முதலிய நித்யகருமங்களை முடித்துக்கொண்டு, ஸீதா லக்ஷ்மணர்களுடன் அந்த ஆஶ்ரமத்திலேயே எழுந்தருளி யிருந்தனா. பினபு, ஸுதீக்ஷ்ணமஹா முனிவரும தவசிகள் புஜிப்பதற்குரிய கந்தமூலபலங்களைத் தாமே நேராகக் கொணர்ந்து, ஸ்ரீராம லக்ஷ்மணர்களுக்கு அர்க்யபாத்யாசமனீயாதிகளினுல் பூஜித்தளித்து மகிழவித் தருளினா. *

ஆரணயகாண்டத்தில ஏழாவது சருக்கம்

முற்றிற்று



## எட்டாவது சருக்கம்.

பெருமாள ஸுதீக்ஷ்ணமுனிவரிடத்தில் விடை

பெற்றுக்கொண்டு புறபபட்டது



பெருமாள பிராட்டியாருடனும, இளையபெருமாளுடனும் ஸுதீக்ஷ்ண மகாமுனிவரால பூஜிக்கபபட்டவராகி, அங்குத் துயில்கொண்டனறிரவைப் போக்கி, மறுநாளுதயத்தில் துயிலுணாந்து, ஸீதா லக்ஷ்மணர்களுடன் நித்ய கர்மங்களை முடித்து, அக்கினியையும், தேவர்களையும் விதிப்படி பூஜித்து, வெயயோ னுதயமாகுகையில, உபஸ்தானஞ் செய்து விட்டு, ஸுதீக்ஷ்ணமஹாரிஷியைக் கண்டு பணிந்து, அவரை நோக்கித் தபோ நிதியே! யாங்கள பூஜிக்கத்தக்க தேவரால் யாங்களே பூஜிககப் பட்டவர்க ளாகித் தேவருடைய ஆஶ்ரமத்தில இனபுறறு வாழ்நதோம ; உடன வந்த முனிவாகள எங்களைத துரைப படுத்துகினறனர்கள , ஆதலின், விடை கேட்கினறேன் ; போய வருகிறோம் ; யாங்களும் எலலா ஆஶ்ரமங்களையுங் கண்டு களிப்புறத் துரைபபடுகின்றோம் , ஆதலின், எங்களெல்லோர்க்கும் அனபு கூர்ந்து, விடை கொடுத் தருள்க ,—

అవిఘ్నం తపసో యావ త్సూర్యో నాతివిరాజతే
అమార్గేణాగతాం లక్ష్మీం ప్రాప్యేవాన్వయవర్జితః ||

அவிக்னம் தபஸோயாவத ஸூர்யோநாதிவிராஜதே

அமார்கேணாகதாம்லக்ஷ்மீம ப்ராப்யேவானவயவர்ஜிதः.

* இளையபெருமாள உணவு துயில்களைத துறநதவ ராதலின, முனிவர் தமக களித்த காய கனிகளைப பெருமாளுக் களித்து விட்டனா. பெருமாளும் தம்பி யளித தனைத தாமுணடு, முனிவர் தமக களித்ததைப பிராட்டியாருக் களித்தனா. ஆதலால், முனிவாகள பிராட்டியாருக களித்ததிலொன்றறிக.

இழிகுலத்தோன் அநியாயத்தால் மிகப் பொருளை யடைந்து, பிறரைத் தவிக்கச் செய்வதுபோல, இந்த வெய்யோன் கதிர் விரிந்து உலகங்களைத் தவிக்கச் செய்வதற்கு முன்னமே யாங்கள் வழிப்பயணம் கடந்து செல்ல விரும்புகின்றோமென்று அருள்செய்து, மீளவும் பணிந்து நின்றனர். இவ்வண்ணம் பணிந்த ஸ்ரீராமலக்ஷ்மணர்களைக் கரங்களாலெடுத்து அணைத்துக்கொண்டு, சுதீக்ஷ்ணமுனிவரும் இவர்களை நோக்கி, ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரர்களே! நீங்கள் வழியில் இன்புற்று மகிழ்ந்து செல்லக்கடவீர்கள், தண்டகாரண்ய வாஸிகளாகிய இந்த முனிவர்களது ஆஶ்ரமங்களையுங் கண்டு மகிழ்க; மிகுந்த காய் கனிகள் நிறைந்தும், நறுமலர்கள் மலர்ந்தும், சிறந்த மிருக நிரைகள் சூழ்ந்தும், பகை நீங்கிய பறவைகளையுடையதும், மலர்ந்த கமலங்களை யுடையதும், குளிர்ந்து தெளிந்த நன்னீரை யுடையதும், நீர்ப்பறவைகள் நிறைந்துள்ள தடாகங்கள் பொருந்தியதுமாகிய கானன மண்டலத்தையுங் காண்க, இப்போழ்து சென்று மீளவும் இங்கெய்துக; என்று அருளிச்செய்து விடைகொடுத்தருளினர். அநந்தரம் பெருமாள் இளையபெருமாளுடன் அம்முனிவரை வலம் வந்து புறப்படுகையில், பிராட்டியார் இருவர்க்கும் அம்பறாத் தூணிகளையும், கோதண்டங்களையும், வாள்களையுங் கொடுத்தனர். இவ்விருவர்களும் அவைகளை வாங்கிக்கொண்டு தூணீரங்களைக் கட்டிக்கொண்டும், வாள்களைக் கச்சையிலிறுக்கிக் கொண்டும், கோதண்டங்களை நாணேற்றிக் கரத்திலேந்திக் கொண்டும், பிராட்டியாருடன் கூடி, அந்த ஆஶ்ரமத்தை விட்டுப் புறப்பட்டருளினார்கள்.

ஆரண்யகாண்டத்தில் எட்டாவது சருக்கம்

முற்றிற்று.

---

## ஒன்பதாவது சருக்கம்

பிராட்டியார் பெருமாளை நோக்கி, அரக்கர்களைக் கொலைசெய்வது

தருமமோவென்று வினவியருளியது.

---

இவ்வண்ணம் ஸுதீக்ஷ்ணமஹாமுனிவரிடத்தில் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்ட பெருமாளைப் பிராட்டியார் நோக்கி, ஸ்வாமி! என் பிராணநாயகரே! தேவர் இப்போழ்து செய்யும்படி மேற்கொண்டிருக்கின்ற முனி தருமம் மிகவும் ஸூக்ஷ்ம மார்க்கத்தினால் சித்திக்கின்றது; இஃது காமக் குரோதாதிகளினா லுண்டாகிய துன்பத்தைத் துறந்தவர்க் கெளிதேயன்றிச் சினமுற்றோர்களுக் கெளிதாகாது;—

త్రీణ్యేవవ్యసనాన్యత్ర కామజానిభవన్త్యుత
మిథ్యావాక్యంపరమకం తస్మాద్గురుతరావుభౌ
పరదారాభిగమనం వినావైరంచరౌద్రతా ||

த்ரீண்யேவவ்யஸநாநயத்ர காமஜாநிபவந்தயுத
மித்யாவாக்யமபரமகம் தஸ்மாத்குருதராவுபெள
பரதாராபிகமனம விநாவைரஞசரௌத்ரதா.

பொய்ம்மொழியை மொழிவது, பரத்தையலைப் புணர்வது, பகையின்றி யொருவரைப் பகைத் தடிப்பது என்னும் இம்மூன்றும், காமத்தினால் பிறந்த வியஸனங்களெனப்படுகின்றன; இவைகளுள் பொய்ம் மொழியைத் தேவர் இதுவரையி லுரைத்திலீர், இப்பொழுது முரைக்கின்றிலீர்; இனி யுரையீர்; பிறர் மனைவிகளையும் தேவர் கனவிலும் விருப்புறறிலீர்; இனி மேலும் விருப்புறீர்; எப்பொழுதும் ஸ்வபாரியை யிடத்திலேயே ஆஸக்தி யுறுகின்றீர்; தருமம் மறிந்தவரும், ஸத்தியவாதியும், பித்ருவாக்கிய பரிபாலனஞ் செய்பவரு மாகின்றீர்; இவை முதலிய நறகுணங்கள் ஐம்புலன்களை வென்றவர்களுக்கு அரியனவல்ல, தேவர் ஜிதேந்திரிய ரென்பதையு மறிவேன்; ஆகிலும், வைரமின்றி யொருவரைக் கொலை செய்வதென்னும் கொடுமையே தேவருக் கிப்போது நேர்கின்றது; தண்டகாரண்ய வாஸிகளாகிய ரிஷிகளைப் பாதுகாப்பதன் பொருட்டு, ராக்ஷஸர்களைக் கொலை செய்வேனென்று பிரதிஜ்ஞை செய்தருளினீ ரல்லீரோ? இதனபொருட்டே யன்றோ? தேவர் தம்பியுடன் வில்லைக் கரத்திலேந்திப் புறப்பட் டிருக்கின்றீர்; ஆதலின், யான் தேவருடைய இந்தச் செயலைச் சிந்தை செய்கையில், இஃதெனக்கு நலமெனத் தோன்றுகின்றிலது, என் மனமும் சிந்தாகுல மாகின்றது, ஆதலின், யாம் இப்பொழுது தண்டகா வனத்திலுட் புகுவது தகுதியற்றது; இது நலமென யானுடன்படேன்; அதற்குக் காரண முரைக்கின்றேன் கேட்டருளீர்; தேவர் ஆயுதத்தைக் கையிலேந்திச் செல்லுகையில், வனசரங்களைக் கண்டு பாணங்களைத் தொடுத் தடிப்பீர்; கையில் ஆயுத மிருக்கின், அஃது வாளா இருக்க விடாது, க்ஷத்திரியர்களுக்கு வில்லும், அக்கினிக்கு விறகும் அருகிலிருக்கையில், தேஜஸ்ஸையும், பலத்தையும், பெரும்பாலும் வளரச் செய்யும்; முற்காலத்தில் ஒரு மஹாமுனிவர் காட்டிடையில் தவஞ் செய்துகொண் டிருக்கையில், அவருடைய தவத்தைக் கெடுப்பதன் பொருட்டு, இந்திரன் வாளைக் கையிற்பிடித்துக்கொண்டு ஏவலாளன்வேஷம்பூண் டங்கெய்தி, அந்த முனியை நோக்கி, ஸ்வாமி! யான் ஒரு காரியமாக ஓரிடம்போய் வருவேன்; யான் வருமளவும் இந்த வாளைத் தேவர் பாதுகாத் தளிக்க; மீளவும் யான் வந்து பெற்றுக் கொள்வேனென்றுரைத்து, அந்த வாளை வைப்பாக அவரிடத்தில் கொடுத்து விட்டுப் போய் விட்டனன். அந்த முனியும் அந்த வாளை வாங்கிக்கொண்டு

வைப்பாதலால், அதனை யோரிடத்திலும வைத்துச் செல்ல நம்புதலின்றி, எப்பொழுதும் அதனைக கையில வைத்துககொண்டே திரிந்தனர். அதனை விட்டு எங்கும் சென்றிலர்; இவவண்ண மிருககையில், தவமுயறசியில் ஊக்கந்தப்பிக் கொடுமைபூணடு வாளினால் பறபல உயிர்களைக கொன்று கடையில் நரகத்தை யடைந்தனர். இவவண்ணம நிகழ்ந்ததென்று பெரியோர்கள கூறுகின்றனர்கள. ஆதலின, ஆயுதம் அருகிலிருககின், இத் தன்மையதாகிய தீமையை விளைககும, ஆயுதமெனபது நெருப்புபபோலச சேர்ந்தவரைப் பற்றி எரிககும ;—

స్నేహాచ్చ బహుమానాచ్చ స్మారయే త్వాం న శిక్షయే ॥

ஸநேஹாசச பஹுமாநாசச ஸமாரயே தவாமாசிக்ஷயே.

தேவா யாவு முணர்ந்தவரும், எனக்குக குருவு மாகின்றீ ராதலின, தேவர்க்கு யான உபதேசஞ் செயகினறிலேன, ஸ்நேஹத்தினாலும், பஹுமானத்தினாலும், தேவருககு நினை வூட்டுகினறேனே யனறி, சிக்ஷிககினறிலேன்; தேவர் இபபொழுது வில்லையேந்தி வைரமின்றி யொருவனைக கொலைசெய்வதென்பது ஒருகாலுந் தகாது, பகையினறி யொருவனைக கொலைசெயய யானுடன்படேன், வீரராகி யரசாட்சிசெயகினற க்ஷத்திரியர்களல்லரோ வில்லையேந்தி யாரதராகளைப பரிபாலனஞ் செயயவேண்டியவர்கள, தேவருக்கு இது தகுதியறறது, ஆயுத மெங்கே ? வனவாஸ மெங்கே ? க்ஷததிரிய தருமமெஙகே ? தவமெங்கே ? இவவண்ணம் ஒன்றுக்கொனறு விரோதமாயுளள தருமஙகளை மேறகொளவதாகாது, தேசதர்மமாகிய தவமொனறே பூஜிக்கப்படக கடவது இபபொழுது வில் கையிலிருக்கையில், புத்தி கலக்கமுறும, மீளவும திருவயோத்தி சோநதபின்பு, வில்லேநதி க்ஷத்திரதருமததைப பாதுகாககக் கடவீர். தேவர் இவவண்ணம முனி யாகுவீராகில, கைகேயி தசரதர்களும் மிக மகிழவார்கள ,—

ధర్మాదర్థః ప్రభవతి ధర్మాత్ప్రభవతే సుఖం
ధర్మేణ లభతే సర్వం ధర్మసారమిదం జగత్ ॥

தாமாதாத:பரபவதி தாமாதபரபவதேஸுகம்
தாமேணலபதேஸாவம தாமஸாரமிதஞசகத.

தருமத்தினாலேதானே பொருளினபங்கள் உணடாகின்றன; மற்றுமுளள யாவும் தருமத்தினாலே பெறப்படுகின்றன; ஆதலின, இவவுலகமே தர்மமூலமாகின்றது; அந்தத் தருமமும், பற்பல நியமோபவாஸாதிகளினால் மெய்யை வருததித் தவஞ்செய்பவர்களால் பெறப்படுகின்றது; ஸுகத்தினால ஸுகங்கிடைக்குமோ ? ஆதலின், தேவர் நியமம் பூண்டு தபோ

வனத்தில் முனி தாமத்தையே அனுஷ்டிக்கக் கடவீர். தேவர் திருவுளத்தில் மூவுலகங்களும் இயல்பாக விளங்குகின்றன; ஆதலின், தேவருக்குத் தருமோபதேசம் செய்பவர் யாவருளர்? தேவரோ தம்பியுடன் நன்கா ராய்ந்து தக்கவண்ணஞ் செய்தருள்க என்று விண்ணப்பஞ் செய்தனர்.

ஆரண்யகாண்டத்தில் ஒன்பதாவது சருக்கம்

முற்றிற்று.



பத்தாவது சருக்கம்.

பெருமாள் பிராட்டியார்க்கு ராக்ஷஸ ஸம்ஹாரம்

தருமமென வருளிச் செய்தது.

ஆநந்தரம் பெருமாள் பிராட்டியா ரிவ்வண்ண முரைசெய்த வாக்கியத்தைக் கேட்டு மகிழ்ந்து, பிராட்டியாரை நோக்கி, அடி ஜனகராஜன திருமகளே! நீ விண்ணப்பஞ்செய்த வாக்கியம், உன் குலத்திற்கும், உன் குணத்திற்கும், என்னிடத்திலுள்ள ஸ்நேஹ பகுமானங்களுக்கும், மிகவும் தகுதியுள்ளதே யாகின்றது; ஆகிலும், யான் உரைசெய்யும் வாக்கியத்தை நன்கு கேட்டிணர்; க்ஷத்திரியர்கள் ஆர்த்த ஜனபரி ரக்ஷணத்தின் பொருட்டு வில்லெடுத்துக் கொடியர்களைத் தண்டிப்பது தருமமே யென்று நீயே யுரைத்தனை யல்லையோ? தண்டகாரண்ய வாஸிகளாகிய அந்த முனிவர்களும், ராக்ஷஸர்களால் கொலைசெய்யப்பட்டார்த்தி யடைந்து என்னைச் சரணமடைந்தனர்கள்; அவர்கள் நாடோறும் ராக்ஷஸர்களால் பீடிக்கப்பட்டவர்களாகி இன்பமுறுகின்றிலர்கள், அவர்களே என்னிடம் வந்து எங்களைப் பாதுகாத்தளிப்பாயென்று வேண்டினர்கள்; யானும் அவர்களது வேண்டுகோளுக்கிரங்கி, அவர்களைப்பணிந்து, அவர்களை நோக்கி, மஹாயோகிகளே! தேவா எனமீது அனபுற்றருள்க; யானே தேவர்களிடம் வந்து பணிந்து குற்றேவல்களைச் செய்து செல்ல வேண்டி யிருக்க, தேவர்களே என்னிடம் வந் திவ்வண்ணம் வேண்டுவதற்கு யான் மிகவும் நாணமுறுகின்றேன்; அடியேன் இப்பொழுது செயல் வேண்டுவது யாதோ வென்று வினவினேன; அவர்களும் என்னை நோக்கி, ஸ்ரீராமா! கொடியர்களும், வலியர்களும், காமரூபிகளுமாகிய அரக்கர்கள் ஹோமாதிகாலங்களில் வந்து எங்களைப் பீடிக்கின்றனர்கள்; அவர்களைக் கொன்று எங்களை ரக்ஷிக்கக் கடவை. எமக்கு யார் கதி யென்று தேடிக்கொண் டிருக்கையில், நீயே தற்செயலா யிங்கெழுந்

தருளினை ; ஆதலின், நீயே எங்களுக்குத் தஞ்சம் ; யாங்களும் தவத் திறமையினால் அரக்கர்களை நாசஞ்செய்ய வல்லோம் ; ஆகிலும், நெடுநாள் செய்த தவங்களின் பலன்களை இது விஷயத்தில் அழித்துக்கொள்ள விரும்புகின்றிலோம் ; தவமென்பது பற்பல விக்கினங்களை யுடையது ; செய்வதற்கும் எளியதன்று ; ஆதலின், அரக்கர்களால் யாங்கள் பக்ஷிக்கப் படுகையிலும், அவர்கள்மேல் சாபமிடுகின்றிலோம் ; ஆதலின், நீயே தம்பியுடன் கூடி எங்களை ரக்ஷிக்கக் கடவை. யாங்கள் உன்னையே நாதனாக உடையோமேயன்றி, எமக்கு வேறே தஞ்சமில்லையென் றருளிச் செய்த னர்கள். யானும் அதுகேட்டு அவர்களை நோக்கி, முனிவர்களே ! யான் உங்களுக்கு விரோதிகளாகிய ராக்ஷஸர்களெல்லோரையும் கொலைசெய்து உங்களெல்லோரையும் பாதுகாத் தருள்வேனென்று பிரதிஜ்ஞைசெய் துரைத் தேன் ; யான் பிரதிஜ்ஞை செய்துவிட்ட பின்பு, உயிருள்ளளவாயில், எப்படியாவது அதனை நிறைவேற்றுவேனேயன்றி, பிரதிஜ்ஞையை யொரு பொழுதும் தப்பி நடவேன், எனக்குச் சத்தியமே மிகப் பிரியமுடையது ;

అప్యహంజీవితంజహ్యాం త్వాంవాసీతే సలక్ష్మణాం
నతుప్రతిజ్ఞాంసంశ్రుత్యబ్రాహ్మణేభ్యోవిశేషతః ||

அப்யஹம்ஜீவிதஞ்ஜஹ்யாம் த்வாம்வா ஸீதே ஸலக்ஷ்மணாம்
நதுப்ரதிஜ்ஞாம்ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத:.

கேளாடி ஸீதையே ! யான் பிரதிஜ்ஞையைப் பரிபாலனஞ் செய்வ தன்பொருட்டு எல்லோர்க்கும் மிகப் பிரியமாகி யிருக்கின்ற உயிரையாயி னும் விட்டு விடுவேன் ; உயிரினும் பிரியமுள்ள உன்னையாயினும் விட்டு விடுவேன் ; உன்னிலும் பிரியமுடைய லக்ஷ்மணனையாயினும் விட்டு விடு வேனேயன்றி, பிரதிஜ்ஞையை யொருகாலையிலும் முடியாது விட்டு விடேன் ; முனிவர்கள் பொருட்டுச் செய்த பிரதிஜ்ஞையை மிகவும் கைவிடேன் ; அடி வைதேஹி ! முனிவர்க ளுரையாதிருக்கினும், யான் அவர்களைப் பரிபாலிப்பது கடமை, அவர்களாலும் வேண்டப்பட்டு என்னாலும் பிரதிஜ்ஞை செய்யப்பட் டிருக்கையில், யான் அவர்களை ரக்ஷிக்கவேண்டு மென்பதற்குக் கேட்கவேண்டுமோ ? ஆதலின், யான் முனிவர்களைப் பாதுகாப்பதன் பொருட்டுப் பலாசர்களைக் கொலைசெய்ய வேண்டு மென்பதே தருமம் ; நீயு மிதனை யறிவாயாயினும், என்னிடத் தில் ஸ்நேஹத்தினாலும், பஹுமானத்தினாலும், இவ்வண்ண முரைத்தனை; அதற்கு யான் மிக மகிழ்ந்தேன் ; பிரியமில்லாதார்க் கொருவர் இதமுரைப் பார்களோ ? நீ யவ்வண்ண முரைத்தது உனக்கும், உன் குலத்திற்கும், மிகத் தகுதியுள்ளது ; நீ இவ்வண்ணம் தருமசிந்தையுற்று என்னுடன் கூடித் தருமவழிகோணாமல் நடக்கின்றமையின், நீ எனக் குயிரினும்

பிரியமுடையாளாயினை ; என்றிவ்வண்ணம் அருளிச்செய்து மைதிலியை மகிழுவித்துத் தம்பியுடன் சாபபாணதாரியாகி, மிகவும் அழகிய தபோவனங்களை நோக்கி, எழுந்தருளினா

ஆரண்யகாண்டத்தில் பத்தாவது சருக்கம்

முற்றிற்று.

---

## பதினொன்றாவது சருக்கம்.

பெருமாள் ரிஷிகளது ஆஶ்ரமங்களைச் சுற்றிக்கொண்டு, மீளவும் சுதீக்ஷ்ணாஶ்ரமம் வந்து, அங்கிருந்து அகஸ்த்ய ப்ராதாவின் ஆஶ்ரம வழியாக அகஸ்த்யாஶ்ரமத்திற் கெழுந்தருளியது.

---

అగ్రతః ప్రయయౌ రామః సీతా మధ్యే సుమధ్యమా
పృష్ఠతస్తు ధనుష్పాణిః లక్ష్మణోఽనుజగామ హ॥

அக்ரதஃப்ரயயௌராமஃ ஸீதாமத்யேஸுமத்யமா

ப்ருஷ்டதஸ்துதனுஷ்பாணிஃ லக்ஷ்மணோநுஜகாமஹ.

அநந்தரம் பெருமாள் முன்னும், பிராட்டியார் நடுவிலும், இளைய பெருமாள் பின்னுமாக எழுந்தருளினர்கள். இவ்வண்ணம் ஸ்ரீராமலக்ஷ்மணாக ளிருவரும் பிராட்டியாருடன் சென்று, பற்பல மலைகளையும், வனங்களையும், நதிகளையும், ஸாரஸ சக்கரவாகம் முதலிய நீர்ப்பறவைகளையும், தாமரை யோடைகளையும், நிரை நிரையாகக் கூடித் திரிகின்ற மான்களையும், மதமேறிக் கொம்பை யசைத்துத் திரிகின்ற மஹிஷங்களையும், காட்டுப் பன்றிகளையும், மரங்களை முறிக்கின்ற யானைகளையும் கண்ணுற்றுக் கொண்டே நெடுந்தூரஞ் சென்று, மாலைப்பொழுதாகுகையில், ஒரு காதவழி நீள முள்ளதும், தாமரை மலர்ந் தடர்ந்து யானைக் கூட்டங்கள் திகழ்ந்தும், ஸாரஸஹம்ஸகாதம்பாதி ஜலசரபக்ஷிகள் நிறைந்தும், தெளிந்து குளிர்ந்த ஜலம் நிரம்பியு முள்ளதுமாகிய ஒரு தடாகத்தின் கரை சேர்ந்து, ந்ருத்த கீதவாத்யங்களின் தொனியைக் கேட்டும், ஒருவருமில்லாமையைக் கண்டும் வியப்படைந்து, [illegible]முடன் வருகின்ற முனிவர்களுள் தர்மப்ருத்தென்பவரை நோக்கி, மாதவரே ! வாத்தியங்களின் ஒலிமாத்திரம் மிகவும் இனிமையாகக் கேட்கப் படுகின்றதே யன்றி, யொருவரையும் காண்கின்றிலோம் ; ஆதலின், மிக வியப்புற் றிருக்கின்றோம் ; இந்தத் தொனி எங்கிருந் தொலிக்கின்றது, இது யாதோ ?

இதனை யாங்கள் கேட்கத் தகுமாயின், அருளிச் செய்கவென்று வினவி யருளினர்கள். அம்முனிவரும் அதுகேட்டு, இவர்களை நோக்கிக் கேளீர் ராஜகுமாரர்களே ! இந்தத் தடாகம் பஞ்சாப்ஸரமென்னும் பெயருடையது ; அழிவற இவ்வண்ணமே எப்போழ்தும் நிறைந்துள்ளது, மாண்டகர்ணியென்னும் முனிவர் தம் தவத்திறமையினால் இயற்றப்பட்டது ; அந்த ரிஷி பதினாயிரம் வருஷம் வாயுபக்ஷராகி, உண்டி நீங்கிக் கடுந்தவஞ் செய்கையில், இந்திராக்கினிகள் முதலிய தேவர்களெல்லோரும் அச்சங் கொண்டு, இம்முனிவர் நம்முள் யாருடைய பட்டத்தைக் கோரித் தவஞ் செய்கின்றனரோ ? எனவொருவர்க்கொருவர் உரைத்துக்கொண்டு, இவருடைய தவத்தைக்கெடுப்பதன்பொருட்டு, அப்ஸரஸர்களுள் சிறந்தவர்களாகிய ஐந்துபேர்களை யனுப்பினர்கள், அந்த அப்ஸரஸர்களும் இவரிடம் வந்து இவரை மயக்கிக் கேளிக்கைக்காரர்களாகி விட்டனர்கள். பின்பு அந்த மாண்டகர்ணியும், இவர்களைக் காமுற்று மணஞ் செய்துகொண்டு தம் யோக மஹிமையினால் யுவாவாகி இந்தத் தடாகத்தையும், இதன் நடுவில் மாடமாளிகையையும் இயற்றி, அல்லும் பகலும் அந்த அப்ஸரஸர்களுடன் புணர்ந்தின்புறுகின்றனர் ; அந்த மனையும், இந்தத் தடாகத்தினுள் மறைந்திருக்கின்றது, அந்த அப்ஸரஸர்களே ஆட்டமாடியும், பாடியும், அம்முனிவரை மகிழ்விக்கின்றனர்கள், அந்த வொலியே இங்கே கேட்கப்படுகின்றதென்றுரை செய்தனர் ஸ்ரீராம லக்ஷ்மணர்களும் பிராட்டியாருடன் அதைக் கேட்டு மகிழ்ந்து, ரிஷிகளுடனும் பிரஹ்மதேஜஸ்ஸு விளங்குகின்ற ஆச்ரமமண்டலங்களைக் கண்டு புகுந்து பூஜிக்கப்பட்டவராகி வாழ்ந்தனர். இவ்வண்ணம் பெருமாள் அந்த ஆச்ரமங்களில் எல்லாருடனும் வாழ்ந்து, முறையே யங்கங்குள்ள ஆச்ரமங்களுக்கு மெழுந்தருளி, சில விடங்களில் பத்து மாஸங்களும், சில விடங்களில் ஒரு வருஷமும், சில விடத்தில் நான்குமாஸமும், சில விடத்தில் ஐந்து மாஸமும், சில விடத்தில் ஆறு மாஸமும், சில விடத்தில் ஒரு மாஸமும், சில விடத்தில் ஒன்றரை மாஸமும், சில விடத்தில் மூன்று மாஸமும், சில விடத்தில் எட்டு மாஸமும் சுகமாக வாசஞ் செய்கையில், பத்து வருஷங்கள் சென்றன ; பின்பு பெருமாள் மீளவும் திரும்பி ஸுதீக்ஷ்ணாச்ரமத்திற் கெழுந்தருளி, அவரால் பூஜிக்கப் பட்டவராகிச் சிலகால மிருந்து, ஒருநாள் ஸுதீக்ஷ்ணமஹாமுனியைப் பணிந்து, பகவானே ! இந்த அரணியத்திலே அகஸ்த்யமஹாமுனி எழுந்தருளியிருக்கின்றனரென்று முனிவர்கள் கதை சொல்லக் கேட்டிருக்கின்றேன் ; ஆகிலும், இவ்வரணியம் மிகப் பெரிதாதலின், அவருடைய ஆச்ரமம் எங்கிருக்கின்றதோ அறிகின்றிலேன் ; அவருடைய ஆச்ரமம் எங்கிருக்கின்றதோ அருளிச் செய்க ; தேவருடைய அருளினால் ஸீதா லக்ஷ்மணர்களுடன் கூடி யகஸ்த்யமஹாமுனிவரைக் கண்டு பணிந்து மகிழ்வேன் ; அம்முனிவரை யான் கண்டு பணிந்து குற்றேவல் செய்து

வேண்டுமென மிக விருப்புறுகின்றேனென்று வினவினர். ஸுதீக்ஷ்ண மஹாமுனியும் அதுகேட்டு மகிழ்ந்து பெருமாளை நோக்கி, அடா ராமா! யானே உன்னை நோக்கி, யகஸ்த்யாஸ்ரமத்திற்கு ஸீதா லக்ஷ்மணர்களுடன் செல்லுகவென் றுரைசெய்யவேண்டுமென விருந்தேன், தைவாதீனமாக நீயே வினவினை; ஆதலின், யான் அகஸ்த்யாஸ்ரமம் இருக்குமிடத்தை யுரைக்கின்றேன் கேளாய், இங்கிருந்து தெற்காக நான்கு யோஜனம் செல்வாயாகில், அங்கே அகஸ்த்ய ப்ராதாவின் ஆஸ்ரமமிருக்கின்றது; அவ்விடத்தில் பிப்பலிக் காடுளது, அதில் கனிகள் பழுத்தும், மலர்கள் மலர்ந்தும், பற்பல பறவைகள் ஒலித்தும், தாமரை பூத்தும், தண்ணீர் நிறைந்தும், பலவகைப்பட்ட நீர்ப்பறவைகள் சூழ்ந்தும் திகழும்; அவ்விடத்தில் ஓரிரவு தங்கி, மறுநாளுதயத்தி லங்கிருந்து புறப்பட்டு அதற்குத் தெற்கில் அடர்ந்த வனத்தின் பக்கமே சென்று ஒரு யோஜனம் தாண்டுகையில், அங்கு அகஸ்த்யாஸ்ரம மிருக்கின்றது; அதனைக் கண்டு நீங்கள் எல்லீரும் மகிழ்வுறுவீர்கள்; அந்த அகஸ்திய மஹாமுனியைக் கண்டு பணிய ஆவலுளதாயின், இப்பொழுதே புறப்படுச் செல்க; என்றருளிச் செய்தனர். பெருமாளும் அதுகேட்டு உடனே ஸீதா லக்ஷ்மணர்களுடன் அவரைப் பணிந்து விடை பெற்றுக் கொண்டு, அகஸ்த்யாஸ்ரமத்தை நோக்கிப் புறப்பட்டு, ஸுதீக்ஷ்ணர் உரைத்த மார்க்கமே பற்றிச் சென்று, பற்பல வனங்களையும், மலைகளையும், ஆறுகளையுங் கண்டு மகிழ்ந்து, இளையபெருமாளை நோக்கிப் பாராய் லக்ஷ்மணா! இதோ அந்த அகஸ்த்ய ப்ராதாவின் ஆஸ்ரமங் காணப்படுகின்றது; பழுத்த பிப்பலிகளின் மணங்கமழ்ந்த மந்தமாருதம் வீசுகின்றதன்றோ? அங்கங்குக் கட்டைகளும் வெட்டிக் குவிக்கப்பட்டிருக்கின்றன; தர்ப்பைகளும் அறுக்கப்பட்டிருக்கின்றன, இந்த ஆஸ்ரமத்தின் நடுவில் ஹோம தூமம் மிக்க கறுத்து மேலெழுகின்றது, பரிசுத்தியுள்ள தீர்த்தங்களில் நீரிலாடித் தூய்மைகொண்ட முனிவர்களும், பகவதாராதனத்தின் பொருட்டு மலர் கொய்கின்றனர்கள்; ஆதலின், ஸுதீக்ஷ்ண மஹாமுனிவரால் கூறப்பட்ட அகஸ்திய ப்ராதாவின் ஆஸ்ரமமே இதுவாகும்; உலகங்களுக்கு இதஞ் செய்வதன் பொருட்டே இவர்க்கு ப்ராதாவாகிய அகஸ்த்யமஹாமுனிவர் இந்தத் தென்திசையை யடைந்து ம்ருத்யுவைப் போக்கி யருளுகின்றனர்; இங்கே முன்பு இல்வல வாதாபிக ளென்னும் இரண்டு அஸுரர்கள் வாஸஞ் செய்து கொண்டு, ப்ராஹ்மணர்களைக் கொலை செய்துகொண்டிருந்தனர்கள். அவர்களுள் இல்வலன் ப்ராஹ்மணவேஷம்பூண்டு ஸம்ஸ்கருதபாஷையுரைத்துக்கொண்டு, வேதியர்களை ஸ்ராத்தமென்று நிமந்த்ரணஞ்செய்து ஆட்டினுருவங்கொண்ட வாதாபியை யறுத்துச் சமைத்து உண்டிகளில் கலந்து, அந்த வேதியர்களைப் புஜிப்பித்து, மந்திர பூர்வமாகத் தம்பியை யுத்தேசித்து, அடா வாதாபி! எழுந்துவாவென்று கூவி யழைக்கையில், உடனே வாதாபியும்

ஆடுபோலக கற்றிககொண்டு அந்த வேதியர்களது குடலைப பீறிக் கொண்டு வெளியே வருவான். இவ்வண்ணம அவர்களால் அநேகமாயிரம பிராஹ்மணர்கள கொலைசெயயப்பட்டனர்கள. அநந்தரம தேவாக ளெல் லோரும அகஸ்த்யமஹாமுனிவரை வேணடி, அந்த வசுராகளைக கொலை செயயும்படி யுரைத்தனர்கள அகஸ்தியமஹாயோகியும அதற் குடனபட் டிங்கு வருகையில், இலவலன் இவரைககணடு வழககப்படி நிமந்தரணஞ் செயது ஆட்டினுருவங்கொணட தமபியைப் புஜிப்பிதது, ஸகலம் ஸம பூர்ணமென் றுரைத்த பின்பு, உத்தரா போசன மளிததுத் தமபியை யுத்தேசித்து, வாதாபியே! எழுந்திராயென றுரைத்தனன அகஸ்திய மஹாமுனிவர் அதுகேடடு (வாதாபே ஜீர்ணோபவ) என றுரைசெய்து இல்வலனை நோககி, அடா இலவலா! என்னால புஜிக்கபபட்ட பின்பும, வாதாபி எழுந்துவரும் திறமையுள ளதுவாஞேவென்று நகைத் துரை செயதனர். இல்வல னதுகேட் டிவரைக் கொலை செயயுமபடி எதிர்த்து வருகையில, அகஸ்தியமுனிவரும் வெகுண்டு விழிககையில, இலவலன பக்கென் றெரிந் திறந்தனன அத்தனமையராகிய அகஸ்தியமஹா யோகியின் பிராதாவினுடைய ஆச்ரமம் பாரடா தமபி! எனறிவ்வண்ணம் உரைத்துக்கொண் டிருககையில், ஆதித்தன அத்தகிரி யடைநதனன்; சந்திப் பொழுதும தோனறிறறு, பினபு, பெருமாள் இளையபெருமா ளுடன நிதய கருமஙகளை முடிததுககொணடு ஆச்ரமத்தினுடபுகுநது அகஸ்த்ய ப்ராதாவைக கணடு பணிந்தனா அமமுனிவரும இவாகளைக கண்டு மகிழ்ந்து பூஜிததனா. பெருமாளும சுகமாக அன்றிரவை யங்குப போககி, மறுநாளுதயததி லெழுநது செயகடனகளை முடிததுக்கொணடு அகஸ்தய ப்ராதாவைக் கணடு பணிந்து அவரை நோககி, மாதவரே! தேவருடைய ஆச்ரமததில இரவைச சுகமாகப போககினேன; தேவ ருடைய தமைய ராச்ரமஞ் செலவோம, விடை கொடுதது வாழத்தி யருள்க, என்றுரைத் தருளினா. அம்முனிவரும அது கேடடுப் பெரு மாளை நோக்கி, ஸ்ரீராமா! நீஙகள சுகமாகப போய வாரீர்களெனறு விடைமொழி மொழிநது வாழத்தி யனுபபினா. பெருமாளும விடை பெறறுககொணடு ஸுதீக்ஷ்ணமஹாமுனிவா அருளிசசெய்த வழியே பறறிச சென்று, அருகிலுள்ள வநததிலிருநத நீவார பன ஸதாலத மாலதி மிசவ குளவஞ் சுளதவ மதூக பிலவ சிரிபிலவ திநதுகம முதலிய மரஙகளையும, அமமரங்களில் படாந்து மலாந்துள்ள வல்லிகளையும், யானைகளின துதிககைகளினால முறிககபபடட கிளைகளையும, குரஙகு களினா லசைக்கபபட்ட நுனி மரஙகளையுங் கண்டு மகிழ்ந்து, பின் புறததில் வருகினற இளையபெருமாளை நோக்கித் தம்பி! இங்கே மரஙகள யானை முதலியவைகளால் முறிக்கபபடாமல அடர்ந்த இலைகளை யுடையன வாத லாலும், விலஙகுகளும, பறவைகளும், பகை நீங்கி யடஙகி இருககின்ற மையாலும், அகஸ்தியமஹாமுனிவரது ஆச்ரமம் அருகி லிருககின்றது

இவ்வண்ணம பெருமாளிளையபெருமாளுடன நீர் பறவை மரஞ் செடி கொடிகளினறிக் கோரமான பெருவழியைக கடந்து காணறகினிய காடுகளையுடையதும, பறபல பசு பக்ஷிகளை யுடையதுமாகிய ஆபபமபா ஸரோவரத்தைக கண்டருளினா

ஆரணயகாணடத்தில எழுபதஞதாவது சருககம

முற்றும்

---

# ஆரணியகாணடம்

முற்றுபபெற்றது.



ஸ்ரீராமஜயம்.

# கிஷ்கிந்தாகாண்டத்தின் அட்டவணை.

கிஷ்கிந்தாகாண்டத்தின் அட்டவணை

முற்றிற்று.





ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீரகுநந்தன பரபரஹ்மணேநம:

ஸ்ரீமத்வால்மீகிராமாயணவசனம்

# கிஷ்கிந்தாகாண்டம்.

தயானஸ்லோகம்

పశ్యన్పుష్కరిణీం ప్రసన్నసలిలాం పంపాం ప్రహృష్యద్ద్విజాం
హృష్యన్ముగ్ధదృశం స్మరన్ మహీభువం ముహ్యన్ సలక్ష్మణం
స్నిహ్యన్ సూర్యభువే సురేశ్వర భువే ద్రుహ్యన్ ఘరాభస్మనం
స్నహ్యన్ రౌద్రవపూరణాయ సహరిస్సుహృత్త్వమస్తాం శ్రియం.

பசயனபுஷகரிணீமபரஸனனஸலிலாம பமபாமபரஹருஷயததவிஜாம
ஹருஷயனமுகததருசமஸமரன மஹீபுவமமுஹயனலபனலக்ஷமணம
ஸநிஹபனஸூாயபுவேஸுரேசவர புவேதருஹயனதாண்பஸமஸம
நஹயனரௌதரவபூரணாய ஸஹரிஸஸநுஹயதவமஸதாமசரியம

## முதலாவது சருக்கம.

பெருமாளும் இளையபெருமாளும பமபா புஷகரணியின் கரையில எழுந்தருளி யிருககககணடு, மகாராஜர் அசசமுறறு நடுஙகியது.

அநந்தரம் பெருமாள இளையபெருமாளுடன பறபல மலர்கள மலர்நத அந்தப் பம்பையைககணடு, காமவேடகை மிகுந்து, புலனகள நடுங்கி, இளையபெருமாளை நோககி, பாரடா லக்ஷமணா ! இநதப் பமபை வைடூரியமபோல நின்மலமான நீருடையதும, மலாநத தாமரை நெயதல முதலிய மலாகளை உடையதும, பறபல மரம, செடி, கொடிகளினல சூழபபட்டதுமாகி விளங்குகின்றது ; இதைச சுறறிலுமுள்ள காட்டிலும் மலைகளபோல உயர்நத மரங்கள வளர்நதிருககின்றன , வசந்தருது சீதையைப் பிரிந்த என்னை வெறுககின்றது ; பரதனுடைய துன்பத்தி னலும்; சீதையைப பிரிந்ததினலும, மிக வருநதுகின்ற எனககும இப

பம்பை விளங்குகின்றது ; இது பற்பல மலர்கள் மலர்ந்தும், குளிர்ந்த நீர் நிறைந்தும், தாமரைகளினால் மறைந்தும், காணற்கினியதாகின்றது ; பாம்பு முதலிய கொடிய ஜந்துக்களும், பசு பக்ஷிகளும் அடர்ந்து, கறுத்தும், பசுமையாயுமுள்ள இந்த இளம்புல் உள்ள பூமி பற்பல மலர்கள் உதிர்ந்து சித்திராசனம்போல விளங்குகின்றது , மலர்ந்த மலர்களினால் நிறைந்த மரங்களின் நுனிகளும், மலர்ந்த கொடிகளினால் சூழப்பட்டுள ; இக்காலம் மிகவும் இனிய மந்தமாருதமுள்ளதாதலின், காமம் மிக வளர்கின்றது ; இச்சித்திரைமாசத்தில் எல்லாமலர்களும் மலர்ந்தமையின், மணம் மிக கமிழ்கின்றது , மலர்களை உதிர்க்கின்ற இம்மரங்களும், மழை பொழிகின்ற மேகங்கள்போலக் காணப்படுகின்றன , அவைகளினின்றும் உதிர்ந்து காற்றினால் தூற்றப்பட்ட புஷ்பங்களைப்பார், எங்கும் பரவியிருக்கின்றன ; விழுந்தனவும், வீழ்கின்றனவும், வீழ்வனவுமாகிய மலர்களுடன் காற்று விளையாடுகின்றதுபோலும், மலர்ந்த மரங்களின் கிளைகளை அசைத்து வீசுகின்ற காற்று வண்டுகளினால் பின்தொடர்ந்து கானம் செய்யப்பட்டு, மதமேறிய குயில்களின் தொனிகளினால் மரங்களை ஆட்டுவிக்கின்றதுபோலும், குகைகளின் பிரதிதொனிகளினால் கானம் செய்கின்றதுபோலும், அதனால் அசைக்கப்பட்ட மரங்கள் ஒன்றுடனொன்று சேர்ந்து தொடுக்கப்பட்டனபோலும், இது சந்தனம்போலக் குளிர்ந்து, மணம் கமிழ்ந்து, மெல்ல மெல்ல நகர்ந்து, சிரமத்தைப்போக்குகின்றது; வாயுவினால் அசைக்கப்பட்ட இம்மரங்கள் வண்டுகளினால் கூவுகின்றனபோலும், உயர்ந்த மரங்களினால் இம்மலைகளும் மிக உயர்ந்து தோற்றுகின்றன ; மலர்கள் நிறைந்த நுனி உள்ளனவும், காற்றினால் அசைக்கப்பட்டனவுமாகிய இம்மரங்கள் வண்டுகளினால் பாடுகின்றனபோலும், இந்தக் கோங்குமரங்களும், மலர்கள் நிறைந்து, பொன் அணிகளணிந்து, பீதகவாடை உடுத்த மனிதர்கள்போலத் திகழ்கின்றன , இந்த வசந்தகாலம் சீதையைப் பிரிந்த என்னை வெறுக்கின்றது , மன்மதன் என்னை பீடிக்கின்றான் ; மகிழ்ந்த இக்குயில் என்னைக் கூவி அழைக்கின்றதுபோலும்; இந்த வானகோழியும், மலை அருவியில் மகிழ்ந்து கூவி என்னை வருத்தமுறச்செய்யும் , முன்பு, பஞ்சவடியில் இதன் தொனியை ஜானகி செவியுற்று, என்னை அழைத்து மிக மகிழ்ந்து புகழ்ந்தனள் , இவ்வண்ணம் பற்பல பறவைகளும், பலவிதமாகக் கூவி, மரம், செடி, கொடி, புதல்களில் தத்தம் இனங்களுடன் கூடி, தத்தம் மனைவிகளுடன் புணர்ந்து மகிழ்கின்றன , இவைகளின் தொனிகளால் இம்மரங்கள் எனது வேட்கையை வளர்க்கின்றன ; வசந்தமென்னும் அக்கினி, அசோகங்களின் பூங்கொத்தென்னும் தணலையும், வண்டுகளின் தொனி என்னும் இரைச்சலையும், தளிர்கள் என்னும் செவ்விய சுவாலைகளையுமுடையதாகி என்னை எரிக்கும் ; அடர்ந்த இமைகளையுடைய குவலயம்போன்ற கண்களையும், சுரிகுழலையும், இனிய மொழியையுமுடைய சீதையைக் காணாமல் யான்

பிழைப்பதில் யாது பயன்? இக்காலமும், இவ்விடமும், அவளுக்கு மிக
வினியனவாகும், காமவேட்கையினால் தோன்றி, வசந்தத்தினால் வளர்க்கப்
பட்ட என்னுடைய இத்துன்பமென்னும் தீ என்னை விரைவில் எரிக்கும்,
அந்தோ? சீதையைக்காணாமல் இவைகளைக் காண்பதினால் எனது துன்
பம் பெரும்பாலும் வளரும்; சீதை கட்புலனாகாமல் வருத்துகின்றனளோ?
இவ்வசந்தருதுவோவெனில், காணப்பட்டே வருத்துகின்றது; இந்தத்
தென்றல் சீதையைப்பார்த்து மிக சிந்தையுடனிருக்கும் என்னையின்னம்,
தவிக்கச்செய்கின்றது, இம்மயில்களும் சிறகைவிரித்துக்கொண்டு தங்கள்
பேடுகளினால் சூழப்பட்டு மகிழ்ந்தாடுகின்றன; அடா லக்ஷ்மணா! ஆண்
மயில் ஆடக்கண்டு, பெண்மயில் வேட்கைகொண்டு, அதற்கு எதிரில்
ஆடுகின்றது பாராய், அதைக்கண்டு இம்மயிலும் வேட்கைகொண்டு
ஓடிச் சிறகுகளை விரித்து, தொனிகளுடன் மயக்குகின்றதுபோலும், இக்
காட்டில் சீதை ராவணனால் பறிக்கப்பட்டிராள், ஆதலின், இது காந்தை
யுடன் கூடி ஆடுகின்றது; இக்காலத்தில் பசு பக்ஷிகளும், மிக வேட்கை
கொண்டு புணர்ந்து மகிழுகின்றமையின், சீதை அன்றி நான் இங்கிருப்பது
மிகவும் கடினம், சீதை இருப்பாளாயின், இப்பெண்மயில் ஆண்மயிலை
மகிழ்விக்கின்றதுபோல என்னையும் மகிழ்விப்பாளல்லவோ? பாரடா
லக்ஷ்மணா! இம்மலர்ப் பலாசமும், என் விஷயத்தில் பயனற்றன
வாகின்றன, இம்மலர்கள் விருக்ஷங்களினின்று தரையில் உதிர்ந்து
விழுகின்றன, பக்ஷிகளுடன் கூடிக் கூவுகின்ற இப்பறவைகளும்,
எனது காமவேட்கையைப் பெருக்குகின்றன, சீதை இருக்குமிடத்திலும்
இந்த வசந்தகாலமிருக்குமாயின், என்னைப்போலவே அவளும் வருந்துவா
ளல்லவோ? இது அவ்விடத்திலிராது, இருக்குமாயின், என்னை விட்டு
அவள் எவ்வண்ணமிருப்பாள்? ஒருகால் இந்த வசந்தமிருக்குமாயின்,
பிறகாலால் வெருட்டப்பட்ட அவள் யாது செய்வாள்? யௌவனமுடைய
வளும், தாமரை இதழ்போன்ற கண்களையுடையவளும், இனிதாகவும்,
மெதுவாகவும், முன்பு மொழிபவளுமாகிய என் நாயகி! இக்காலத்தில்
உயிரையே விட்டு விடுவாள், இவ்விஷயத்தில் என் மனம் சிறிதும்
ஐயமுறுகின்றிலது,—

మయిభావస్తు వైదేహ్యా స్తత్వతో వినివేశితః
మమాపిభావస్సీతాయాం సర్వథా వినివేశితః

மயிபாவஸ்துவைதேஹ்யா ஸ்தத்வதோ விநிவேசித:

மமாபிபாவஸ்ஸீதாயாம ஸர்வதா விநிவேசித:

வைதேகிக்கு என்னிடத்திலும், எனக்கு அவளிடத்திலும், ஆசையும்
அன்பும் உண்மையாக உள அல்லவோ? மணம் கமழ்ந்தும், குளிர்ந்தும்
வீசுகின்ற இக்காற்றும், அவளைப்பிரிந்து வருந்துகின்ற எனக்குத் தீப்போ

லத்தோறறுகின்றது, யான சீதையுடனிருக்கையில், இக்காறறை எப்பொ ழுதும் குளிர்ந்தே யிருக்குமென நினைத்திருந்தேன்; இப்பொழுது அது சீதையின்றி, தீப்போலத் தீக்கின்றதே? இக்காக்கையும், முனபு வன்மை யாகக் கூவி இப்பொழுது இனிமையாகக் கூவுகின்றது; இக்காக்கையே முன்பு சீதையினல் ரக்ஷிக்கப்பட்டு, இப்பொழுது பிரதி உபகாரம செய்கின்றதுபோலும், ஆதலின, இது என் நாயகியின் சமீபத்தை அடைவிக்கும, மலாநத மலாகளின்மேல மகிழ்ந்து கூவுகின்ற இப்பறவை களைப பாராய், காறறினல அசைக்கப்பட்ட திலகமரத்தின பூங்கொத்தை இந்த வண்டு மததத்தினல மயக்குகின்ற நாயகியைப்போலச சேர கின்றது; காமிகளை மிகச சோகமுறச்செய்கின்ற இந்த அசோகமரமும் காற்றில அசைகின்ற பூங்கொததுகளினல, என்னை வெருட்டுகின்றது போலும்; அடா லக்ஷ்மணு! தளிர்த்து மலாந்த இம்மாஞ்சோலையும மகிழ்ந்து செருக்குறறு, நறசாந்தமபூசிய மனிதாபோல விளங்குகின்றது கின்னரங்களும, இப்பம்மையின் நாறபுறங்களிலும உலாவுகின்றன மலாந்த செந்தாமரைகளும, அப்பொழுது தோனறிய சூரியனபோல விளங்குகின்றன, இப்பம்மையும நிர்மலமான ஜலமுடையதும, தாமரை செயதலகள நிறைந்ததும, அன்னம முதலிய நீாப்பறவைகள ஒலிப்பதும சுரும்புகள அருந்திய மகரந்தங்களையுடைய செ[illegible]ாமரை திகழவதுமாகிக் காணப்படுகின்றது; யானை, மான முதலிய விலங்குகளுமிறங்கி நீர் குடிக் கின்றன, கடமபகளும காறறினலுயாந்த அலைகளினல மோதப்பட்டு அசைகின்றன, தாமரை இதழபோலவகன்ற கணகளையுடைய நிரந்தரம் தாமரைமீது விருப்புற்ற சீதையைககாணமல், என உயிர வாழ்க்கையை நனகு மதிக்கிலறிலேன, அந்தோ? காமனது கொடுமையை எனனென உரைப்பேன், நெடுநாளாயப்பிரிந்து பாரக்கவரிய நாயகியை அவன் நினைக் கச செய்கின்றனனே? இந்த வசந்தருது மலாந்த வனங்களையுடையதாகி என்னை வருததாதாயின, காமனை வெலவேன, சீதையுடன் கூடி யிருக் கையில், எவை எனக கினியன வாயினவோ? அவை எலலாம இப் பொழுது இனியன ஆகினறில, தாமரை இதழ்களை என் கண சீதையின் கணகளென எண்ணுகின்றது;—

పద్మకేసరసంస్పృష్టో వృక్షాన్తరవినిస్సృతః
నిశ్వాసఇవసీతాయా వాతివాయుర్మనోహరః

பதமகேஸரஸம்ஸருஷ்டோ வருக்ஷாந்தரவிநிஸ்ருத:
நிசவாஸஇவஸீதாயா வாதிவாயுர்மனோஹர:

தாமரை தாதுக்களுடன் கூடி இனியமரங்களின் இடையினின்று தோன்றிய இக்காற்று, சீதையின்மூசசுக்காற்றுபோல வீசி என் மனதை எரிக்கின்றது; பாரடா லக்ஷ்மணு! பம்பையின் தென்கரையில் மலை

தாழ்வரைமேல் மலர்ந்த கர்ணிகாரமரம் மிகத் திகழ்கின்றது; அம்மலையும் பற்பல தாதுக்கள் நிறைந்து, வாயுவினால் மோதப்பட்டு, பற்பல நிறமுள்ள தூளிகளைப் படைக்கின்றது; மலையின் தாழ்வரைகளும், மலர்ந்தனவும், இலை உதிர்ந்தனவுமாகிய பலாச மரங்களினால் எரிகின்றன போலக் காணும்; பம்பையின் கரையில் முளைத்த ஜாதிமல்லிகை, அரளி, தாழை, நொச்சி, சிறுமல்லிகை, பெருமல்லிகை, குருக்கத்தி முதலிய பூஞ்செடிகளும், புன்னாகம், இருப்பை, வஞ்சுளம், வகுளம், சண்பகம், திலகம், புன்னை, கடம்பு, காசகூரம், மாதவிலதைகை, அசோகம், ஆனைவணங்கி, அதிமுத்தசில, மா, பாதிரி, மலை அகில், வஞ்சி, காட்டுவாகை, சிம்சுபம், மருதாணி, சந்தனம் முதலிய பற்பல மரங்களும் மலர்ந்து, தேன் பொழிந்து, மலர்ந்த கொடிகளினால் சூழப்பட்டு, அடர்ந்து விளங்குகின்றன, தூரத்திலிருக்கின்றனவும், காற்றினால் அசைந்து அருகிலிருக்கின்றனபோலக் காணப்படுகின்றன; காமிகள் காமினிகளைப்போல இம்மரங்கள் கொடிகளைத் தழுவுகின்றன, இக்காற்றும் மரத்தினின்றும் மற்றொருமரத்திற்கும், மலையினின்றும் மலைக்கும், வனத்தினின்றும் வனத்திற்கும் சென்று பற்பல ரசங்களையும் முகர்ந்து கமழ்ந்து வீசுகின்றது; சில மரங்கள் மிகுதியும் மலர்ந்து மதுவைப்பெருக்குகின்றன, சில முகிழ்த்துக் கருமையாகத் தோற்றுகின்றன, இது காயுற்றினியது, இது ருசியுள்ளது, இது மலர்ந்தது, என்று பேராசைகொண்ட வண்டும், அங்கங்குத்திரிந்து அலைந்து உட்கார்ந்து, உடனே எழுந்து வேறு இடத்திற்கு நிகழ்கின்றது, இந்தப் பூமியும் தானே மலர்ந்து உதிர்ந்த மலர்களினால் பரப்பப்பட்டுப் படுக்கைபோல விளங்குகின்றது, வெவ்வேறு வண்ணமுள்ள மலர்கள் நிறைந்த சிலைகள் தனித்தனிக் காணப்படுகின்றன, இந்த வசந்தகாலத்தில் மலர்ந்த மலர்கள் எவ்வண்ணம் நிறைந்திருக்கின்றன பாராய், மரங்கள் யாவும் ஒன்றுக்கொன்று பகையினால் முற்றும் மலர்ந்து வண்டுகளின் ஒலியினால் ஒன்றுக்கொன்று கூவி அழைக்கின்றனபோலும், இந்த நீர்க்காக்கை நீரில் மூழ்கிய பேடுடன் புணர்ந்து மகிழ்கின்றது; இவைகளைக் காண்பதினால் என்னைக் காமத்தீப்பற்றியெரிக்கின்றது, இந்தப் பம்பை எவ்வளவு அழகுற்றிருக்கின்றதோ? மந்தாகினியும் இவ்வளவும் அழகுற்றதே? ஆதலின், அது உலகினில் புகழப்படுவது தகும், அடா லக்ஷ்மணா! என் பிராணநாயகியும் காணப்பட்டு, இவ்விடத்திலும் வாழ்வோமாகில், யான் இந்திரன் பட்டத்தையும் விரும்பேன், திருவயோத்தியையும் நினையேன், மிகவும் அழகிய இவ்விடங்களில் சீதையுடன் கூடி மகிழ்வேனாகில்; வேறு சிந்தை எவ்வண்ணந்தோற்றும்? தளிர்த்து மலர்ந்த இந்தச் சோலைகளும், சீதையைப் பிரிந்த என்னைப் பேதைமை செய்கின்றனவே?

லக்ஷ்மணா! இந்தப் பம்பை மலர்ந்த தாமரை முதலிய மலர்களா ...வுகின்ற அன்னம் முதலிய பறவைகளாலும், சுற்றிலுமுள்ள மான் ...லிய விலங்குகளாலும், பெரும்பாலும் விளங்குகின்றது; மகிழ்ந்து

கூவுகின்ற இப்பறவைகளும், எனது காமத்தை வளர்க்கின்றனபோலும்; முழுமதிபோன்ற திருமுகமண்டலத்தையும், தாமரை யிதழ்போன்ற திருக்கண்களையுமுடைய என் நாயகியை நினைக்கையில், சோகம் வளா கின்றதே? பற்பல வண்ணமுற்ற அழகிய தாழ்வரைகளில், மான்கள் பெண்மான்களுடன் கூடிப் புணர்ந்து, சீதையையிழந்த என்னைத் துய ருறச் செய்கின்றன; இவ்விடத்தில் யான் சீதையைக் காண்பேனாகில், உய்வேன்; வைதேகி என்னுடன் கூடி இந்தப் பம்பையின் கரையைச் சேர்ந்து மகிழ்வாளாயின், யான் பிழைப்பேன், அடா லக்ஷ்மணா! தாமரை செங்கழுநீர் முதலிய நறுமலர்களின் மணங்கமழ்ந்தும், குளிர்ந்தினபந் தருவதும், காந்தையர்களுடன் சேர்ந்தோர்க்குத் சோகத்தைப் போக்கு வதுமாகிய இப்பம்பாசரோவரத்தையும், அருகிலுள்ள சோலைகளையும் தாக்கிவருகின்ற மந்தமாருதத்தை நல்வினையாளரல்லரோ? மகிழ்ந்தெதிர் பார்த்து அனுபவிக்கின்றனர்கள், ஜனகராஜன் திருமகளும், யௌவன முடையவளும், தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடையவளும், கற் புடையாளுமாகிய என் பிராணநாயகி! இக்காலையில் எவ்வண்ணம் இறக் காமல் வாழ்வாள்? யான் சீதையைப் பறிகொடுத்து வனவாஸந்தீர்ந்து உரியவீடு சேர்ந்து வாழ்கையில், ஜனகசக்கரவர்த்தியாரெழுந்தருளி என்னைக்கண்டு என் மகள் எங்கேயென்று கேட்டருள்வாராயின், யான் யாது மறுமொழி யுரைப்பேன்? யான் தந்தையினாலோட்டப்பட்டு அர சிழந்து காடு சேர்கையிலும், நல்வழிபற்றி நம்மைத் தொடர்ந்து வந்த என் நாயகி! இப்போதெங்கிருக்கின்றனள்? அடா தம்பி! யான் அவளை விட்டெவ்வண்ணம் உய்வேன்? மிகவும் அழகிய அவளுடைய திருமுக மண்டலத்தைக்காணாமல் என் மனம் மிகவும் வருந்துகின்றது, புன்னகை யுடன் இனிதாகவும், இதமாகவுமுரைக்கப்பட்ட என்னுயகியின் வாக்கி யத்தை யான் கேட்டின்புறுவதெக்காலம்? யான் காட்டடைந்து திரிந்து வருந்துகையில், அவள் வருத்தமுற்றினும், வருத்தமற்றவள்போலவும், மகிழ்வுற்றவள்போலவும், என்பால் இன்மொழிகள் மொழிவாளல்லளோ? யான் மீளவும் படைவீடு சேர்கையில், என் சீதை எங்கேயென்று கோஸலையார் கேட்பாராயின், யான் யாது பதிலுரைப்பேன், ஆதலின், அடா லக்ஷ்மணா! நீயே திருவயோத்திக்குச்சென்று என்மீது மிகப் பக்தி யுள்ள ஸ்ரீபரதனுக்குச் செய்தி கூறுக; யான் சீதையின்றி, உய்யேன், என்று இவ்வண்ணம் மஹாத்துமாவாகியும், திறமையற்றவன்போலப் புலம்பி யழுதனர். இளையபெருமாள் அதுகேட்டவரை நோக்கிக் கேட் டருளீர் எம்மையரோ! தேவர் சோகத்தையுள்ளடக்கி யருள்க; தேவர்க்கு மங்கலமுண்டாகுக; துன்புறற்க; தேவர் புருஷோத்தமரல்லீரோ? தேவர்போன்ற பற்றற்ற தூயோர்களது திருவுள்ளம் இவ்வண்ணம் குறுமோ? உலகத்தில் ஒருவர்க்கொருவர் பிரிவதும், அதனால் துன் புறுவதும் இயல்பேயாகுமென்றெண்ணி, இஷ்டர்களிடத்திலும் நேசத்

மேற்கொள்ளாமல் துறந்தருள்க; ஸ்நேஹம் (எண்ணெய்—அன்பு) மிகுதியாயிருப்பதினாலன்றோ? திரியிரமாயினும், எரிக்கப்படுகின்றது; அந்த் ராவணன் பாதாளத்திற்காயினும், மற்றெங்கேயாயினும் ஓடி யொளித்துக்கொள்ளினும், அவன் நமக்குத் தப்பிப் பிழையான்; முன்பு அவனது செய்தியைமாத்திரம் அறிந்துகொள்ளவேண்டும்; அவன் பின்பு பிராட்டியாரையாயினும் விடுவான், அல்லது, உயிரையாயினும் விடுவான்; பின்பு, அவன் அதிதியின் கர்ப்பத்தில் ஒளித்துக்கொள்ளினும், அங்கும் அவனைக் கொல்வேன், ஆதலின், தேவர் தீரமுற்று நிலைகொண்டு தீனத் தைத் துறந்து மகிழ்க; ஒரு பொருளும் முயற்சியின்றிப் பெறப்படாது, எம்மையரோ! உற்சாகமென்பதே சிறந்த பலமுடையது; இதற்கு நிகரான பலம் ஒன்றுமில்லது; உற்சாஹமுடையோர்க்கு இவ்வுலகினில் பெறற் கரிய பொருளொன்றுமில்லது, உற்சாகமுடையோர்களோ ஒரு விஷயத் திலும் சிந்தையுறுகின்றிலர், ஆதலின், யாம் உற்சாஹத்தையே மேற் கொண்டு பிராட்டியாரைப் பெறுவோம், ஆதலின், தேவர் சோகத்தைப் பின்னடக்கிக் காமத்தையும் வென்று தீரமுறுக, தேவர் மஹாதீர முடையோரென்பதையும், பெரியோர்களுடன் பழகிய மதியுடையோ ரென்பதையும், பரமபுருஷரென்பதையும், மாயாமானுஷவிக்கிரகரென் பதையும் அறிகின்றிலீரோ? என்று விண்ணப்பஞ்செய்து தேற்றினர். உடனே பெருமாள் சோகத்தையும், மோகத்தையும் துறந்து தீரங் கொண்டு, மிகவும் அழகிய அந்தப் பம்பா புஷ்கரிணியைத்தாண்டி எழுந் தருளிப் பற்பல மரங்களையும், மலையருவிகளையும், குகைகளையும் கடா க்ஷித்துக்கொண்டே இளையபெருமாளுடன் கூடிப் புறப்பட்டருளினர். இளையபெருமாளும் இவ்வண்ணம் மிகவும் ஊக்கத்துடன் தருமத்தினா லும், பலத்தினாலும், புத்தியினாலும், பெருமாளைக் காத்துக்கொண்டிருந் தனர். இவ்வண்ணம் எழுந்தருளுகின்ற இவ்விருவரையும் ரிச்யமூகமலையி னருகில் உலாவிக்கொண்டிருந்த மஹாராஜர்கண்டு, வியப்பும், மயக்கும், ஐயமுமுற்று நடுங்கித் திகைத்து நின்று, நம்மைக் கொலைசெய்வதன் பொருட்டு வாலியே அனுப்பியிருப்பானென்று மஹாபயமடைந்து மிகவுந் துயருற்று வருந்தினர். மற்றுமுள்ள வானரமுதலிகளும், இவர் களைக்கண்டஞ்சி நாற்றிசைகளிலும் ஓடினார்கள்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் முதலாவது சருக்கம்

முற்றிற்று.

---

ஆரண்யகாண்டத்தில் தீனஜனபரிபாலன ரூபமான தருமம் அனுஷ்டிப்பிக்கப் பட்டது; இக்காண்டத்தில் மித்திரஸம்ரக்ஷணரூபமான தருமம் அனுஷ்டிப்பிக்கப்படு கின்றது; முன்காண்டத்தில் மோக்ஷபரதத்வரூபமான பாரதத்வசிஹ்னம் அருளிச

செயயபபடடது; இதில் அலங்கயேய கலயாண குணகாதவம் அருளிசசெயயபபடு கினறது, அனறியும, சரணகதிமநதிரததின உததரகணடததின், ஸ்ரீமச்சபதாாததம பாலகாணடததிலும், நாராயணசபதாாததம, ஸாவஜனவியாமோஹகாதவ பரதிபாதகமான அயோதயாகாணடததிலும, சதாததயாததம, பஞசவடவாஸபாயநதமாக முனிஜனகருதகைஙகாய பரதிபாதகமான ஆரணயகாணடததின பூாவபாகததிலும, நமசசபதாாததம, கராதிவத பரதிபாதகபாகததிலும கூறபபடடன; அதன மேல சேதனாகள உஜஜீவிககும வகை கூறபபடுகினறது; அதனுள மாரீசதாசனவருததாநததால் ஸ்ரீபகவானுடைய நிரநதரானுபவததுககுரிய சேதனாகள அதைததுறநது விஷயஙகளில காமுறறலவாகளெனபதும, ராவண விருததாநததால அதனால மோகம மேறகொளவதும, ஜடாயு வருததாநததால காமமாததிரததால ராவணனபோல ஸமஸாரம நீஙகாதெனபதும, லஙகையில புகுநததினால சீராநதரபராபதியும, ராக்ஷகராக்ஷஸீ வியாபாரஙகளினால தாபதரயாதிதுககமும, பெருமாள தேடுவதினால பெருமாளுககு ஆசிரிதாபாலுளள அவியாஜகாருணயமும, ஆக ஆரணயகாணடததில உரைககபபடடன, இநதக காணடததில ஆசாாயமுகததாலே சேதனாகளுககுந தமமேல பததியுணடாககசசெயது வீடேறறுவதனபொருடடு, பெருமாள அதைத தேடுவது கூறபபடுகினறது, உசனுள முதலசாககததில பெருமாள நிததியகைஙகாயம்பணணும நிததிய ஸூரிகளைககணடு இவாகளைபபோலப பததாகளும எனனை யடைநது மகிழகினறிலரொனறு கலேசிபபது கூறபபடுகினறது,—

இதில வஸநத வாணன வியாஜததால ஆசாாயலக்ஷணஙகளும, சிஷயலக்ஷணஙகளும, வாஞசரமோசித வியாபாரஙகள அவா ஜனியஙகளெனபதும, ஞானபராகளுடையோாகளது தனமையம, நிததிய விபூதியிலும, லீலாவிபூதியிலும், அவாவிருககும பிரகாரஙகளும, மறறும பறபல ரஹஸயஙகளும, காமுகாகளது செயலகளும சூசனை செயயபபடடன, மதியுடையோாகள வாககியஙகளதோறும இவவாததஙகளைக கணடு கொளவாாகள, விரிவாக உரைசெயின, கிரநதம வளருமாதலின, கூறுகினறிலேன,—

## த னி ச் லே ா கி .

(பதமகேஸரஸமஸருஷடஃ) எனபதினால ஸாவபராணிகளுககும பராணஹேதுவான காறறுததானே நமமை ஸாவஸவாபஹாரம பணணுகினறதெனகிறா; (பதமகேஸரஸமஸருஷடஃ) இககாறறின காரியம தூளியெழுநது செலலாநினறது, தாமரையாள கைவிடடபடியாலே தாமரைததாதும பிரதிகூலிததது; (பாதாருநதத மேவபஙகஜராஜஃ)எனறு அவளதனககு மகப்படப பாதகமானது நமககுப பாதகமாகச சொலலவேணடாவிறே? இதினுடைய ராஜஸம் இருககுமபடி நமமையும மதிககிறதிலலையே? இதுககு அடி கணடகிகளோட்டை ஸமஸாககமிறே? இததைக காறறென்றிருநதோம; இது கேஸரியாயிருநத தீ? தனககு மேலே கூடடுபபடையுந தேடி வாராநினறது; ரூபவானகளிறே அசகாய சூராாயிருபபாா, இது ரூபஹீனமாகையாலே துணைதேடுமிறே? இபபடி பாதகமாய வநததாகில, அறிநதருகவே பரிஹரிககததட்டெனனெனன? (வருக்ஷாநதரவிநிஸஸருதஃ) தூரததிலே கணடு பரிஹரிக்கவொணணாதபடி குனறுடுபொழில நுழைநதேனெனகிறபடியே மரஙகளிலே வநது பதிகிடநது கடுவே புறபபடக கணடிததனை, செலவபபிளளைகள வெயில்பொருமல் நிழலிலே வருமாபோலே இதுவும மரதது நிழலிலே வாராநினறது; கீழே பதம கேஸரஸம்ஸ்ருஷடஃ, எனறு ஸௌரபயஞசொலலிறறு; விருக்ஷாநதரவி நிஸஸருதஃ,

என்று மரத்திலே தேங்கி இடைவெளியாலே யொழுகப் புறப்படுகையாலே மாந்த்யஞ் சொல்லிற்று, மரத்து நிழலிலே வருகையாலும், தாமரையிலுள்ள தேனிலளாவி வருகையாலும், சைத்தியஞ்சொல்லிற்று, ஆகசைத்தியமும், ஸௌரப்யமும், மாந்தியமும் சொல்லிற்று; (வருக்ஷாந்தரவிநிஸ்ருத:) விடாய்த்த நம்மை மரத்தடியிலே யொதுங்கவொட்டுகிறதில்லை; இப்படி பாதகமாய் வந்தால் நம்மைக்கொண்டகலு மித்தனையன்றோவென்ன, (நிச்வாஸ இவஸீதாயா:) முகம்பழகினாற்போலே யிருக்கையாலே யதுவுஞ் செய்யப்போகிறதில்லை, மைதிலியுடைய மூச்சுக்காற்றுப்போலே யிருக்கையாலே, அவள்தானிம்மரத்தடியிலே யொளித்து நின்று வருகின்றாளோ? என்கின்ற நசையாலே போகப்போகிறதில்லை; ஆமோதசம்பந்திகரந்தென ஸ்வநிச்வாஸாநுவாதி னம், என்று நிச்வாஸத்துக்குப் பரிமளமுண்டாகச் சொல்லக்கடவதின்றே? ஸ்பர்சனமாய் நலிகிறதுக்குமேல் ஸௌமாரமாயும் நலியாநின்றது, இப்படிக்கொத்த காற்று தோன்றினவளவோவென்னில், (வாதி) சாபி தன் பரப்புந்தானுமபடி யுலாவாநின்றது; அன்றியிலே, வாதியென்று பாதகமென்று கொண்டுபோக வொண்ணாதபடி தான் சம்பாதித்த கந்தத்தாலே துவக்காநின்றது, ஒருதான் கந்தவாஹமிறே? இப்படி பாதகமாக வந்து தோற்றி யுலாவுகிறதுதானே தென்னில், (வாயு:) ஸர்வோஜ்ஜீவநஹேதுவான காற்றுக் கெடுபடிப் பாதகமாகிறது, பரப்ரஹ்மமான இவருக்கு அஞ்சித் திரிகிற காற்றின்றே? இவர் தம்மை யஞ்சப்பண்ணித் திரிகிறது; இப்படி யஞ்சப்பண்ணுகிறபடி என்னென்னில், (மநோஹர:) மேலெழுந்தனத்தியும், உள்ளுள்ள பதார்த்தங்கட்கு உபகரியாநின்றது; இது லோகத்திலே ஒருவழிப்பறிகாரர் ஸம்பியாய நடக்கிறது, (பத்மகேசரஸம்ஸ்ருஷ்ட:) என்கையாலே தங்களை இன்னாரென்று அறியாமைக்கும், கண்டால் பயப்படுகைக்குமாகவும், அவர்களுமுளாநமயலாளி வருகிறாப்போலே யிருக்கிறது, (வருக்ஷாந்தரவிநிஸ்ருத:) என்கையாலே, அவர்கள் வழிப்போகிறவர்களை வருத்துவையும், மரத்தடிகளிலே பதுங்கிடந்து அவர்கள் அறுகவந்தவாறே பற்றப்பிடிமாப்போலே யிருக்கிறது, (நிச்வாஸ இவஸீதாயா:) என்கையாலே, அவர்கள் கைசலிப்பபோகாமே நலக்குமபடி பண்டுகண்டறியுமாபோலே யிருந்து உம்முடைய ஊர்சொல்லீர், பேர் சொல்லீர், என்றுப்போலே முகமறிவுசொல்லி யுகப்பிக்குமாபோலே யிருக்கிறது, (வாதி) என்கையாலே காரியம் கைப்புகுருந்தனையும், அவர்கள் நின்றவிடத்திலே நில்லாதே பரக்குபரகென்று சஞ்சரிக்குமாபோலே யிருக்கிறது, (வாயு:) என்கையாலே, யாரோடுங்கூடாது பிடிக்கப்புக்கால் உடம்போடுடம்பு தாக்காநிற்கச்செய்தேயும், கைக்குப் பிடிகொடாதே யிருக்குமபடியைச் சொல்லுகிறது, (மநோஹர:) என்கையாலே, மேலெழுந்த கிழிச்சினையன்றியிலே, உள்ளுள்ள தடைய அபகரிக்கும்படி சொல்லுகிறது,—



## இரண்டாவது சருக்கம்.

மஹாராஜர் பெருமாளை இளையபெருமாளையும் இன்னாரென்று அறிவதன் பொருட்டுச் சிறிய திருவடியை யனுப்பியது.



அந்த ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும் சிறந்த ஒளியுள்ளவர்களும், சிறந்த படைகளைக் கையிலேந்தியவர்களும், மிக வீரமுடையவர்களுமாக அங்கே உலாவினமையின், மஹாராஜர் கண்டு ஐயமுற்றுப் பத்துத் திசை

களையும் சுற்றிப்பார்த்து, எங்கும் நிலைகொள்ளாமல் நடுங்கி, மனம்பதைத்து, மிகச் சிந்தைகொண்டு, தன்னுடனே தொடர்ந்திருக்கின்ற வானரர்களைக் கூட்டி யவர்களை நோக்கிக் கேளீர் நட்பினர்களே! இவ்விருவரும் புகற்கரிய இக்காட்டில் நம்மைக் கொலைசெய்வதன்பொருட்டே வாலியினாலேவப்பட்டு வந்தனர்களென்றே நம்புகின்றேன், ஆதலின், கபடத்தினால் மரவுரி யுடுத்து முனிவர்போலத் திரிகின்றனர்களென்றனன். அவ்வானரர்களும் அம்மொழிகேட்டு அவர்களையும் பார்த்துச் சந்தேகங்கொண்டு அவ்விடத்தை விட்டு மற்றொருவரை வந்து புகற்கரிய சிகரத்தின்மேற்சென்று மஹாராஜனைச் சூழ்ந்து நின்றனர்கள். அவர்கள் ஓடின வேகத்தில் மரங்களும் முறிந்தன, அங்குள்ள விலங்குகள் அச்சங்கொண்டோடின, இவ்வண்ணம் யாவரும் பயந்தோடி யொளித்துச் சிந்தையுறுகையில், மஹாபல பராக்கிரம முடையவரும், புத்திநுட்பமுடையவரும், மொழிவல்ல சிறந்தவருமாகிய சிறியதிருவடி மஹாராஜனை நோக்கி, வானரர் கோமானே! வாலிக்கு அஞ்சி ஏன் ஓடி யொளித்துக்கொள்ளுகின்றீர்கள், அச்சமுறற்க, இது ரிசியமூகமலையாதலின், இங்கு வாலியின் பயமில்லையே? நீங்கள் அஞ்சத்தக்க வாலியையும், இங்கே காண்கின்றிலேன், ஆதலின், நீர் அஞ்சத்தக்க காரணம் ஒன்றுமில்லை, இன்னும் குரங்கு தன்மையே நன்கு வெளிப்பட்டது; சஞ்சலித்த புத்தியுடையவராகையால், மனத்தை அடக்கித் தீர்மானத்தை மேற்கொள்ளுகின்றிலிர், தேவர் அரசராதலின், புத்தியினால் இங்கிதசேஷ்டைகளை அறிந்து எல்லாக்காரியங்களையும் செய்யவேண்டுமன்றோ? புத்தி குறைவன அரசனாகி அரசாட்சிசெய்யான், ஆதலின், அச்சம் துறந்து, தீரம்பூண்டு, நன்கு ஆராய்ந்து, இனி நடக்கவேண்டுவதை உரையீரென மொழிந்தனர்.

மஹாராஜரும் இவ்வண்ணம் சிறியதிருவடி மொழிந்த வாக்கியத்தைக்கேட்டு அவரை நோக்கி, கேளீர் அனுமானே! நீண்டுருண்ட திருக்கைகளை யுடையவர்களும், செந்தாமரைமலர்போலக்கண்ற திருக்கண்களை யுடையவர்களும், வில், கணை, வாள் முதலிய ஆயுதங்களைத் தரித்தவர்களும், தேவகுமாரர்கள் போன்றவர்களுமாகிய இருவர் எழுந்தருளுகின்றனர் பாரீர், இவர்களைக் காணின், எவர்க்குத்தான் அச்சம் தோன்றாது, வாலியினால் ஏவப்பட்டு நம்மைக் கொலைசெய்யும்பொருட்டே இவர்கள் இங்கே வருகின்றனரென்று நம்புகின்றேன், அரசர்கள் பற்பல வீரர்களுடன் நட்புகொண்டிருப்பார்களல்லரோ? ஆதலின், நாம் இவர்களை நம்பியிருத்தல் தீது, ஆதலின், மாறுவேஷங்கொண்டு இவர்களின் எண்ணத்தை அறியவேண்டும், நாம் நம்பியிருக்கின், சமயம்பார்த்து இவர்கள் நம்மை கொலைசெய்து விடுவார்கள்; ராஜகாரியங்களில் வாலி மிகவும் ஊக்கமுடையவன், ராஜாக்களென்றால், பற்பல உபாயங்களையும் அறிந்தவர்களல்லரோ? ஆதலின், கபட வேஷத்தினாலேயே இவர்கள் தன்மையை அறியவேண்டும்; ஆதலின், நீர் அற்பமனிதன்போல வேஷம்பூண்டு அவர்களிடம்சென்று இங்கிதங்களினாலும், வியாபாரங்களினாலும், வாக்கியங்களினாலும், அவர்களுடைய கரு

த்தை நன்கு அறிந்து கொள்க; நல்ல எண்ணமுடையவர்களாயின், அவர்களை பலவாறாகப் புகழ்ந்து விசுவாசத்தை உண்டுபண்ணி, அவர்கள் குலகோத்திரங்களையும், இங்கே வந்ததற்குக் காரணத்தையும், நான் கேட்பதாகக்கேட்டு அவர்கள் உரைக்கும் பிரதி உத்தரத்தினால் உண்மையை நன்கு அறிந்துகொண்டு வாரீரென்று மொழிந்தனன். சிறிய திருவடியும் மஹாராஜரால் ஏவப்பட்டு அவ்வண்ணமே யாகுகவென்று மொழிந்து, ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் எழுந்தருளியிருக்கும் இடத்தை நோக்கிப் புறப்பட்டனர் *

கிஷ்கிந்தாகாண்டத்தில் இரண்டாவது சருக்கம் முற்றிற்று

---

## மூன்றாவது சருக்கம்.

சிறியதிருவடி, பெருமாள் இளையபெருமாளைக் கிட்டிப் புகழ்ந்து குலகோத்திரங்களை வினவ, இளையபெருமாள் பெருமாளால் ஏவப்பட்டு விடை அருளிச்செய்தது

பின்பு சிறியதிருவடி, மஹாராஜா வாக்கியத்தின்படி ரிசியமூகபர்வதத்தினின்று எழுந்து வாநரரூபத்தை விட்டு ப்ரஹ்மசாரிரூபந்தரித்து, ஸ்ரீராமலக்ஷ்மணர்களெழுந்தருளியிருக்குமிடம் வந்து அவர்களுக்கு தண்டம் சமர்ப்பித்து அவர்களை நோக்கி, இனிதாகவும், மெதுவாகவும் மொழியலுற்றனர் மஹாநுபாவர்களே! தேவர்கள் ராஜரிஷிகளோ? தேவரிஷிகளோ? தாபசவேஷம்பூண்டிருக்கின்றீர்கள், மிகவும் அழகுடைய தேவர்கள் இவ்விடத்திற்கு எழுந்தருளிய காரியம் யாதோ? தேவர்களைக் கண்டு மான் முதலிய விலங்குகள் அஞ்சுகின்றன; பம்பாதீரத்திலுண்டாகிய பற்பல மரங்களையும் கடாக்ஷித்துக்கொண்டு இவ்விடமெல்லாம் நிகழச்செய்கின்றீர்கள், தீரமுடையவர்களும், தங்கம்போன்ற திருமேனியையுடையவர்களுமாகியும், மரவுரி உடுத்திருக்கின்றீர்கள், தேவர்கள் யாவரோ! சிங்கம் போன்ற நோக்குடையவர்களும், மஹாபல பராக்கிரமங்களை யுடையவர்களும், இந்திரதனுஸ்ஸுபோன்ற கோதண்டத்தையுடையவர்களும், காளை

---

* முதல் சருக்கத்தில் சில சேதனர்கள் விழுப்பாதத்தில் ஆழ்ந்திருப்பதைக் கண்டு, பெருமாள் சிந்தைகொண்டது உரைக்கப்பட்டது, இரண்டாவதில் சேதனர்கள் தாம் செய்த அபராதத்திற்கு குரூரதண்டம் கிடைக்குமென்று அச்சமுற்றதும், அப்படி அஞ்சாமல் தம்மையே சேரும்படி தாம் அபிமுகம்கொண்டு எழுந்தருளினதும் உரைக்கப்பட்டது, இனி பெருமாளை அடைவதற்குக் காரணமான ஆசாரிய கிருத்தியம் இத்தன்மையதென்று உரைக்கப்படுகின்றது.

போன்ற நடை யுடையவர்களும், யானை துதிக்கைபோன்ற திருத்தோள்களை யுடையவர்களும், பூமண்டலத்தை ஆளத்தக்கவர்களுமாகிய இங்கு எவ்வண்ணம் எழுந்தருளினீர்கள்; மிகவும் சூரர்களும், ஜடாதாரிகளுமாகியும் ஒருவர்க்கொருவர் நிகராகி, காந்தியினால் தேவலோகத்து நின்றும் தற்செயலாய் வந்த சந்திர சூரியர்கள்போல விளங்குகின்றீர்கள், அகன்ற திருமார்பும், தேவர்போன்ற திருமேனியும், சிங்கத்தின் தோள்போன்ற திருத் தோள்களும், உற்சாகமுங்கொண்டு தேவர்கள் மதமேறிய காளைகள்போல விளங்குகின்றீர்கள், நீண்டுருண்ட திருபுஜங்களும், பரிகம்போல விளங்குகின்றன, இவை பற்பல அணிகளை அணிவதற்குரியனவாகியும், ஏன் அணிந்தில? தேவர் இருவரும் இப்பாருழுதும் பாதுகாக்கவல்லீர்களென என்றெண்ணுகின்றேன், இவ்விரண்டு கோதண்டங்களும், தங்கத்தினால் அலங்கரிக்கப்பட்ட இந்திரன் வச்சிராயுதம்போல விளங்குகின்றன; கொடியபாம்பு விடுகின்ற நச்சரவம்போன்ற நாராசங்கள் நிறைந்த அம்பறாத்தூணிகளும், மிக வொளிவிடுகின்றன, நீண்டகன்ற தங்கப்பிடி அமைந்த இவ்விரண்டு வாள்களும், அன்று புரைவிட்ட பாம்புகள்போலத் திகழுகின்றன; இவ்வண்ணமாக யான் வினவியும், ஏன் மறுமொழி அருளிச்செய்கின்றிலீர்? சுக்கிரீவனென்னும் வானரராஜன் தமையனால் துரத்தப்பட்டு உலகமெங்குந் திரிந்து வருந்தியிருக்கின்றனன், மகாத்துமாவான அந்தச் சுக்கிரீவனால் ஏவப்பட்டு யான் இங்கு எய்தினேன்; அநுமான் என்னும் பெயர் உடையேன்; அந்தச் சுக்கிரீவன் தேவர்களுடன் நேசங்கொள்ள விரும்புகின்றான், அந்தச் சுக்கிரீவமஹாராஜனுக்கு யான் மந்திரி, வாயுபகவான் மைந்தன், சுக்கிரீவனுக்கு இதம் செய்வதின்பொருட்டு எனது நிஜரூபத்தை மறைத்து, இந்த பிரமசாரிரூபத்தைத் தரித்து வந்தேன், யான் வேண்டுமிடம் செல்லுவேன், வேண்டிய ரூபங்களையும் தரிப்பேன், என்றிவ்வண்ணம் முறைசெய்து மௌனமடைந்தனர். பெருமாள் அம்மொழியைக் கேட்டு இளையபெருமாளை நோக்கி, அடா தம்பி! நாம் சுக்கிரீவனையே தேடி வந்தோமே? அவருடைய மந்திரியே தற்செயலாய் நம் ஸமீபத்திற்கு வந்தனர், இந்த மந்திரியும் மொழிவதில் மிகவுஞ் சிறந்தவர்; ருக்கு யஜுஸ் ஸாமம் என்னும் மூன்று வேதங்களையும் ஓதாதவன் இவ்வண்ணம் நன்றாக வார்த்தை சொல்லான்; ஒன்பது வியாகரணங்களையும், இவர் நன்கோதி யுணர்ந்திருக்கின்றனர்போலும், வெகுவாக இவர் மொழிந்திருக்கினும், சிறிதேனும் பிழைமொழி யுரைத்திலர்; முகத்திலாவது, கண்களிலாவது, நெற்றியிலாவது, புருவங்களிலாவது, மற்றுமுள்ள எந்த அங்கங்களிலாவது மொழியுங்காலையில், சிறிதேனும் விகாரந்தோன்றியிலது; மிகவும் விஸ்தாரமின்றியும், சந்தேஹமின்றியும், விரைவின்றியும், மெதுவின்றியும், வாக்கியங்கள் மார்பில் தோன்றிக் கண்டத்தில் ஒலித்து மத்யமஸ்வரத்தில் மொழியப்பட்டன; நன்றாகப் பழக்கங்கொண்டு பிழை சிறிதுமின்றி, மெதுவும் வேகமுமில்லாமல் நடுத்தரமாக மிகவும் இனிமையாக

மொழிந்தனர் உச்சநீசஸ்வரிதங்களுடன் மிகவு மினிதாகவுரைத்த இவருடைய வாக்கியத்தைக் கேட்கின், கொலைசெய்வதன்பொருட்டு வாளை யுருவிக்கொண்டெதிர்த்து வருகிற பகையாளிக்கும் சினந்தணிந்து, பெரு மகிழ்வு மேலெழுந்து பெருகாதோ? அடா லக்ஷ்மணா! இவ்வண்ணம் மிகத் திறமையுள்ள தூதன் எந்த அரசனுக்கில்லையோ? அவனுடைய காரியங்கள் எவ்வண்ணங் கைக்கூடும், இவர்போன்ற தூதர்கள் எவர்களுக்கு இருப்பார்களோ? அவர்களுடைய காரியங்களெல்லாம் தடையின்றிக் கடையேறும்; ஆதலின், இவருடன் நீ மிகவும் அன்புடனும், ஸ்நேகத்துடனும், பதில் உரைசெய்க, என்று மிக மகிழ்வுகொண்டருளிச்செய்தனர். இளையபெருமாளும் அவ்வருளிச்செயலைக்கேட்டு, சிறியதிருவடியை நோக்கிக் கேளீர் அநுமானே! யாங்கள் மஹாராஜருடைய நற்குணங்களையெல்லாம் கேட்டுணர்ந்திருக்கின்றனம், யாங்களும் அவரைத் தேடிக்கொண்டே இங் கெய்தினோம், மஹாராஜா உரைசெய்ததாக நீர் உரைத்தபடியே செய்ய யாங்களும் விருப்பங்கொண்டிருக்கின்றனம், இவ்விஷயத்தில் சிறிதும் ஐயுறத்தக்கதில்லை, என்று அருளிச்செய்தனர். சிறியதிருவடியும் அம் மொழியைக்கேட்டவுடனே பெருமகிழ்வுகொண்டு இனி நம்காரியமெல்லாம் நிறைவேறியதென்று நிச்சயமுற்று இவர்களுடன் மஹாராஜாக்கு நட்புச் செய்விக்கவேண்டுமென்று எண்ணங்கொண்டனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் மூன்றாவது சருக்கம்

முற்றிற்று



சிறியதிருவடி பெருமாள் இளையபெருமாள்களுடைய திருவுள்ளத்தையறியும்படி மாறுவேஷம்பூண்டு வந்தும், அதை யறிந்துகொள்ளாமலே தாமே யவர்களுடன் தான் மாறுவேஷங்கொண்டு வந்தேனென்று உரைசெய்ததென்னெனில், பெருமாள் மாயாமானுஷவிக்கிரஹருளுலும், நித்திய நிர்விகார நிரஞ்சன நிர்மாய ஸச்சிதானந்த பரிபூர்ண பரமபுருஷருகையால், இவர் சேவித்தவுடன் சிறியதிருவடிக்கு ஸத்துவத்தையெடுத்து, மனந்தெளிவுற்று விளங்கினமையின், பொய்மொழிய வாயெழாமையாலும், மிகவும் புத்திநுட்பமுடையவராதலின், அவர்களின் கருத்தை யறிந்துவிட்டபடியாலும், தாமே முன்னதாகத் தான் வந்த செய்தியை யுரைத்துவிட்டனரென் றுணர்க.—அனுமார் மஹாராஜருக்குத் தூதாகவந்தமையால், வேந்தர்கள் தூதர்களுடன் மந்திரிமுகமாக வார்த்தைசொல்வார்களே யன்றித் தாமே நேராகப் பேசார்களாதலின், பதிலுரைப்பதற்கு இளையபெருமாளை ஏவினரென் றறிக;—

ஆசாரியமுகத்தாலேயே எம்பெருமானைச் சேரவேண்டுமென்பதை வெளிப்படுத்துவதற்காக மஹாராஜா பெருமானைச் சேர்வதற்குச் சிறியதிருவடியை யாசாரியராக்கினார்; பெருமாள் வேதவேதாங்கங்களையும், அனுமார் அறிந்திருப்பாரென்றருளிச் செய்தமையால், ஆசாரியகுணபூர்த்தி சொல்லப்பட்டது; இந்த அனுமான் போன்றவர்கள் தூதராயிருப்பவர்களுக்கெல்லாம் சித்திக்குமென்றதனால், சிஷ்யனிடத்தில் சிஷ்யகுண பூர்த்தியில்லாவிட்டாலும், ஆசாரிய மாஹாத்மியத்தால் சிஷ்யன் சித்தி யடைவானென்பது அறிவிக்கப்பட்டது,

## நான்காவது சருக்கம்.

சிறியதிருவடி, இளையபெருமாள் தங்கள் குலகோத்திரங்களையும், முறையே இவ்விடத்திற்கு எழுந்தருளிய காரணத்தையும் அருளிச்செய்ய ஸ்ரீராமலக்ஷ்மணர்களைத் தம் திருத்தோள்களில் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து மஹாராஜரிடஞ் சேர்த்தது.



அநந்தரம் மிகவும் மனமகிழ்வுகொண்ட சிறியதிருவடி இளையபெருமாளருளிச்செய்த வாக்கியத்தைக்கேட்டு, மனதில் மஹாராஜனை நினைத்து, இனி யவர்க்கு கிஷ்கிந்தாராஜ்ஜியம் கிடைக்குமென்று நிச்சயங்கொண்டு பெருமாளை நோக்கி, ஸ்வாமி! தேவரீர் மிக்க கொடிய இந்தப் பம்பாரண்யத்திற்குந் திருத்தம்பியாருடனே ஏன் எழுந்தருளியது, என்று வினவுதலும், பெருமாளதற்குப் பதிலுரைக்கும்படி இளையபெருமாளை ஏவியருளினர். இளையபெருமாளதுகேட்டு மாருதியை நோக்கிக் கேளீர் அனுமானே! கோஸலநாட்டில் திருவயோத்திமாநகரந்தனிலே மஹாபலபராக்கிரம ரூபலாவண்ய சௌர்யாதிகுணங்கள் நிறைந்தவரும், தருமவழி வழுவாதவரும், நான்குவர்ணங்களையும், தருமமாகப் பாதுகாத்தளிப்பவருமாகிய தசரதனென்னும் சக்கரவர்த்தியார் வாழ்ந்திருந்தனர் அவர் ஒருவனையும் பகைத்திலர், அவர்மீதும் ஒருவரும் பகைகொண்டிலர், அவர் எல்லாவுயிர்களுக்கும், மற்றொரு பிதாமஹதேவர்போல இனியராகி, அக்கினிஷ்டோமம் முதலிய யாகங்களை விதிப்படி செய்து முடித்தனர் இவர் அந்தத் தசரதசக்கரவர்த்திக்கு மூத்த திருமகனார், ஸ்ரீராமனென்னும் திருநாமமுடையோர், எல்லாவுயிர்களுக்குஞ் சரணம், பிதிர்வாக்கிய பரிபாலனத்தில் மிகவும் சிரத்தை யுடையவர், மிக வீரமுடையவர், சக்கரவர்த்தித்திருக்குமாரர்களுள்ளும், இவர் திருக்கல்யாணகுணங்களாலும் மிக்க சிறப்புற்றவர், ராஜலக்ஷணங்கள் யாவும் பூரணமாயுள்ளவர், மிக்க செல்வமுடையவராகியும், பிதாவின் வாக்கியத்தின்படி ராஜ்ஜியத்தைத் துறந்து, புலன்களை யடக்கிக் கானகத்தில் வாழ விருப்புற்று, என்னுடனும், சீதையெனனும் பிராட்டியாருடனும் கூடிப் புறப்பட்டிங்கே தண்டகாவனத்திற்கெழுந்தருளினர். காந்தி கதிரவனை எப்பொழுதும் விட்டுப் பிரியாததுபோலப் பிராட்டியாரும் இவரை விட்டுப் பிரியார்; யானும் இவருக்குத் தம்பி; இலக்ஷ்மணனென்னும் பெயருடையேன்; இவரது திருக்கல்யாண குணங்களிலீடுபட்டு, போகங்களையுந் துறந்து, தொண்டுபூண்டு, உடன் வந்து, பணிவிடைசெய்து வருகிறேன்; மிக்க சிறந்தவரும், இன்புறுவதற்கே தக்கவருமாகியும், அரசிழந்து, காடுசேர்ந்து வாழ்கையில், யாவனோ வொரு

ராக்ஷஸன் நாங்கள் ஒருவருமின்றித் தனியேயெழுந்தருளியிருந்த பிராட்டி யாரைப் பறித்தோடி யொளித்துவிட்டவன், அவன் யாவனோ? எங்கிருக்கின்றவனோ? எத்தன்மையனோ? அதனையும் யாங்களறியோம்; பின்பு, நாங்கள் பிராட்டியாரைத் தேடிக்கொண்டு வருகையில், தனுவென்னும் அஸுரன் சாபத்தினால் ராக்ஷஸனுக்கு கபந்தனென்னும் பெயர்பெற்று அக் காட்டில் வாழ்ந்த அவ்வஸுரன் எங்களால் கொலைசெய்யப்பட்டுச் சாபந் தீர்ந்து மகிழ்ந்து எங்களை நோக்கி, மஹானுபாவர்களே! ஸுக்ரீவனென்னும் வானரராஜன் ரிச்யமூகமலையில் வாழ்கின்றனன், அவனுடன் நட்புக் கொள்வீர்களாயின், அவன் ஸீதை யிருக்குமிடத்தைத் தேடி யறிவான்; ஆதலின், அங்கெய்துகவென்று உரைத்து விட்டு வானேறிவிட்டனன்; ஆதலின், யாம் மஹாராஜனைத் தேடிக்கொண்டே இங்கெய்தினோம், இவ் வண்ணம் யாங்கள் இங்கெய்தியதற்குக் காரணம் முதலிய யாவும் உரை செய்தேன், யானும் எம்மையரும் மஹாராஜனையே தஞ்சமடைந்தோம்,

ఏష దత్త్వా చ విత్తాని ప్రాప్య చానుత్తమం యశః
లోకనాథః పురా భూత్వా సుగ్రీవం నాథమిచ్ఛతి.
పితా యస్య పురా హ్యాసీచ్ఛరణ్యో ధర్మవత్సలః
తస్య పుత్రః శరణ్యశ్చ సుగ్రీవం శరణం గతః.

ஏஷதத்வாசவித்தாநி ப்ராப்யசாநுத்தமம்யச:
லோகநாத:புராபூத்வா ஸுக்ரீவம்நாதமிச்சதி.
பிதாயஸ்யபுராஹ்யாஸீ ச்சரண்யோதர்மவத்ஸல:
தஸ்யபுத்ரச்சரண்யச்ச ஸுக்ரீவம்சரணங்கத:

இந்த எம்மையர் முன்பு, ஸகல லோகநாதனும், ஸர்வாந்தர்யாமியு மாகித் தன்னைச் சார்ந்தோரெல்லோர்க்கும் நற்செல்வங்களையளித்து மிகப் புகழ்பெற்றும், இப்போழ்து சுக்ரீவனைத் தமக்கு நாதனாகக் கோருகின்றன ரன்றோ? யாவருடைய தந்தை எல்லோருந் தஞ்சமடையத்தக்கவரும், மிகவும் தருமமுடையவருமாயினரோ? யாவர் தந்தையைப்போலவே எல் லோருந் தஞ்சமடையத்தக்கவராகிச் சக்கரவர்த்தித்திருமகனு மாயினற னரோ? அந்த எம்மையரோ இப்போழ்து சுக்ரீவனைத் தஞ்சமடைகின்றன ரய்யோ? இவர் முன்பு, எல்லாவுலகங்களுந் தஞ்சமடையத்தக்கவராகியும், எனக்குத் தமையனாகியும், மஹாராஜனைத் தஞ்சமடைகின்றனர்;—

యస్య ప్రసాదే సతతం ప్రసీదేయురిమాః ప్రజాః
స రామో వానరేన్ద్రస్య ప్రసాదమభికాంక్షతి.

யஸ்யப்ரஸாதேஸததம் ப்ரஸீதேயுரிமா:ப்ரஜா:
ஸராமோவாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதி.

யாவருடைய அருளினால் மூவுலகங்களிலுமுள்ள இவவுயிர்களெல்லாம் மகிழ்ந்து வாழ்வுறுமோ ? அந்த எம்மையரோ வானரங்களுக்கு ராஜனுடைய அருளைக் கோருகின்றனா ; எவருடைய தந்தையைப் பாரிலுள்ள தார்வேந்தர்களெல்லோரும் பணிந்து மகிழ்ந்து இன்புற்றனர்களோ ? அந்த எம்மையா உலகினில் மிகப் புகழ்பெற்றும், வானரராஜனைச் சரணமடைகின்றனா ; எம்மையா மிகத துயரமடைந்து தஞ்சமெனச்சேர்ந்தமையின், மஹாராஜர் இவர்மேல அருளசெயயக்கடவா. எனறிவ்வணணம் கண்ணீர் பெருகத் தீனமடைந்து வருந்தி மொழிநதனா சிறியதிருவடி இவ்வண்ணம இளையபெருமாளருளிசசெய்த வாககியத்தைககேட்டு மிக மகிழ்ந்து அவனை நோககிக கேட்டருளீா இளையபெருமாளே ! மிகவும் நன்மதி பூண்டும, சினத்தையடக்கியும, புலனகளைவென்றும, திவ்விய சத்தியுற்றும் விளங்குகின்ற தேவர்களைபபோன்ற மஹாநுபாவர்கள் தறசெயலாயிருக்குமிடந்தேடி எழுந்தருளுகையில், மஹாராஜா தேவர்களைககணடு சேவித்து தனனியராகததக்கவராகாரோ ? மஹாராஜரும அரசிழந்து, வாலியினால பகைககபபட்டு, மனைவியையும் பறிகொடுததுக காட்டிலலைந்து வருந்துகினறனர் , கதிரவன திருமகனான அந்த சுககிரீவமஹாராஜர் அபபடி துன்புற்றவராயினும, எஙகளுடன் கூடித தேவர்களுக்குத் தடையின்றி யுதவி செய்வார் ; ஆதலின், நாமெல்லோரும் மஹாராஜர் இருக்குமிடத்திற்குச் செல்வோம எழுந்தருளுக , என்று இனிமையாக விண்ணபபுஞ் செயதனர். இளையபெருமாள அதைககேட்டு மகிழ்நது அவனைப் புகழ்ந்து பெருமாளை நோககி, எம்மையரே ! இந்த மாருதி மகிழவுடன கூறுகின்றமையின், இவா உரைபபது உண்மையே யாகும , ஸுக்கிரீவர் சீதாதேவியைத் தேடுவதறகுத துணையாகுவாரென்பதில ஐயமிலது ; ஆதலின, தேவா காரியம் முடிந்ததெனவே எண்ணுக , இவர் வாயுபகவான புததிரராதலாலும், மகிழவினால முகமலர்ந்து, ஒளிதிகழ்ந்து மொழிந்தமையாலும், பொய்யுரைத்திலா , இனியும பொய்யுரையாா ; ஆதலின், நாம இவருடன் செல்லுவோமெழுந்தருளுக , என்று விண்ணப்பம் செயதனர். உடனே சிறியதிருவடி மகிழ்ந்து அந்த பிரஹமசாரிரூபததை விட்டு நிஜரூபத்தைத் தரித்து, ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரையும தமது தோளகளின்மேலேற்றி எழுந்தருளப்பணணிக்கொண்டு இனி எலலாககாரியங்களும் முடிந்ததென நிசசயித்து, மஹாராஜர் வீற்றிருந்த அந்த ரிசியமூக மலையை நோக்கி, எழுந்தருளினர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் நான்காவது சருக்கம்

முற்றிறறு.

---

## ஐந்தாவது சருக்கம்.

பெருமாள் மஹாராஜருடன் அக்கினிஸாக்ஷியாக நட்புசெய்துகொண்டு வாலியைக்கொலைசெய்து உனக்குப பட்டங்கட்டுவிப்பேனென்று முன்னமே பிரதிஜ்ஞைசெய்து அபயங்கொடுத்தருளியது.

---

பின்பு, சிறியதிருவடி, ஸ்ரீராமலக்ஷ்மணர்களை எழுந்தருளப்பண்ணிக் கொண்டு ரிசியமூகமலை சேர்ந்து, அவ்விடத்திலே இவர்களை யிறக்கி யோரிடத்திலெழுந்தருளி யிருக்கச்செய்து, இவர்களைக்கண்டு அச்சங்கொண்டு ஓடி மஹாராஜர் ஒளிந்திருந்த மலயமலைக்குச்சென்று மஹாராஜனை நோக்கிக் கேளீர் வானரராகோமானே! ரகுமஹாராஜாவின் திருவம்சத்திலவதரித்து மிகச்சூரமுடையவர்களும், தசரதசக்கரவர்த்திதிருக்குமாரர்களும், ஸ்ரீராமலக்ஷ்மணர்களென்னும் திருநாமமுடையவர்களுமாகிய இவ்விருவரும் மிகவுந் தருமகுணமுடையவர்களுமாகிப பிதாவின வாக்கியத்தைப பரிபாலனஞ்செயவதனபொருட்டுத் தண்டகாவனத்தில் வாழ்கையில், ராவணன ஸ்ரீராமபத்தினியாகிய சீதையெனனும் பிராட்டியாரைத் திருடிக்கொண்டோடிவிட்டான்; ஆதலின், அவளைத தேடிககொடுப்பதனபொருட்டு உம்மைத் தஞ்சமென வந்தடைந்தனர்கள; பற்பல யாகங்களசெய்து அளவற்ற தானங்களபண்ணிப் பாரமுழுதும ஒரு குடைககீழாண்ட சக்கரவர்த்தியாரின் திருக்குமாரர்களாகியும், சீதாபிராட்டியாரினபொருட்டு உம்மைச சரணமடைந்தனாகள; உம்முடன தோழமைகொளளவுங் கோருகின்றனர்கள; யாவராலும் பூஜிககத்தக்கவர்கள; ஆதலின, நீர அவர்களைக் கண்டு பூஜைசெயது நட்புசெய்து கொளளுக; என்று மொழிந்தனர். மஹாராஜா அம்மொழிகேட்டு மிக மகிழ்ந்து அச்சம் நீங்கி, மனந்தேர்ந்து, மானிடரூபம்பூண்டு, ரிசியமூகமலைசேர்ந்து பெருமாளைக்கண்டு ஸ்வாமி! தேவர் மிகவும தருமமுடையீரெனவும், ஒப்பற்ற தனிவீரரெனவும், ஸர்வபூத தயாபரரெனவும், மற்றும் பற்பல திவ்விய கல்யாண குணாகரரெனவும், மாருதி யுரைசெயயக் கேட்டு மகிழ்ந்தேன்; தேவர் ஸர்வலோக சரண்யராகியும, அறபவானரனுன அடியேனுடன் நட்புச்செய்யத் திருவுளங்கொண்டதென்பது, அடியேனுடைய பாககியமே? இதுவே அடியேனுக்குயர்ந்த மரியாதை? தேவரீர்க்கு இவ்வண்ணந் திருவுளமிருபபது உண்மையாயின், அடியேன் இதோ வலதுகையை நீட்டினேன்; தேவர் இதன்மேல் கைபோட்டுப் பிடிததுக்கொண்டருள்க; தக்க ஏற்பாடுஞ்செய்தருள்க; என்று மொழிநது கையை நீட்டினர். பெருமாளும் மகாராஜர் இவவண்ணமுரைசெய்த வாக்கியத்தைக்கேட்டு,—

సప్రహృష్టమనా హస్తం పీడయామాస పాణినా
హృద్యం సౌహృదమాలంబ్య పర్యష్వజత పీడితం

ஸப்ரஹ்ருஷ்டமனாஹஸ்தம் பீடயாமாஸபாணினா
ஹ்ருதயம்ஸௌஹ்ருதமாலம்பய பாயஷ்வஜதபீடிதம.

மிகவும் மகிழ்ந்தவராகித தமது திருக்கரத்தினல் மஹாராஜருடைய காத்தைப் பிடித்துத திடமாக அணைததாலிஙகனஞ்செயதுகொன்டு மகிழ்ந் தருளினா. உடனே சிறியதிருவடியும் பிரஹ்மசாரிவேஷத்தை விடடுவிட்டு மறுபடியும் நிஜரூபத்தை யெடுத்துக்கொண்டு, இரணடரணிக்கட்டைகளைக் கடைந்து தீயை யுன்டுபண்ணி வளர்த்து மலாகளினல் பூஜித்து எரிகின்ற அத்தீயை மஹாராஜர் பெருமாள இவவிருவர்களின் நடுவில கொணர்ந்து வைத்தனர். உடனே ஸ்ரீராம ஸுககிரீவாகளிருவரும அச்செழுந்தீயை வலம் வந்து ஒருவாககொருவா நட்புசசெயதுகொணடு ஒருவர்ககொருவர் பாாத்து மகிழ்ந்தும், தழுவியும், புகழநதும், நீரோ எனககுததோழரும், இனி யருமாகினறீர் ; இனி நமககுத் துனபமும ஒனறே ? இனபமும ஒன்றே ? என்று சொல்லிககொண்டு மகிழ்ந்தனர்கள. அபபொழுது மஹாராஜர் தாமே ஸாலமரததினது மலர்ந்த கிளைகளை முறித்துத் தரையில் பரப்பிப் பெருமாளுடன வீற்றிருந்தனா. உடனே சிறியதிருவடியும சநதனமரத்தின் மலர்ந்த தழையைமுறித்துத தரையில பரப்பி இளையபெருமாளை எழுந் தருளியிருககச்செயதனர். அபபொழுது மஹாராஜா பெருமாளை நோக்கி, ஸ்வாமி ! அடியேன தமையனை வாலியினல் ராஜ்ஜியத்தையும், மனையாளையும், அபகரிததுக்கொண்டு வெருடடப்பட்டு பாரெஙகும் அலைந்திங்கே திரிந்துகொண்டிருககினறேன ; அநத வாலி எனமீது தீராப்பகைகொன் டிருககின்றமையின், துயிலுமினறி, நிரந்தரம் அசசங்கொண்டு வருந்து கின்றேன் ; மஹாபாகராகிய தோழரே ! அந்த வாலியினபயம் எனக்கு எவ்வண்ணம் நீங்குமோ ? எவவண்ணம் யான் இன்புறறுச சிந்தையினறி வாழவேனே ? தேவர் அவவண்ணஞ் செய்து அடியேனைக் காத்தருள்க ; இவ்வண்ணம அடியேனுக் கபயமுந்தந்தருளக ; அடியேன் தேவரையே தஞ்சமடைந்தேனென்று விண்ணப்பஞ்செய்தனா. இவவண்ணம் மஹா ராஜா உரைசெய்த வாக்கியத்தைப் பெருமாள் திருச்செவிசாத்தித் தரும முணர்ந்தவரும், தருமத்தில விருப்புடையவருமாதலின், கருணைகூர்ந்து புன்னகைசெயதுகொண்டே மஹாராஜரை நோககி,—

ఉపకారఫలం మిత్రం విదితం మే మహాకపే
వాలినం తం వధిష్యామి తవ భార్యాపహారిణం.

உபகாரபலம்மித்ரம் விதிதம்மேமஹாகபே
வாலினம்தம்வதிஷ்யாமி தவபார்யாபஹாரிணம்.

கேளீர் வானரராஜரே!எனக்குத்தோழராயினவர்கள்; என்னால் செய்யப் பட்ட உபகாரத்தையே நறபலனாகவுடையார்; என்பது எங்கும் வெளிப் பட விளங்குகின்றதன்றோ? ஆதலின், உம்முடைய பாரியையைப் பறித்த அந்தக் கொடிய வாலியை யான் விரைவில் கொலைசெய்வேன்; யான் எவ் வண்ணம் அவனைக் கொலைசெய்வேனோவென்று ஐயமுறற்க; என்னுடைய இக்கணைகள் குறி தப்பாதவைகளும், கதிரவனை நிகர்த்தனவும், கூராகத் தீட்டப்பட்டனவுமாகி விளங்குகின்றன; இவை யந்த வாலியின்மேலே விரைவாகப்பாய்ந்து அவனைக் கொலைசெய்யப்போகின்றன; இந்தக் கணை கள் கழுகின் இறகுகள கட்டியும், கூரிய முனை பொருந்தியும், கோணுமல் நீண்ட கணுக்கள அமைந்தும், ஒலித்துச் செல்லுகையில், சினங்கொண்ட நச்சரவங்களபோல விளங்கும்? அந்த வாலி இந்தக் கணைகளினால் அடி பட்டு வச்சிராயுதத்தினலடிபட்ட மாமலைபோலத் தரையிலவீழ்ந்து கிடக் கையில், விரைவில நீர கண்ணுறறு மகிழ்வீர்; என்று அருளிச்செயதனர். மஹாராஜர் இவவண்ணம் பெருமாள அருளிசசெய்த வாக்கியங்களைக் கேட்டுப் பரமாநந்தமடைந்து பெருமாளை நோக்கி, ஸ்வாமி ராகவகுல துரந்தரா! புருஷோத்தமா! தேவருடைய திருவருளினால் அடியேன் மனையாளையும், ராஜ்ஜியத்தையும், இபபோழுதே பெற்று மகிழ்வேன்; என் அண்ணனான அநதப் பகைகொண்ட வாலி இப்பொழுதே எவவண்ணம் மரணமுறுவானோ? அவவண்ணஞ்செயது அடியேனைக காத்தருள்க; என்று விண்ணபபஞ்செயது வேண்டினர். இவவிருவரும் இவவணணம தோழமைகொண்டு ஸம்பாஷணஞ்செயயுங்காலையில், பிராட்டியாக்கும், வாலிக்கும், இராவணனுக்கும, முறையே தாமரை மலரையும், பொனனை யும், தீயையும் நிகர்த்த இடதுகண்கள ஒரேகாலத்தில் துடித்தன;—

கிஷ்கிந்தாகாண்டததில ஐந்தாவது சருக்கம
முற்றிற்று. ஸ்ரீ ஜயது

சிறியதிருவடி மறுபடியும பிரஹ்மசாரிவேஷததை விட்டு நிஜரூபந்தரித்தா ரெனறிருப்பதால ஸ்ரீராமலக்ஷ்மணாகளை ரிசியமூககிரியில் எழுநதருளபபண்ணி விட்டு மஹாராஜரிடஞ்செலலுங்காலையில, அவா மனந்தெளிவுறுமளவும் அவரெதிரில் அவர் வாக்கியததினபடி மீளவும பிரஹ்மசாரிவேஷந் தரித்தனரெனத் தோறறு கிறது;—

பெணகளுக்கு இடதுகண்துடிக்கின், விரைவில் மங்கலமுண்டாகுமென்றும், புருஷர்களுக்கு இடதுகண துடிக்கின், துனபம நேருமெனறும், சகுனநூலிலிருக்கின்ற மையின், இங்கு பிராட்டியார்க்கு யின்பமும, வாலி ராவணாகளுக்குத் துன்பமும் விளையுமென்பதை துடித்த இடதுகண்கள அவரவாகளுக் கறிவித்தன;—

பெருமாள முன்னமே வாலியைக் கொலைசெயவேனென பிரதிஜ்ஞை செய்த தினால், இவரே மும்மூர்த்திகளுள் முதனமையானவரொனறும், ஒப்பாருமிக்காரும இல்லாதாரொனறும், ஸர்வவல்லமை யுடையரொன்றும், யாவு முணர்ந்தவரொன்றும் நன்கு விளங்கும்;—

## ஆறுவது சருக்கம்.

**மஹாராஜர் பிராட்டியார் ஆகாயத்தில் செல்லுகையில், இழேபோட்ட திருவாபரணங்களைக் காப்பாற்றி எடுத்துக்கொண்டுவந்து பெருமாளிடத்தில ஸமாப்பித்தது.**

மீளவும் மஹாராஜர் மகிழ்ந்து மாயாமானுஷவிக்ரஹனை பெருமானை நோக்கி, ஸ்வாமி எனனினிய தோழரே ! மஹாபலபராக்கிரமமுடையவரும, மிகச சிறந்த புததியுடையவரும், அடியேனுக்கு நன் மந்திரியுமாகிய இந்த ஆஞ்சனேயா என்னை நோககித் தேவர் பிதாவின வாக்கியத்தைப பரிபாலனஞ்செயவதனபொருட்டுத் திருவயோத்தியை விட்டுத் தண்டகாவனஞ்சேர்ந்து தேவியாருடனும, இளையபெருமாளுடனும் எழுந்தருளியிருககையில, ராவணன கபடஞ்செயது ஸ்ரீஜனகராஜன் திருமகளாகிய ஸ்ரீஸீதாபிராட்டியாரைப பறிததுககொண்டோடிவிட்டதாகவும்; அந்த ராவணன் நடுவில ஜடாயுவையும கொனறுவிட்டதாகவும், அந்தப பிராட்டியாரைத் தேடிக்கொணடே தேவாகள் இங்கெழுந்தருளியதாகவும தெரிவித்தாா. இது உண்மையாயினும், துயரறக; விரைவில் துயரநீங்கி பிராட்டியாரைசசேர்ந்து மகிழ்ந்தருள்வீர் ; மதுகைடபர்களினல் வேதசருதியைப்போல ராவணனல் ஒளிக்கபபட்ட அந்தப் பிராட்டியாரை யான் விரைவில் தேடிப பிடித்தெழுந்தருளப் பண்ணிககொண்டுவருவேன ; பிராட்டியார் பாதாளத்திலாயினும், விண்ணுலகிலாயினும, மற்றும் எவ்விடததிலாயினும் எழுந்தருளியிருந்தாலும், யான் தேடிககணடெழுந்தருளப்பண்ணி வருவேன் ; அன்றியிலே, அடியேன் ஒரு விண்ணப்பஞ்செயகிறேன ; இதனை யுண்மையென்றே அறிந்தருளக ; தேவர் தேவியாராகிய பிராட்டியாரை இந்திரன் முதலிய தேவாகளும், தானவாகளும் கூடிக கெடுககமுயலினும், திறமைகொள்ளார்கள் ; அவருடைய கற்பு யாவரையும் பறறி யெரிககும ; ஆதலின, தேவர் துன்பததைத் துறநதருளக ; அவரை யான் எவவிததததிலும தேடி எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வருவேன் ; அடியேன முனபொருநாள் இவ்விடத்தில் இந்நானகுமந்திரிகளுடன உடகார்ந்திருககையில், ராவணன் ஒரு பெண்ணைபெடுத்துத் தேரிலேற்றிக்கொண்டு ஆகாயததில சென்றனன். அப்பெண்ணும் ராமா ! ராமா ! எனறும, லக்ஷ்மணா ! லக்ஷ்மணா ! என்றும், கூவி யழுதுகொண்டே சென்றனள். அந்தப்பெண் பிராட்டியாராகவேயிருக்கவேண்டுமென் றிப்போழ்து ஊஹிக்கிறேன் ; அப்போழ்தவா எங்களைக்கண்டு உத்தரீயத்தையும், திருவாபரணங்களையும் கட்டிப்போட்டனர். அவைகளை யாங்களும் எடுத்துவைத்திருக்கின்றனம் ; இப்போழ்தவைகளை யழைப்பித்து ஸமர்ப்பிக்கின்றேன் ;

கடாக்ஷித்து அறிந்துகொண்டருள்க; என்று விண்ணப்பஞ்செய்தனர். பெருமாளும் அம்மொழியைக் கேட்டவுடனே மஹாராஜரை நோக்கித் தோழரே! ஏன் இன்னும் ஆலஸியம் செய்கின்றீர்; விரைவாக அந்த ஆடையாபரணங்களைக் கொணர்க; என்று நியமித்தருளுதலும், மஹாராஜர் உடனே எழுந்து புகறகரிய அம்மலையின் குகைக்குட்புகுந்து பிராட்டியாருடைய அந்த உத்தரீயத்தையும், திருவாபரணங்களையும் எடுத்துக்கொண்டுவந்து பெருமாளைக்கிட்டி ஸ்வாமி! இதோ கொணர்ந்தேன்; கடாக்ஷித்தருள்க; என்று காட்டியளித்தனர். பின்பு பெருமாள் அவைகளைக் கைக்கொண்டு பனிநீர்த்துளிகளினால் சந்திரன் தடையுண்டு ஒளி குலைவதுபோலச் சோகநீர்களினால் சூழ்ந்து தடுக்கப்பட்டு அந்தோ? என் பிராணநாயகி! என்று கூவித் தீரத்தை விட்டுச் சோகத்தை மேற்கொண்டு தரையில் வீழ்ந்து அந்த அணிகளைத் தமது திருமார்பின்மேலே வைத்துக்கொண்டு கோலினால் தூண்டிச் சினமுறுத்தப்பட்டுப் புற்றிலுறைகின்ற நச்சரவம்போலப் பெருமூச்செறிந்து கண்ணீரைத் தாரை தாரையாகப் பெருக்கி அருகிலிருந்த இளையபெருமாளை நோக்கிப் புலம்பலுற்றனர். பாரடா லக்ஷ்மணா! வைதேஹி ராவணனால் பறிக்கப்படுகையில்; இவைகளைக் கீழே யெறிந்தனள்; இந்த ஆடையாபரணங்கள் பசும்புல்லுள்ள இடத்தில் போடப்பட்டனபோலும், ஆதலின், பச்சை நிறமுற்றிருக்கின்றன; இவை சீதையின் ஆடை யணிகளே யல்லவோ? என்றிவ்வண்ணம் பெருமாள் புலம்பி யழுது வினவுகையில், இளைய பெருமாள் பெருமாளை நோக்கி, எம்மையரே!—

నాహంజానామి కేయూరే నాహంజానామికుణ్డలే
నూపురేత్వభిజానామి నిత్యంపాదాభివన్దనాత్.

நாஹம்ஜாநாமிகேயூரே நாஹம்ஜாநாமிகுண்டலே
நூபுரேத்வபிஜாநாமி நித்யமபாதாபிவந்தநாத்.

அடியேன் கேயூரங்களையும், (வங்கிகளையும்) அறியேன்; அடியேன் குண்டலங்களையும் அறியேன்; தினந்தோறும் திருவடிகளில் தண்டம் ஸமர்ப்பித்துக்கொண்டிருந்தமையின், பிராட்டியாரது நூபுரங்களை (கச்சை கொலுசுகளை) மாத்திரமே நன்றாக அறிந்துணர்கின்றேன்; இவைகள் பிராட்டியார் திருவடிகளில் ஸமர்ப்பித்திருந்தவைவே? என்று விண்ணப்பஞ்செய்தனர். பின்பு, பெருமாள் தீனமடைந்து மஹாராஜரை நோக்கி, மந்திகளின் கோமானே உரையீர்; எவ்விடத்தில் சீதையை ராவணன் எடுத்தோடுகையில் நீர் கண்டீர்; அவள் எனக்கு உயிரினும் இனியளாயினளே? எனக்கு மிகவும் துயரமளித்த அந்த அரக்கன் எங்கு உறைகின்றனன்; அவனொருவன் பொருட்டே யன்றோ? யான் எல்லா அரக்கர்களையும் கொலைசெய்யப்போகின்றேன்; அவன் சீதையைய்

பறித்து யான் வினைமுறச்செய்ததென்பது தான் இறப்பதன்பொருட்டு வலுவில மரணமுறும் வழியைத் திறந்து கொண்டதுபோலாயிற்று; எந்த அரக்கன் என்னுடைய மிகவும் இனியளான மனையாளை மோசஞ்செய்து பறித்து வந்தனனோ? அவன் யாவன்; எங்குறைகின்றனன்; விரைவிலுரையீர்; உடனே யவனைக் கொலைசெய்து யமலோகத்திற் கனுப்பிவிடுவேன்; என்று முனிந்தருளிச் செய்தனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் ஆறுவது சருக்கம்
முற்றிற்று.

---

## ஏழாவது சருக்கம்.

பெருமாள் பிராட்டியாரைத் தேடும்படி மஹாராஜர்க்குக் கட்டளையிட்டு
வாலியைவென்று உம்மை ராஜனாக அபிஷேகஞ்செய்விப்பே
னென்று பிரதிஜ்ஞைசெய்துகொடுத்து மஹா
ராஜரை மகிழ்வித்தருளியது.

---

இவ்வண்ணம் பெருமாள் வருந்திக் கண்ணீர்ததும்ப வினவக்கேட்டு மஹாராராஜா தாமும் தோழமையினால் வருந்திக் கண்ணீர்பெருகக் கைகளைக் கூப்பிக்கொண்டு பெருமாளை நோக்கி, ஸ்வாமி! அடியேன் இப்பொழுது அந்தக் கொடிய ராவணனுடைய இருப்பிடத்தையும், பல பராக்கிரமங்களையும் நன்றாக அறிகின்றிலேன்; நீசகுலத்தில் பிறந்த அவனுடைய குலத்தையும் அறிகின்றிலேன்; ஆயினும், அடியேன் தேவருக்கு உண்மையாக ஒரு பிரதிஜ்ஞை செய்துகொடுக்கிறேன்; தேவர் துயரத்தைத் துறந்தருள்க; தேவர் எவ்வண்ணம் பிராட்டியாரைப் பெற்று மகிழ்ந்தருளுவீரோ? அவ்வண்ணம் அடியேன் முயற்சிசெய்வேன்; யான ராவணனைக் கூண்டுடன் கொலைசெய்து எனது தோள்வலியைப் பயன்படுத்தி விரைவில் தேவர் திருவுளம் மகிழுமாறு செய்வேன்; இது

---

* பிராட்டியாருடைய நூபுரமும், முத்துவடமும், நடுவழியில் நழுவி வீழ்ந்து விட்டன; மற்றுள்ள அணிகளையே பிராட்டியார் கழற்றிக் கீழேயெறிந்தனர்; சிறிய திருவடி முதலானோர் காட்டில் திரிந்த நூபுரத்தையும், முத்துவடத்தையுங்கூடக் கண்டெடுத்து வைத்திருந்தனர்கள்போலும்; ஆதலின், இங்கே நூபுரத்தையும், மஹாராஜா தந்தளித்தனரென்றறிக;—

ஆபரணதர்சன வ்யாஜத்தால் பகவான், யாத்ருச்சிக ப்ராஸங்கிக ஸுக்ருதர்களைத்தாலும், சேதனஸம்ரக்ஷணத்தில் உத்யுக்தனாகுவானென்பது ஸூசிக்கப்பட்டது; மேல்சருக்கத்திலும் இதுவே கூறப்படுகின்றது.

வரையில் தீனமடைந்ததுபோதும், இயல்பாய் அடங்கியுள்ள தீரத்தை நினைந்தருள்க; இவ்வண்ணம தீனமுறுவது தேவர்போன்றவர்களுக்கு உரியதன்று; யானும் பெண்டாட்டியைப்பறிகொடுத்து மிகவுந் துயர மடைந்தேன்; ஆகிலும், யான் இவ்வண்ணந் தீனமுறுகின்றிலேன்; தீரத்தையுந் துறந்து வருந்துகின்றிலேன்; யான் அறபவானரனாயினும், மனையாளை நினைந்து சோகமுறுகின்றிலேன்; தேவர் மஹாத்துமாவும், பறபல நூலகளைப் பயின்று குருகுலவாஸஞ்செய்தவரும, தீரமுடைய வருமாகியும் இவவண்ணம் வருத்தமுறுவது தகாதெனபது விளுவல் வேண்டுமோ? ஆதலின், தீரத்தை மேற்கொண்டு மேலெழுந்த கண்ணீரை யடக்கி யருள்க; திறமையும், வலிமையும் கொண்டவர்களுக்கு எல்லையா யுள்ள தீரத்தைத்துறந்து வருந்தற்க; துன்பம் நேரினும், பொருளழி யினும், அச்சம் வாயக்கினும், உயிர் மாயினும, தீரமுடையோன் தன் புத்தியினாலேதானே நன்காராயந்து மேன்மைகொணடு மகிழ்வானே யன்றித் தீமையுறான்; யாவனொருவன் எப்பொழுதும் தீனமுறுகின்றானோ அவன் மடையனெனனபபடுவான; அவன் சுமப்பதறகரிய பாரமேற்றிய படகு கடலில் மூழ்கிவிடுவதுபோல சோகககடலில் மூழ்கி யழிவான்; அடியேன நட்பினால இவ்வண்ணங் கைகூபபி வேண்டி யுரைக்கின்றேன்; சோகத்திறகிடங்கொடாமல் பௌருஷத்தை மேற்கொண்டருளக; சோகத்தையே மேற்கொளபவர்களுககு ஒருக்காலையிலும் இன்பமிலது; அவர்களுககுத் திறமையும் அழிந்துவிடும்; ஆதலின், தேவர் துயருறற்க; மிகவும் சோகமுற்றவன் பிழைப்பதிலும் ஐயமே? ஆதலின், சோகத்தைத துறந்து தீரத்தையே மேறகொண்டருளக;—

హితంవయస్యభావేన బ్రూమినోపదిశామితే
వయస్యతాంపూజయన్మే నత్వంశోచితుమర్హసి.

ஹிதம்வயஸ்யபாவேந ப்ருமிநோபதிசாமிதே
வயஸ்யதாம்பூஜயனமேந த்வமசோசிதுமர்ஹஸி.

அடியேன் தேவர்க்குத் தோழனென்பதினால் இதத்தை விண்ணப் பஞ்செய்து அறிவிக்கின்றேனே யன்றி, யுபதேசமாவது, கட்டளையாவது செய்கின்றிலேன்; தேவரும அடியேன்மேல் அருள்செயது தோழமையை விளங்குவிப்பதன்பொருட்டு இவ்விண்ணப்பத்தைத் திருவுளம்பற்றித் துயரத்தைத் துறந்து தீரத்தை மேற்கொண்டருள்க; என்றிவ்வண்ணம் விண்ணப்பஞ்செய்தனர். பெருமானும் இவ்வண்ணம் மஹாராஜர் இனிமையாகத் தேற்றின வாக்கியங்களைத் திருச்செவிசார்த்தி உத்தரீ யத்தின் முனையினால் சோகநீர்த்துளிகளைத் துடைத்துக்கொண்டு மனந் தேர்ந்து தீரமுற்று மஹாராஜரை மகிழ்ந்தாலிங்கனஞ்செய்துகொண்

டவனைநோக்கிக் கேளீர் வானரர் சிமானே! நேசமும், அன்பும், பிரியமும், இதமுமுடையோர்கள் தோழருக் குரைப்பதுபோலவே தகுதியுற்றதும், காலத்திற்குத் தக்கதும், இனியதுமாக நீர் உரைத்ததைக்கேட்டு மகிழ்ந்தேன்; அவ்வண்ணமே யான உம்மால் தேற்றப்பட்டு இயல்பாயுள்ள தீரத்தை மேற்கொண்டேன்; இத்தருணத்தில இவ்வண்ணம உம்மைப் போல இதமுரைக்கத்தக்க தோழர் வாய்ப்பதரிது; அன்றியிலே, சீதையைத் தேடும் விஷயத்தில் நீர் மிகவும் முயற்சிசெயல்வேண்டும்; எனனுழுமக்கு ஆகவேண்டிய காரியம் யாதோ? அதனையும் ஐயமும், கூச்சமுமின்றி, யுரைசெய்க; மழைகாலத்தில் நலல நிலத்தில விதைத்த எல்லா விதைகளும், தப்பாமல் முளைப்பதுபோல என்னிடத்தில் இறக்கப்பட்ட எக்காரியமும் கைககூடுமென்றே நமபுக; இபபோது யானுரைத்த இந்த வாக்கியம் அபிமானத்தினுலாவது, அன்பினுலாவது, கசடினுலாவது உரைக்கப்பட்டதாக நினையறக; யான உரைபபதெல்லாம் உண்மையெனவே நம்புக;—

అనృతం నోక్తపూర్వం మే న చ వక్ష్యే కదాచన
ఏతత్తే ప్రతిజానామి సత్యేనైవ చ తే శపే

அந்ருதம்நோக்தபூர்வம்மே ந சவக்ஷ்யேகதாசந
ஏதத்தேப்ரதிஜாநாமி ஸத்யேநைவசதேசபே.

யான் இதுவரையில பொய்மொழி மொழிந்தேயிலேன்; இனியும ஒருக்காலும் மொழியேன; இவ்வண்ணம் உமக்கு யான் பிரதிஜ்ஞை செய்துகொடுக்கிறேன்; எனது ஸத்தியத்தின்மேலும் ஆணையிட்டுக் கொடுக்கிறேனென்று தாமே பரப்ரஹ்மமென்பது விளங்க அருளிச் செய்தனர். மஹாராஜரும் மந்திரிகளுடன் பெருமாளிவ்வண்ணம் அருளிசசெய்ததையும் பிரதிஜ்ஞைசெய்துகொடுத்தருளியதையுங் கேட்டுப் பரமானந்தமடைந்து திகழ்ந்தனர். இவ்வண்ணம் ஸ்ரீராம ஸுக்ரீவர்கள் மிக நட்புக்கொண்டு ஒருவர்க்கொருவர் துனபவின்பங்களை மொழிந்துகொண்டு மகிழ்ந்தனர்கள். மஹாராஜரும் பெருமாள் அருளிச் செயல்களை முற்று முணர்ந்து தன் மனதில் தன் காரியம் முழுதும் முடிந்துவிட்டதாகவே எண்ணி மிகவும் மகிழ்வுகொண்டனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் ஏழாவது சருக்கம் முற்றிற்று.

---

இந்தச்சருக்கத்திலே ஆபரணதர்சன வியாஜத்தினுலே சேதனனுடைய யாத்ருச்சிக ப்ராஸங்கிக ஸுக்ருததர்சனத்தினுலே பகவானுக்கு அந்தச் சேதனனை யடையும் விஷயத்திலுண்டாகிய த்வரை புரைக்கப்படுகின்றது; இதில் மஹாராஜர் ராவண

னுடைய இருப்பிடத்தையாவது பலப்ராக்ரமங்களையாவது அறியேனென்று விண்ணப்பஞ்செய்தார். மேலே பிராட்டியாரைத்தேடுவதற்கு வானரர்களை யனுப்புங்காலையில், தென்கடலின்நடுவில் நூறுயோஜனம் அகன்ற இலங்காத்தீவுயிருக்கின்றது; அதுதான் ராவணன் உறையுமிடமென்று சொல்லுகிறார்; ஆதலின், இது எப்படி பொருந்துமென்னில், பொருந்தும்; முதலில் பெருமாளுக்கு ராவணன்செய்திகளை யறிவித்துவிட்டால் உடனே ராவணனைக்கொலைசெய்யும்பொருட்டுத் தாமே இளையபெருமாளைத் துணையாகக்கொண்டு எழுந்தருளிவிடுவரோ என்று எண்ணி, அப்படியானால் தான் உதவிசெய்து பெரும்புகழ்பெற்று க்ருதார்த்தனாவதற்கில்லையே யென்று மறைத்தனர் மஹாராஜரென்றுணர்க. வாலி மரணமுறுமளவும் தான் மதங்காசிரமத்தை விட்டுப் புறப்படஅசக்கொண்டிருக்கின்றமையின்,இப்போது எவ்வண்ணம்பெருமாளுக்கு உதவிசெய்வார்; வாலியைமுதலில் கொல்லுவித்துத்தான் அபிஷேகங்கொண்டபின்பானால் அநேககோடி வானரர்களைக்கொண்டும் தாமும்பெருமாளுக்கு உதவியென்னும் கைங்கர்யஞ்செய்து தன்யராகுவாரல்லரோ? ஆதலின், மறைத்தனர்; ஆதலாலேதானே இதுமித்திரத்ரோஹமாகாதெனவுணர்க. முன்பு மஹாராஜா ராவணனுடையசெய்தியை யறிந்தேயிலர், பின் தாரை இளையபெருமாளுடன் விண்ணப்பஞ்செய்த வாக்கியத்தைக் கேட்டே தெரிந்துகொண்டனர்; என்று சிலர் சொல்லுவார்கள். அது பொருந்தாது; முன்னே தான் வாலியினால்வெருட்டப்பட்டு லோகாலோகமலைவரையில் எங்கும்ஓடியலைந்ததாக மகாராஜா உரைக்கின்றமையாலும், ராவணன் வாலியுடன் பகைத்துத்தோல்வியுற்றுப் பின்பு நட்புக்கொண்டிருந்தமையாலும், ராவணன்செய்தியை மஹாராஜா அறியாரென்றுரைப்பதுவே அறியாமை; மஹாராஜர் அறிந்தே தனக்குக் கைங்கர்யம் நேராமல் போகுமோ என்று மறைத்தனர், ஆகையாலேதான் எவ்விடத்தில் சீதை ராவணனால் பறிக்கப்பட்டனளோ உரையீரென்று பெருமாள் வினவியதற்கும் மஹாராஜா விடையுரைத்திலர்; சிலர், ராவணன் இருப்பிடம் முதலியவற்றை நன்கறியேன்; சிறிது அறிவேன்; என்று மஹாராஜா உரைத்ததாகப் பொருள் கூறுவார்கள்;

அதுவும் பொருந்தாது, ஆங்காயின் அறிந்தவரையிலுமாவது உரைத்திருக்கவேண்டுமன்றே? சிறிதும் உரைத்திலரே, ஆதலின் அறிந்தேமறைத்தனரென்றேயுணர்க. இவ்வண்ணமாயின் பெருமாளுக்கு இவர்மீது பொய்யனென்னும் மித்திரத்ரோஹஞ் செய்பவனென்னும் அவிசுவாஸம் தோற்றுதோவெனில், தோற்றாது; பெருமாள் ஸர்வஜ்ஞஸர்வசக்த ஸத்தியஜ்ஞானாநந்தஸ்வரூபியும், ஸர்வாந்தர்யாமியுமாகிய பரப்ரஹ்மமேயாதலின், தாமே ஸங்கல்பானுகுணமாக மஹாராஜாக்கு புத்தி ப்ரதானம் செய்தருளியிருக்க அவிசுவாஸம் தோற்றுவதெவ்வண்ணம், ஆதலின், பெருமாளுக்கும் இதுதான் திருவுளமெனவறிக, மஹாராஜர் ராவணன் இருப்பிடத்தை யறிவாராயின், பிராட்டியைத்தேட நாற்றிசைகளிலும் வானரர்களை யனுப்பியதென்னெனில், ராவணன் மாயாவியாதலாலும், பிராட்டியைப்பறித்தோடி நெடுங்காலமாயினமையாலும், ஒருகால் வேறிடங்களில் ஒளித்துவைத்திருப்பானென்று ஐயுற்று அனுப்பினனெனவறிக;

ஒருவருஷம்வரையில் ராவணன் பிராட்டியைக் காவலில்வைத்து வருத்தாவிட்டால் அவன்செய்த சிவபூஜையினாலுண்டாகிய தபோமகிமை குறையாது, அதுகுறையாவிட்டால் பெருமாளால் ராவணன் கொலைசெய்யப்படான், ஆதலின் அதுவரையில் மஹாராஜருக்கு ராவணன் செய்தி தோன்றாமலிருக்குமாறு சிவசங்கல்பமிருந்ததென்று அப்பய்யதீக்ஷிதர் சொன்னார், இது மிகவும் மடமையினாலுரைசெய்தது, அத்தன்மையதாகிய தபோமகிமை ராவணனுக்குளதாயின் சிவனார் ஏன் பிராட்டியைப்பறிக்கும்படி செய்தார்; அதற்கு ஒரேவருஷமென்று என்ன ஏற்பாடு, அதுஉண்மையாயின் இதற்குமுன்னமே பற்பலபாதகங்களைப் பதித்து வருத்தியதினாலேதானே அந்த[illegible]

## எட்டாவது சருக்கம்

மஹாராஜர், பெருமாள் வாலியைக் கொலைசெய்வேனென்று பிரதிஜ்ஞை செய்தபின்னர், தான் யுவராஜாவாக விருந்ததையும், பின்பு, வாலி தன் மனையாளை யபகரித்துக்கொண்டு தன்னை வெருட்டியதையும், வாலியுடன் பகைநேர்ந்த காரணத்தையும் உரைசெயலுற்றது.



இவ்வண்ணம் பெருமாள் அருளிச்செய்த வாக்கியத்தை மஹாராஜர் கேட்டு மிக மகிழ்ந்து, இளையபெருமாளுக்கெதிராகப் பெருமாளை நோக்கிக் கேட்டருளீர் என்னருமை நட்பினரே! திருக்கல்யாணகுணங்கள் யாவும் குறைவின்றி நிறைந்துள்ள தேவரீர் அடியேனுக்குத் தோழராயினமையின், தேவர்களும், தெய்வங்களும், என்மேல் அருளுடையர்களாயினர்கள்; இவ்விஷயத்தில் ஐயமென்பதேயில்லை, தேவரீர் திருவுள்ளத்தில் கருதின் அடியேனுக்குத் தேவேந்திரன்பட்டமும் பெறலரிதாகாது; அவ்வண்ணமாயின், இந்த கிஷ்கிந்தாராஜ்யத்தைப்பெற்று மகிழ்வேனோ? அடியேன் அக்கினிஸாக்ஷியாக தேவருடன் நட்புக்கொண்டமையின், இனத்தார், சுற்றத்தார், தோழர்கள் யாவரும் இனி என்னைச் சேர்ந்து மகிழ்வார்கள்; அடியேனும் தேவர்க்குத் தகுதியான தோழனென்று தேவரீர் விரைவில் அறிந்தருளுவீர்; என்னுடைய குணங்களை யான் இப்போ புகழ்ந்துகொள்ளேன்; பிரஹ்மஜ்ஞானமுடையவர்களுக்குத் திரம் ஒருக்காலும் அழியாததுபோல தேவரீர்போன்ற மஹானுபாவர்களினுடைய அன்பும் ஒருக்காலும் அழிவுறாது; வெள்ளி, தங்கம், ஆடையாபரணம் முதலிய யாவும் தோழர்களுக்குப் பகுதியற்றவென்றே தோழர்கள் நினைக்கின்றனர்கள்;—

---

மையழித்திராதோ? இதனால் மூடர் மயங்கினும் உணர்ந்தோர் மயங்குவாரோ? மயங்கார்; ஆனால் அவன்செய்த சிவபூஜைக்குப் பயனியாதெனில், பிருகுமஹாமுனிவர் சாபமிட்டபடி பரத்தையர்களைப்பற்றுவதும் பெரியோர்களைப் பகைப்பதும் நல்லொழுக்கத்தைத்துறந்து தீச்செயல்புரிவதும் பாஷண்டியாகித் திரிவதுமே பயனென வுணர்க, இப்பிறவியில் பயன்நேரின் மறுபிறவியில் பயன் தரப்பிக்கக்கூடாதென்று மீமாம்ஸாதி நியாயமிருப்பதால் இதுதான் நன்கு அமையும், மஹாராஜா இதற்குமுன் பெருமாளுடன் வார்த்தையுரைசெய்கையில் கைகளைக்கூப்பாமல் இப்போது கைகளை யுங்கூப்பிக் கண்ணீர்பெருகி யுரைசெய்யத்தொடங்கினமையின், தாம், உண்மையை மறைத்துப் பொய்யுரைப்பதைப் பொறுத்தருளவேண்டுமென்னுங் கருத்துடையரென்று நன்குவிளங்கும்; ஆகையாலேதான் உடனே இரண்டாவதுசுலோகத்தில் பிரதிஜ்ஞையும் செய்தார்; இவைகளை நன்காராயின், பொருந்துமென்றே யுணர்வினர்க ளுணர்வார்கள்.

ఆఢ్యో వాపి దరిద్రో వా దుఃఖితస్సుఖితోఽపి వా
నిర్దోషో వా సదోషో వా వయస్యః పరమా గతిః
ధనత్యాగస్సుఖత్యాగో దేహత్యాగోఽపి వా పునః
వయస్యార్థే ప్రవర్తన్తే స్నేహం దృష్ట్వా తథావిధం.

*ஆட்யோவாபிதரித்ரோவா துக்கிதஸ்ஸுகிதோபிவா*
*நிர்தோஷோவாஸதோஷோவா வயஸ்ய: பரமாகதி:*
*தநத்யாகஸ்ஸுகத்யாகோ தேஹத்யாகோபிவாபுந:*
*வயஸ்யார்த்தே ப்ரவர்த்தந்தே ஸ்நேஹந்த்ருஷ்ட்வா ததாவிதம்.*

தோழன் செல்வமுடையவனாயினும், செல்வமற்றவனாயினும், துன்புற்றவனாயினும், இன்புற்றவனாயினும், தீக்குணமுடையவனாயினும், நற்குணமுடையவனாயினும், அவனே தஞ்சமாகக்கடவன். நல்லோர்கள் தோழர்களின்பொருட்டுப் பொருளை யிழந்தாவது, போகங்களைத் துறந்தாவது, உயிரை விட்டாவது அவர்களைக் கைவிடாமல் பாதுகாத்தளிப்பார்கள் ஆதலின், இனி யடியேனுக்கு சிறிதுங் குறையிலது; என்று விண்ணப்பஞ்செய்தனர். பெருமாளும் அதைத் திருச்செவிசாத்தி யது அவ்வண்ணமே யாகுமென்று உடன்பட்டு, எதிரிலுள்ள இளையபெருமாளுடன் உகந்தருளிச்செய்து மகிழ்ந்தருளினர்.

அநந்தரம் மஹாராஜா பிராட்டியாருடைய திருவாபரணங்களை வாங்கிக் கடாக்ஷித்ததுமுதல் நின்றுகொண்டிருக்கின்ற பெருமாளைப்பார்த்து அவரை எழுந்தருளப்பண்ணுவதற்காக நாற்புறமும் நோக்கி, யருகில் தளிர்த்து மலர்ந்திருந்த ஆச்சாமரத்தின் கிளையை முறித்துக் கீழேபரப்பிப் பெருமாளை எழுந்தருளியிருக்கச்செய்து தாமும் உட்கார்ந்தனர். உடனே சிறியதிருவடி இளையபெருமாள் நிற்பதைக்கண்டு மற்றொருகிளையை முறித்துக் கீழேபரப்பி யவரையும் வீற்றிருக்கச் செய்தனர். இவ்வண்ணம் அம்மலையின்மிசையில் கலக்கமற்றுத் தெளிந்த ஆழ்கடல்போல கம்பீரமாக வீற்றிருக்கின்ற பெருமாளை மஹாராஜர் நோக்கிப் பெருமகிழ்வினால் வாய் தழுதழுத்து மொழியலுற்றனர். கேட்டருளீர் மஹாநுபாவரே! அடியேன் தமையனான வாலியினால் வெருட்டப்பட்டு அச்சங்கொண்டிங்கே திரிந்தலைந்துகொண்டிருக்கின்றேன்; பாரியையும் இழந்து, மகிழ்வுகுன்றித் துன்பக்கடலில் மூழ்கி யிருக்கின்றேன்; அனைத்துலகங்களுக்கும் அபயங் கொடுத்துக் காத்தருளும் அருளாழியம்மானே! அடியேனையும் இந்த வாலியினின்றும் காத்தருள்செய்க; என்றிவ்வண்ணம் மஹாராஜா விண்ணப்பஞ்செய்ததைப் பெருமாள் கேட்டருளித் தாம் தருமமறிந்தவரும், ஆச்ரிதபரிபாலனஞ்செய்யவல்ல திவ்விய தேஜஸ்ஸை யுடையவரும், ஆச்ரிதவாத்ஸல்ய முடையவருமாதலின், மந்தஹாஸத்துடன் மஹாராஜரை நோக்கிக் கேளீர் தோழரே! தோழமைக்கு உபகாரமும், பலைக்கு

அபகாரமும் அடையாளமாதலின், யான் இப்போழ்தே அந்த வாலியைக் கொலைசெய்து உம்மை மகிழச்செய்வேன்; என்னுடைய இந்தக் கணைகள் மிக வேகமுள்ளனவும், இறகுடையனவும், கொடிய வொளி யுடையனவும், கார்த்திகேயவனத்திலுண்டாயினவும், தங்கக்கட்டமைந்தனவுமாகி விளங்குகின்றன; இவை பகைவர்மேல் நச்சரவம்போலவும், வச்சிராயுதம்போலவும் பாய்ந்து கொலைசெய்யும்; உமக்கு அண்ணனென்னும் மாறு பெயருள்ள சத்துருவை இக்கணையினால் அடிபட்டிறந்தனனெனவே எண்ணுக; இக்கணையினால் அவன் சிதறுண்ட மாமலைபோல வீழ்ந்திறப்பனேயன்றி, உய்யானென்றருளிச்செய்தனர். மஹாராஜா இம்மொழியைக்கேட்டு மகிழ்ந்து நன்குநன்கென்று புகழ்ந்து அவரை நோக்கி, ஸ்ரீராமசந்திரரே! அடியேன் மிகவும் சோகத்தினால் வருந்தி யிருக்கின்றேன்; சோகமடைந்தோர்களுக்குத் தேவரோ தஞ்சம்; தேவர் தோழராயினமையின், அடியேன் தேவரிடத்தில் முறையிட்டழுகின்றேன்; தேவர் அக்கினிஸாக்ஷியாகக் கைகொடுத்தமையின், அடியேனுக்குத் தோழராயினரல்லிரோ? ஆதலாலும், மிகவும் பலபராக்கிரமமுடையீரென்பதாலும், அச்சமின்றி யுரைக்கின்றேன்; இவ்விஷயத்தில் சத்தியத்தின்மேல் ஆணையிட்டுத்தருவேன்; துன்பத்தை இதுவரையில் உள்ளே யடக்கிவைத்திருந்தமையின், என் மனதை யறுத்துக்கொண்டிருந்தது; என்றிவ்வண்ணமுரைத்துக் கண்ணீர்ப்பெருக்கினால் மேலே கட்டியாகக்கூறுவதற்குத் திறமையற்றவராயினும், தீரத்தினால் சோகத்தையும், கண்ணீர்ப்பெருக்கையும் உள்ளே யடக்கிக்கொண்டு, பின்பு, கண்ணீரையுந் துடைத்துக்கொண்டு பெருமூச்செறிந்து மனந்தேறி, மீளவும் பெருமானை நோக்கிக் கேட்டருளீர் இனியதோழரே! முன்னே வாலி என்னை வன்மொழிகள்மொழிந்து நாட்டினின்றும் வெருட்டி யோட்டிவிட்டனன்; என்னுடைய இனிய மனையாளையும் பறித்துக்கொண்டனன்; என்னுடைய தோழர்களையும் சிறையில் வைத்தனன்; என்னைக் கொலைசெய்வதிலும் மிக முயற்சிகொண்டிருக்கின்றனன், பல தடவைகளில் என்னைக் கொலைசெய்வதன்பொருட்டு அவனாலேவப்பட்டு வானரர்கள் இங்கெய்தி என்னுடன் போர்செய்து மடிந்தனர்கள்; தேவரும் வாலியினாலேவப்பட்டவரோ என்று எண்ணியே தேவரைக்கண்டவுடன் எதிரில் வாராமல் ஒளித்திருந்தேன்; அச்சமுற்றகாலையில், யாவரும் எதைக் காணினும் அச்சமுறுகின்றனர்களல்லரோ? இந்த அனுமான் முதலிய நால்வரே எனக்குத் துணையாகி யிருக்கின்றனர்கள்; ஆகையாலேதான் இவ்வண்ணம் மிகவும் துன்புற்றும் இறக்காமல்பிழைத்திருக்கின்றேன்; இவர்களே என்னை விட்டுப் பிரியாமல் சென்றவிடத்தில் சென்றும், இருந்தவிடத்திலிருந்தும், என்னைப் பாதுகாத்துக்கொண்டு வருகின்றனர்கள்;—

என் தோழரே! இதுதான் என்னுடைய விண்ணப்பத்தின் சுருக்கம், விரிவாக உரைப்பதினால் யாதுபயன்; மிகவும் சிறந்த பலமுடைய என் தமையனான அந்த வாலியே எனக்குச் சத்துரு? அவன் இறந்தொழிய

என் துன்பம் தீராது; எனக்கு இன்பமும், உயிர்வாழ்வும், அவன் அழிந்த பின்புதான் நிலைக்கும்; இதுதான் என்னுடைய துன்பத்தின் முடிவு; தோழனுக்குத் துன்புற்றவனாயினும், துன்புறாதவனாயினும், தோழனே தஞ்சமாதலின், உரைசெய்தேன்; என்று மொழிந்து மௌனமடைந்தனர். பெருமாளும் அம்மொழியைக்கேட்டு மஹாராஜனை நோக்கி, வானராசிமானே! உமக்கும் வாலிக்கும் பகைமேலுண்டாயிற்று, அதை யான் கேட்டுணர விரும்புகின்றேன்; அதைக்கேட்டபின் பலாபலங்களை எளிதாக வுணர்ந்து தேர்ந்து, மேலே நடக்கவேண்டியதை நடத்துவேன்; உம்மை இவ்வண்ணந் துன்புறுத்தியதைக்கேட்டு வாலியின்மேல் எனக்குக் கடுஞ்சினந்தோன்றி, மழைகாலத்தில் ஆற்றின்வேகம்போல என் மனத்தைப் பிளந்து மேலெழுகின்றது; ஆதலின், யான் கோதண்டத்தில் நாண்கட்டுவதற்குள் அதனை மகிழ்ந்துரைசெய்யீர்; யான் கணையைத் தொடுத்தெய்வேனாகில், உடனே வாலி இறந்தனனெனவே நம்புக; என்று வினவியருளினர். மஹாராஜா அதுகேட்டு நான்கு வானரர்களுடன் மிக மகிழ்ந்து பெருமானை நோக்கி, வாலியுடன் தமக்குப் பகைநேர்ந்த காரணத்தை மொழியலுற்றனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் எட்டாவது சருக்கம்

முற்றிற்று.

## ஒன்பதாவது சருக்கம்.

மஹாராஜர், மாயாவியுடன் வாலி பகைகொண்டு போர்செய்தது

முதலிய செய்தியைப் பெருமானுக்கு அறிவித்தது.

கேட்டருளீர் ஸ்ரீராமசந்திரரே! வாலியென்கிற என் தமையன் மஹாவீரமுடையவனும், எம் தந்தைக்கும், எனக்கும், மிகவும் இனியனுமாகி யிருந்தனன்; பின்பு, தந்தை பொன்னுலகமடைகையில், மந்திரிகளெல்லோருஞ்சேர்ந்து மூத்தவனென்பதினால், வாலிக்குப் பட்டங்கட்டுவித்தனர்கள். பின்பு, அவன் அரசாட்சிசெய்துவருகையில், யான் எப்பொழுதும் பிரியாமல் விநயம்பூண்டு தொண்டன்போல அருகிலேதானே யிருந்து கொண்டிருந்தேன்; துந்துபிக்கு மூத்தவனும், மயாஸுரன் பிள்ளையுமாகிய மாயாவியென்பவன் அப்பொழுது ஒரு பெண்ணின் நிமித்தமாக வாலியுடன் பகைகொண்டிருந்து ஓர்நாள் அர்த்தராத்திரியில் எல்லோரும் உறங்கினபின், கிஷ்கிந்தையின் கோபுரவாயிலில் வந்து கோரமாகச் சிங்கநாதஞ்செய்து வாலியைப் போர்க்கழைத்தனன்; அதனைக்கேட்டுறங்க

வாலியும், அந்தக் கூக்குரலைக்கேட்டுத் துயிலுணர்ந்து அதனைப்பொறுமல் விரைவாகவெழுந்து அவ்வஸுரனுடன் போர்செய்யும்படி புறப்படுகையில், அந்தப்புரத்திலுள்ள வனிதையர்களும், யானும் பலவாறாகத் தடைசெயி னும் கேளாமல் சினங்கொண்டு புறப்பட்டு வந்தனன்; யானும் அவன்மீ துள்ள பத்திமையினால் அவனுடன் புறப்பட்டுச்சென்றேன்; அந்த மாயாவி எங்களிருவரையுங்கண்டு அச்சங்கொண்டு மிகவும் வேகமாக ஓடிப்போயி னன் அப்பொழுது சந்திரனெழுந்து வழியெங்கும் பிரகாசமாக விளங்கின மையின், யாங்களும் அவனை வெருட்டிக்கொண்டோடினேம்; அந்த அஸுரனும் புலலெழுந்து மூடிய பூமியிலுள்ள ஒரு பிலத்தினுள்ளே புகு ந்து மறைந்தனன் யாங்களும் அங்கே சென்று நிற்கையில், வாலி மிகவுஞ் சினமுடையவனாகி என்னை, மீளாமல் என்னை நோக்கி, அடா தம்பி! யான் வருமளவும் இவ்விடத்திலேயிருந்து மிகவும் ஊக்கத்துடன் இவ்வாயிலைக் காத்துக்கொண்டிரு? யான் இதனுள்ளே புகுந்து அந்த அஸுரனைத்தேடிக் கொலைசெய்து வருவேனென்று மொழிந்தனன். யான் அம்மொழிகேட்டு யானும் உடன் வருவேனென்று பலவாறாகவேண்டினேன்; அவன் அதற் குடன்படாமல் ஆணையிட்டுத் தகைந்துவிட்டு பெரிய அக்குகைக்குள்ளே புகுந்தனன் யான் அவன் கட்டளையின்படி அக்குகையின் வாயிலைக் காத் துக்கொண்டிருக்கையில், ஒருவருஷமாகியும் அவன் வாராமையால், அந்தோ! அண்ணன் இறந்துவிட்டனனோவென்று ஐயமுற்று மிகவுந் துயரமடைந்திருந்தேன்; பின்பு, நெடுநாளைக்கு அக்குகைக்குள்ளே அநேகமாயிரம் அசுரர்களின் இரைச்சலும், வாலியின் கூக்குரலும் கேட்கப் பட்டன; உடனே நுரையுடன் கூடிய குருதியும் வெகுவாக அக்குகையி னின்றுந் தோன்றிற்று; யான் இக்குறிகளினால் வாலியே இறந்துவிட்டன னென்று நிச்சயித்து மிகவும் துன்பமடைந்து அந்த அசுரன் மீளவும் இங் கெய்தி எம்மையும் கொலைசெய்வானோ என்கின்ற எண்ணத்தினால் மலை போன்ற பெரிய குண்டுக்கல்லை அந்தக் குகையின் வாயிலில் அடைத்து மூடிவிட்டு நீரிலாடி வாலியைக்குறித்துத் தருப்பணஞ்செய்து சோகத்தை யடக்கி இதன் உண்மையை அறியுமளவும், யார்க்கும் அறிவித்தலாகா தென்று இதனை யொருவர்க்கும் கூறாமல் மறைத்திருந்தேன்; ஆயினும், மந்திரிகள் இதனை எப்படியோ அறிந்துகொண்டு எல்லோருஞ்சேர்ந்து ஆலோசனைசெய்து என்னை நிர்ப்பந்தித்து அபிஷேகஞ் செய்வித்தனர்கள். பின்பு, யான் நீதிவழுவாமல் சிறிதுகாலம் அரசாட்சி செய்துகொண்டிருக் கையில், வாலி அந்த அஸுரனைக் கொலைசெய்துவிட்டு யான் அடைத்து வந்த கல்லினையுந்தள்ளி, யந்தக்குகையாலேதானே வந்து யான் அபிஷேகங் கொண்டு அரசாட்சிசெய்வதையுங்கண்டு கடுஞ்சினம்பூண்டு கண்கள் சிவந்து என்னுடைய மந்திரிகளையுங்கட்டிச் சிறையில்வைத்து, என்னையும் நோக்கி, வன்மொழிகள் மொழிந்தனன்; அப்போழ்து ராஜ்ஜியம் யாவும் என்வசத்திலிருந்தமையின், அவனை வெல்லுந்திறமையுற்றிருந்தேனாயினும்,

அவன்மீதுள்ள அன்பினாலும், பத்திமையினாலும், யான் அந்த எண்ணங் கொள்ளாமல் அவனைக்கண்டவுடனெழுந்து விதியின்படி வந்தனம் செய்தேன்; ஆயினும், அவன் சிரந்தணிந்து மகிழ்ந்து ஆசீர்வாதஞ்செய்யாமலிருக்கையில், மீளவும் யான் வணங்கி வேண்டுகையிலும் சினந்தணியாமையால் அருள்செய்திலன் மஹாபிரபுவாகிய என் தோழரே;' என்று மொழிந்தனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் ஒன்பதாவது சருக்கம் முற்றிற்று.



## பத்தாவது சருக்கம்.

மஹாராஜா பெருமாளை நோக்கி, வாலி என் வேண்டுகோளுக் கிரங்காமல் வெருட்டினனென்றுரைத்ததும், பெருமாள் அவனைக் கொலை செய்து உமக்கந்த ராஜ்யத்தை யளிப்பேனென்று அபயமளித்ததும்.



மீளவும் மஹாராஜர் பெருமாளை நோக்கிக் கேட்டருளீர் என் பிரியமுள்ள தோழரே! மறுபடியும் யான் மிகச் சிறப்புடைய வாலியை நோக்கி, எழுந்தருள்க எம்மையரே! என்னுடைய நல்வினையினால் நீர் குசலமுற்றெழுந்தருளினீர்; உம்மால் பகைவனும் கொலைசெய்யப்பட்டனன், யான் அநாதனாயினேனென்று துயருற்றிருந்தேன், எனக்கு நீர் ஒருவரே கருணைகூர்ந்த நாதனாகின்றீர்; இந்த நூறு சலாகைகளை யுடையதும், பூர்ணசந்திரன் போன்றதுமாகிய வெண்குடையினையும், வெண்சாமரங்களையும், உம்மிடத்திலே ஒப்பித்துவிட்டேன், உளமகிழ்ந்தேற்றுக்கொண்டருள்க; என்னையனே! என்னுடைய இவ்விண்ணப்பத்தைக் கேட்டருள்க; யான் உம்முடைய கட்டளையின்படி அந்தக்குகையை யொருவருஷம்வரையில் காத்துக்கொண்டு உம்மை எதிர்பார்த்திருந்தேன்; பின்பு, அதினின்றும் நுரையும் ரத்தமும் மிகுதியாகத் தோன்றிற்று; அதைக்கண்டு உமக்கே தீமை நேர்ந்ததென்று எண்ணி மிகவுஞ் சோகக்கடலில் மூழ்கி பகைவனான் மீளவும் வந்து எம்மையுங் கொலைசெய்வானோவென்று அச்சங்கொண்டு மலையின் சிகரத்தினால் அக்குகையை மூடி யங்கிருந்து புறப்பட்டிங்கெய்தினேன்; பின்பு, யான் துயரங்கொண்டிருந்தமையின், மந்திரி முதலானோர்கள் யானிவ்வண்ணம் எண்ணிவந்ததை யறிந்துகொண்டு வலுவில் அபிஷேகஞ் செய்வித்தனர்கள்; இதில் ஒருமொழியேனும் பொய்யுரைத்திலேன்; ஆதலின், இதனை நன்குணர்ந்து இப்பிழையைப் பொறுத்தருள்க; இனி

நீரே அரசாகிப் பாதுகாக்கக்கடவீர். யான் முன்போலவே தொண்டுபூண்டிருப்பேன்; நீர் இல்லாமையினாலே யான் அரசுசெய்து வந்தேனேயன்றி, வேறில்லை, வைப்பாகவிருந்த இந்த ராஜ்ஜியத்தைப் பகைவின்றிப் பாதுகாத்து மீளவும் உமக்களிக்கின்றேன்; ஆதலின், என்மீது சினமுறாது; இவ்வண்ணம் யான் கைகூப்பி வேண்டுகின்றேன்; அரசற்ற ராஜ்ஜியம் செழிப்புறாதென்று அமைச்சர் முதலானோர் எனக்கு நிர்ப்பந்தம்பண்ணி அபிஷேகஞ்செய்வித்தனர்களேயன்றி, வேறில்லை, என்றிவ்வண்ணம் உரைசெய்து வேண்டினேன்; வாலி இதைக்கேட்டு அருள்செய்யாமல் எதிர்த்து அதட்டி யடா நீசா! சீச்சீ உன்னை யிகழ்க; என்று பலவாறாக வல்லுரையுரைத்து, நாட்டார் நகரத்தோர்களையுங் கூட்டி என்னையுங்குறித்து அவர்களை நோக்கிக் கேளீர்கள் அன்பர்களே! முன்பொருநாள் இரவில் மாயாவியென்னும் அசுரன் கெடுமதிபூண்டு என்னைப் போர்செய்வதன்பொருட்டு அழைத்தனனே? அது உங்களெல்லீர்க்குந் தெரியுமன்றோ? அப்போது யான் அவனது வீரவாதத்தைக்கேட்டுப் பொறாமல் புறப்பட்டேன்; அப்போது இந்தக் கொடிய சுக்கிரீவனும் என்பின்றொடர்ந்து வந்தனன்; அந்த அஸுரன் எங்களிருவரையுங்கண்டு அச்சங்கொண்டோடினன்; யாங்களும் அவனைத் தொடர்ந்தோடினோம்; அந்த அசுரன் விரைவாக ஓடி யொரு பெரிய குகைக்குள் புகுவதைக்கண்டு யான் இவனை நோக்கி, அடா தம்பி! யான் வருமளவும் நீ இந்தக் குகையைக் காத்திரு? யான் அந்த அஸுரனைக்கண்டு கொலைசெய்யாமல் மீளேனென்று உரைத்துவிட்டு இவன் இவ்வண்ணமேயிருப்பானென்றெண்ணி அந்தக் குகைக்குள்புகுந்து சென்றேன்; பின்பு, அவனைத் தேடிப்பிடிப்பதற்கு ஒருவருஷமாகிவிட்டது; பின்பு, அவனைக்கண்டு இனத்தார் சுற்றத்தார்களுடன் எளிதில் கொலைசெய்துவிட்டேன், அப்போது அவனுடைய குருதி அக்குகையின் வாயில் வழியாகப்பெருகிற்று, பின்பு, யான் அவ்வழியைத்தேடிவந்து வழியைக் கல்லினால் அடைத்திருப்பதைக்கண்டு, அடா சுக்கிரீவா என்று பலதடவை கெட்டியாகக்கூவியும் எதிர்மொழி கேளாமையினால், மிகவுந் துயரமடைந்து வெகுவாகக் கால்களினால் உதைத்து அக்கல்லைத் திறந்துகொண்டு அந்த வழியினால் புறப்பட்டு இங்குச்செய்தினேன்; ஆதலின், இவனே ராஜ்ஜியத்தைத் தானே யாளவேண்டுமென்றெண்ணி, யான் இறக்கினும் இறக்குகவென்று கெடுமதிபூண்டு அக்குகையின் வாயிலை மூடிவிட்டு வந்தனன்; இவன் கொடுமைபூண்டு அண்ணனென்னும் அன்பினையும் மறந்து இவ்வண்ணஞ் செய்தனன், என்றிவ்வண்ணமாக இகழ்ந்துரைத்து, மனையாளையும் அபகரித்துக்கொண்டு உடுத்த துணியுடன் வெருட்டி யடித்தோட்டி விட்டனன். அவனால் வெருட்டப்பட்டே இப்பார்முழுதும், காடு மலை யடங்கலும் திரிந்தலைந்தேன்; பின்பு, வேறொருகாரணத்தினால் வாலி இவ்விடத்திற்கு வரக்கூடாமையை யறிந்து இந்த ரிசியமூகமலையைச்சேர்ந்துறைகின்றேன்; கேட்டருளினீரோ எம் தோழரே! யானிவ்வண்ணம் நிதியும் பிறையின்

றியே கடுந்துயரமடைந்தேன்; இவ்வண்ணம் வாலிக்கும் எனக்கும் பகை நேர்ந்ததற்குக் காரணத்தை யுரைத்தேன்; ஆதலின், இனி வாலியின் அச்சந்தீர்ந்து இனபுற்று அடியேன் மகிழ்ச்சியுற்று வாழுமாறு அருள் செய்க; தேவர் அநாதரக்ஷகரும், ஆபத்பந்துவும், இனியதோழருமாகின்றீரல்லீரோ? என்று விண்ணப்பஞ்செய்து வேண்டினர். பெருமாளும் அம்மொழியைத் திருச்செவிசார்த்தி அஞ்சன்மின் என்று அபயமளித்து, அவரை நோக்கிக் கேளீர் மஹாராஜரே! குறிதப்பாமல் விரைவாகப் பாய்கின்ற என்னுடைய இக்கணைகள் கதிரவன்போல ஒளிகொண்டு வாலியின் மேலே விழப்போகின்றன; மிகவும் தீச்செயல் பொருந்திய அந்த வாலி எனக்குக் கட்புலனாகுமளவுமே பிழைத்திருப்பான், யான் துன்புற்றிருப்பதினாலே நீரும் மிகவும் சோகக்கடலில் மூழ்கிக் கிடக்கின்றீரென அறிகின்றேன்; உமது பாரியையைப் பறித்துக்கொண்ட அந்த வாலியை விரைவில் கொலைசெய்து உம்மைக் கரையேற்றுவேன்; பின்பு, நீர் கோரிகையீடேறி இன்புற்று வாழ்வீரென்று புன்னகையுடன் அருளிச்செய்து தேற்றியருளினர். மஹாராஜரும் அம்மொழியைக்கேட்டு மிக மகிழ்ந்து பெருமாளை நோக்கி, மொழியலுற்றனர். *

கிஷ்கிந்தாகாண்டத்தில் பத்தாவது சருக்கம் முற்றிற்று.

## பதினொன்றாவது சருக்கம்.

மஹாராஜர் பெருமாளுடன் வாலிக்குநேர்ந்த மதங்கமாமுனியின் சாபத்தை யுரைசெய்து அவனுடைய தோள்வலியைப் புகழப் பெருமாள் மாஹாராஜர்க்கு விசுவாஸம் வருவதற்காக துந்துபியின் சரீரத்தை இடதுகால் கட்டைவிரலினால் பத்துக்காதவழி தூரம் தள்ளியருளியது.

அநந்தரம் மஹாராஜர் பெருமாள் அருளிச்செய்த திருவாய்மொழிகளைக் கேட்டதினால் பெருமகிழ்வுகொண்டு டௌருஷம்பெருகப் புகழ்ந்து பூர்த்துப் பெருமாளைநோக்கிக் கேட்டருளீர் அருட்சாழியம்மானே! தேவர் திருவுளஞ் சிறிபருள்வீராகில், கொடிய கூரிய கணைகளினால் மூவுலகங்களையும் ஊழிகாலையில் கொழுந்தெழுந்த செங்கதிரோன்போல

* மாயாவியெனபவன துந்துபிக்கு உடன்பிறந்தோனும் ஒருவனுளன்; இங்கே இவன் துந்துபியின் மகனெனவே தோற்றுகின்றது.

எரித்தருள்வீரென்பதில் சிறிதும் ஐயமிலது ஆயினும், வாலியினுடைய தீரத்தையும், வீரத்தையும், பௌருஷத்தையும், அடியேன் உரைக்கின்றேன்; இதனைக்கேட்டருளிய பின்பு, தக்கவண்ணஞ்செய்தருள்க; வாலி தினந்தோறும் பின் மாலையிலெழுந்து, மேலசமுத்திரத்திலிருந்து கீழச முத்திரத்திற்கும் தென்சமுத்திரத்திலிருந்து வடசமுத்திரத்திற்கும் கதிரவன் உதிப்பதற்குமுன்னமே வருத்தமின்றிச் சுற்றிக்கொண்டு வருவான்; மாமலையின் சிகரங்களைக் கையிலெடுத்துக்கொண்டு அம்மானையாடுவான்; காட்டிலுள்ள பற்பல புஷ்பித்த சிறந்த மரங்களையும், வேகத்தினால் முறித்துச் சாய்ப்பான்; ஒருக்கால் துந்துபியென்னும் அசுரன் கயிலைமலையின் சிகரம்போலப் பருத்துயர்ந்த காட்டெருமைக்கிடாவின் வேஷத்தையெடுத்துக்கொண்டு ஆயிரம் யானை பலம் தனக்குளதென்னும் செருக்கினால் மதமேறி வரம்பெற்றிருந்ததினால், ஒருவனையும் மதிக்காமல் சமுத்திரராஜனைக்கிட்டிக் கேளீர் நீரக்கடலுவோ! என்னுடன் போர் செய்யவருக; என்று அழைத்தனன் சமுத்திரராஜனும் எழுந்து அவனைநோக்கி, அடா துந்துபி! யான் இப்போது போர்செய்ய வல்லமை கொள்ளுகின்றிலேன்; உன்னுடன் போர்செய்ய வல்லவன் யாவனோ? அவனையுரைசெய்கின்றேன் கேளாய்; முக்கண்ணனுக்கு மாமனும், மாமலைகளுக்குக் கோமானும், பற்பல சுனை, காடு, ஆறுகளையுடையனுமாகிய வரையரையன் இமயமலையென்கின்றனன், அவன் உன்னுடன் போர்செய்யவல்லவன் அங்குச் செல்லாயென்று உரைசெய்தனன். துந்துபி யதுகேட்டு சமுத்திரராஜன் தன்னைக்கண்டு அச்சங்கொண்டதாக நினைத்து, வில்லினின்றும் விடுக்கப்பட்ட பாணம்போல விரைவாகப் பாய்ந்துவந்து இமயமலையைச் சேர்ந்து வெண்மைநிறமுள்ள சிறந்த சிகரங்களை முட்டிக் கீழேதள்ளிச் சிங்கநாதஞ் செய்தனன். வரையரையனும் அதுகண்டு சீற்றறு வெண்மைபொருந்திய மேகம்போன்ற இனியருபந் தரித்துக்கொண்டு தனது சிகரத்தின்மீதில் வீற்றிருந்து துந்துபியை நோக்கி, அடா தானவா! நீ யென்னையேன் துயருறுத்துகின்றனை; யான் போர்செய்யத் தக்கவனல்லேன்; மாமுனிவர்களெல்லோரும் என்னைச் சேர்ந்து தவம்புரிந்துக்கொண்டிருக்கின்றனர்கள்; ஆதலின், என்னை வருத்தற்க; என்று மொழிந்தனன். துந்துபி யதுகேட்டுச் சினத்தினால் கண்சிவந்து அவனை நோக்கி, அடா மாமலை மன்னவா! உன்னைப் போரில் சிறந்தவனென்று கூறுகின்றனர்களோ? என்னிடத்தில் அச்சங்கொண்டே இவ்வண்ணம் உரைக்கின்றனையோ? ஆகில், என்னுடன் இப்போது யாவன் போர்செய்யவல்லனோ அவனை யுரைசெய்க; என்று வினவினன். பர்வதராஜன் அதுகேட்டு அவனை நோக்கிக் கேளடா துந்துபி! வாலியென்னும் வானரராஜன் தேவேந்திரனுக்கு நிகரான பல பராக்கிரமமுடையவனாகிக் கிஷ்கிந்தையில் அரசு செய்து வருகின்றனன்; அவன் உன்னுடன் போர்செய்ய மிகவும் வல்லவன், அவன் நமுசிக்கு வாஸவன்போல உனக்குத்தக்கசூரன், உனக்குப்

போர்செய்ய விருப்பமுள்ளதாயின், விரைவாக அங்குச்செல்லுக; என்று உரைசெய்தனன். துந்துபி அதுகேட்டு உடனே புறப்பட்டுக் கிஷ்கிந்தாபுரிசேர்ந்து மழைகாலத்தில நீருண்டகொண்டல்போலப பருத்துயர்ந்து மகிஷவேஷத்துடன் கோட்டைவாயிலிலவந்து ரணபேரிமுழங்கியதுபோலக்கூவினன்; அருகிலுள்ள மரங்களையும முறித்தனன; பூமியையும் கால்களின் குரங்களினால பிளந்தனன; கோட்டைக்கதவினையும யானைபோலக் கொம்புகளினாலமோதி முட்டிக்கொந்தினன்; அந்தப்புரத்தில் படுத்திருந்த வாலி யந்த ஓலியைக்கேட்டெழுந்து சினங்கொண்டு தாரைமுதலிய பெண்களுடன கூடி விண்மீனகளுடன் கூடிய சந்திரனபோலப புறப்பட்டு வந்து துந்துபியை நோக்கி, அடா தானவா! எல்லாவானரங்களுக்கும் வாலி ராஜனாகியிருக்கையில, நீயேன் இவவண்ணம் கோட்டைவாயலில கூவுகின்றனை, அடா உன் செய்தியை யான் அறிவேன்; தப்பிப் என்றுமல் ஓடிவிட்டால பிழைப்பாய; ஏன உயிரை மாயத்துக்கொள்ளுகின்றனை; உயிரைப பாதுகாத்துக்கொள்ளாடா? என்று மொழிந்தனன். துந்துபி யதுகேட்டுச சினங்கொண்டு அவனை நோக்கி, அடா வாலி! நீ பெணகளின நடுவிலிருந்து இவவண்ணம் மொழிவது உன்னுடைய வீரத்திற்குத் தக்கதன்று, என்னுடன் நீ இப்போது போர்செயக; பினபு, உனது பலம இத்தன்மையதென்று யான் அறிந்து கொள்வேன; அனறியில், இன்றிரவுமுழுதும் சினத்தையடக்கிப பொறுத்திருக்கினறேன; அதற்குள நீ இனபங்களை யனுபவித்து, அன்பரகளை யணைந்துகொண்டு, கோரினவைகளை யளித்துவிட்டுத தோழர்களையுங்கண்டு இந்நகரியையும நன்கு கண்ணுற்று, உனக்கு நிகரான மற்றொருவனுக்குப் பட்டமும் கட்டுவித்து, மனைவிகளுடனும புணர்ந்து வாழக; பினபு, நாளையதினம் உதயத்தில உன்னுடன போர்ந்து உன கொழுப்பை யடக்கிக் கொலை செய்து மகிழவேன;—

యోహిమత్తంప్రమత్తంవా సుప్తంవారహితంభృశం
హన్యాత్సభ్రూణహాలోకే త్వద్విధంమదమోహితం

யோஹிமத்தமபரமத்தமவா ஸுப்தமவாரஹிதமபருசம
ஹந்யாத்ஸப்ருணஹாலோகே த்வத்விதம்மதமோஹிதம

கள் முதலியவற்றைக் குடித்து மதங்கொண்டு மயங்கியிருப்பவனையும், ஊக்கமற்றுப் பராக்காயிருப்பவனையும், துயில்கொண்டவனையும், ஆயுதமின்றித் தனித்திருப்பவனையும், உனனைப்போலக் காமவேட்கை கொண்டு மயல்கொண்டவனையும், யாவனொருவன் கொலைசெய்வானோ? அவன் உலகினில் கருவையழித்த பாவத்தையும், வேதியரைக் கொலை செய்த பாவத்தையும் அடைவானென்று தருமமுணர்ந்தோர் மொழிகின்றனரல்லரோ? என்று செருக்குற்று மொழிந்தனன். வாலியும் அம்

மொழியைக்கேட்டு நகைத்துச் சினமுற்றுத் தாரை முதலிய பெண்களை யனுப்பிவிட்டு அவனை நோக்கி, அடடா மூடா! நான மதங்கொண்டிருக்கே னென்றெண்ணுறாக; நீ போரிலே அச்சமற்றவனாயின், எதிரே நின்று இப்போதே போர்செய்யடா? என்னுடைய இந்த மதத்தையும், இந்தப் போர்க்கு வீரபானமென்றெண்ணடா? என்றிவ்வண்ணமுரைத்து தன் தந்தையான தேவேந்திரனால அளிக்கப்பட்ட பொன்மயமான மாலையை தோள்களில உயர எடுத்துக கட்டிக்கொண்டு போர்செய்யச சன்னத்தமாகி நின்றனன். உடனே அந்த துந்துபியும் போர்வதற் கெதிரதுவருகையில், வாலி யவனுடைய இரண்டு கொம்புகளையும் பிடித்துச் சுழற்றிக் கீழேயடித்துச் சிங்கநாதஞ்செய்து மகிழ்ந்தனன அப்போது அந்த துந்துபியின் காதுகளினின்றும் குருதி தாரையாகப்பெருகிற்று; பின்பு இருவரும் மிகச்சினங்கொண்டு கோரமாகச சண்டைசெய்கையில், வாலி முஷ்டிகளினுலும், முழங்கால்களினுலும், குண்டுகக்கல்லுகளினுலும், மரங்களினுலும அடித்தனன். துந்துபியும் கொமபுகளினுலும், கால்களாலும் அடிததலனை. இவ்வண்ணம் போர்கையில், வாலிக்குக் காந்தியும், பலமும், பராக்கிரமமும் வளர்ந்தன; துந்துபிக்கு அவைமுறையே குறைந்தன; அப்போது வாலி துந்துபியைப் பிடித்துச சுழற்றித தரையில் அடித்தனன. உடனே துந்துபி தரையிலவீழ்ந்திறந்தனன். வாலியும் அப்பொழுது அந்த துந்துபியின் சரீரததையெடுத்துக் கைகளால சுழற்றியெறிகையில், அது ஒருகாத வழிதூரந்தாண்டித் தரையில வீழ்ந்தது; வேகமாகத் தரையில் அந்த உடல் வீழ்ந்தமையின், வாயினின்றும் இரததவெள்ளம்தோன்றிக் காற்றினுல்மதங்கமாமுனியின் ஆசிரமமெங்கும்போயப்பாய்ந்தது; அங்கே வீற்றிருந்த மதங்கமாமுனிவர் அதைககண்டு மிகமுனிவுகொண்டு யாவன அவன இவ்வண்ணம் செயதவன்; அவன் எனமீதும் குருதிபடியுமாறு செய்தனனலலனே? எவன் இவ்வண்ணம் மதியற்றவனும், மதிகெட்டவனும், மடமையுடையோனும், பெரியோர்களிடத்தில பழக்கமற்றவனுமாகின்றனன்; என்று அருளிச்செய்து ஆசிரமத்தின புறததிலெழுந்தருளி மாமலைபோல இறந்து வீழ்ந்துகிடந்த காட்டு மகிஷததைக்கண்டு ஞானககண்ணினுல் இவவண்ணம் வாலியினுல செய்யப்பட்டதென்று அறிந்து அவன் மேல் மிகத்திருவுளஞ்சீறி அந்தவாலி இன்றுமுதலிவவிடத்திற்கு வரககூடவனல்லன்; மீறிவருவானுகில உடனே இறக்கக்கடவன். அவன் இந்த துந்துபியின் உடலையெறிந்து மரங்களையும் முறித்து, சோணிதத்தையும் இறைத்து, என்னுசிரமத்தைக கெடுத்தனனல்லனே? அவன் சுற்றிலும் காதவழிதூரமுள்ள இந்த ஆசிரமத்தில் புகுவானுயின், உடனே யவன் இறந்துவிடுவனென்பதில் சிறிதேனும் ஐயமிலது; அவனுக்கு மித்திரர்களான வானரர்கள் யாவருளரோ? அவரும் இவ்விடத்தில் வாழக்கடவரல்லர்; அவர்கள் என்னுடைய இம்மொழியைக்கேட்டு வேறிடந்தேடிப்போகக்கடவர்கள்; இதனைக்கேட்டும் இங்கிருப்பார்களாயின், அவர்கள்

மேலும், சாபமிடுவேன்; யான் அருமையாகப் பிள்ளைகளைப்போல வளர்த்துவந்த என்னுடைய இந்த ஆசிரமத்தை யந்தப்பாவி யழித்தனனே? இன்றுதினம்மாத்திரமே இங்குள்ள வாலியைச் சேர்ந்த வானரர்களுக்குக் கெடுவுகொடுத்திருக்கின்றேன்; நாளையதினம்முதல யான் யாவனையாயினும காண்பேனாயின் அவன் அநேகம் ஆயிரம் வருஷங்கள் கல்லாகிக் கிடக்கக்கடவன; என்று சாபமிட்டருளினர். அங்குள்ள வானரர்கள் எல்லோரும அம்மொழியைக்கேட்டுணர்ந்து உடனே புறப்பட்டுக கிஷ்கிந்தைககோடிச சேர்ந்தனர்கள். வாலியும் அவர்களைக்கண்டு வாரீர்கள் வானரர்களே! நீங்களெல்லீரும் மதங்கவனத்தில் வாழ்ந்துகொண்டிருந்தீர்களே? இப்பொழுது ஏன் இங்கேகூடியோடிவருகின்றீர்கள்; அவ்விடத்தில் உங்களுக்கு நன்மையுளதா? யாதேனும தீமை நேர்ந்ததோ? என்று வினவினன பின்பு, அந்தவானரர்களும வாலியை நோக்கிக் கேட்டருளீர் எமமிறையே! தேவராலே எறியப்பட்ட துந்துபியின் குருதிபாய்ந்து மதங்கமாமுனியின் ஆசிரமமெங்கும் அழிந்தமையின், அவர் முனிந்து தேவரையும், தேவரைச்சேர்ந்த எங்களையும, இவ்வண்ணம் சாபமிட்டனரென்று நிகழ்ந்தவாறு மொழிந்தனர்கள். வாலியும் அம்மொழிகேட்டு விரைவாக வோடிவந்து அந்த மதங்கமாமுனியைககண்டு வணங்கி யந்தச சாபத்தைப போக்கும்படிவேண்டினன். அம்முனிவர் அதுகேட்டும இரங்காமல் அவனை இலக்ஷியஞ்செய்யாமல் நிராகரித்துவிட்டு ஆசிரமத்துக்குள புகுந்தனர். வாலி யதுகேட்டு அச்சங்கொண்டு கிஷ்கிந்தை சேர்ந்து அன்றுமுதல இந்த மதங்காசிரமத்துக்குள் புகுகின்றிலன். பின்பு, அவன் இங்கே வரககூடாதென்பதையறிந்து அச்சந்தீர்ந்து மந்திரிகளுடன் இன்புற்று வாழுகின்றேன்; இதோ கண்டருளீர் அந்த துந்துபியின் எலும்புகளின் குவை காணப்படுகின்றது; இதுதான வாலியினால எறியப்பட்டு மலைபோல வீழ்ந்திருக்கின்றது; இதோ காணப்படுகின்ற இந்தப பருத்துயர்ந்த ஏழு ஆச்சாமரங்களுமிருக்கின்றனவே? இவைகளுள் வாலியொரு மரத்தைப்பற்றி யசைப்பானாகில, அது இலைகளையாவுமுதிர்ந்து மொட்டையாகிவிடும; ஸ்வாமி என தோழரே! வாலியின்பலம் இவ்வண்ணம் ஒப்பற்றதாக யிருக்கின்றதே அத்தன்மையனாகிய அந்த வாலியைப் போரில தேவர் எவ்வண்ணங் கொலைசெய்தருளுவீரென்று மொழிந்தனர். மஹாராஜர் இவ்வண்ணம மொழிந்ததை இளையபெருமாள் கேட்டருளி நகைத்து அவரைநோக்கி மஹாராஜரே! இப்பொழுது எந்தகாரியத்தைச் செய்தால என்னையர் வாலியைக கொலைசெய்வாரென்று நீர் நம்புவீரோ? அதனை யுரைசெய்யென்று வினவியருளினர். மகாராஜர் அதுகேட்டு அவரை நோக்கிக் கேளீர் இளையபெருமாளே! வாலி இந்த ஏழு சாலமரங்களையும் தனித்தனியசைத்துப் பலதடவைகளில் இலையுதிரச்செய்திருக்கின்றனன்; ஆதலின், பெருமான் இவற்றுள் ஒன்றினை யொருகணையினால் அடித்துத்தள்ளினும், இந்த துந்துபியின் எலும்பைப்பெயர்த்து [illegible]

தில் எறிந்தருள்வராயினும், பெருமாள் வாலியைக் கொலைசெய்து விடுவாரென்று யான நம்பி யசசந்தோந்து மகிழவேனென்று மொழிந்து முகூர்த்தகாலஞ் சிந்தையுற்றிருந்து பின்பு, பெருமாளையும நோக்கிக்கேட்டருளீர தோழரே ! அந்த வாலி மிகவுமசூரனும, சூரர்களைகொலைசெய்பவனும், உண்மையாகப புகழப்பட்ட பௌருஷமுடையவனும, சிறந்த பலமுடையோனும, போரில ஒருககாலும் தோலவியுறாதவனுமாகின்றனன் ; அவனுடைய செயல்களில ஒவ்வொன்றும தேவாசுரராலும, வியபபுறத்தக்கதாகின்றது ; அவைகளை நினைந்தேயான மிகவும அசசங்கொண்டு அவனுடன் போர்செய்யாமல் இந்த ரிசியமூகமலையைச சேர்ந்து வாழகின்றேன்; அந்த வாலி வெலலவொண்ணாதவனெனவும, மிகச சினமுடையவனெனவும, எண்ணியே இந்த இடத்தைவிட்டு நீங்காமலிருக்கின்றேன; இங்கே வாழகையிலும, அசசமுறறே யானாககாணினும அவனால ஏவப்பட்டவாகளோ என்று ஐயமுற்று நடுங்குகின்றேன ; இந்த அனுமான் முதலான நனமந்திரிகளினாலேதான நான் இன்புற்றிருககின்றேன; தேவரும அடியேனுக்குச சிறந்த தோழராக நேர்ந்தருளினீர ; தேவரும என்னுடைய சோகத்தை போககியருளத் திருவுளங்கொண்டிருக்கின்றீரென்பதையும் அறிவேன ; என்னுடைய தாபந்தீரும்படி இமையமலையைப் போலத் தேவரைத் தஞ்சமடைந்தேனாதலின், இனி யெனக்குக் குறையிலலை யென்பதையும் அறிவேன் ; ஆயினும், அந்தககொடிய வாலியின் பல பராககரமங்களைக கண்ணாரக கண்டவனாதலின், ஐயுறுகின்றேன ; தேவருடைய பல பராககரமங்களை யடியேன் நேராகக கண்டிலேனலலேனோ ? ஆதலின, யான் இவ்வண்ணம் மொழிகின்றேனே யனறி வேறில்லை ; அடியேன தேவரைப் பரீக்ஷை பாாக்கின்றேனென்றாவது, இகழகின்றேனென்றாவது, அசசமுறறுகின்றேனென்றாவது எண்ணியருளற்க ; அந்த வாலியின செயலகளினால் அடியேன இவ்வண்ணம் விண்ணபபம் செயகின்றேன் ; ராகவகுலதுரந்தரா ! தேவருடைய திருவாய்மொழியும, தீரமும், ஆகாரமும், இம்மூன்றுமே நீறபூதத நெருப்புப் போல திவ்விய தேஜஸ்ஸை தேவரிடத்தில் உளது என்பதை யறிவிககின்றன ; ஆதலின், வேறுவிதமாகத் திருவுளம் பறறற்க ; என்று விஜ்ஞாபனஞ் செய்தனா. இவ்வண்ணம் மஹாராஜா செயத விண்ணப்பத்தைப் பெருமாள் கேட்டருளிப் புன்னகைசெயது மஹாராஜரை நோக்கிக் கேளீர் தோழரே ! உமக்கு நம்முடைய திறமையில் நம்புதல இல்லையாயின நீர் நம்பும்படி செய்வோம பாரீரென்று அருளிசசெயது அங்கே கிடந்த அந்த துந்துபியின் காயத்தைத் தமது இடதுகால் கடடை விரலினாலசைத்துப் பத்துக்காதம் தூரம்போயச செல்லுமாறு எறிந்தருளினார். மஹாராஜர் அதனைக்கண்டும் நம்புதலுறாமல் பெருமாளை நோக்கித் தோழரே ! இந்த துந்துபியின் காயத்தை வாலி எறியுங்காலையில், இது புதியதாய் மாம்ஸங்களுடனும், இரத்தத்துடனும், தோலுடனும் சேர்ந்து

ஈரமாய் மிகவும் பாரமாயிருந்தது ; இப்போழ்தோவெனில், குருதி மாம்சங்களின்றி யுலர்ந்து எலும்புகள்மாத்திரம் மிகுந்து எளிதாகியிருக்கின்றது ; அன்றியிலே வாலி இதனை எறியுங்காலையில், அவனுடன் நெடுநேரம் போர்செய் திளைத்திருந்தனன். தேவர் இப்போழ்திளைப்பின்றி மகிழ்ந்து எறிந்தருளினீர் ; ஆதலின், 'இதனாலே தேவர் வாலியை விடச் சிறந்த பலமுடையீரென்று நமபுவதற்கிடமில்லை ; முன்பு, இது ஈரமாயிருந்ததற்கும், இப்போது உலர்ந்திருப்பதற்கும், கனத்தில வெகுவாக ஏற்றத்தாழ்வுண்டு, ஆதலின, தேவருடைய பலமே உயர்ந்ததோ ? அவனுடைய பலமே யுயர்ந்ததோ ? எனனும ஐயம் அப்படியே யிருக்கின்றதே யன்றித் தீர்ந்திலது ; ஆதலின், இந்த ஸாலமரங்களுள் ஒன்றினைத் தேவர் பிளந்தருள்வீராயின, அப்போது தேவருடைய பலம் விளங்கும் ; ஆதலின, இந்தக் கோதண்டத்தில் கணையைத் தொடுத்து விட்டருள்க; தேவரால எய்த இககணை இந்த மரத்தைப் பிளக்குமென்பதில சிறிதும ஐயமில்லை; ஆதலின, தேவர் ஆலோசனை செய்யற்க; இவ்வண்ணம் அடியேனுடைய வேண்டுகோளைச் செய்தருள்க ; ஒளிகளுள் கதிரவன்போலவும, மலைகளுள் இமயம்போலவும், நாலுகாலுடைய பசுக்களுள் சிங்கம்போலவும், வீரமுடைய மனிதர்களுள் தேவரே சிறந்தவராகின்றீர் ; இவ்வண்ணம் அடியேன் பிரதிஜ்ஞைசெய்து பிரமாணம் பண்ணுவேன; ஆதலின், இவ்வண்ணமே கிருபைசெய்தருள்க ; என்று வேண்டினர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில பதினொன்றாவது சருககம் முற்றிற்று.



## பன்னிரண்டாவது சருக்கம்.

பெருமாள ஸப்தஸாலங்களையும் பிளந்து மஹாராஜரை வாலியுடன் போர் செய்வித்துப பினபு பேதமதெரியாமையால் தோல்வியுற்றோடி வந்த அந்த மகாராஜருக்கு அடையாளங்கட்டி மீளவும் போர்செய்யத் தூண்டியருளியது.



இவ்வண்ணம மஹாராஜர் உரைசெய்த வாக்கியத்தைக்கேட்டருளிப் பெருமாள் கோதண்டத்தைத் திருக்கரத்திலேந்தி மஹாராஜர்க்கு நம்புதலுண்டாவதன்பொருட்டு அதில கூரிய கணை யொன்றினைத்தொடுத்து அந்த ஆச்சாமரங்களைக்குறித் தெய்தருளினர். அந்தக் கணை யுடனே ...ரால்கொண்டு புறப்பட்டு அம்மரங்களேழினையும் பிளந்துகொண்டு ...ன் தாழ்வரையையும் பிளந்து பாதாளத்திற்சென்று உடனே தனா

யைப் பிளந்துகொண்டு மேலெழுந்து பெருமாளுடைய அம்பறாத்தூணி யில் முன்போலச் சேர்ந்து திகழ்ந்தது; மஹாராஜா இதனைக்கண்டு வியப்படைந்து மகிழ்ந்து கைகளைக்கூப்பிப் பெருமாளைத் திருவடித் தொழுது பெருமாளை நோக்கி, ஸ்வாமி! ஸ்ரீசக்ரவர்த்தித்திருமகனான தோழரே!—

సేంద్రానపిసురాన్సర్వాన్ త్వంబాణైః పురుషర్షభ
సమర్థస్సమరే హన్తుం కింపునర్వాలినంప్రభో
యేనసప్తమహాసాలా గిరిర్భూమిశ్చదారితాః
బాణేనైకేనకాకుత్స్థ స్థాతాతేకోరణాగ్రతః.

ஸேந்த்ராநபிஸுராந்ஸர்வாந் த்வம்பாணை: புருஷர்ஷப
ஸமர்த்தஸ்ஸமரே ஹந்தும் கிம்புநர்வாலிநம்ப்ரபோ.
யேநஸப்தமஹாஸாலா கிரிர்ப்பூமிச்சதாரிதா:
பாணேநைகேநகாகுத்ஸ்த ஸ்தாதாதேகோரணாக்ரத:.

தேவர் ஓரே பாணத்தினாலே ஏழு ஆச்சாமரங்களையும், தாழ்வரை யையும், பூமியையும் பிளந்து கணப்பொழுதில் மீளவும் அம்பறாத்தூணி யில் அந்தக் கணையைச் சேர்க்கும் திறமையுடையீராதலின், தேவேந்தி ரன் முதலாகியுள்ள தேவர்களெல்லோரையும் போரில் பாணங்களினால் அடித்து வெற்றிகொள்ளவும் வல்லீர் எனின் இந்த வாலி யொருவனை வெற்றிகொள்ளீரோ? போர் முகத்தில் தேவர்க்கெதிராக நிற்பவன் யாவ னுளன்; இப்போதுதான் யான் ஐயந்தீர்ந்தேன்; துன்பத்தையும் துறந் தேன்; மிகவும் மகிழ்ந்தேன்; இந்திர வருணர்களுக்கு நிகராயுள்ள தேவரே அடியேனுக்குத் தோழராயினமையின், யாது குறையுளது; என்னை மகிழ்விப்பதன்பொருட்டு அந்த வாலியை இப்பொழுதே கொலை செய்தருள்க; அவன் எனக்கு உடன்பிறந்தோனாயினும், பகைவே யல்லனோ? இதன்பொருட்டுக் கைகூப்பி வேண்டுகின்றேன்; என்று மொழிந்தனர். பெருமாளும் அம்மொழியைக்கேட்டருளி மஹாராஜனை மகிழ்ந்து தழுவிக்கொண்டு இளையபெருமாளுடைய அபிப்பிராயத்தை யும் அறிந்து மஹாராஜனை நோக்கித் தோழரே! இங்கிருந்து கிஷ்கிந் தைக்குச் செல்வோம் வாரீர்; நீர் முன்சென்று வாலியைப் போர்வதன் பொருட்டுக் கூவியழையீரென்று அருளிச்செய்தனர். உடனே எல்லோ ரும் விரைவாகக் கிஷ்கிந்தைசேர்ந்து அடர்ந்திருந்த பெருந்துள்ள மரங் களில் மறைந்திருந்தனர். பின்பு, மஹாராஜர்மாத்திரம் முன்சென்று சிங்கநாதஞ்செய்து வாலியைப் போருக்கழைத்தனர். வானெங்கும் நிறை யும்படி யொலித்த அந்த வொலியை வாலிகேட்டு மிகச் சினமுற்று வெய்யோன் அஸ்தகிரியினின்றும் புறப்பட்டாற்போலே பு

ஹாராஜரைக்கிட்டிப் போர்ந்தனன். பின்பு, வாலி சுக்ரீவர்களிருவருக்
ம் பெருஞ்சண்டைவிளைந்து விண்ணிடையில் புதனுக்கும், அங்காரகனு
நம்போலக் கோரமாக நடக்கையில், வச்சிரங்கள்போன்ற கரதலங்களி
லும், கைக்குத்துகளினாலும், இவ்விருவரும் ஒருவாகொருவர் அடித்
க்கொண்டு ஓயாமல் போர்கையில, பெருமாள கடாக்ஷிதது இவ்விரு
நம் ஒருவர்க்கொருவர் பேதமின்றியிருந்தமையின, இவன் வாலி இவர்
ஹாராஜரென்று அடையாளந்தெரியாமல் அசுவினி தேவர்கள்போலவே
ணயாக விளங்கினமையின், தோழனுக்கே ஒருவேளை தீங்கு நேருமோ
யன்று ஐயுற்றுக கணைதொடுக்கத் திருவுளமுறாமல் மயங்கி நின்றருளி
ர்; அததருணத்தில மஹாராஜா வாலியினால் அடிக்கப்பட்டுத்
மைப் பாதுகாத்தருளவல்ல பெருமாளைக் காணமல அச்சங்கொண்
டாடி மீளவும் ரிசியமூகம் சேர்ந்து, மெயமுழுதுங் குருதிபடிந்து வாடி
ங்கி அடிகளினால மெயமுறிந்து வாலியினால் வெருட்டப்பட்டு பெருங்
டடினிடைசோந்து ஒடுங்கி யிருந்தனர். வாலியும் வெருட்டிக்கொண்டு
து மதங்கமாமுனியின் சாபத்தினாலே அவ்வனத்திடையில் செல்லா
ம மீண்டு மஹாராஜரை நோக்கி, அடா சுக்ரீவா! இன்று தப்பி
ட்டனை; மீளவும், என்கையில அகப்படாமல் போவாயோ? ஆருக;
ன்று மிதட்டிவிடடுக கிஷ்கிந்தை வந்து சேர்ந்தனன். பெருமாளும்
ளயபெருமாளுடனும், சிறியதிருவடியுடனும், மீண்டெழுந்தருளி
ஹாராஜரிருக்குமிடஞ் சேர்ந்தருளினர். மஹாராஜரும் பெருமாளைக்
னடு நாணததினாலே தலைகுனிந்து, தரையை நோக்கிக்கொண்டு
வாமி! நீ போய வாலியைச சண்டைக்கழையென்று அருளிசசெய்தனு
விட்டுத் தேவர் பராக்கரமத்தை நன்கு விளங்கசசெய்தீர்; தேவர்
ன்னை வாலியைக்கொணடு கொலவித்ததனால யாது செய்யப்பட்ட
யிற்று; அபபோதே நான் வாலியைக் கொலைசெயயேனென்று உண்
மயை யுரைத்துவிடுவீராயின், நான இங்கிருந்து சென்றிரோனே?
வ்வண்ணம் எனனை வருநதசசெய்வது தகுமோ? என்று சினமும்,
பருங்கொண்டு மொழிந்தனர். பெருமாளும் இவர் இவ்வண்ணந் தீனங்
காண்டுரைசெய்ததைக் கேட்டருளி யவரை நோககி, மஹாராஜரே!
னத்தைத்துறந்து யான இப்போது வாலியைக் கொலைசெய்யாமல
ந்த காரணத்தை யுரைசெயக் கேளீர; அலஙகாரத்தினாலும், வேஷத்தி
லும், உயரம் பருமன்களாலும, நடையினாலும், கண்டவொலியினாலும்,
ந்தியினாலும், கண்ணோககினாலும், மொழிகளாலும், தோள்வலியி
லும், நீரும் வாலியும் ஒரேரீதியாயிருந்தமையின், அடையாளந்தெரி
டன் உமக்கொருக்கால் தீங்குநேர்ந்துவிடப் போகிறதேயென்று அச்
ண்டு குறிதப்பாமல் பாயவல்ல கூரியகணையைத் தொடுத்திலேன்;
வசரப்பட்டு பாணத்தை விட்டுவிடுவேனாகில், நம்மிருவருக்கும்
ாசம்நேருமே? யான் அறியாமையினால் பாணத்தை விடு

தனும், அதனால் நீர் துன்புறுவீராயின், எல்லோரும் என்னை மடையனெனவும், இளமையனெனவும் இகழ்ந்து பழிப்பாரகளே ?

దత్త్వాభయవధోనామ పాతకంమహదుచ్యతే.

தத்தாபயவதோநாம பாதகமமஹதுச்யதே.

ஒருவனுககு அபயங்கொடுத்து நமபுவித்துப பினபு அவனைக் கொலை செய்வதென்பது, கொடுமபாவமென இகழ்ந்துரைககப்படுகினறதன்றே? அன்றியும், யானும், இலக்ஷ்மணனும், சீதையும், யாங்களெள்லோரும் உமக்கே அதீனமாகின்றோம் ? உம்மையே தஞ்சமடைந்திருககினறோம் ? ஆதலின், நீரோ எங்களுக்குத் தஞ்சம், அஞ்சற்க ; மீளவுஞ்சென்று போர் செய்க ; இனி முன்போல இகழற்க ; இந்த க்ஷணத்திலேதானே வாலியொரு கணையினால அடிபபட்டுத தரையிலவிழந்து புரளககாண்பீர் ; ஆனால், நீர் ஒரு அடையாளம மாத்திரம் செயதுக்கொணடு செல்லுக ; அதனால் யான் உம்மை யறிந்துகொணடு வாலியைக கொலைசெயவேன் ; என்று அருளிசசெயது தேறறி இளையபெருமாளைக கடாக்ஷித்து அடா லக்ஷ்மணா ! இந்த மலாந்த கஜபுஷ்பியென்னுங கொடியைப் பேர்த்து இந்த மஹாராஜருடைய கழுத்தில அடையாளமாகக கட்டுமென்று கட்டளையிட்டருளினா ; உடனே இளையபெருமாள அந்த மலையின் தாழவரையில முளைதது முழுதலும மலர்கள் மலாந்த அந்தக் கொடியைக கொணர்ந்து மஹாராஜா கழுத்தில் கட்டினா.

సతయాశుశుభేశ్రీమాన్ లతయాకణ్ఠసక్తయా
విపరీతఇవాకాశే సూర్యోనక్షత్రమాలయా.

ஸதயாசுசுபேஸ்ரீமான லதயாகணடஸகதயா
விபரீதஇவாகாசே ஸூர்யோநக்ஷதரமாலயா.

அந்தமஹாராஜரும் இளையபெருமாளாலே தமது கண்டத்தில் கட்டப்பட்ட அந்தப் பூங்கொடிமாலையினாலே கதிரவன் தான நடுவிலிருக்கவிலும், சுற்றிலும் ஒளிகுன்றாமல் விளங்கும் விணமீன்களினாலே சூழபட்டு விளங்கின லெப்படியிருககுமோ அப்படி விளங்கினா இவ்வண்ண மஹாராஜர் அந்த மாலையினால், பலாகைகளின் நிரையினால, சந்தியின் சிவப்பினால் சிவந்த மேகம்போல விளங்கிப பெருமாளருளிசசெயலின்ப பெருமாளிளையபெருமானுடன் கூடி மகிழ்ந்து கிஷ்கிந்தையை நோக்கி புறப்படடனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் பன்னிரண்டாவது சருக்கம்
முற்றிற்று.

---

சிலர் சூரியன என்பதற்கு விண்மீன்களினிடையில் விளங்குகிற சந்திர பொருளுரைத்து ( தாராமத்ய கதச்சந்த்ரஸ்ஸூர்ய இத்யபிதீயதே ) என்று

## பதின்மூன்றாவது சருக்கம்.

### மஹாராஜர் கிஷ்கிந்தைக்குப் போகும்வழியில் ஸப்தஜனர்களி னுடைய ஆசிரமத்தின் மகிமையைப் பெருமா ளுக்கு விண்ணப்பஞ்செய்தது.



அநந்தரம் தர்மாத்துமாவான அந்தச்சக்கரவர்த்தித்திருமகனார் இளைய பெருமாளுடன் அந்த ரிசியமூகமலையினின்றும் வாலியினாலே பாதுகாக்கப் பட்ட கிஷ்கிந்தையை நோக்கி, எழுந்தருளத் திருவுளங்கொண்டு கோதண் டத்தையும் திருக்கரத்திலேந்திக் கூரிய கணைகளையும் கையிற்பிடித்து அம் பறாத்தூணிகளையுங் கட்டிக்கொண்டு புறப்பட்டருளினர். அப்போது முத லில் மஹாராஜரும் அவரைத்தொடர்ந்து, இளையபெருமாளும் அவரைத் தொடர்ந்து, பெருமாளும் அவரைத்தொடர்ந்து, சிறியதிருவடியும் அவரை த்தொடர்ந்து, நளனும் அவனைத்தொடர்ந்து, நீலனும் அவனைத்தொடர்ந்து, தாரனும் சென்றுகொண்டு, மலர்ந்து தழைத்த பற்பல மரங்களையும், தெளி ந்து குளிர்ந்து பெருகுகின்ற நதிகளையும், மலைகளையும், குகைகளையும், கற் பிளவுகளையும், வீடுபோன்ற கந்தரங்களையும், சிறந்த மலைச்சிகரங்களையும், சுனைகளையும், கானாறுகளையும், வைடூரியமணிகள்போல நின்மலமாயுள்ள இலை களையும், மலர்ந்த தாமரைகளையும்பொருந்தித் திகழும் மடுக்களையும், குளங் களையும், அன்னம், நாரை, ஸாரஸம், வஞ்சுளம், நீர்க்கோழி முதலிய நீர்ப் பறவைகள் ஒலித்தும், மெல்லிய இளம்புற்களை மேய்ந்து அச்சமின்றித் திக ழும் மான்கூட்டங்கள் நிறைந்தும் திகழுமிடங்களையும், வெண்மைநிறமுள்ள இரண்டு தந்தங்களையுடைய யானைகள் குளங்களிலிழிந்து கலக்கியும், கரை யை மோதியும், மகிழ்வதையும், சில யானைகள் மாமுகில்கள்போலவும் உருவங்கொண்டு திரியும் மாமலைகள்போலவும் மதமேறித் திரிவதையும், மற்றுமுள்ள பசுபக்ஷிகளையுங்கண்டு மகிழ்ந்துகொண்டே விரைவாகச் சென்றனர்கள். இவ்வண்ணம் யாவரும் செல்லுகையிலே அடர்ந்திருண்ட தொருகாட்டைப் பெருமாள் கண்ணுற்று மஹாராஜரை நோக்கித் தோழரே! இந்தக் காடு கொண்டல்போலக் கறுத்திருண்டுயர்ந்திருக்கின்றது; சுற்றி லும் மேகமாலைபோன்ற வாழைத்தோட்டங்களினால் சூழப்பட்டுளது; இஃது யாருடையது; என்னபெயருடையது; இதனை யறியவேண்டு

---

[illegible] கற்பித்து வியாக்கியானம் செய்தனர்கள். அந்த வசனமும் இந்த கோசத்தி [illegible]ன்று குறித்திலர்; எங்கும் கண்டிலோம்; வெயயோனருகில விண்மீன்கள் விங்கா [illegible]லின், இவ்வண்ணம் பொருள்கூறவேண்டுமென்பதே அவர்கள் கருத்து, ஆனால் [illegible]ங்காரசாஸ்திரத்தை யவர்கள் ஆராய்ந்திருப்பார்களாயின், இவ்வண்ணம் கற்பியா [illegible]யார்கள்; ஆனால் அதற்கு என்னவழியெனின், அபூதோபமாலங்காரமென

மென மிக விருப்பங்கொண்டிருக்கின்றேன் ; நன்றாக உரைசெய்கவென்று வினவியருளினர். மஹாராஜரும் அதுகேட்டு நடந்துகொண்டே பெருமானை நோக்கிக் கேட்டருளீர் தோழரே! மிகவும் விசாலமுடையதும், இளைப்பைப்போக்குவதும், மாஞ்சோலை பூஞ்சோலைகள் அடர்ந்ததும், மதுரமான காய் கனி நீர்களை யுடையதுமாகிய இந்த ஆசிரமம் ஸப்தஜனரென்னும் மாயோகிகளினுடையது ; ஏழுவர்களாதலாலே ஸப்தஜனரென்னப்பட்ட அம்முனிவர்கள் இவ்விடத்திலே தலைகீழாக நின்றும், நீரினுறைந்தும், ஏழுதினத்திற்கொருதரம் காற்றைப் புசித்தும் தவஞ்செய்து கொண்டிருந்து அநேகமாயிரம் வருஷம் வாழ்ந்து கடையில் சரீரத்துடனே பொன்னுடு சேர்ந்தனர்கள். இந்த அம்மாதவர்களின ஆசிரமமாதலின் இந்திரன் முதலிய தேவர்களாலும் அழித்தற்கரியது ; அதனுள்ளே பறவைகளும், மற்றுள்ள வனத்திலுறையும் விலங்குகளும் புகுகின்றில ; யாரேனும் அறியாமல் அதனுளளே புகுவாராயின், மீண்டு வாராகள் ; அவ்விடத்திலே இப்போதும் நிருதத கீதவாத்தியங்களின தொனியும், மணியணிகளினொலியும் கேட்கப்படுகின்றன ; திவ்வியகந்தத்தின் பரிமளமும் வீசுகின்றது ; கார்ஹபத்தியம், ஆஹவநீயம, தக்ஷிணம் என்னும் முத்தீகளும் எரிகின்றன ; அவற்றின் புகையும் மேலெழுகின்றது ; அப்புகை மாடப்புறாக்களின் கண்டம்போன்ற நிறமுடையதாகி மரங்களின சிகரங்களைச் சூழ்ந்து பற்றுவதுபோலத் திகழ்கின்றது; அப்புகைகளினாலே சூழப்பட்ட இந்த மரங்களும் மஞ்சுலாவும் வைடூரியமலைகளைபோல விளங்குகின்றன ஆதலின், அந்தப் பஞ்சஜனமாமுனிவர்களினபொருட்டு இளையபெருமானுடன் விநயம்பூண்டு கைகூப்பித் தலைவணங்கி வந்தனஞ்செய்தருள்க அம்முனிவர்களின்பொருட்டு யார் வந்தனஞ்செய்கின்றனர்களோ? அவர்களுக்குச சரீரத்திலே ஒரு நோயும் உண்டாகாது ; முன்புள்ள நோய்களும் தீர்ந்துவிடுமென்று கூறினர். பெருமானும் இளையபெருமானுடனே அம்மொழியைக்கேட்டு அம்முனிவர்களைக்குறித்துப் பிரணமஞ்செய்தருளினர். பின்பு, மஹாராஜர் முதலிய வாநரர்களும் பிரணமஞ்செய்தனர்கள். உடனே யாவரும் புறப்பட்டு நெடுந்தூரம் நடந்து வாலியினாலே பாதுகாக்கப்பட்ட கிஷ்கிந்தையைக்கிட்டி சுற்றிலும்பார்த்து ஆயுதங்களைக் கையிலேந்தி வாலியைக் கொலைசெய்யும்படி நிச்சயம்கொண்டு நின்றனர்கள்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் பதின்மூன்றுவது

முற்றிற்று.

## பதினான்காவது சருக்கம்.

### மஹாராஜர் பெருமாளால் ஏவப்பட்டு வாலியைப் போருக்கழைத்தது.

அந்தப் பெருமாள் இளையபெருமாள் வானரர்கள் எல்லாரும் கிஷ்கிந்தையைச்சேர்ந்து அடர்ந்த காட்டில் மறைந்துகொண்டிருக்கையில், மஹாராஜர் எங்கும் சுற்றிப்பார்த்து வாலிமீதுள்ள பகையினாலும், கோபத்தினாலும், ஆகாசங்கூட பிளக்கும்படியாகக் காற்றினால் மோதப்பட்ட காளமேகம் போலக் கர்ஜித்து, பாலசூரியனைபோன்ற காந்தியும், மதமேறிய சிங்கம் போன்ற நடையும் கொண்டவராகியும், மனதில் அச்சமகொண்டு பெருமாளை நோக்கி, தோழரே! வாலி எனனும் வலையினால் சூழப்பட்டும், பொன்னாற்செய்த தோரணகோபுரம் கட்டப்பட்டும, மணிமாடங்களினால சூழப்பட்டுமுள்ள கிஷ்கிந்தையை வந்து சேர்ந்துவிட்டோம்; இனி வாலியைக் கொலைசெய்வேனென்று தேவரால்செய்யப்பட்ட பிரதிஞ்ஞையைப் பயனுள்ளதாகச் செய்தருளுக என்று வேண்டினர். பெருமாள் அதுகேட்டு மகாராஜரை நோக்கி, கேளீர் தோழரே! கஜபுஷ்பி என்னும் இந்தக கொடி லக்ஷ்மணனாலே அடையாளமாக உமது கழுத்தில் கட்டப்பட்டிருக்கின்றமையின், இந்தக் கொடியினால் உற்பாதகாலத்தில் சூரியன் விண்மீன்களினால் சூழப்பட்டு விளங்குவதுபோல நீர் விளங்குகின்றீர்; ஆதலின், இப்பொழுது ஓரே பாணத்தினால் வாலியினிடத்திலுண்டாகிய உம்முடைய அச்சத்தையும், பகையையும் போக்கி விடுவேன்; உமக்கு அண்ணன் எனப்பட்ட அந்தப் பகையாளியை என் கட்புலனாகச்செய்வீர்; அவன் என கண்ணில் படுவானாகில், உடனே இறந்து தரையில் விழுந்து துகளபடிந்து துடிப்பானேயன்றி, மீளவும் பிழைத்துச் செல்லான; பின்பு, யான் திறமை அற்றவனென்றாவது, கபடமுற்றவனென்றாவது நினைககமாட்டீர்; ஆதலின், இப்பொழுது இகழற்க; உமககெதிராகவே சப்தசாலங்களையும ஒரு கணையினால் பிளந்தேனன்றோ? அவவண்ணமே வாலியையும் இறந்தனனெனவே எண்ணுக;—

అనృతంనోక్తపూర్వమ్మే వీరకృచ్ఛ్రేపితిష్ఠతా
ధర్మలోభపరీతేన నచవక్ష్యేకథఞ్చన.

அந்ருதம்நோக்தபூர்வம்மே வீரக்ருச்ரேபிதிஷ்டதா
தர்மலோபபரீதேந நசவக்ஷ்யேகதஞ்சந.

நான எவ்வளவு சங்கட்டத்தை அடைந்திருக்கையிலும், பொய்மொழி மொழிந்திலேன்; தர்மத்திற்கஞ்சி இனிமேலும் பொய்யுரையேன்; ஆதலின், என் பிரதிஜ்ஞையை நிறைவேற்றுவேனேயன்றி, தவிரேன்; நீர் ஐய

முரறக; நீர் விரைவாகசசென்று வாலி உடனே புறப்படடுவரும்படிக்யாக வீரவாதம் செயக; வெற்றியுடையவனும், தோளவலியினுல் செருக்குற்ற வனும், உம்மிடத்தில் தோலவியடையாதவனுமாதலின், உம்முடைய தொனியைக்கேட்டுப் பொறுமைகொண்டு வாலி உடனே எதிர்த்து வருவான்; பகைவர்களின் வீரவாதத்தைச சூரர்கள் ஒருககாலும் பொறுத்திரார்கள். அந்த வாலி தன்பலத்தை நன்கு அறிந்தவனுதலின், ஸ்திரீகளின் நடுவிலிருந்து உம்முடைய தொனியைக்கேட்டு உடனே எதிர்த்து வருவானென்று அருளிச்செய்தனர். மஹாராஜர் அதுகேட்டு மகிழ்ந்து ஆகாசம் பிளந்து இறும்படியாகக கர்ஜஜனைசெய்கையில், நீதியற்ற இராஜனுடைய தோஷத்தினுல அலைகின்ற குலமகளிர்களபோலப் பசுக்கள அச்சமுங்கொண்டு நடுங்கின; போரில் அடிபட்ட குதிரைகளபோல மானகளும பயந்தோடின; நல்வினை தீர்ந்த விண்மீன்களபோலப் பறவைகளும் தரையில் வீழ்ந்தன; மஹாராஜர் மறுபடியும் உற்சாகத்தினுல சௌரியம வளர்ந்து பெருங்காற்றினுல மேலெழுந்த திரைகளையுடைய பெருங்கடலபோலவும், வானமெங்கும் நிறைந்த நீருண்ட கொண்டலபோலவும கர்ஜ்ஜனைசெய்தனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் பதினனகாவது சருக்கம்
முற்றிற்று.

## பதினைந்தாவது சருக்கம்.

வாலி மஹாராஜர் தொனியைக்கேட்டு தான் சினங்கொண்டு புறப்படு
கையில், தனனைத் தடுத்துப பலவிதமாக இதமுரைத்த
தாரையை நிராகரித்துப புறப்பட்டது.

இவ்வண்ணம் மஹாராஜர் செய்த வீரவாதத்தை அந்தப்புரத்தில் தாரை முதலிய பெண்களுடன கூடியிருந்த வாலிகேட்டு உடனே காமமும் மதமும் தணிந்து பொறுமைகொண்டு சினமூண்டு கேதுவினுல் பிடிககட்பட்ட சூரியன்போல ஒளிகுன்றி, சினத்தினுல் எழுந்தெரிகின்ற தீபோல ஜொலித்து, யானையினுல் கலக்கி வேருடன களைந்த தாமரைபொருந்திய பெருமடுப்போலக் கலங்கி விரைவாக எழுந்து அடிவைப்புக்களினுல் தரையை பிளப்பவன்போலப் புறப்படுகையில், தாரை கண்டு அச்சமும் நடுக்கமும்கொண்டு அன்பினுல் தழுவிக்கொண்டு அவனை நோக்கி, கேளீர் என் பிராணநாயகரே! ஆற்றுவெள்ளம்போல மேலெழுந்த இச்சினத்தை அணிந்த மாலையைப்போலக் காலையில் துயிலுணர்ந்தபின் போக்கியருள்க; இவில் போர் செயற்க; இந்தச் சுக்கிரீவனுடன் பொழுது விடிந்த பின்பு

போர் செய்க ; இதனல் பகையாளிக்கு ஏற்றமும், தேவர்க்கு ஒரு தாழ்வு மிலலை ; இப்பொழுது ஆராயாமல் தேவர் விரைவாகசசெல்வது எனக்குத் தகுமெனத்தோற்றுது ; இவவண்ணம் யான தடுத்துரைப்பதற்குக் கார ணத்தையும கூறுகின்றேன கேளீர ; அநதச் சுக்கிரீவன இன்றையதினமே வந்து உம்மைப போருககழைத்து உம்முடன் போர்செயது உம்மால் சிதற அடித்து வெருட்டப்பட்டு ஓடிவிட்டனனல்லனே ? அவன மறுபடியும் இப் பொழுதே வந்து உம்மைப போருக்கழைப்பதென்பது, சநதேகிப்பதற்கு இடமாகின்றது ; அவனுடைய காஜஜனையினல் மதமும், செருக்கும், மன உறுதியும், ஆடம்பரமும், மிக விளங்குகின்றன; இதற்குச் சிறந்த காரண மிருக்கவேண்டும் ; இவன் இப்பொழுது சிறந்த சகாயத்துடன் வந்தனனே யன்றி, சகாயமின்றி வந்தானென்று நான் நம்புகின்றிலேன் ; அதினல்தான் அவன் இவவண்ணம் கர்ஜ்ஜனைசெயகின்றுன். சுக்கிரீவன இயல்பாகவே திறமையுடையவனும், புத்தியுடையவனுமாதலின், அவன் நன்கு பரீக்ஷை செயயாமல அறபரைத் துணையாகக்கொண்டு இங்கு வரமாட்டான ; அன்றி யிலே குமாரனை அங்கதன் ஒருசங்கதி கேளவியுற்று என்னுடன் சொல்லி யிருக்கின்றுன்; அதை உரைசெயவேன் கேளீர ; அஙகதன் காடெங்கும் திரிகையில், அன்புள்ள சாரர்கள அவனைக்கண்டு திருஅயோத்திக்கு அரசா யிருந்த தசரதசக்கரவர்த்தியாருக்குத்திருக்குமாரர்களும், சௌரியமுடைய வர்களும, போரில் பிறரால வெல்லவொண்ணுதவர்களும், இக்ஷுவாகு குலத்தில் பிறந்தவர்களும், ஸ்ரீராமலக்ஷ்மணரகளெனனும் திருநாமங்க ளுடையவர்களுமாகி இரணடு குமாரர்கள் சுக்கிரீவனுடன் நட்புக்கொணடு அவனுக்குப்பிரியமசெய்வதனபொருட்டு வந்திருக்கின்றனர்களென்று உரை த்தனர்களென அங்கதனவந்து சொன்னன. ஆதலின், உமது தம்பிக்கு துணையாகவந்த அந்த ஸ்ரீராமன் போரில கொடுமைகொண்டு பிறரை வெல் லுந்திறமையுற்று ஊழிகாலத்தீபோல ஜொலிபபவரும், நல்லோரகளுடைய தாபத்தைத்தீர்க்கத்தக்க தன்மைகொணட விருக்ஷமபோன்றவரும, துன்புற் றுத்தஞ்சமென அடைந்தவரகளுககுச சிறந்த தஞ்சமாகியவரும், கோருப வர்களுக்கு புகலிடமாகியவரும், புகழுக்குறைவிடமும், ஞானசொரூபியும், ஞானமுடையவரும, பிதிரவாக்கியபரிபாலனம் செயபவரும, பற்பல தாதுக களுக்கு இமயமலைபோலப பறபல நற்குணங்களுக்குப் புதையலிடமாகிய வரும் ஆகின்றனர் ; ஆதலின, மகாத்துமாவும், வெல்லவொண்ணுதவரும், போரில் அளவிடத்தகாத தோளவலியுற்றவருமாகிய அந்த ஸ்ரீராமனுடன் நீர் பகைகொள்வது தகுதியறறது ; ஆதலின, யான் ஒருவாக்கியம் உரைசெய்கின் றேன் ; இகழாமலும், சினமுறாமலும் கேட்டு அவவண்ணமே செய்தருள்க; இப்பொழுது சுக்கிரீவனுடன் போர்செயயாமல் அனபுடன அழைப்பித்து இளவரசுப்பட்டம் கட்டுவித்தருளக ; சிறந்த பலமுடைய அவனுடன் போர்செய்வது தகாது ; பகையைத் தூரத்தில் துறந்து ஸ்ரீராமனுடன் தோழமைகொண்டு தம்பியிடத்தில் அன்புகூர்ந்திருப்பது இப்பொழுது

உமக்குத்தகுமென எண்ணுகின்றேன்; சுக்கிரீவன் உமக்குத் தம்பியாதலால் அன்புசெய்யவேண்டியது தர்மமன்றோ? அவன் அங்கிருக்கினும், இங்கிருக்கினும், எவ்விதத்திலும் அவன் தம்பியேயன்றோ? சோதரனுக்கு நிகரான பந்து உலகத்தில் ஒருவனுமிலன்; ஆதலால், தானமானுதிகளாலே அவனுக்கு மரியாதைசெய்தருளுக; அவனும் பகையைத்துறந்து உம்முடன் சேர்ந்து மகிழ்வான்; ஆதலின், இப்பொழுது சுக்கிரீவனுடன் நேசங்கொள்வதை விட உமக்கு வேறு உய்யும் வகையில்லை; எனக்கு இதஞ்செய்யவேண்டுமென்று உமக்கு இஷ்டமுள்ளதாயினும், யான் உமக்கு இதமே உரைப்பேனென்று நீர் அறிந்திருப்பீராயினும், என்னுடைய வேண்டுகோளுக்கு இரங்கி இவ்வண்ணம் செய்தருள்க; யான் உரைத்த இம்மொழி இதமெனவே நம்புக, நீர் சென்ற வழியே செல்லற்க; கோபத்தை நீக்குக; தேவேந்திரனுக்கு நிகரான பராக்கிரமத்தையுடைய கோசலராஜன் திருக்குமாரனான ஸ்ரீராமசந்திரனுடன் நட்புக்கொள்வது தகுமல்லது, பகைகொள்வது தகாது, என்று இவ்வகையாகத் தகைந்து வேண்டி இதமுரைத்தனள். வாலி அவ்வாக்கியத்தைக்கேட்டும் மரணகாலங்கிட்டினமையின், மதிகெட்டு அவ்வாக்கியத்தை நலமெனவுகந்து உடன்பட்டிலன்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் பதினைந்தாவது சருக்கம் முற்றிற்று.

---

## பதினாறாவது சருக்கம்.

வாலி தாரைக்குச் சமாதானமுரைத்துப் புறத்தில் வந்து மஹாராஜருடன் போர்செய்து பெருமாள் எய்த பாணத்தினால் அடிபட்டுத் தரையில் விழுந்தது.

---

இவ்வண்ணம் வேண்டி உரைசெய்த முழுமதிபோன்ற முகத்தையுடைய தாரையை வாலி மிரட்டி அவளை நோக்கி, அடி நாயகி! என்னுடன் கடும்பகைகொண்ட இந்த சுக்கிரீவன் வீரவாதம் செய்து என்னைப் போருக்கு அழைக்கையில், யான் அச்சங்கொண்டு அடங்கி அதனை எவ்வண்ணம் பொறுத்திருப்பேன்;—

అధర్షితానాం శూరాణాం సమరేష్వనివర్తినామ్
ధర్షణామర్షణం భీరు మరణాదతిరిచ్యతే.

அதர்ஷிதானாம் சூராணாம் ஸமரேஷ்வநிவர்த்திநாம்
தர்ஷணாமர்ஷணம் பீரு மரணாததிரிச்யதே.

அடி அச்சமுடையவளே! பிறரால் வெல்லப்படாமலும், போர்முகத்தில் பின் செல்லாமலுமிருக்கிற சூரர்களுக்குப் பகைவனுடைய வீரவாதத்தை கேட்டுப் பொறுத்திருப்பதென்பது, மரணமுறுவதினும் சிறந்ததன்றோ? ஆதலின், போர்வதின்பொருட்டுக் கூவுகின்ற சுக்கிரீவனுடைய கூக்குரலைக்கேட்டு யான் ஒருபொழுதும் பொறுத்திரேன்; ஸ்ரீராமர் என் விஷயத்தில் தீங்குசெய்வாரென்று நீ துன்புறற்க; தர்மமுணர்ந்தவரும், நன்றி அறிந்தவருமாகிய அவர் என்விஷயத்தில் ஏன் தீமைசெய்வார்; ஆதலின் பெண்களுடன்கூடி நீ திரும்பிச் செல்லுக; ஏன் மீளவும் பின்றொடர்ந்து வருகின்றனை; என்னிடத்தில் உனக்குள்ள அன்பும், ஆசையும், இதினால் நன்கு வெளியிடப்பட்டது; ஆதலின், நீ அச்சம் தீர்ந்து செல்லுக; யான் சுக்கிரீவனுடன் போர்ந்து அவனுடைய கொழுப்பை அடக்கி வருவேன்; அவனை உயிர்மாளக் கொல்லேன் [illegible]; போரில் மரங்களாலும், குத்துகளாலும், என்னால் பீடிக்கப்படு[illegible] அவன் ஓடிவிடுவான்; அவன் என்னுடைய காலத்தையும், [illegible] பொறுத்திரான்; அடி அன்புடைய நாயகி! புத்தியினால் [illegible] அன்பும் நன்கு வெளியிடப்பட்டது, என்னுடைய [illegible] ஆணையிட்டுத் தடுக்கப்படுகின்றனை, ஆதலின், ஜயத்துடன் மீளுக, யான் போரில் அவனை வெற்றிகொண்டு மீளுவேனென்று [illegible] யதனன். தாரை அதுகேட்டு மெதுவாக அழுதுகொண்டு வாலியை [illegible] வலம்செய்து மந்திரங்களினால் நலங்களை வேண்டி வாழ்த்திப் [illegible]ன் சோகத்தினால் மயக்கம் கொண்டு அந்தப்புரம் சேர்ந்தனள் [illegible], வாலியையும் சீறி நச்சரவம் போலப் பெருமூச்செறிந்து புறத்தில் வந்து நாற்புறங்களிலும் சுற்றிப் பார்த்துப் பொன்னிறவண்ணமமைந்த சுக்கிரீவன் ஓடிவருவதைக் கண்டு ஆடையை இறுக்கிக்கட்டி முஷ்டியை மேல் எடுத்துக்கொண்டு அவனுக்கெதிராக ஓடி அவனை நோக்கி, அடா சுக்கிரீவா! என்னுடைய இந்த குத்தானது உன் பிராணனை உண்டு செல்லப்போகின்றது; என்று உரைத்துக் கையை ஓங்கினன். மஹாராஜரும் அதுகேட்டுச் சினம் கொண்டு அடடா என்னுடைய இந்தக் குத்துதான் உன்னுயிரைப் பருகப் போகின்றது; என்று சொல்லிக்கொண்டிருக்கையிலே வாலியினால் குத்தப்பட்டு அருவியைப்பெருக்குகின்ற மாமலைபோலக் குருதியைப்பெருக்கிச்சினமதிகரித்து, ஆச்சாமரத்தை வேருடன்களைந்து வேகமாகச் சுழற்றி அடித்தனன். வாலியும் அதனால் அடிபட்டு வச்சிராயுதத்தினால் அடிபட்ட மாமலைபோலத்திகைத்து நின்று கடலில் மிகவும் பாரத்தையுடைய ஓடம்போல அழுந்தினன். இவ்வண்ணம் சிறந்த பலமுடையவர்களும், கருடனுக்கு நிகரான வேகமுடையவர்களும், அச்சமுறத்தக்க சரீரமுடையவர்களும், சந்திரசூரியரைப்போலக் காந்தியையுடையவர்களுமாகிய இவ்விருவரும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டும், சமயம் பார்த்துக்கொண்டும் பொருதனர்கள். அப்பொழுது முறையே வாலி

பலத்தினால் உயர்ந்தும, மஹாராஜர் தாழ்ந்தும் ஆகுகையில, மஹாராஜர் வாலியினால் அடிபட்டு சினமதிகரித்து மரங்களினாலும், கிளைகளினாலும், மலைச்சிகரங்களினாலும், வசிரம்போல் கொடிய நகங்களாலும், குத்துகளாலும், முழங்கால்களாலும், காலகளினாலும், கைகளினாலும், பலமுறை வாலியைச சிதற அடித்தனா. இவ்வண்ணம இருவரும ஓயாமல் விருத்திர வாசவர்கள்போலப போர்செயது குருதிதோய்ந்து மேகங்களபோலக கர்ச்சனைசெய்து அடாகையில, மஹாராஜா இளைத்து நாற்றிசைகளையும் அடிக்கடி நோக்கிக்கொண்டு வருந்துவதைப் பெருமாள கடாக்ஷித்து வாலியைககொலைசெயய சங்கலபித்து, நச்சரவமபோன்ற ஓர் கணையைக் கோதண்டத்திலதொடுத்து காலாந்தகன்காலசக்கிரத்தைப்போல அக்கோதண்டததைபிழுத்தருளுகையில்,நாணின ஒலியினால் சிறந்த பறவைகளும, விலங்குகளும, ஊழிகாலத்தில்போல அச்சமும், மோகமும கொணடு ஓடின ; உடனே அககணை பெருமாளால எயயப்படடு வசிரமபோல ஒலித்துப் பேரிடிபோலஜொலித்து வாலியின் மார்பில பாய்ந்தது. உடனே மதங்கொண்ட வாலியும, அதனால அடிபட்டு ஆசுவயுஜமாசத்தில் பூரணிமைதிதியில உயர்த்திக கட்டபபட்ட இந்திரதுவஜம்போலசசாய்ந்து தரையில்விழுந்து மோகமடைந்தனன். இவவணணம புருஷோத்தமரான ஸ்ரீராமசந்திரன ஊழிகால யமன போன்றதும, பொன்கட்டமைந்ததும, பகைவரைக்கொலவதுமாகிய அந்தசசிறந்த பாணத்தைச சிவன் முகத்து நின்றும் புகையுடன் பயின்ற தீயைபபோல விடுத்துத திகழ்ந்தனர். அந்த இந்திரன் குமாரனை வாலியும் அக்கணையினால அடிபட்டுக குருதி [illegible] மலர்ந்த அசோகமரம தீயினால எரிககப்பட்டது போலவும, இந்திரதுவசம் சாயக்கப்பட்டதுபோலவும தரையில விழுந்து மூர்ச்சை [illegible] கிடந்தனன்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் பதினாறாவது சருக்கம் முற்றிற்று.



## பதினேழாவது சருக்கம்.

வாலி பெருமாளை இகழ்ந்தது.



இவ்வண்ணம் பெருமான் எயதகணையினால் அடிபட்ட [illegible] வேரில் வெட்டுண்டமரம்போலவும், [illegible] இந்திர[illegible]போலவும் தரையில் விழுந்துகிடக்[illegible], இ[illegible] [illegible] அப்பூதலம் இகழ்ந்திலது; அவன் அடிபட்டுக் [illegible]

தும், இந்திரனலடிக்கப்பட்ட வயிரமிழைத்த பொன்னணிமாலையின் மகி மையினலே அவனுடைய காந்தியும் அழிந்திலது; பலபராக்கிரமங்களும் குறைந்தில; உயிரும் மாயந்திலது; வீரனன அவ்வாலி அம்மாலையின லே சந்தியின் செம்மையினலே சூழப்பட்ட மேகம்போல விளங்கினமை யின, அவனுடைய காந்தி அம்மாலையிலும், மெயயிலும், ஸ்ரீராமபாணத்தி லுமாக மூவகையாகப பிரிந்து தோனறிற்று; வாலிமிககொடியனயினும் ஸ்ரீராமனல் விடுக்கப்பட்டபாணம அவனுக்கு நற்கதியை உண்டுபண்ணி ற்று; இவ்வண்ணம் அடிபட்டு தரையில் வீழந்து தீ அடங்கிய நெருப்பு போலவும், புண்ணியம தீர்நதவுடன விண்ணுலகினின்றும் நழுவிவிழுந்த யயாதிபோலவும், ஊழிகாலத்தில் தரையில் வீழ்ந்த சூரியனபோலவும் திகழ்பவனும், மிகவும சூரரான பெருமாளைககணிசித்துப் பார்ப்பவனும், மகேநதிர மலைபோல அசைக்கவொணணுதவனும், மகேந்திரன்போல வலலவொண்ணுதவனும், பொன்மாலை அணிந்தவனும், சிங்கத்திற்கு நிக ரான மார்பை உடையவனும், நீணடுருணட புஜங்களை யுடையவனும், ஆ கிய அந்த வாலியைப பெருமாள் இளையபெருமாளுடன்கடாக்ஷித்து, அரு கில எழுந்தருளினா. வாலியும மோகந்தெளிந்து பெருமாளையும், இளைய பெருமாளையுமபார்த்து, இனியதும்,கொடியதும்,தர்மமுற்றதுமாக மொழி ந்திகழலுற்றனன். கேட்டருளீர் ஸ்ரீராமசந்திரரே! தேவர் தசரதச்சக்கி ரவர்த்திகளுக்குத்திருக்குமாரரும், தர்மமுடையோரென்று யாவராலும்புகழப் பட்டவரும், இனியரூபமுடையவரும், நற்குலத்தில பிறந்தவரும், சத் துவகுணமுடையவரும், சிறந்த பல பராக்கிரமங்களை யுடையவருமாயி ரும் யான் பராஙமுகனுகத் தமபியுடன் போா செயதுகொணடிருக்கையில், தேவர் இவ்வண்ணம கூரியகணையை மார்பிலநாட்டி என்னை வருத்தியது தர்மமா? சூரருக்குக கருமமா? இதனல் தேவருககு யாதுபயனுண்டு? தேவர் அருளுடையீரெனவும்,உயிர்களுக்கிதஞ்செயபவரென்வும்,பிறரைத் துயருறச்செயயாப பணபுடையீரெனவும், காலமறிந்தவரெனவும், மேற் கொண்ட விரததததைத்தவறுமல முடிப்பவரெனவும. தேவருடைய குணங் களை யாவரும் புகழ்கினறனராகளே!—

దమశ్శమక్షమాధర్మో ధృతిస్సత్యంపరాక్రమః
పార్థివానాంగుణారాజన్ దణ్డశ్చాప్యపరాధిషు

தமசசமக்ஷமாதர்மோ த்ருதிஸ்ஸதயமபராககரமஃ
பார்த்திவாநாம்குணாராஜன தண்டசசாப்யபராதிஷு.

அரசர்களுக்கு [illegible] படக்குவதும, ஐம்புலன்களையும் வெல்லு வதும், [illegible] பொறுப்பதும், தருமம் தவறுமலிருப் பதும், [illegible] தவறுகளைப்போர்செய்து வெல்லுவ

தும், பிழைசெய்தவரைத் தண்டிப்பதும், இயல்பாயுள்ள குணங்களல்லவோ?
அக்குணங்கள் யாவும் தேவரிடத்தில் குடிகொண்டிருப்பதையும் நம்பியே
யான் தாரையினால் தடைசெயயப்பட்டும் அவளை நிராகரித்து வந்து சுக்கி
ரீவனுடன் போர்செய்தேன்; தேவரை நான் காணுமலிருக்கையிலேயும்,
பிறருடன்போர்செய்துகொண்டு ஊக்கமற்றிருக்கையிலேயும், என்மீதுதே
வா கணையை எயயீரென்றே எண்ணியிருநதேனே யல்லது, இவ்வண்ணம்
மனதில் கெடுமதிபூண்டும், புறததில தருமவேஷங்கொண்டும், புல்லெழுநத
பாழ்ங்கிணறுபோலவும், நீறுமூடிய நெருப்புபோலவும, இவ்வண்ணம் தீ
மைசெய்வீரென்று நான் நினைததிலேன்; தேவருடைய நாட்டிலாவது நக
ரத்திலாவது ஒருக்காலும் யாருக்கும தீங்குசெய்திலேன்; தேவரையும்
இகழந்திலேன்; பிழையறற என்னையுன் இவ்வண்ணம்கொலைசெய்தீர்; காய
கனி கிழங்குகளைப்புசித்துக் காட்டில் திரிந்துகொண்டிருககும் வானரனன
நான தேவரையும் எதிர்த்திலேன்; பிறருடனும போர்ந்துகொண்டிருந்
தேன்; இததருணத்தில என்னைக் கொலைசெய்தல் தகுமோ? அன்றியில் பற்
பல நூல்களையும் கசடறக்கற்று தருமவேஷத்தையும மேறகொண்டு,
இவவணணம் உமமைபபோல எவன்தான் தீசசெயலபுரிவான; ஸ்ரீராமா!
நற்குலத்தில பிறந்து, தாமரையைப் போனெனவும் புகழ்பெற்று, கொடு
மைகொண்ட நீரோன் [illegible] ஆலேகினறீர்; இனியமொழி
மொழிதல், பொருளளித்தல, அருள் [illegible], தருமம், சததியம், தீரம்,
தோள்வலி, பிழைசெய [illegible] தண்டித்தல் என்னும் இக்குணங்கள்
அரசர்களுக்கு முக்கியமானவை அல்லவோ? அன்றியிலே யான் காட்டில்
அலைபவன்; நீர் நாட்டில் உறைபவர், யான் காய்கனி உண்பவன்; நீர்
அறுசுவை உண்பவர்; யான வானரன்; நீர் நரர்கோமான்; இவ்வண்ணம்
தேவர்கரும் எனககும் ஏற்றத் தாழவு மிகவுமுளது? உலகத்தில் ஒருவர்க்
கொருவர் பகை நேருவதற்கு மண், பொன, பொருளகளுள் ஏதே
னும் ஒன்று காரணமாகவேணடும்; எனனுடன் நீர பகைகொள்வதற்கு
யாதுகாரணமுளது; யான் உண்ணும கனிகளில் உமக்குவிருபபமுளதோ?
நீதியும் அருளும நல்வேந்தரின தருமங்கள், நீதியின்மையும் கொடுமை
யும் அற்பராஜரின் தர்மம், இவவண்ணம் ராஜதர்மம் ஒன்றுக்கொன்று
சம்பந்தமின்றி, தனித்தனி விளங்குமேயன்றி, அவர்கள் ஒவ்வொரு
வேளை ஒவ்வொருவிதமாக மனமபோனபடி செய்யார்கள். தேவரோ
வெனில், காமத்தை முதன்மையாக வுடையவரும், சினம்பூண்டவரும்,
உறுதி யற்றவரும், ராஜநீதி யற்றவரும், [illegible] கணைதொடுப்ப
வருமாகின்றீர்; தேவர்க்குத் தர்மத்திலும் [illegible]; நீர் இராஜனுமி
ருந்தும், நிலைகெட்டு ஐம்புலன்களினுல [illegible]; காகுத்தா!
நீர இவ்வண்ணம் நீதி தப்பி [illegible]
சூரர்கள் திரளுகையில், அ[illegible]

రాజహా బ్రహ్మహా గోఘ్న శ్చోరః ప్రాణివధే రతః
నాస్తికః పరివేత్తా చ సర్వే నిరయగామినః.
సూచకశ్చ కదర్యశ్చ మిత్రఘ్నో గురుతల్పగః
లోకం పాపాత్మనామేతే గచ్ఛంత్యత్ర న సంశయః

ராஜஹாப்ராஹ்மஹாகோகனச் சோரஃப்ராணிவதேரதஃ
நாஸ்திகஃபரிவேத்தாச ஸர்வேநிரயகாமினஃ.
ஸூசகச்சகதர்யச்ச மித்ரக்னோகுருதல்பகஃ
லோகம்பாபாத்மனாமேதே கச்சந்தேத்ரஸம்சயஃ.

வேந்தனைக் கொலைசெய்தவனும், வேதியனைக் கொலைசெய்தவனும், பசுவைக் கொன்றவனும், பிறர் பொருளைப் பறித்தவனும், உயிர்களைக் கொலைசெய்பவனும், வேதத்தையும், தெய்வத்தையும், பெரியோர்களையும் பழிப்பவனும், தமையன் விவாஹஞ்செய்துகொள்ளாமலிருக்கையில், தான் விவாஹம் செய்துகொள்பவனும், கோளுரைப்பவனும், செல்வமிருந்தும் கொடைசெய்யாத லோபியும், மிகக் கொடிய நரகில் வீழ்ந்து நெடுங்காலம் வருந்துவர்கள். அன்றியும், என் தோலும் உடுப்பதற்குரியதன்று; என் எலும்புகளும், மயிர்களும், ஒரு காரியத்திற்கும் உரியனவல்ல; என்னுடைய மாமிஸமும் உண்ணத்தக்கதன்று;—

పంచ పంచనఖా భక్ష్యా బ్రహ్మక్షత్రేణ రాఘవ
శల్యకశ్శ్వావిధో గోధా శశః కూర్మశ్చ పంచమః

பஞ்சபஞ்சநகாபக்ஷ்யா ப்ராஹ்மக்ஷத்ரேணராகவ
சல்யகச்வாவிடோகோதா சசஃகூர்மச்சபஞ்சமஃ.

ஐந்து நகங்களையுடைய ஜந்துக்களுள் சல்யகமென்னும் சுவாவித்தென்னும் பன்றிகளும், முசல், ஆமை, உடும்பு ஆகிய இவ்வைந்து ஜந்துக்களே அரசர்கள் புசிக்கத்தக்கவைகளல்லவோ? தர்மமுணர்ந்தோர் குரங்காகிய என்னுடைய தோல்களையும், எலும்புகளையும், தொடவும் தோடார்கள்; என் மாமிசத்தையும் புசிக்கார்கள்; இவ்வண்ணம் ஒன்றுக்கும் உபயோகமற்ற ஐந்து நகமுடைய என்னை ஏன் அடித்தீர்; தாரை யான் வருகையில் என்னைத்தடுத்துப் பலவாறுகவேண்டினள். யான் அறியாமையால் அவளை மீறி இங்கெய்தி உம்மால் அடிக்கப்பட்டேன்; கற்புடைய குலமகளிற்கு துர்த்தனை [illegible] போல மிகச் சிறந்த இப்பார்மகளிற்கு நீர் தக்க வேந்தரல்லீர்; [illegible] இவ்வண்ணம் தீமை செய்பவரும், பிறரை வருத்தியே [illegible], பொய்யரும், கபடமுடையவருமாகிய [illegible] எவ்வண்ணம் தோன்றினீர்; அறக்க [illegible] ஒழுக்கமுடையதும், தர்மவழி

யைககடாது நடப்பதும், தர்மமென்னும் அங்குசத்தை மீறியதுமாகிய ராமன் என்னும் மதயானையினால் அனியாயமாகக் கொலைசெய்யப்பட்டேனே ? தீமை தருவதும், தகுதியற்றதும், இகழப்பட்டதுமாகிய இத்தீச்செயலைப் புரிந்து பெரியோர்களால் இகழப்படுவீரோ ? ஊக்கமுற்றிருந்த எனமீது வெளியிட்ட இத்தோள்வலியைப் பெண்டாட்டியைப் பறித்துக்கொண்டோடிவிட்ட பகைவர்கள்மேல செல்லவிடக்காணேனே? இராஜகுமாரரே ! எனக்கெதிரில் நின்று என்னுடன் போர்செய்வீராயின், இப்பொழுதே நீர் யமதர்மராஜனைக் காணுமாறு செய்துவிட்டு இருப்பேனே ? அவ்வண்ணமன்றி, பதிகிடந்து மறைந்திருந்ததினாலன்றோ ? நானும்மால் மதத்தினால் மோகங்கொண்டு மயங்கிக்கிடக்குமானிடன் மதயானையினால்போல கொலைசெய்யப்பட்டேன்; நீர் சுக்கிரீவனைத்தேடி வந்த விஷயத்தை முன்னமே எனக்கு அறிவித்திருப்பீராகில, அன்றுதினமே பிராட்டியைத்தேடி எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து அளித்திருப்பேன் ; இராவணனை பொருட்டன்றோ ? சுக்கிரீவனுடன் தோழமைகொண்டு எனனைக்கொலைசெயதீர, அசசெயதியை எனனுடன் உரைத்திருப்பீராகில, அந்த இராவணன் கழுத்தில் கைகொடுத்து கெட்டித்தள்ளிக் கொணர்ந்தாவது, போரில கொலைசெய்தாவது, உம்மை மகிழ்வித்திருபபேன்; இவன் பிராட்டியைக கடலிடையிலாவது, பாதாளத்திலாவது, விண்ணுலகிலாவது மறைத்திருந்தாலும் தேவருடைய கட்டளையினால் மதுகைடபாசுராகளினால் பாதாளத்தில் தகையப்பட்ட அசுவதரி என்னும் வேதத்தை ஸ்ரீமகாவிஷ்ணு அயகிரீவ அவதாரம் செயது கொணர்ந்தது போல் யானும் பிராட்டியாரைக் கொணர்ந்து அளித்திருப்பேன் ; சுக்கிரீவன் யான் இறந்தபின் என்னுடைய ராஜியத்தைப் பெறுவதென்பது தகுதியே?தேவர் என்னைத் தருமமின்றி இவ்வண்ணம் கொலைசெய்ததென்பது மாத்திரம் மிகவும் தகுதியற்றது; உலகினில் பிறந்தவன் இறபபதென்பது இயல்பே ? நீர் இவ்வண்ணம் மறைந்து அடித்தது தகாதது ; இதற்குத் தக்க பதிலுளதாயின் உரைசெய்யீர் ; என்று இவ்வண்ணம் உரைசெய்து ஸ்ரீராமபாணம் மார்பில் நன்றாக தாட்டியிருக்கின்றமையின், வருந்திவாய் உலர்ந்து பெருமானைப்பார்த்துக்கொண்டே பேசாமலிருந்தனன்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் பதினேழாவது சருக்கம்

முற்றிற்று.

# பதினெட்டாவது சருக்கம்

பெருமாள் வாலிக்கு சமாதானம அருளிசசெய்ததும், வாலி அபராதக்ஷாபனம செயதுக்கொண்டதும.



இவ்வண்ணம் இனிமையாகவும், அறம்பொருளுடையதாகவும், வாலி உரைசெய்த வாக்கியத்தைப் பெருமாள கேட்டருளியும, ஒளியிழந்த சூரியன்போலவும், மழைபொழிந்து நீரற்ற மேகமபோலவும், எரிந்தணைந்த அக்கினிபோலவும், தரையில வீழ்ந்திருககினற அவ்வாலியை நோக்கி, தர்மார்த்தசகிதமாக அருளிசசெய்யலுற்றனர். அடா வாலி ! அறம பொருள இனபங்களையும், லோகாசாரத்தையும, நன்கறியாமல இளமையினால நீ நமமை இவவணணம ஏன் இகழகினறனை; புத்தியுடையோர்களும் ஞானத்தினாலும, வயதினாலும, மூத்தோாகளும் ஆகிய ஆசிரர்களுடன் பழகாமலும், அவர்களைக் கேளாமலும, குரங்கின் தனமையினால் நீ நம்மை நோக்கி, இவ்வண்ணம் உரைசெயவது தகுமா காடு கடல் மலைகளுடன் கூடிய இப்பார்முழுதும் இக்ஷுவாகுகுலத்தில் பிறந்த எமக்குரியதேயாதலின், இதிலுளள துஷ்டாகளைச சிக்ஷிப்பதும், சிஷ்டர்களை ரக்ஷிபபதும், நமது தொழிலேயனறோ ? இப்பொழுது இந்த பூமியை தர்மமுணாந்தவனும், சததியம் தவறாதவனும, கபடமறறவனும், தர்மகாமார்த்தங்களை அறிந்தவனும, நீதி தவறாதவனுமாகிய பரதன் அரசாக்ஷி செய்து வருகிறான. நீதியும், துஷ்டநிககிரகமும், பொய்யாமையும், தோள்வலியும், எவனிடத்தில் நிலைத்திருககின்றனவோ ? எவன தேசகாலங்களை யறிந்தவனோ ? அவனே இராஜனாககடவன். நாமும மற்றும் பல இராஜர்களும் அந்த பரதன்பொருடடு தர்மஙகளைப பாதுகாப்பதற்காகப் பார்முழுதும் திரிந்துகொண்டு தர்மங்களை வளர்த்து வருகிறோம். மிகவும் தர்மமுள்ள அந்த பரதன் பார்முழுதும் பாதுகாத்து வருகையில், எவன்தான் தர்மத்தைத்துறந்து நடப்பான்; அந்த இக்ஷுவாகுகுலத்தில் பிறந்த நாமும் தர்மத்தை நிலைநிறுத்துவதன்பொருட்டு பரதனுடைய ஆஜ்ஞையை முன்னிட்டு தர்மத்தைத் துறநதவர்களை விதிபின்படி தண்டனைசெய்து வருகிறோம்; நீ தர்மத்தைத்துறந்தவனும், தீச்செயலுடையவனும், காமத்தை முதன்மையாகக்கொண்டவனுமாதலின், நீ இராஜமார்க்கத்திலிருக்கின்றனையா ? நீதிதப்பியன்றோ இருக்கின்றனை;

జ్యేష్ఠోభ్రాతాపితాచైవ యశ్చవిద్యాంప్రయచ్ఛతి
త్రయస్తేపితరోజ్ఞేయా ధర్మ్యేపథిహివర్తినః.
యవీయానాత్మనఃపుత్ర శ్శిష్యశ్చాపిగుణోదితః
పుత్రవత్తేత్రయశ్చిన్త్యా ధర్మశ్చేదత్రకారణం.
సూక్ష్మఃపరమదుర్జ్ఞేయ స్సతాంధర్మఃప్లవంగమ
హృదిస్థస్సర్వభూతానా మాత్మావేదశుభాశుభం.

*ஜ்யேஷ்டோப்ராதாபிதாசைவ யச்சவித்யாம்ப்ரயச்சதி*

*த்ரயஸ்தேபிதரோஜ்ஞேயா தர்ம்யேபதிஹிவர்த்திந꞉.*

*யவீயாநாத்மந꞉புத்ரச்ச ஷிஷ்யச்சாபிகுணோதித꞉*

*புத்ரவத்தேத்ரயச்சிந்த்யா தர்மச்சேதத்ரகாரணம்.*

*ஸூக்ஷ்ம꞉பரமதுர்ஜ்ஞேயஸ் ஸதாந்தர்ம꞉ப்லவங்கம*

*ஹ்ருதிஸ்தஸ்ஸர்வபூதாநா மாத்மாவேதசுபாசுபம்.*

தமையன், தந்தை, நூல்களைக் கற்பிப்பவன் இவர்கள் மூன்றுபெயர்களும் பிதாவென்னப்படுவார்கள்; தம்பி, மகன், சிஷ்யன், இம்மூவரும் புத்திரர்களென்னப்படுவார்கள். தர்மமென்பது மிகவும் நுட்பமானதலின், அது நன்குணர்ந்த பெரியோர்களுக்கும் அறியவொண்ணாததாகும்; சர்வபூதங்களுடைய சுபாசுபங்களையும் சர்வாந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனே அறிகிறான்; நீ அற்பத்தனமுடையவனாய் அற்பவான்களுடன் கூடிய பிறவிக்குருடர்களுடன் கூடின பிறவிக்குருடன்போல யாதுசெய்யவல்லை; யான் நீ கேட்டதற்கு பதில் நன்குரைப்பேன்; நீ சினத்தையே மேற்கொண்டு இவ்வண்ணம் இகழ்ற்க; யான் உன்னைக் கொலைசெய்ததற்குக் காரணமுரைப்பேன் கேளாய்; நீ தர்மத்தைத்துறந்து மகனுக்கு நிகரான தம்பியின் மனையாளான ருமையைச்சேர்ந்து புணர்ந்து மகிழ்வதுமன்றித் தம்பியையும் வெருட்டினை; ஆதலின், தர்மத்தைத்துறந்து காமத்தையே மேற்கொண்டு தம்பி மனையாளுடன் சேர்ந்த பாவத்திற்காக உனக்கு இந்த சிக்ஷைசெய்யப்பட்டது; தர்மத்தையும் துறந்து உலகவழக்கத்தையும் மீறி மனதுபோனபடிநடப்பவனுக்குத் தண்டனைசெய்வதைவிட வேறு சிக்ஷையில்லை; யான் நற்குலத்தில் பிறந்த இராஜனாதலின், நீ செய்த இப்பிழையைப் பொறுத்திரேன்;—

ఔరసీంభగినీంవాపి భార్యాంవాప్యనుజస్యయః
ప్రచరేతనరఃకామా త్తస్యదణ్డోవధస్స్మృతః.

*ஔரஸீம்பகினீம்வாபி பார்யாம்வாப்யநுஜஸ்யய꞉*

*ப்ரசரேதநர꞉காமாத் தஸ்யதண்டோவத꞉ஸ்ம்ருத꞉.*

யாவனொருவன் காம அவஸ்தையினால் பெண்ணையும், தங்கையையும், தம்பி மனையாளையும் சேருவானோ? அவனுக்குக் கொலைசெய்வதே சிக்ஷையென்று விதிக்கப்பட்டிருக்கின்றது; இப்பொழுது பரதன் அரசனாகவும், யாங்கள் அவன் கட்டளையின்படி நடப்பவர்களாகவுமிருக்கையில, தர்மத்தைத் துறந்த உன்னை எவ்வண்ணம் உபேக்ஷைசெய்திருபபோம்; பரதன் துஷ்டர்களைச் சிக்ஷைசெய்துகொண்டு உலகத்தைப் பாதுகாதது வருகிறான்; யாங்களும அவன் கட்டளையை விதியாகக் கொண்டு உன்னைப்போனறவர்களைத் தண்டிப்பதன்பொருட்டுத் திரிந்து கொண்டிருககின்றோம்; அனறியிலே, சுக்கிரீவருக்கும எமக்கும் லக்ஷ்மணனுககும எமக்கும்போல அழியாத்தோழமைஉணடாயிறறு; அபபொழுது உனனைக் கொலைசெய்து இராஜ்ஜியத்தையும், மனைவியையும், உன்னுடன் சோப்பேனென்று பிரதிஜ்ஞையும் செயதுகொடுத்திருககிறேன; ஆதலின, யான செயத பிரதிஜ்ஞையைத் தவிர்வேனோ? ஒருககாலும் தவிரேன்; ஆதலின, இது முதலாயுளள சிறநத தர்மமான பல காரணங்களினால் இப்பொழுது உன்னைக் கொலைசெயதேன்; ஆதலின, இதனைத் தருமமெனவே அறிக; அன்றியிலே, மகாராஜர் எனக்குத தோழரானமையின், அவருககுச சதருருவான நீ எனககும் சதருருவலலையோ? இதனாலும் உனனைக கொலைசெய்தது ராஜதர்மமே யாகும்; மனுவினால கூறபபடட இரணடு சுலோகங்களையும, நீ கேட்டிலையோ? அதனைக்கேட்டுணாவாயாகில், யான செயதது தர்மமெனவும, உனககுமது நறகதி விளைப்பதெனவும், நன்கு அறிவாய; பாபம் செயதவர்கள் ராஜர்களால் செய்யப்பட்ட சிக்ஷையை யடைந்து, அதனால பாபம தீாந்து, நல்வினை செய்தவர்கள்போலவே நின்மலராகி நற்கதிபெறுவார்கள்; களவுசெயதவர்களும் ராஜனால சிக்ஷைசெய்யப்பட்டாலும், விடுவிக்கப்பட்டாலும், பாவத்தினறும் விடுபடுவார்கள; பாபத்திறகுத்தக்கபடி ராஜா சிக்ஷைசெயயானாகில, அந்தப் பாபத்தை இவனே அடைவான; முறகாலையில் ஒரு பௌத்தசன்னியாசி உன்னைப்போலவே கொடிய பாபம செயகையில், என் முன்னோர்களாகிய மாந்தாதா இவ்வண்ணமே கொடிய சிக்ஷைசெயதிருககிறார்; மற்றும் பல ராஜர்களும், இதராகளும், உன்னைப்போல கொடிய பாபம செய்கையில், அபபோதுளள நலவேந்தர்கள அதற்கு பிராயசசித்தமாகக கொடிய தண்டனை செய்தாாகள். அதனால் அப்பாவங்களும் தீர்ந்தன; ஆகையால், நீயும் என்னால் சிக்ஷைசெய்யப்பட்டவனாகி பாவம் தீர்ந்து நறகதிபெறுவாய்; ஆதலின, தாபமுற்று வருந்தற்க; அன்றியில், வேறொருகாரணத்தையும் உரைககினறேன் கேளாய; அதைக் கேட்டபின், சினமும் துயாமும் கொள்ளாய்; நீ அறியாமையினாலும, இளமையினாலும், என்னை இகழ்ந்ததற்கு நான் சிறிதும் சினமுறுகின்றிலேன்;—

వాగురాభిశ్చపాశైశ్చ కూటైశ్చవివిధైర్నరాః
ప్రతిచ్ఛన్నాశ్చదృశ్యాశ్చ గృహ్ణంతిసుబహూన్మృగాన్॥
ప్రధావితాన్వావిత్రస్తాన్ విస్రబ్ధాంశ్చాపినిష్ఠితాన్
ప్రమత్తానప్రమత్తాన్ వానరామాంసార్థినోభృశం॥
విధ్యంతివిముఖాంశ్చాపి నచదోషోఽత్రవిద్యతే
యాంతిరాజర్షయశ్చాత్ర మృగయాంధర్మకోవిదాః॥

வாகுராபிச்சபாசைச்ச கூடைச்சவிவிதைர்நரா:
ப்ரதிச்சன்னாச்சத்ருச்யாச்ச க்ருஹ்ணந்திஸுபஹூன்ம்ருகான்.
ப்ரதாவிதான்வாவித்ரஸ்தான் விஸ்ரப்தாம்ச்சாபிநிஷ்டிதான்
ப்ரமத்தாநப்ரமத்தான்வா நராமாம்ஸார்த்திநோப்ருசம்.
வித்யந்திவிமுகாம்ச்சாபி நசதோஷோத்ரவித்யதே
யாந்திராஜர்ஷயச்சாத்ர ம்ருகயாந்தர்மகோவிதா:.

மனிதர்கள் மறைந்தாவது, எதிரிலாவது இருந்து வலைகளினாலும், கயிறுகளினாலும், மற்றும் பற்பல கபடச்செயல்களினாலும், பலவகை விலங்குகளையும் பிடிக்கிறார்கள். அவைகள் ஓடிக்கொண்டிருந்தாலும், அச்சமுற்றிருந்தாலும், நம்பி உட்கார்ந்திருந்தாலும், ஊக்கமுற்றிருந்தாலும், ஊக்கமற்றிருந்தாலும், யாராமல் பராக்காயிருந்தாலும், மாமிசத்திற்காகவாவது, வேடிக்கையாகவாவது, அவைகளைக் கொலை செய்கிறார்கள். இது இராஜர்களுக்குத்தருமமேயன்றிக் குற்றமாகிறதில்லை; தர்மமுணர்ந்த பற்பல ராஜரிஷிகளும், இவ்வண்ணம் வேட்டையாடி இருக்கிறார்கள். ஆகையால், யான் உன்னைக் கணையினால் அடித்தேன்; நீ என்னுடன் போர்செய்யாவிடினும், பிறருடன் போர்செய்துகொண்டிருந்தாலும், நீ குரங்கேயாதலின், உன்னை எவ்வகையிலும் கொலைசெய்தது குற்றமே ஆகாது; ராஜர்கள் பிறர்க்கரிய தர்மத்தையும், இல்வாழ்க்கையையும், இன்பத்தையும் கொடுப்பவர்களாதலின், அவர்களைப் பீடிப்பதும், இகழ்வதும், அவர் கட்டளையைத் தவிர்ப்பதும், பிரியமில்லாத மொழிகளை மொழிவதும், தகுதியற்றது; தேவர்களே இராஜர்களாகப் பூலோகத்தில் அவதாரம் செய்திருக்கிறார்களல்லரோ? இவ்வண்ணம் யான் தொல்லையாயுள்ள தருமத்தில் ஊக்கங்கொண்டு தருமப்பிரகாரம் செய்த என்னை நீ மாத்திரம் தருமத்தை யறியாமல் சினத்தையே மேற்கொண்டிவ்வண்ணம் இகழ்ந்தனையேயன்றி, வேறில்லை; என்றிவ்வண்ணம் பெருமாள் அருளிச்செய்த வாக்கியங்களை வாலி முற்றுஞ்செவியுற்று நன்காராய்ந்து பெருமாள்மீது சிறிதும் தருமக்குறைவைக்காணாமல் அறியாமையினால் *இவ்வண்ணம் பெருமானை இகழ்ந்துரை செய்துவிட்

டேனேயென்று மனம் வருந்திப் பெருமாளை நோக்கிக் கைகூப்பிக் கேட்டருளீர் புருஷோத்தமரே !—

యత్త్వమాత్థ నరశ్రేష్ఠ తదేవం నాత్ర సంశయః
ప్రతివక్తుం ప్రకృష్టే హి నాపకృష్టస్తు శక్నుయాత్ ||

*யதவமாததநரசரேஷ்ட தசேவம்நாதரஸமசய:*
*பாதிவகதுமபரகருஷடேஹி நாபகருஷடஸதுசகனுயாத.*

தேவர் அருளிசசெய்த வாக்கியங்கள் தேவர் அருளிசசெயதபடி தருமங்களே யாகின்றன ; இவ்விஷயத்தில் சிறிதேனும் ஐயமிலது ; உயாந்தவாகளிடத்தில் தாழந்தவன் தகுந்த பதிலுரைசெயய வல்லவனுகு வானே ? ஒருபொழுதுமாகான் ; ஆதலின, அடியேன் முனபு, தேவர் விஷயத்தில் அறியாமையினுலே அயுக்தமாகவும், தருமமறறதாகவும், பிரியமலலாததாகவும், தேவரை இகழ்ந்துரைததேன; அந்த அபராதத்தை யும் பொறுத்து உகந்தருளக ; தேவர் தத்துவங்களை யுணமையாக அறிந்தவரும், உலகஙகளுககு இதஞ்செயபவருமாதலின், தேவருடைய புத்தி ஒருவன செய்த பாவங்களை யறிநது அதற்குத்தக்கபடி சிக்ஷை செய்வதில் தெளிவுறறிருககினறது ; அருளாழியம்மானே ! இவ்வண்ணம நற்செயல்களை ததுறந்தும, தீசசெயலகளைப் புரிந்தும் கெட்டழிந்த அடியேனுடைய அபராதங்களைப் பொறுத்தருளினேனென்று அன்பு கூர்ந்து அருளிசசெயது அடியேனுடைய அசசத்தைத்தீர்த்து அடியேனைப் பாதுகாத்தருளக ; சுவாமி தீனதயாளு ! நான் இறந்துவிடுகிறேனே என்று என்னைககுறித்தும், இனிய மனைவியான தாரையைக்குறித்தும், அன்புளள பந்துக்களைக்குறித்தும சோகமுற்றிலேன் ; மிக்க நற்குண முடையவனும, பொனனுறசெயத தோளவளைகளை யுடையவனுமாகிய அங்கதனைக்குறித்தே மிகவும் சோகத்தை அடைகிறேன்; அவன் என்னைக் காணுமல பிறபபுமுதல் அருமையாக வளர்க்கப்படடமையின், மிகவும் சோகமடைந்து நீர்வற்றிய தடாகமபோல் உலர்ந்து வருந்துவானன்றே ? அவன இளமையுடையவனும், நூல்களைக் கற்காமையின நிலையுறாத புத்தி யுடையோனும், ஒரே புத்திரனுமாகையால, அவனைத தேவர் பாதுகாத்து அளித்தருளல்வேண்டும் ; சுக்கிரீவனிடத்துப்போலவே அவனிடத்திலும் சரியான அருள்செய்து ரக்ஷிததலவேண்டும ; தேவரே ஒன்றைசசெய்வதற்கும், தடுப்பதற்கும், தண்டிப்பதற்கும், காபபதற்கும் வல்லவர் ; ஸ்ரீபரதாழ்வானிடத்திலும், இளையபெருமாளிடததிலும, சுக்கிரீவனிடத்திலும், தேவர்க்கு எவ்வளவு அருளுளதோ ? அவ்வளவு அருள் அங்கதனிடத்திலும் வைத்தருள்க ; என்மீதுளள பகையினுல் சுக்கிரீவன் தாரையை வருத்தாமலிருக்குமாறு பாதுகாத்தருளக ; தேவருடைய அனுக்கிரகத்திற்குப் பாத்திரனுகித் தேவருடைய திருவுள்ளத்திற்கு இசைந்தபடி

இருப்பவர்களே அரசாக்ஷிசெய்யத்தக்கவர்களாவார்கள்; தேவரீரை எதிர்ப்பவர்கள் நெடுங்காலம் வாழார்களென்பதை அடியேன் அறிவேனாகிலும், தேவரீர் திருக்கையினால் கொலைசெய்யப்பட்டு நற்கதி பெறவேண்டுமென்று நிச்சயங்கொண்டே தாரை பலவாறாகத் தடைசெய்யினும் கேளாமல் வந்து சுக்கிரீவனுடன் போர்செய்தேன்; என்று இவ்வண்ணம் வேண்டி உரைசெய்து ஆயுளமாளும்காலங்கிட்டினமையின், மொழிவதற்குத் திறமையின்றி, பேசாதிருந்தனன். பெருமாளும் அப்பொழுது அவனை நோக்கிக் கேளாய வானரர் கோமானே! நீ அங்கதன்விஷயமாகச் சோகமுறற்க; எம்மையும் தர்மமறிக் கொலைசெய்தோமென்று எண்ணற்க; நீயும் இறந்துவிடுகிறேனேயென்று அஞ்சற்க; உன்னுடைய பாபத்தைப்போக்கி உன்னை நற்கதி அடைவிப்பதன்பொருட்டே நாம மஹாராஜருடன் தோழமைகொண்டு பிரதிஜ்ஞை செய்துகொடுத்து அவ்வண்ணம் உன்னைக் கொலைசெய்தோம்; யாவனொருவன் தக்கபடி சிக்ஷை செய்கிறானோ? யாவனொருவன் தக்கபடி சிக்ஷைசெய்யப்படுகின்றனனோ? அவ்விருவரும் நற்கதி பெறுவார்களேயன்றி, அழியார்கள்; ஆதலின், நீயும் எம்மால சிக்ஷைசெய்யப்பட்டவனாகிப் பாவந்தீர்ந்து நல்வழிபெற்று பெருவீடு பெறுவாய; ஆதலின், துன்பத்தையும், மோகத்தையும், அச்சத்தையும் தீர்ந்து மகிழ்க; தெய்வத்தை மீறி நடப்பதற்கு உன்னால் முடியுமோ? ஆதலின், தெய்வச்செயலினால நேர்ந்த இவ்விஷயத்தில சிந்தையுறற்க; அங்கதன் உன்னிடத்திலபோலவே சுக்கிரீவனிடத்திலும், என்னிடத்திலும், அன்பும் பக்தியுமகொண்டு நடப்பானென்பதில சந்தேகமில்லை; என்று இனிமையாகவும, தர்மமாகவும அருளிச்செய்து தேற்றியருளினார். வாலியும் பெருமாள அருளிச்செய்த மதுரமான வாக்கியத்தைக்கேட்டுப் பெருமாளை நோக்கி, அடியார்க்கினியராகிய ஸ்ரீராமா! பாணத்தினால் அடிபட்டு மதிமயங்கித் தேவரை அடியேன பலவகையாக இகழ்ந்துரைத்துப பெரும்பாவி ஆயினேன; இந்த அபராதத்திற்கு பிராயச்சித்தம் செய்ய வகையின்மையால, இதனைத் தேவர் பொறுத்து அடியேனை ரக்ஷித்தருளலவேண்டுமென்று பலவாறாக வேண்டினன்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் பதினெட்டாவது சருக்கம்

முற்றிற்று.

---

பதினேழாவது சருக்கத்தில் வாலிகேட்ட கேள்விகளுக்கெல்லாம் இந்த சருக்கத்தில் பெருமாளே சமாதானம் அருளிச்செய்துவிட்டமையின, நாம் கூறவேண்டுவ தொன்றுமிலது; பெருமாள் வாலியை எதிரில் வந்து ஏன கொலைசெய்திலரெனின், பெருமாளை வாலி காண்பானாகில், பெருமாள் தாடகை ஸுபாகு மாரீசன் விராதன் கபந்தன் கரதூஷணாதி ராக்ஷஸர்கள் முதலானோர்களைக் கொலைசெய்தாரென்பதையும், சிவன் வில்லை முறித்தாரென்பதையும், பரசுராமனையும் வெற்றிகொண்டாரென்பதை

## பத்தொன்பதாவது சருக்கம்.

### வாலி இறந்ததைக்கேட்டுத் தாரை அங்கதனுடன் அங்கோடி வந்தது.



அந்த வானரராகோமானான வாலியும் பெருமாள் அருளிச்செய்த வாக்கியங்களைக்கேட்டுத் தருமமென உணர்ந்து மகாராஜா எய்த கல்லுகளினாலும், மரங்களினாலும் அடிபட்டு ஸ்ரீராமபாணத்தாலும் வருந்தி உயிர் மாளும் தருணத்தில் மோஹமடைந்தனன். தாரையும் அந்தப்புரத்திலிருந்து பெருமானெய்த பாணத்தினால் வாலி இறந்தனனெனக்கேட்டுக் கூவென்று கதறி பெயர்ந்துங்கி பிள்ளையுடன் விரைவாக விழுந்து அம்மலைக் குகையினின்றும் ஓடி வந்தனள். அங்குள்ள அங்கதனுடைய பரிவாரங்களும் அங்கே வில்லும் கணையும் கையிலேந்திப் பெருமாள் எழுந்தருளியிருப்பதைக்கண்டு அச்சங்கொண்டு ஓடினர்; யூகத்தலைவன் இறக்கையில் அச்சங்கொண்டு ஓடுகிற மற்றுள்ள யானைகளைப்போல ஓடி வருகிற அந்த வானரர்களைத் தாரை கண்டு அவர்களை நோக்கி, சூரர்களே! வானரர் கோமானான வாலிக்கு நீங்கள் முன்செல்லத்தக்கவர்களாகியும் ஏன் அச்சம் கொண்டு ஓடுகின்றீர்கள்; மண்ணாசையினால் சுக்கிரீவன் கொடிய ராமனைக்கொண்டு கூரிய பாணங்களை எய்வித்து என்னையனைக் கொன்றனனே? ஆயினும், அதனால் நீங்கள் அஞ்சுவதேனென்று வினவினள். அவ்வானரர்களும் அவ்வாக்கியத்தைக்கேட்டுத் தாரையை நோக்கி, அம்மா ராணீ! நீ மகனுடன் பிழைத்துத் திரும்பிச் செல்வீர்; அருமையான அங்கதனையும் பாதுகாத்தருளீர்; நமனே ராமனாக வந்து வாலியைக் கொலைசெய்தனன். வாலி சுக்கிரீவனால் போடப்பட்ட கல்லுகளையும், மரங்களையும் தடுத்து அடித்தும், வச்சிரம்போன்ற ராமபாணத்தினால் அடிபட்டு விழுந்தனர். இந்திரனுக்கு நிகரான நம வேந்தர் அடிபட்டு

---

யுங் கேட்டிருக்கின்றமையின், அவரைக்கண்டவுடன் அவருடைய தோள்வலிக்கு அஞ்சித் தஞ்சமென வந்தடைந்துவிடுவான்; பின்பு, தஞ்சமடைந்தவர்களைக் கொலை செய்யக்கூடாமையின், வாலியைக் கொலைசெய்வேனென்று தாம் செய்த பிரதிஜ்ஞை பொய்யாய்விடும்; இவ்வண்ணம் எண்ணங்கொண்டே பெருமாள் மறைந்து வாலியை யடித்தருளினரேயன்றி, வேறில்லை; வாலியுடன் எதிராகநின்று போர்செய்பவர்களுடைய பலத்தில் பாதி முறையே வாலியைச் சேர்ந்து விடுகிறதென்று வாலிக்கு இந்திரன் வரமளித்துப் பொன்மாலை கொடுத்திருக்கின்றமையின், பெருமாளும் வாலிக்கெதிராகப் போர்செய்தால் பலங்குறைந்து தோல்வி யுறுவாராதலின், மறைந்தடித்தாரென்று சிலர் சொல்லுவார்கள்; அது சரியன்று, நெடுநேரம் போர்செய்தபின்பே பலங்குறையுமேயன்றி, முதன் முதலில் குறையாதாதலின், முதலிலேதானே ஒரு கணையைத்தொடுத்து அவனைக் கொலைசெய்துவிடலாகுமன்றோ? மஹாராஜரும் நெடுநேரம் போர்செய்தபின்பே பலங்குறைந்து வருந்தினரேயன்றி, முதலில் வருந்திலரே? ஆதலின், நாம் உரைசெய்ததே சரியென வுணர்க.

விழுகையில், மற்றுள்ள சேனைகள் யாவும் அச்சங்கொண்டு நாற்றிசைகளிலும் திரிந்தலைகின்றன ; ஆதலின், கோபுரவாயல்களைக் காவல்கள் வைத்து அங்கதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்தருளீர் ; வானரர்கள் எல்லோரும் ஆங்கதனையே வேந்தரெனப் பணிவார்கள் ; உமக்கு இந்த கிஷ்கிந்தையில் இருப்பதற்கு மனமில்லதாயினும், வேறு அரணுளத் இடம் தேடிச்செல்லுவோம் ; முன்பு, வாலியினால் துரத்தப்பட்ட சுக்கிரீவாதிகளிடத்தினின்றும் நமக்கு இங்கு மிகவும் பயமுளது; என்று உரைத்தனர்கள். தாரை அம்மொழிகளைக்கேட்டு அதற்கு உடன்படாமல் அவர்களை நோக்கி, அன்பர்களே! வானரர்சிமானென மிகச் சிறந்த என் கணவன் இறந்தபின்னர், எனக்கு அங்கதனாலாயினும், ராஜ்ஜியத்தினாலாயினும், என் உயிரினாலாயினும் யாது பயன் ; ஸ்ரீராமபாணத்தினால் அடிபட்டு விழுந்த என் பிராணநாதனுடைய பாதமூலத்தையே போய்ச்சேருவேன் ; என்று உரைத்துவிட்டுத் துன்புற்றுக் கூவி அழுதுகொண்டு தலையிலும், மார்பிலும், கைகளால் அடித்துக்கொண்டு விரைவாக ஓடிவந்து சிறந்த தானவர்களையும் அடிப்பவனும், உயர்ந்த மலைகளையும் பேர்ப்பவனும், பெருங்காற்றினால் மோதப்பட்ட மகாமேகம்போலக் காஜிப்பவனும், இந்திரனுக்கு நிகரான பராக்கிரமமுடையவனுமாகிய தன் பர்த்தா ஸ்ரீராமபாணத்தினால் அடிபட்டு மழைபொழிந்தொழிந்த மேகம்போலவும், புலியினால் வசைதப்பி அடிபட்டு விழுந்த ஆண்சிங்கம்போலவும், யாவராலும் அர்ச்சிக்கப்பட்டும், குளிகை நாட்டியும், திண்ணை கட்டியுமழகாயுள்ள தோரணவாயில் அடங்கியிருந்த பாம்பைப் பிடிப்பதன்பொருட்டுப் பெரிய திருவடியினால் இடித்துத் தள்ளப்பட்டாற்போலவும், சாய்ந்து படுத்திருக்கக்கண்டு சிறந்த கோதண்டத்தை ஊன்றிக்கொண்டு நின்று கொண்டெழுந்தருளியிருக்கின்ற பெருமாளையும், இளையபெருமாளையும், மகாராஜரையும் தாண்டி வாலியைக்கிட்டிச் சோகத்தினால் மனங்கலங்கித் தரையில் விழுந்து மோகமடைந்து மீளவும் துயிலுணர்ந்த பெண்போலெழுந்து பிராணநாதாவென்று கூவி யமபாசத்தினால் கட்டப்பட்ட பதியை நோக்கிப் புலம்பி அழுதனள். மஹாராஜர் தாரை இவ்வண்ணம் அழுவதையும், அங்கதன் வந்து அழுங்கியிருப்பதையுங்கண்டு தாமும் மிகவும் துயரமடைந்தனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் பத்தொன்பதாவது சருக்கம்

முற்றிற்று.

---

# இருபதாவது சருக்கம்.

## தாரை புலம்பி யழுதது



இவ்வண்ணம் பெருமாளுடைய கோதண்டத்தினின்றும் புறப்பட்டதும், ஆயுளை மாயப்பதுமாகிய கணை யொன்றினாலே அடிபட்டுத் தரையில் வீழ்ந்திருக்கின்ற வாலியை முழுமதிபோன்ற முகத்தையுடைய தாரை கண்ணுற்று விரைவாகக்கிட்டி யவனை யணைந்துகொண்டு மதங்கொண்ட யானை போன்றவனும், மஹேந்திரமலைக்கு நிகரானவனுமாகிய அந்த வாலியின் குணங்களை நினைந்து மிகவும் துயரங்கொண்டு கூவி யழுது புலம்பலுற்றனள். என் பிராணநாதரே! போரில் பகைவர்மேல் கொடுமையுடையோரே! மிகச் சிறந்த தோள்வலி யுடையோரே! சிறந்த வீரமுடையோரே! வானரர் கோமானே! மிகவும் சோகக்கடலில் மூழ்கினவளும், தேவரிடத்திலுள்ள நற்குணங்களையே கண்டு மகிழ்ந்துகொண்டிருந்தவளுமாகிய என்னுடன் இப்பொழுது ஏன் இனியமொழி மொழிகின்றிலீர்; வலீமுகா சீமானே! எழுந்திருந்தருள்க; சிறந்த பஞ்சணை மெத்தையில் படுத்தருள்க; தேவர்போன்ற சிறந்த வேந்தர்கள் இவ்வண்ணம் தரையில் துகள்படியப் படுத்திருப்பார்களோ? தேவர்க்கு என்னைவிட இப்பார்மடந்தையே மனத்துக்கினிய மனையாள்போலும், இப்போழ்து உயிர்மாய்ந்தும், என்னைத் துறந்து இப்பார்மகளை யங்கங்களினால் தழுவிக்கொண்டு படுத்திருக்கின்றீரல்லீரோ? மிகவும் வீரராகிய என் பிராணநாதரே! தேவர் நல்வினையினாலே விண்ணுலகினில் இந்தக் கிஷ்கிந்தைபோன்ற சிறந்த மற்றொருபட்டணத்தைப் படைத்திருக்கின்றீர் போலும், ஆதலாலேதான் மிகவும் இனிய இந்தக் கிஷ்கிந்தையைத் துறந்து விட்டீர்; எங்கெங்கே இடங்களில் தேன்பொழியும் பூஞ்சோலைகளில் எங்களுடன் கூடிக் குலாவி இன்புற்றீரோ? அந்தந்த இடங்களுக்கெல்லாம் தேவரால் அழிவு நேர்ந்தது; தேவர் இவ்வண்ணம் ஆயுளமாண்டழிந்தமையின், யான் ஆசையும், ஆனந்தமும் குன்றிச் சோகக்கடலில் மூழ்கினேனன்றோ? என்னுடைய இந்த இதயம் கல்லினும் கடினமானது போலும், என் பிராணநாதனான தேவர் ஆயுளமாண்டிருக்கையிலும், இந்த இதயம் ஆயிரஞ்சிதறுண்டழிந்திலதன்றோ?—

வானரர் கோமானே! தேவர் முன்னே மஹாராஜருடைய பத்தினியரின் ருமையையும் அபகரித்துக்கொண்டீர்; அந்த மஹாராஜரையும் வெருட்டினீர்; அந்தத் தீச்செயலின்பலம் இப்போழ்து தேவரால் அடையப்பட்டது; தேவருக்கு நன்மையையே கோருகின்ற என்னையும் அறியாமையாலும், மோகத்தினாலும் இகழ்ந்து நிராகரித்தீர்; யான் தேவருக்கு இதத்தைக் கோரியே இப்போழ்து போர் செய்றக என்று தகைத்தேன்;

இனியரூபயௌவனங்களினாலும், காமநூல பயிற்சியாலும் செருக்குற்ற தெய்வபபொதுமடந்தையர்களைச்சேர்ந்து மகிழவீரபோலும, இககாலம் தேவருடைய ஆயுளை மாய்க்குங்காலந்தானபோலும், இல்லாவிடின் இந்த ஸுக்கிரீவனுககு வசமாகி இபபடி யழிந்திறபபீரோ ? இதுவரையிலும் யான் தேவராலே சிறிதுந் துனபமினறி வளர்ககபபட்டமையின், இனி கைம்பெணணாகி காதனினறித் துனபக்கடலில மூழகி வாழநாளை எவவண் ணம் போக்குவேன, இவவாறு தேவரும வானேறிச சிறப்பனுன சுக்கிரீவனும பகைகொண்டு சினமுற்றிருககையில, துயரமென்பதையே அறியாமல் இதுவரையிலும் வளர்த்துச சீராட்டபபட்ட அஙகதன் இனி எப்பாடு படுவானோ ? அறிகின்றிலேன ; அந்தோ ? என்னுடைய பிரிய மூளள பர்ததாவே ! தேவர் மீளாப பிரயாணம புறபபட்டமையின், தேவ ருடைய இந்தப் பெறலரும் புதல்வனைக கணகுளிரக்கண்டு தழுவி யுசசி மோந்து இககுமைததுத தேற்றி யருள்க ; இந்த ஸ்ரீராமன் தேவரையும் கொலைசெயதமையின, யாவரும வியப்புறததககவனாயினா ; சுக்கிரீவன் பொருட்டுச செயத பிரதிஜ்ஞையையுந் தீர்த்துககொண்டனர் என்றிவ் வண்ணம் பதியை நோககிப புலமபி யஙகதனை நோககி, அடா என கண் மணியே ! தந்தையைக கண்ணாரககாணுய , இனி நீ தந்தையைக்காண்ப தரிதாகும ; எனறு புலமபி மஹாராஜனையும நோககி, மைததுனரே! நீரினி மனங்குளிரக ; ருமையையும பெறறு மகிழக, இனி யசசந் தீரந்தரசாக்ஷி செயக ; உம்முடைய அண்ணனா வானேறிவிட்டனரல்ல ரோ ? எனறு புலம்பி மறுபடியும் பாத்தாவை நோக்கி, எனனுயிர்க காவலரே ! யானிவ்வண்ணம் புலம்பி யழுகையிலும என்னுடன் மாறற முரைககின்றிலீரோ ; தேவருடைய மனைவியர்கள யாவரும இங்குவந்து புலம்புகின்றனாகள கணடருளக; என்றிவவண்ணம தாரை புலமபிய புலம பலைககேட்டு மறறுளள வாலியின் மனைவியர்களும அங்கதனைத தழுவிக் கொண்டு கூவென்றுகூவியழுதனர்கள்.. மீளவும தாரை வாலியை நோக்கி, என் பிராணநாதரோ ! தேவருககு மிகவும் இனியனான இந்த அங்கதகுமா ரனை விட்டு விட்டு இவ்வணணம நெடுந்தூரம மீளாமல் செலலல் தகுமோ? யானுயினும், அங்கதனாயினும், தேவா விஷயத்தில் யாதேனும் பிழை செய்தேமோ ? ஏன இவவண்ணம் எம்மைத் துறநது செலலுகின்றீர், ஒருக்கால யான் அறியாமல பிழைசெயதிருப்பேனாயினும், அதனைப் பொறுத்தருளக; தேவர் திருவடியிணையைத் தலைவணங்கித்தொழுவேன்; என்றிவ்வண்ணம் மறுபடியும் சக்களத்திகளுடன் கூடிப புலம்பி வாலியின் சமீபத்திலேதானே பிராயோபவேசம்பண்ணி இறப்பேனென நிசசயங் கொண்டனள்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் இருபதாவது சருக்கம் முற்றிற்று.

## இருபத்தொன்றாவது சருக்கம்.

### பிராயோபவேசஞ்செய்த தாரையைச் சிறியதிருவடி இனியமொழிகளினாலே தேற்றியது.

தாரை இவ்வண்ணம் உறுதிகொண்டு விண்ணினின்றும் நழுவி விழுந்த விண்மீன்போலத் தரையில்வீழ்ந்து படுத்திருக்கையில், சிறிய திருவடி கண்டு அருகில் வந்து அவளை நோக்கிக் கேளீர் அம்மா!—

గుణదోషకృతం జన్తు స్స్వకర్మఫలహేతుకం
అవ్యగ్రస్తదవాప్నోతి సర్వం ప్రేత్య శుభాశుభం॥
శోచ్యా శోచసి కం శోచ్యం దీనం దీనానుకంపసే
కస్య కో వానుశోచ్యోస్తి దేహేస్మిన్ బుద్బుదోపమే॥

*குணதோஷக்ருதஞ்ஜந்து ஸ்ஸ்வகர்மபலஹேதுகம்*
*அவ்யக்ரஸ்ததவாப்நோதி ஸர்வம்ப்ரேத்யசுபாசுபம்*
*சோச்யாசோசஸி கம்சோச்யம் தீநந்தீநாநுகம்பஸே*
*கஸ்யகோவாநுசோச்யோஸ்தி தேஹேஸ்மிந் புத்புதோபமே.*

எல்லா உயிர்களும் அறிந்தாவது அறியாமலாவது செய்த நல்வினை தீவினைகளின்படி இம்மையிலும் வாழ்ந்து இறந்த பின்பு, அக்கருமங்களின் பலனை மறுமையிலும் அடைகிறார்கள், ஆதலின், ஒருவன் இறப்பதும், பிறப்பதும், வாழ்வதும், தத்தம் முன்வினைகளினால் வாய்ப்பதேயன்றி, வேறொருவராலும் நேராது, ஆதலின், வாலியை ஸுக்ரீவனே கொலை செய்தனனென்று எண்ணற்க; இவர் நிமித்தமாத்திரமேயன்றி, வாலி தன் முன்வினையாலேதானே இறந்தனர். ஆதலின், அவர்பொருட்டு நீர் துன்புறுவதும் சரியன்று; நாம் எவ்வண்ணம் நற்கதியடைவோமென்று உம்மை நீரே சோகித்துக்கொள்ளவேண்டுமேயன்றி, மற்றெவனைக்குறித்து நீர் சோகமுறுகின்றீர்; கடையேறும் வழி யறியாமல் நீரே தீனமடைய வேண்டியிருக்கையில், திறமையற்ற நீர் மற்றெவரைக்குறித்து அருள் செய்வது; யார்க்கு எவன் சோகிக்கத்தக்கவனாகின்றனன்; ஒருவர்க்கும் ஒருவனும் இலன், எல்லோர்க்கும் இந்த யாக்கை நீரிலெழுங்குமிழிபோல் சஞ்சலமேயன்றோ? அன்றியிலே, நீர் மக்கட்பேறு அற்றவராயின், இவ்வண்ணம் துன்புறுவது தகும், இந்த அங்கதகுமாரனை நீர் பாதுகாத்தல் வேண்டுமன்றோ? இனி இவனுக்கு வாழ்நாள்களில் இதமுறும்படி கனகாராய்ந்து மனந்தேர்ந்தெழுந்திரீர்; எல்லாவுயிர்களும் பிறப்பதும்

இறப்பதும் பிழைப்பதும் நிலையற்றனவென்று நீர் அறிந்திலீரோ? ஆதலின், அறிந்தவர்கள் இம்மையில் நலம் விளையத்தக்க நற்செயல்களைச் செய்ய வேண்டுமேயன்றித் துயருறுவது நலமற்றது; இந்த வாலியையே அடுத்து பதினாயிரம், லக்ஷம், கோடி, நூறுகோடி, என்று மேன்மேலுமுயர்ந்த கணக்குடையதும், கணக்கிறந்ததுமாகிய பற்பல பிரிவாயுள்ள வானரசேனைகள் பிழைத்தனர்கள் அத்தன்மையராகிய வாலி தம்முன்வினையின்படி வானேறினராதலின், அவர்பொருட்டு ஏன் துயருறுகின்றீர், அன்றியிலே, இவர் நியாயமாகவே அரசாக்ஷி செய்ததிலும், தானதானங்களிலும் பொறுமையிலும் ஆவலுடையவருமாதலின், நல்வினையினால் பெறும் பொன்னாடு சேர்ந்து மகிழ்வார்; ஆதலினால், இவர்பொருட்டுத் துயருறற்க. இங்குள்ள வானரசேனைகளும், இந்த அங்கதகுமாரனும், இந்த கிஷ்கிந்தா ராஜ்யமும் உம்முடைய அதீனமேயாகும், ஆதலின், இந்த சோகத்தையும், ஸந்தாபத்தையும் துறந்து மகிழ்க; உம்மால் கட்டளையிடப்பட்டு இந்த அங்கதகுமாரரும் அரசாக்ஷிசெய்யக்கடவர்; உலகினில் யாவரும் மக்கட்பேற்றினைக் கோருவது தாமிறந்தபின்னர், ஈமக்கடன், தர்ப்பணம் முதலானவை செய்வதன்பொருட்டே யன்றோ? இப்போது செய்யவேண்டிய காரியமும் உம்முடைய கணவனுக்குச் செய்யவேண்டிய சரமகைங்கரியமே யன்றோ? ஆதலின், இப்பொழுது பர்த்தாபொருட்டுச் செய்யவேண்டும் கருமங்களை அங்கதகுமாரனைக்கொண்டு செய்விக்கக்கடவீர், இக்காலத்திற்கு இதுவே தகுமன்றி, இவ்வண்ணம் துன்புற்று வருந்துவது தகாது, வானரகோமானுன வாலிக்கு தஹனஸம்ஸ்காரஞ் செய்வித்தபின்பு, அங்கதகுமாரனுக்கும் அபிஷேகஞ்செய்விக்கக்கடவீர். பின்பு, சிங்காஸநத்தில் வீற்றிருக்கும் குமாரனைக்கண்ணுற்றுச் சோகந்தணிந்து மகிழ்வீர்; என றிவ்வண்ணம் இனியமொழிகளை மொழிந்து தாரையைத்தேற்றினர். தாரை யதுகேட்டும் பர்த்தாவின் சோகத்தினாலே மிகவும் வருந்தி எதிரில் நிற்கின்ற சிறியதிருவடியை நோக்கிக் கேளீர் மாருதி! அங்கதன்போன்ற ஆயிரம் பிள்ளைகளைக் காண்பதைவிட வானரர் சீமானுன என்னாயகர் திருமேனியைத் தழுவி மகிழ்ந்திருப்பதே மிகச் சிறந்தது; அன்றியிலே, இப்பொழுது என் பர்த்தாவுக்கு ஸம்ஸ்காரம் செய்விப்பதற்காவது, அங்கதனுக்கு அபிஷேகஞ்செய்விப்பதற்காவது, யான் உரியவளல்லேன்; அங்கதனுக்குச் சிறியப்பனாகிய மஹாராஜரே! இனி நடக்கவேண்டிய காரியங்களெல்லாவற்றிற்கும் நியாமகர்; அங்கதனைக்குறித்து நீர் இவ்வண்ணம் எண்ணற்க, தந்தையற்ற மகனுக்குச் சிறியப்பனே பாதுகாவலனல்லவா,

தாய பந்துவாகாள; எனக்கு என கணவனைச்சேர்ந்து செல்வதைவிட இம்மையிலாவது, மறுமையிலாவது, நலநதருவது வேறொன்றுமிலது; ஆதலின், பகைவருடன் போர்ந்திறந்த என் பிராணநாதா படுத்திருக்கின்ற இவவிடத்திலேதானே படுததிறபபது எனக்கு மிகவுந் தகுந்தது; எனறு மொழிந்து வருந்தினள.

கிஷகிந்தாகாணடத்தில இருபததொனறுவது சருக்கம் முறறிறறு.



## இருபததிரண்டாவதுசருக்கம்.

வாலி மூாசசைதெளிநது மஹாராஜா அஙகதன் இவாகளுடைய மேலே நடககவேணடிய விதததை யுரைசெயது அவ வணணமே செய்யுமபடி வேணடியது



பின்பு, வாலி மூாசசைதெளிந்து அங்கதகுமாரனுககெதிராகத் தனக கெதிரில நினற மஹாராஜனை முதன் முதல் பாாத்து அவனை நோககிக கேளடா ... யான தீமையை விளைககததகக தீவினையினாலே மதிமயங கிச் செருககுற்று உனனுடைய பாரியையையும அபகரித்துககொண்டு உனனையும வெருட்டினேன; ஆதலின, அபபகையை என்மேல்கொண்டு என்னைத தீயோனெனறு எண்ணி இகழற்க, தலைவிதி யாவரையும்தான் செலலும வழியிலேதானே பற்றி இழுககின்றதன்றோ? உனககும் எனக்கும ஓரே காலததில் கூடி இன்புறும்படி ஸ்ரீமந்நாராயணன ஸங்கற்பித்திலனென வெண்ணுகிறேன்; அடா சுக்கிரீவா! ஆகையாலேதான எனககு அவவண ணம் மதிமயங்கித தீசசெயல புரிந்தேன்; தலைவிதியைத தவிாபபது ஒருவராலும் முடியாதன்றோ? இனி நீ தாமஸஞ்செயயாமல் இபபொழுதே அபிஷேகம்பூண்டு இந்த வானராகளெல்லோாககும ராஜனாகி யரசாளுதி செயக; யான் இபபொழுதே யமதாமராஜன் படடணமடைகின்றேனென் றெண்ணுக; இப்பொழுதே உயிரையும், வாலி யொருவராலும் கொலை செயயப்படானென்னும புகழையுந்துறந்து செல்லுகின்றேன; இக்காலை யிலே யான சொன்னவண்ணம் செயவதென்பது அருமை; ஆயினும், என்மீது அன்புவைத்து இவ்வண்ணமே ... க்கடவை எனனருமைக குழந்தையான இந்த அங்கதன இனபு... ...யவனும், இதுகாறும் துன்பமென்பதை யறியாதவனும், இளை... ...னும, நல்லறிவினால்

பெரியோனுமாகியும், இப்போழ்து துன்புற்றுத் தரையில் வீழ்ந்து வருந்து
கின்றனன் பாராய்; இந்த என்னுயிரினும் பிரியமுள்ள [illegible]
என்னை நினைந்து வருந்தாவண்ணம் உன்மகனாக எண்ணிப் பாதுகாத்தளிக்
கக்கடவை. இனி நீயே இவனுக்கு வேண்டியவைகளை யளிப்பவனும்,
பாதுகாப்பவனும், அச்சமநேருங்கால் அச்சத்தைத்தீர்ப்பவனுமாகின்றனை;
யானிறந்தபின், நீ தவிர வேறொருத்தருமிலர் அன்றோ? அன்றியும்,
தாராகுமாரனான இந்த அங்கதன் உனக்கு நிகரான பலபராக்கிரமமுடை
யோனாதலின், அரக்கர்களுடன் போர்செய்யுங்காலையில் முன்னின்று போர்
செய்வான்; யௌவனமுடைய இம்மைந்தன் போர்க்களத்தில் நாயக
னென்பதற்கேற்ற தக்கபடியே பற்பல செயல்களையும் செய்வான், ஸுக்
ஷேணன் மகளாகிய தாரையும் மேல்விளையும் நன்மை தீமைகளை
ஆராய்ந்தறிவதில் மிகவும் நுட்பமான நன்மதியுடையவளாதலின், இவள்
எந்தச்செயலை நன்றென்று மொழிவளோ? அச்செயலை ஐயுறாமல் விரை
வாகச்செய்க; எதனைத் தீதென்று விலக்குகின்றனளோ? அச்செயலையொ
ருகாலையிலுஞ்செய்யற்க, இவள் ஆராய்ந்து சொன்ன விஷயம் ஒருக்காலும்
மாறுபட்டதில்லை, சக்கரவர்த்தி திருமகனுடைய காரியங்களையும் தடை
யின்றி விரைவாகச்செய்க, நீ செய்யாயாகில், பாவமும் சேரும், பெரு
மானும் சீறி யுனக்குத் தீமை செய்குவர், யான் கழுத்திலணிந்திருக்
கின்ற இந்தப் பொன்மலர்மாலையை யான் இறப்பதன்முன்னமே கழற்றி
யுன்கழுத்திலணிந்துகொள்க, யானிறந்தபின்னர், இதிலுள்ள சிறந்த
திவ்விய காந்தி யழிந்துவிடுமென்று மொழிந்தனன். மஹாராஜரும் தமை
யன் இவ்வண்ணமுரைசெய்த வாக்கியத்தைக்கேட்டு அவன்மீதுள்ள சினந்
தணிந்து மகிழ்வுகுன்றிச் சோகம் அதிகரித்து ராகுவினால் பிடிக்கப்பட்ட
முழுமதிபோல ஒளியிழந்து சாந்தியடைந்து அம்மொழிகளையெல்லாம் நல
மெனவே உடன்பட்டு வாலியின் அநுமதியின்படி அந்தப் பொன்மலர்
மாலையை வாங்கி யணிந்து கொண்டனர். வாலியும் மாலையை யளித்த
பின்பு, பொன்னாட்டுக்குப் புறப்படச் சித்தமாகி எதிரில் தேங்கி நிற்கின்ற
அங்கதனை நோக்கி, அடா என்னருமைப்புதல்வா! காலதேசங்களை யறிந்து
இன்பமுறின் மகிழாமலும், துன்பமுறின் வருந்தாமலும், இரண்டினையும்
பொறுத்து உன் சிற்றப்பனுடைய கட்டளையின்படி நடந்துகொள்ளக்
கடவை. நீ இவ்வண்ணம் இதுவரையில் என்னாலே எப்படியிருக்கினும்
நிரந்தரம் பாதுகாத்தளிக்கப்பட்டு இன்புற்றனையோ? அவ்வண்ணமே ஸுக்
கிரீவன் நீ எப்படியிருக்கினும் உன்னை நன்குமதியான்; ஆதலின், இவ
னுடைய மதப்படியிருந்து இவன் மகிழும்படி நடந்துகொள்வையாகில்,
இவனும் உன்மீதன்புசெய்து அளிப்பான்; ஆதலின், இந்த சுக்கிரீவ
னுடைய பகைவர்களுடனாவது, அவனைச் சேர்ந்தவர்களுடனாவது தோழ
மை கொள்ளற்க; எப்பொழுதும் இவனுடைய இதத்தையே கோரிக்
கொண்டு இவனுக்காட்பட்டிருக்கக்கடவை.

న చాతిప్రణయః కార్యః కర్తవ్యో౽ప్రణయశ్చ తే
ఉభయం హి మహాదోషస్తస్మాదన్తరదృగ్భవేత్॥

நசாதிப்ரணயஃகார்யஃ கர்தவ்யோப்ரணயச்சதே
உபயம்ஹிமஹாதோஷஸ்தஸ்மாதந்தரத்ருக்பவேத

யாருடனும் மிகவும் நெருங்கிய இணக்கம், இணக்கமிலும் தனித்து நிலலற்க; இவவிரண்டும் மிகக தீமைக்கிடமாகும்; ஆகலின், யாருடனும் தக்கபடி நடபுகொண்டு வாழ்ந்து மகிழ்க; என்று மொழிந்து கண்களை மெரளவிழித்துக் கணையினால் வேதனையுற்று நனகுவிழித்து பயங்கரமான பாாவைகளினாலே பாாத்து மேலெழுந்த உயிரையுடையனுமாயினன். பின்பு, தாரை முதலிய வானரமாதாகளும், வானரா படைத்தலைவாகளும் கூவென்று கூவி ஐயையோ இப்பொழுது கிஷ்கிந்தை பாழாயிற்றே? தோட்டங்களும், மலைகளும், காடுகளும் அழிந்தன, வானராகளும் ஒளியிழந்தவாகளாயினாகள், எந்த மஹாவீரருக்கு அருங்கிக காடுகளும் எககாலையிலும் தளிாத்துப பூத்துக காயத்துப பழுத்தனவோ? அவாபோல் இனி யாவன இவவண்ணம செயவான; எங்க மஹானுபாவா கோலபனென்னும் கந்தர்வனுடன பதினைந்துவருஷம ஓயாமல பொாசெய்து, இரவெனனும் பகலெனனும வேறறுமையினறியே போாந்து பதினாறுவது வருஷத்தில அவனை யடித்து வெற்றிகொண்டு நமமெலலோரையும மகிழ்வித்தனரோ? அத்தன்மையரான தனிவீரராகிய இவா எவவண்ணம கொலைசெய்யப்பட்டனராே? எனறிவவண்ணம புலமபி யழுது சிஙகத்தையுடைய பெருங்காட்டில பெருங்காளை இறந்துவிடுகையில், அதனைச சோந்த பசுககளபோல வருந்தினாகளே யனறிச் சிறிதும இன்புறறிலர்கள், அப்பொழுது தாரையும் பதி இவவண்ணம் இறநததைககணடு வெட்டுணடு சாயந்த மரத்தினமேல் படாந்திருந்த வல்லிபோலசசாய்ந்து வாலியைத் தழுவிககொண்டு சோகஸாகரத்தில் மூழ்கி வருந்தினள்.

கிஷ்கிநதாகாண்டததில் இருபத்திரண்டாவது சருக்கம் முற்றிறறு.

---

## இருபத்துமூன்றுவது சருக்கம்.

### தாரையின் புலம்பல்.

---

அநந்தரம் தாரை வானரா கோமானுன வாலியின் முகத்தை மோந்து இந்த அவவாலியைக்குறித்துப புலம்பலுற்றனள் அநதோ? என்னுருயிர்க்

காவலரே ! என்னுடைய மொழிகளைக்கேளாமல் ஏன் இவ்வண்ணந் தரை யில் படுத்திருக்கின்றீர் ; இப்பார்மகள் தேவரீருக்கு என்னினும் பிரியமுடை யாளபோலும், என்னுடன் பேசாமல் இவளையே தழுவிப் படுத்திருக்கின்றீ ரல்லீரோ? அந்தோ தெய்வம் இப்பொழுது சுக்கிரீவனுக்கு வசமாகியதோ? இப்போது ஸுக்கிரீவனேயல்லவோ வீரமுடையவனாயினன், ரிக்ஷவானரத் தலைவர்களெல்லோரும் தேவரீரையே தொழுதுகொண்டிருந்தனரோ ? அவர்க ளெல்லோரும் இங்கே கூடிப் புலம்புகின்றனர்கள், அங்கதனும் வருந்து கின்றனன் ; இவர்களின் புலம்பலையும், என்னுடைய இம்மொழிகளையும் கேட்டும் ஏன் மறுமொழி மொழிகின்றிலீர் , எந்த இடத்தில் பம்பல பகை வீரர்களும் தேவரால் கொலைசெய்யப்பட்டுப் படுத்தனர்களோ ? அவ்விடத் திலேதானே தேவர் இப்பொழுது ஆயுண்மாண்டு படுத்திருக்கின்றீரந்தோ ? நற்குலத்திற்பிறந்தவரும், ஈடற்ற தோள்வலி யுடையவருமாகிய என் பிராணநாதரோ ! என்னை அநாதையாக விட்டு விட்டு மீளாமல் சென்றீ ரயயோ ? உலகினில் ஒருவரும் சூரனபொருட்டுக் கன்னிகையை விவாஹஞ் செய்து கொடுக்கக்கூடவரலலா, யான் சூரனுக்கு மாலையிட்டு மணம்புரிந் திவ்வண்ணம் கைம்பெண்ணாயினேனல்லவோ ? எனது மானமும் அழிந் தது ; நற்கதியும், இன்பமும் தொலைந்தன , ஆழமுடைய சோகக்கடலில் மூழ்கினேன் , என்னுடைய இந்த இதயமும் கல்லினும் கடினமாகியது ; இது கணவனிறக்கக்கண்டும் சிதறுண்டு பிளந்தழிந்திலதன்றோ ? பிரிய முடையோரும், பாதுகாப்பவரும், பிரியஞ்செய்பவரும், போர்க்களத்தில் தோல்வியுறாதவருமாகிய என் பர்த்தா இப்பொழுதிறந்தனரோ ? ஒரு பெண் மக்கட்பேறுடையவளாயினும், பெருஞ்செல்வமுடையாளாயினும், நற் குண நற்செய்கை யுடையவளாயினும் ஆகுக ; அவள் எப்படியிருக்கினும் கணவனற்றவளாயின், கைம்பெண்ணெனவே யன்றோ ? யாவரும் இகழ்ந் துரைசெய்வார்கள் ; வீரமுடைய வென்னுதரே ! தேவருடைய திருமேனியி னின்றும் பெருகிய குருதி பாய்ந்து செவப்புற்ற இவ்விடத்திலே இந்திர கோபம்போல் செவந்த பட்டினுலியற்றிய பஞ்சணைமெத்தைபோலவே படுத்திருக்கின்றீரோ ? தேவருடைய சரீரமும் துகள்படிந்து உதிரம் தோய்ந் திருக்கின்றமையின், கைகளினாலே தழுவிக்கொள்ளத் திறமைகொள்ளு கின்றிலேன் ; இந்த சுக்கிரீவனுடைய தீராப்பகையும், அச்சமும், ஸ்ரீராம னெய்தருளிய ஓரே கணையினாலே தீர்க்கப்பட்டமையின், இவன் மனங் குளிர்ந்தனன் ; அந்தோ ? என் நாயகரோ ! தேவர் இறந்திருக்கையிலும், தேவரைத்தழுவிக்கொள்வதற்கு மார்பில் நாட்டப்பட்ட இந்தக் கூரிய கணை தடைசெய்கிறது என்று புலம்பினள். அப்பொழுது சேனாபதியான நீலன் மலைக்குகையினுள் புகுந்திருந்த நச்சரவம்போன்ற அக்கணையை வாலியின் மார்பினின்றும் பேர்த்தெடுத்தனன். அப்பொழுது அக்கணை அஸ்தகிரியில் மாலைப்பொழுதில் கதிரவனது கதிர்போலத் திகழ்ந்தது ; உடனே வாலி யினது தேகத்திலுள்ள காயத்தினின்றும் குருதியானது மலையினின்றும்

காவிபடிந்த சுனைநீர்போலத் தாரை தாரையாக நாற்புறத்திலும் பெருகிற்று; இவ்வண்ணம் துகள்படிந்து குருதிதோய்ந்த வாலியின் சரீரத்தைத் தாரை கண்ணீர்களினாலே துடைத்து தலைமயங்கின்றவளபோலக் கண்ணீரைப்பெருக்கி அங்கத குமாரனை நோக்கி, அடா என் பெறலரும் புதல்வா ! உன் தந்தை யின் மாணுவஸ்ததையைக் கண்ணுற்று, தீராப்பகையென்னும் பாவச் செயல் இப்போழுது முடிவுபெற்றது ; பாலஸூரியன்போன்ற மேனி யுடையவரும், பொன்னுலகினை நோக்கிப் புறப்படுபவருமாகிய உன்னு டைய தந்தையைத் தலைவணங்கி வந்தனஞ்செய்யடா ? என்று புலம்பி யுரை செய்தனள். அங்கதகுமாரனும் தாரை யுரைசெய்த அம்மொழியைக்கேட் டெழுந்து கைகளைக்கூப்பித் தந்தையைத் திருவடித்தொழுது அபிவாதனம் பண்ணினன். அப்பொழுது தாரையும் வாலியைக்குறித்து என் பிராண நாயகரே ! முன்பு அங்கதன் பணியுங்காலைகளில் தேவர் மகிழ்ந்து நெடுங் காலம் வாழ்க, என்று மகிழ்ந்து வாழ்த்தி யருளவீரோ ? இப்போழுது ஏன் அவ்வண்ணம் ஆசீர்வாதம் செய்கின்றிலீர், அருளிச்செய்க; காட்டிடையில் சிங்கத்தினாலடிபட்ட காளையைச் சேர்ந்து கன்றுடன் கூடிய பசு துன்புறு வதுபோல யானும் அங்கதனுடன் தேவரைச்சேர்ந்து வருந்துகின்றேன் ; என்னனபுள்ள நாயகரே ! உலகினில் யாகஞ்செய்பவர் மனைவியுடன் கூடியே அவபிருதஸ்நானஞ்செய்வார்களே யன்றித் தனித்துச் செய்யார்களல்லரோ ? தேவர்மாத்திரம் போர்க்களமென்னும் யாகசாலையில் போரென்னும் யாகத்தைச்செய்து முடித்து ஸ்ரீராமனுடைய கணையென்னும் தீர்த்தத்தில் தருமபத்தினியான என்னைவிட்டு எவ்வண்ணம் மனைவியின்றியும் அவபிருத ஸ்நானஞ்செய்தீர் ; போர்க்களத்தில் தேவருடைய மேனிவலிமையைக் கண்டு மகிழ்ந்த தேவராஜனால் தேவர் தந்தையினால் அளிக்கப்பட்ட பொன்மலர் மாலையை இப்போழுது காண்கின்றிலேனே ? கதிரவன் மறைந்துவிடினும், வெயிலொளி மேருமலையைவிட்டகலாததுபோலவே தேவர் மரணமுற் றிருக்கினும், ராஜலக்ஷ்மி தேவருடைய திருமேனியைவிட்டகலுகின்றிலது; தேவர் போர்செய்வதன்பொருட்டுப் புறப்படுகையில், யான் வேண்டி யுரை த்த வார்த்தையும் தேவர்க்கு இதமென்று தோன்றியிலது ; ஆதலின், யானும் தேவரைத் தடைசெய்யுந் திறமைகொண்டவளாகியிலேன் ; தேவர் எனது வாக்கியத்தைக்கேளாமல் வந்திறந்தமையின், தேவரால் யானும் மக்களுடன் வருந்திக் கைம்பெண்ணாகி யழகினையும் இழந்தேனன்றோ ? என்று புலம்பி யழுது வருந்தினள்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் இருபத்துமூன்றாவது சருக்கம்

முற்றிற்று.

---

## இருபத்துநான்காவதுசருக்கம்.

இவ்வண்ணந் தாரை துன்புறுதலைக்கண்டு மஹாராஜா தாமும் சோகமடைந்து தீயில்வீழ்ந்திறப்பேனென்று பெருமாளை வேண்டியதும, பெருமாளதுகேட்டருளித் தாரையைத் தேற்றுவதன்பொருட்டுச் செல்லுகையில், தாரை பெருமாளை நோக்கிப் புலம்பியதும, பெருமாளும் அவளை நன்மொழிகளினால் தேற்றியருளியதும



இவ்வண்ணந் தாரை தீராததுயரங்கொண்டு சோகக்கடலில் மூழ்கி வருந்துவதை மகாராஜா கண்ணுற்றுப் பகை நீங்கித் தமையனை யறியாமையினாலே கொல்வித்தேனேயென்று மிக வருந்திக் கண்களில் சோகநீர்பெருக்கி மகிழ்வுகுன்றிப் பெருமாளெழுந்தருளியிருக்குமிடஞ்சென்று வில்லைக் கையிலேந்தி நச்சரவத்துக்கு நிகரான கணையைக் கையிற்பிடித்து கம்பீரமாய் நிற்கின்ற அந்தப் பெருமாளை நோக்கிக் கேட்டருளீர் நலமுள்ள தோழமீர் ! தேவா பிரதிஜ்ஞை செய்தவண்ணம் நிறைவேற்றி யருளினீர் ; தேவருடைய திறமை கைகண்ட மருந்தாயிற்று, அடியேனுக்கிப்பொழுது போகங்களிலும், உயிர் வாழ்தலிலும, மனம் வெறுப்புற்றிருக்கின்றது ; இந்தத் தாரை இவ்வண்ணம வருந்துகையிலும, அங்கதகுமாரன இவ்வண்ணம துயருறுகையிலும எனக்கு அரசாக்ஷிசெய்யவேண்டுமென்று எவ்வண்ணம மனமுளதாகும ; முன்பு, வாலி காரணமின்றி என்னை வெருட்டியோட்டினமையாலும, வன்மொழிகளை மொழிந்தமையாலும், தீராப்பகைகொண்டு மனையாளையும அபஹரித்துக்கொண்டு மிகவும வருத்தினமையாலும, அவனைக் கொல்லும விஷயத்தில உடன்பட்டுத் தேவரை வேண்டினேன் ; அவனிப்போழ்திறந்தபின்னர், மிகவும் பச்சாத்தாபமடைந்து வருந்துகின்றேன ; இப்பொழுது நான முன்பு ரிசியமூகமலையில் வாழ்ந்துகொண்டிருந்ததே நலமென்று எண்ணுகின்றேன ; இப்போதிந்த வாலி இறந்தபின்பு, பொன்னுடைநகரசனைக வாழ்கைதனையும் நனகு மதிக்கின்றிலேன் ; மஹாத்துமாவான என்னண்ணன் என்னுடன் போர்செய்து என்னை வெருட்டுகையிலும, என்னை நோக்கி, அடா சுக்கிரீவா ! யான உன்னை யுயிர்மாய்க் கொலைசெய்யேன , நீ என்னை எதிர்த்தமையின், உனது கொழுப்பைமாத்திரம அடக்கிவிடுகிறேனென்று என்மீது தம்பியென்னும் அன்பினால் உரைத்தனனே ? அவ்வண்ணமுரைசெய்வது பெருந்தகவுடைய அவனுக்கே தகும் ; இவ்வண்ணம அன்பின்றி யவனைக் கொல்விப்பது கொடும்பாவியான எனக்கே தகும, அண்ணனைக் கொலைசெய்து அரசாக்ஷி செய்வதினும், பின்பு நேர்ந்த துயரத்தைப் பொறுப்பது மிகவும் கடின

மென்பதை யறிந்தாராயாமல் மண்ணாசை பெண்ணாசையையே முக்கிய மாகக்கொண்டு கொடும்பாவியான என்னைப்போல் மற்றெவன்தான் இவ் வண்ணம் மிகவுந்திறமையுடைய அண்ணனைக் கொலைசெய்விக்கத் துணிவு கொள்ளுவன்; என் தமையன் மஹாமகிமை யுடையோனாதலின், என் னைக் கொலைசெய்ய நினைத்திலன்; யான் கெடுமதி யுடையோனாதலின், அவனைக் கொலைசெய்விக்க மனந்துணிந்தது; என்னைக் கிளையினலடித்து வருத்தி அடா தம்பி! நீ இனி இவ்வண்ணம் என்னை எதிர்த்துப் போர் செய்யற்க; என்று மதிகூறிக் கொலைசெய்யாமல் விட்டுவிட்டமையின், அவனால் தருமமும், உடன்பிறப்பும், பெருந்தகவுடைமையும், நன்கு பாதுகாக்கப்பட்டன. என்னாலோவெனில், சினமும், பகையும், காமமும், குரங்கின் தன்மையும் நன்கு விளக்கப்பட்டன. ஸ்ரீரகுநந்தன! நினைத்தற் கரியதும், துறக்கத்தக்கதும், விருப்புறற்கரியதும், காணற்கரியதுமாகிய கடும்பாவத்தை யண்ணனைக் கொலைசெய்வித்தமையின், விசுவரூபனைக் கொலைசெய்த தேவேந்திரன்போல அடைந்து வருந்துகின்றேன்; இந்திர னுடைய பாவத்தையாயினும், பூமி, ஜலம், மரங்கள், பெண்கள், இந்நால் வரும் ஏற்றுக்கொண்டு, வேழமண், நுரை, பிசின், தூமை என்னும் இந் நான்கு விதங்களாக முறையே தாங்கினார்கள். இந்த என்னுடைய கொடும் பாவத்தை எவன்தான் ஏற்றுக்கொள்வான், தருமமின்றிக் குலத்தை யழித் திவ்வண்ணம் வருத்தமுற்ற பிரஜைகள் என்மீது அச்சத்தினாலோ அருளினாலோ அன்பினாலோ செய்யும் மரியாதையையும் விரும்புகின்றி லேன்; இளவரசனாகுவதையும் விரும்பேன், அரசனாகுவதையும் வேண் டேன்; கொடும்பாவஞ்செய்து உலகினில் பெரும்பழியையும், இகழ்வை யுமடைந்து வருந்துகின்றமையின், பெருமழையில் நீர்வெள்ளம் பள்ளத் தாக்கில் பெருகி வளர்வதுபோலச் சோகமென்னும் பெருவெள்ளம் உல கினில் தாழ்ந்த என்மேல் பெருகி வளர்கின்றது. அண்ணன் கொலை யென்னும் பின்புறமும் வாலுமுடையதும், ஸந்தாபமென்னும் துதிக்கை, கண், தலை, தந்தங்களை யுடையதுமாகிய பாவமென்னும் மதயானை நதி யின் கரையைத்தாக்கி இடித்துச் சாய்ப்பதுபோல என்னையும் மோதி இடித்துச் சாய்க்கின்றது; ஸ்ரீரகுகுலதுரந்தரா! நெருப்பில் காய்ச்சின தங்கம் அழுக்குச்சிட்டத்தைவிட்டகலுவதுபோல என் மனதில் விவேகம் பாவத்தைச்சேராமல் அகலுகின்றது. ஸ்ரீராகவா! இந்த அங்கதகுமாரன் இவ்வண்ணம் சோகமடைந்து தவிக்கின்றமையின், இவ்வானரர்களெல் லோரும் மரணமுறுபவர்போலத் தவிக்கின்றனர்கள் உலகினில் நற்குண நற்செய்கையுடைய மகன் பெரும்பாலுமுளனாயினும், இந்த அங்கத னுக்கு நிகரான குமாரன்மாத்திரம் எங்குமிலன்; என்னண்ணனைப் போன்ற சோதரர்களும் எங்குமிலர், இனி அத்தனமையனான அண்ண னுடன் வாழ்வதேது; ஸ்ரீராமசந்திரா! இந்த அங்கதன் சோகத்தினா லிறவாமல் பிழைப்பானாயின், தாரையும் பிழைப்பாள். அங்கதனின்றி

மாத்திரத் தாரை யொருக்காலும் உய்யாளென்று நம்புகின்றேன்; ஆதலின், யான் அண்ணனுடனும், அங்கதகுமாரனுடனும், மறுபிறவியி லாவது நட்பினைக்கோரித் தீயில வீழ்ந்திறப்பேன்; இவ்வானரர் தலைவர் கள் தேவருடைய கட்டளையின்படி பிராட்டியாரைத் தேடி யளிப்பார்கள். யானிறந்துவிடினும், தேவர் எல்லாக்காரியங்களையும் நிறைவேற்றிக் கொள்ளவல்லீர்; ஆதலின், அண்ணனைக் கொலைவித்த கொடும்பாவியான யான் இறப்பதன்பொருட்டனுமதி கேட்கின்றேன்; என் வேண்டுகோளுக் கிரங்கி யனுமதி கொடுத்தருள்க, என்றிவ்வண்ணம் புலம்பி வேண்டினர். பெருமாள் அம்மொழிகளைக் கேட்டருளித் தாமும் கண்ணீர்பெருக்கி வருந்தி முகூர்த்தகாலம் சிந்தையுற்றிருந்து யாவராலும் யாது பதிலரு ளிச் செய்வாரென்று பார்க்கப்பட்டுப் பாமடந்தைபோல மிகப் பொறு மையுடையவராதலினாலும், அனைத்துலகங்களையும் பாதுகாத்தளிப்பவ ராதலாலும், இவ்வண்ணம் இவர்கள் துயருறுவதைப்பொறாமல இவர் களைத்தேற்றி மகிழ்விப்பதன்பொருட்டுத் திருவுளங்கொண்டு சோகக் கடலில் மூழ்கி வருந்துகின்ற தாரையைக்கடாக்ஷித்து அவளருகிலெழுந் தருளினர். உடனே அங்குள்ள வானரத்தலைவர்கள் கணவனைத்தழுவிக் கொண்டு புலம்புகின்ற அந்தத் தாரையைப் பெண்களைக்கொண்டு எழுந் திருக்கச்செய்கையில், தாரையும் பதியைவிட்டுத் திரும்பி வில்லும் கணை யுங் கையிலேந்திக் கதிரவன்போலக் காந்திகொண்டு விளங்குகின்ற ஸ்ரீராமபத்திரனைக் கண்டு இவருடைய திவ்விய தேஜஸ்ஸினாலும், ராஜ லக்ஷணங்களினாலும், இவரே ஸ்ரீராமபத்திரனென்றறிந்து துன்புற்றுக் கொண்டே பெருமாளுடைய சமீபத்தையடைந்து சோகத்தினால் மெய் நடுங்கி வருந்திப் பெருமானை நோக்கிக் கேட்டருளீர் சக்கரவாத்தித் திருக்குமாரரோ!—

త్వమప్రమేయశ్చదురాసదశ్చ జితేన్ద్రియశ్చోత్తమధార్మికశ్చ
అక్షయ్యకీర్తిశ్చవిచక్షణశ్చ క్షితిక్షమావాన్ క్షతజోపమాక్షః॥

த்வமப்ரமேயச்சதுராஸதச்ச ஜிதேந்த்ரியச்சோத்தமதார்மிகச்ச
அக்ஷய்யகீர்த்திச்சவிசக்ஷணச்ச க்ஷிதிக்ஷமாவான் க்ஷதஜோபமாக்ஷ:.

தேவர் அளவிடத்தகாதவரும், தீவினையோர்கள் அடைவதற்கரிய வரும், புலன்களுக்கு வசப்படாமல புலன்களையே தன் வசமாக்கி யருளிய வரும், தருமமுணர்ந்தோர்களுள்ளும் தருமமுடையோர்களுள்ளும் சிறப் புற்றுயர்ந்தவரும், ஒருக்காலேயிலும் குறைவும் அழிவுமுறாத பெரும்புக ழுடையவரும், உபய விபூதிகளையும் தக்கபடி நடாத்துவதில் மிகத் திறமை யும் வலிமையுமுடையவரும், பார்மகட்கு நிகரான பொறுமையுற்றுத் தஞ்ச மடைந்தவர்களின் பிழைகளைப் பொறுத்துப் பாதுகாத்தளித்தருள்பவரும், உதிரம்போலச் சிவப்புற்றும் செந்தாமரைமலர்போல வியன்றகன்றுமுள்ள

திருக்கண்களை யுடையவருமாகிய ஸ்ரீமந்நாராயணனே ஆகின்றீர்; தேவர் அப்ராக்ருதமான சுத்தஸத்துமயமான திவ்விய சரீராவயவங்களை யுடையவராகியும், தீயோர்களை வென்று நல்லோர்களைப் பாதுகாப்பதன்பொருட்டு லீலாமானுஷ திவ்வியமங்கள விக்கிரஹத்தையுடையராக அவதரித்துக் கோதண்டத்தையும் பாணத்தையும் திருக்கைகளிலேந்தி அதிமானுஷ பலபராக்கிரமங்களை யுடையராய அலிகளும், ஆண்பிள்ளைகளும் கூடக்கண்டு மயங்கிப் பெண்ணுருக்கொண்டு புணர விரும்பத்தக்க திவ்வியாவயவ ஸௌந்தரிய முடையவருமாகியும், பின் இவ்வுருவை விட்டு முன்போலவே அப்ராக்ருத திவ்வியமங்களவிக்கிரஹமுடையராகுவீர்; என்று பெருமானுடைய திவ்வியமங்களவிக்கிரஹத்தில் ஈடுபட்டுப் புகழ்ந்து மீளவும் வானர ஜாதியாகையால், மதிகலங்கிப் பெருமானை நோக்கி, ஸ்வாமி! தேவர் எந்த பாணத்தினால் என் பர்த்தாவை யடித்தருளினீரோ? அந்தக் கணையினாலே தானே என்னையும் அடித்தருளக; என் பர்த்தா! என்மீது மிகப் பிரிய முடையவராதலின், பொன்னுலகிலும் என்னைப் பிரிந்து மகிழவுறார்; இவர் பொன்னுலகை யடைந்தும் முற்றும் சுற்றிப்பார்த்து என்னைக் காணாராயின், சிறந்த ஆடையாபரணங்களையுடைய தெய்வப்பொதுமகளிர்களைக் கண்ணுறினும், மகிழாந் தவர்களுடன் சேர்ந்தின்புறார்; மிகவும் அழகிய இந்த மலையருகில் தேவர் எழுந்தருளியிருந்தும் பிராட்டியாரைப் பிரிந்திருக்கின்றமையின், எவ்வண்ணம் துன்புற்று வருந்துகின்றீரோ? அவ்வண்ணமே விண்ணுலகிலும் என் பதி! என்னைப் பிரிந்து, மகிழ்வுகுன்றி, யொளியிழந்து, மெய்வாடி, வருந்துவாரய்யோ? தேவர் பெண்டாட்டியைப் பிரிந்தவர்களுறும் துன்பம் மிகவும் பொறுத்தற்கரியதென்பதை நன் கறிந்தருளவீரல்லீரோ? ஆதலின், என் பிராணநாதன் என்னைப் பிரிந்து வருந்தாவண்ணம் என்னைக் கொலை செய்து என் பர்த்தாவிடம் என்னைச் சேர்த்து மகிழ்வித்தருளக. தேவர் என்னைக் கொலைசெய்யும் விஷயத்தில் பெண்கொலைசெய்வது தருமமன்றே என்று எண்ணற்க; என்னை வாலியின் ஆத்துமாவாகவே யெண்ணிக் கொலைசெய்தருளவீராகில், பெண்கொலைத் தீவினை யணுகாது; பதிக்குப் பாரியை பாதி யாத்துமாவென்றும், பத்தினி பதிக்கு வேறல்லளென்றும், முதனூல்களில் குறிக்கப்படுகின்றதன்றோ? பாரியையைப் பதிக்களித்து மகிழ்விப்பதை விடச் சிறந்த தருமம் வேறொன்றுமில்லையென்று தருமமுணர்ந்தோர்கள் உரைக்கின்றனர்களே? ஆதலின், என்னைப் பதியுடன் சேர்த்துச் சிறந்த தருமத்தை யடைந்தருள்க; இவ்வண்ணம் என்னைப் பதியுடன் சேர்ப்பீராகில், இது நல்வினையே யாகுமல்லது, தீவினை யாகாது; கொலைசெய்த பாவமும் சேராது; இவ்வண்ணம் நாதனின்றித் துயருற்று வருந்துகின்ற என்னைக் கொலைசெய்து பதியுடன் சேர்த்து இன்புற்று வாழுமாறு செய்தருள்க, யான் மதயானைபோலுலாவுகின்றவரும், வானரப்படைகளனைத்துக்கும் இறையவரும், மிகவும் புத்தி யுடையோரும், சிறந்த பொன்மணி மாலை யணிந்தவருமாகிய என்

கணவனை விட்டுப் பிரிந்து வருந்தி நெடுங்காலம் வாழவுற விருப்பங் கொள்ளுகின்றிலேன ; எனறிவவண்ணமுரைததுப் புலம்பினள. பெருமா ளும தாரை யுரைசெயத வாக்கியஙகளை யெல்லாங் கேட்டருளி யவளைத தேற்றி யவளை நோக்கிக் கேளாய் வீரபத்தினியாகிய தாரையே ! நீ யுலக வழக்கத்திற்கு விருத்தமாக எணணமுறறக ; எல்லாவுலகங்களும் தெய் வத்திலுைலியற்றப்பட்டு அதன சங்கறபபடி நடபபன வல்லவோ ? ஒருவர்க குத் துன்பம நோவதும, இனபம் நோவதும், தெயவசெயகையேயென்று யாவரும் உரைக்கின்றனர்களல்லரோ ? மூவுலகத்தவா தெயவத்திலுைலளிக கப்பட்ட துன்பத்தையோ இன்பத்தையோபெற்று அதறகு வசப்பட்டிருக் கின்றனர்களே யன்றித் தெயவத்தை மீறி நடபபவர் ஒருவருமிலர் ; ஆதலின், தெய்வத்திலுைல் அளிக்கப்பட்ட முன்போன்ற இன்பங்களையும் அடைந்து மகிழவாய் , உனது மகனும யுவராஜனுகி மகிழவான்; இவ்வண் ணமே தெயவத்திலுைல் ஸங்கற்பிக்கப்பட்டுளது ; ஆதலின, நீ துனபுறற்க; ரணசூரன மனைவியாகள இவவண்ணம வருநதிப புலம்பார்களே ! என்று அருளிச்செய்து தேறறியருளினா. தாரையும இவவண்ணம பெருமாளாலே தேறறப்பட்டவளாகிச் சோகத்தை யுளளடககி மனநதோநது மௌன மடைந்தனள

கிஷ்கிந்தாகாண்டத்தில் இருபத்துநானகாவது சருக்கம்
முற்றிற்று.

---

தனிசலோகி—புஜயுததததாலும, வாகயுததததாலும, வாலியைசசென்று கோ ன்று வெறறிகொணடு பெருமாள நிறகிறவளவிலே பாதருவதஜனிதமான சோகக குரோதஙகளாலே விகருதையாய எனனுணமகனைககொனறவனை வாயாற வெயய வேணுமெனறு கட்டி யுடுதது வநத தாரையானவள பெருமாளைககணடு அவருடைய மகிமையினுலே கோபநதணிநது ஸததுவகுணநதலையெடுதது அதனகாரியமான ஜஞானம்பிறநது தெளிவுறற சிநதையளாகையாலும, அவவஸதவை யொரு போகி யாக ஸாக்ஷாதகரிதது நிரணயமபணணி, வெயயபபுகக வாயாலே வாழததுகிறுள. பகவதஸாக்ஷாதகாரம்பிறநதால பிரதிபநதகம்போய ததுவாநுபவமபணணக குறை வில்லையிறே ? ஸ்ரீவால்மீகிபகவான, அலலாத ரிஷிகளையும், வேதஙகளையுமபோலே தாநதாம் பகவானுடைய பரதவோபபாதனமபணணததுடஙகி வசனாநதரஙகளிலே ஸாமய சஙகை பணணுமபடியாவது, தேவதாநதரஙகளினுடைய ஆதிககியசங்கை பண்ணுமபடியாவது, பூாவாபரவாககியங்களும தாமிகராஹக பரமாணஙகொணடு ஸாமானாதிகரண்ய வாகயஙகளுககும், அநதாயாமி பாயநதானுஸநதானத்தாலே எனறும், அவ்வோதேவதைகளைசசொலலுகிற ப்ரதேசஙகள தானும தத்வபரமனறு ; பரசம்ஸாபரமென்றும், ஆகாச, பராண, வாமதேவேநதர ப்ரஹ்லாதாதிகளுககுப பரத்வம்வரிலாயித்து ; ருத்ராதிகளுககுப பரதவம் வருவதெனகிற துல்யநயாயத் தாலும் உபபாதிக்கவேண்டி கலேசபகுளமாயிராதபடி ஆணபெண்ணடங்கலும் பிர சித்த வைபவமுடையவர் பெருமாளெனறு அறிவிக்கைக்காக தாராங்காதிகளை யிட்டுத் ததவநிர்ணயம் பண்ணுகிருன.—இதில இத்லைதக்கு முனபு கண்டறியா திருக்கச்செயதேயும், திருமேனியில ஸவயம்வரித்துக்கிடக்கிற ராஜலக்ஷணங்களா லும், பெருமாளுக்கு அஸாதாரணமான கண்ணழகாலும், என்னுடைய பர்த்தாவைக் கொன்ற பெருமாள் இவர்தானென்று அறிந்தாளென்று ஸௌலப்யத்தி லொரு

யோஜனையும், ஸௌலப்ய சிஹ்னங்களாலே மறைந்திருக்கச்செய்தேயும், ஊகிக்கத் தக்க பரத்வகுணங்களாலும், பரத்வ ஸூசகமான திருக்கண்களாலும், கண்டவாற்றாற்றனதே யுலகே நின்றனென்னும், நிழலெழுகிற புருஷகார பரார்தான்யத்தாலும், இச்சக்கரவர்த்தித்திருமகனார் அப்பரவஸ்துதானென்று அறிந்தாளென்று பரத்வத்திலே ஒரு யோஜனையுமிறே? அவ்விரண்டையும் சோதத்து யோஜிக்கிறது; (த்வம்) இவளுடைய பாதருபகதியிருக்கிறபடி ராஜாக்களையும் நீயெனகிறாள். (த்வம்) மேலே அப்ரமேயச்ச என்று தொடங்கி ஏறப்புகுகிற குணபாரத்துக்கு அதிஷ்டானமுண்டாம்படி ஆச்ரயந்தன்னைப் பாரிக்கிறாள். (த்வம்) அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணங்களுடைய ஒரு சிராங்கையாம்படியான ஸ்வரூபத்தின் கன மிருந்தபடியேன்; (த்வம்) ராவண துந்துபி முதலானோர்களை யகப்படத் தலையழித்த வாலியைக்கொன்று வெற்றிகொண்டு ஒன்றுஞ்செய்யாதாரைப்போலே நின்ற நிலை யென்னென்றாள் (த்வம்) வாலிக்கஞ்சிக் கிடங்கடைந்து கிடந்த மஹாராஜருக்கப்பட வெற்றிகொடுத்த சரணாகதவத்ஸலரான நீர் (த்வம்) பெண்களும், இளையோர்களுமான நாங்களும் அகப்பட மதியாதே வந்து இடும்படியான நீர் (த்வம்) ஒரு வஸ்துவை வேறு வஸ்துவாக்குமாபோலே வாயாற வெய்யவந்த என்னை வாழ்த்தும்படி பண்ணிவைத்த நீர் நீ வாழ்த்துகைக்கு உருப்படாயாகில், அது தன்னைத் தொடங்கலாகாதோவென்ன? (அப்ரமேய:) உம்மையுமறியாதே என்னையுமறியாதே முகங்கொள்ளலாமோவென்று பார்த்தேன்; அது முகங்கொள்ளவொண்ணுததாயிருந்தது; (அப்ரமேய:) நானே யன்று வேதமும் அகப்பட மீளும்படியன்றோ? தேவரை அளவிடக்கூடாமையிருப்பது (அப்ரமேய:) ப்ரமைக்கு விஷயமாவது, ப்ரமேயமிறே? ப்ரமையாகிறதுதான் நன்று அனுபவித்தலிறே? அதாவது, ப்ரத்யக்ஷாநுமானுகமஜன்யஜ்ஞானமிறே? அம்மூன்றுக்கும் விஷயமல்லீராயிருந்தீர், (அப்ரமேய:) ப்ரமாணங்களுக்கு விஷயமல்லீரென்னுமிடஞ் சொல்லவேண்டுமோ? தேவர் மகிமையை யளவிட ஸர்வஜ்ஞரான தேவரால்தான் முடியுமோ? நித்யமாகையால், காலத்தினால் அளவில்லை; விபுவாதலின், தேசத்தினாலும் அளவில்லை; எல்லாவுயிர்களும் தேவர்க்கு சரீரபூதங்களாகையாலே வேறே சேஷியில்லாமையால், வஸ்துவினாலும் அளவில்லை; (த்வமப்ரமேயச்ச) என் கண் முகப்பே நிறக்கச்செய்தேயும் எட்டப்போகிறதில்லை; இவன் என்று சொல்லும்படி கிட்ட இருக்கையிலும், அவனென்று சொல்லும்படி அளவிடவரியராகின்றீர், கண்ணிட்டுப்பார்த்தவாறே எளியீராயிருந்தீர், நெஞ்சிட்டுப்பார்த்தவாறே அறியீராயிருந்தீர்; கையும் விலலுமாய் எளியீராயிருக்கிற நீர் கையும் சங்குசக்கரங்களுமான பரவஸ்துவாயிருந்தீர்; பரத்வம் எட்ட ஒண்ணாதென்றிருந்தோம்; ஸௌலப்யந்தானும் எட்டப்போகிறதில்லை; ஒரு பரிகரமன்றிக்கே தனிமைப்பட்டாப்போலேயிருக்கிற நீர் அபரிமித பரிகரரைப்போலே உள்கொள்ள வொண்ணாதபடியாயிருந்தீர்; பிதாவின் நியோகத்தாலே தாபஸராய் வனவாஸம்பண்ணப்போந்தீர்; விராதகரகபந்த வாலிகளைக்கொன்று திரியாநின்றீர்; உம்முடைய நினைவும் செயலும் அறியிடப்போகிறதில்லை; அந்தஃகரணத்துக்கு கிட்டவொண்ணாதென்றொழிந்தால் பாஹ்யகரணந் தனக்கெட்டலாமோவென்றிருந்தோம்; (துராஸதச்ச) அதுவும் செய்யவொண்ணாதபடியாயிருந்தது; மனஸ்ஸால் கிட்டவொண்ணாததையோ? சரீரத்தால் கிட்டலாகிறது; நல்வழியே போவார்க்குக் கிட்டலாமத்தனைபோக்கி, வழிகெட்டு நின்றவர்களுக்கு ஒருக்காலும் கிட்டவொண்ணாதாயிராநின்றது; (துராஸத:) ஷத்ஸ்விசரணகத்யவஸாதகேஷு, இறே - அப்படிக்கு விசரணார்த்தமாய் பொடியாக்கவென்று பார்த்தால் ஸூக்ஷ்மம் என்று ஸூக்ஷ்மவஸ்துவாகையாலே பொடியாக்கவொண்ணாது; கதியாய் நின்ற விடத்திலும், கடக்க வடிக்கவென்று பார்த்தால் என்

கும் பரநதளுகையாலே கடக்க வடிக்கப்போகாது, அவஸாதகமாய முடிக்க வென்று பாரததால நிததியமாகையாலே நாசம்பணணவொணணுது; வாலி வதருபித ரானவாகளும் வநது அடாநத பிரதி பணணலாமோவெனறிருநதோம்; அப்படி வருவார்ககு அணுகவுங்கூடவொணணுதபடியிருநதீா; இபபடி காவிதராய பாதார ராஜஜியங்களைப பறிததாளுவதாகக கொனறீரொனறிருநதோம; (ஜிதேநதரியசச) அப்படியனறியிலே, மஹாராஜாகருக் கொடுததபடியாலே விஷயசபலரன்றியிலே யிருநதீா; புலன்களும அடஙகாதே கணட விஷயஙகளிலே சபலஙகளாகையன் றிககே அவை உம்முடைய கீழே யடஙகும்படி அமுககி யாள வல்லீராயிருநதீர்; ஆரேனும் ஒரு புருஷனும, ஏதேனும் ஒரு ஸதிரீயைககிட்டினால ஏறிட்டுபபார்க்கக் கடவதாய் வாய்ததிருப்பது; அப்படியிருகக, நான இததனைபோது நிற்கிறவிடத்தில் முகமெடுததுப்பாராதே நிறபதே என்ன விரகதரோ இவா எனகிருள். நாட்டோ பதிககிலை படைததீரததனைபோககி நாட்டாளைபபோலே புலனகளுககு ஆள்பட்டு இருநதீரல்லீர்; இபபடி விரகதராயிருககிறவா நம்மை நலியானேன்; அதார்மிகரோ வென்றிருநதோம; (உத்தமதாமிகஃ) இநத வியாபாரமெலலாம் பரமார்ததமாக உபகரிககையாயிருநதது; தனககெனறு செயயுமவன அதமதாமிகன; தனககும் பிறருககுமெனறு செயயுமவன மதயமதாமிகன, பிறாககெனறு செயயுமவன உத தமதாமிகன, அனறிக்கே, தார்மிகன, உததாமிகன, உததரதார்மிகன, உததமதா மிகன, எனறு தாமிகாகளும் நாலவா, தாமிகராகிறா; வாணுச்ரமோசிததாம முடையவர்கள, உததாமிகராகிறா; பகதிமாககமுடையவா, உததரதார்மிகராகிறர்; எல்லாவுயிாகளுககுந தஞ்சமாயிருபபவா, உததமதாமிகராகிறா; புருஷகார வசீகார்யர், இபபடி உததமதாமிகராயிருநதீா;—ஒரு நோயஸஸாதனமான தாமமே யாய பல பாயநதமனறோவெனறிருநதோம; (அக்ஷயயகீர்திசச) மனனும் பெருழ் புகழாயிருநதீா; ஒருவராலும் மதிககவெணணுத புகழுடையீராயிருநதீா; அதாவது, தனிவீரனை வாலியைககொனறு தேடிபபடைதத புகழுககு, மறைநது கொனறீரொன றும, பிழையினறி கொனறீரொனறும, பயனினறிககொனறீரொனறும, இபபுடைகளிலே அநேகம் கணணழிவுஞசொலலி யழிககலாமோ வெனறு பாாததோம; தேவா என பர்த்தாவுககு அருளிச்செயத உததரஙகளினால அபபடி யழிககவொணணுத புகழுடை யீராயிருநதீா; இபபடி மாறுத புகழபடைககைககடியெனனெனறிருநதோம்; (விச க்ஷணச்ச) ஸாவசகதியுமுடைய தேவாககிதுவும் ஒரு ஏறறமோ? மேனமேலும் பதிலுரைத்து எஙகள வாததையடககவலல பொறிவாளராயிருநதீா; வாலியைக கொனறு மஹாராஜனைக கூட்டினீராகையாலே, நலலாரறிவீா, தீயாரறிவீர், இவ்வுல கத்தெல்லாமறிவீராயிருநதீா, இபபடி விசக்ஷணராகையாலே சததருசேஷங் கூடா தென்று அங்கதனையும முடிபபிபபீரோ வெனறிருநதோம; (க்ஷிதிக்ஷமாவான்) பொறுமையிலும் பூமியாயிருநதீா; வாலிமேலுறற கோபததினால் அங்கதனையும் என் னையுந் தொலையாதிது நிறறறகென்னெனறிருந்தோம்; (க்ஷதஜோபமாக்ஷஃ) உயிர்க் கெல்லாம் தாயாயளிக்கினற தணடாமரைககணணனெனறும், ஸர்வரக்ஷகதவஸூசக மான இக்கணணின்வைலக்ஷிணய மிருநதபடியெனகிருள. வாலிமேலுற்ற சீறறத் தால் தோறறிய கண் சிவப்புமாருதிருககினும் எனனைக்கண்டு கொலைசெய்யாதிருந்த தேன்; இநதக கண் சிவபபு பிராட்டியின பிரிவினாலோ? வாலிமேலுற்ற சீற்றத்தி னாலோ? மஹாராஜாமீதுளள அன்பினாலோ? தெரிகிறதில்லை; இன்குற்ற சகாரங்கள் இஙகு கூறுத திவ்விய கலயாண குணங்களையும சேர்ககின்றன; அபஹதபாப்மத்வ ாதிகளுககு எதிரததடாக வேறொரு எண்குணங்களையுங் காட்டினார். தனிசலோகி யிலே இது மிக விரிந்துளதாகையின், விரிவிற்கஞ்சித் தொகுத்துரைத்தனம்.

## இருபத்தைந்தாவது சருக்கம்.

### மஹாராஜர் பெருமாளுடைய கட்டளையின்படி அங்கதகுமாரன் முதலானவர்களுடன் வாலிக்கு ஸம்ஸ்காரஞ்செய்வித்து நீக்கடனையும் முடித்துவிட்டுப் பெருமாளருகில் வந்து சேர்ந்தது.

---

அநந்தரம் பெருமாள் இளையபெருமாளுடன் கூடி மஹாராஜர் முதலானோர்களுடைய சோகத்தினால் மிக்க சோகமடைந்து மஹாராஜர் தாரை அங்கதகுமாரன் முதலானோர்களை நோக்கிக் கேளீர் அன்பர்களே! சோகமுற்றுப் பரிதாபமுறுவதினாலே பொன்னாடுசேர்ந்த வாலிக்கு நலம் விளைவதில்லது; ஆதலின், சோகத்தையடக்கி மேல் நடக்கவேண்டிய காரியம் யாதுளதோ ? அதனைச்செய்து வாலி நற்கதியடையுமாறுசெய்க; எக்காலையிலும் உலகவழக்கம் யாதுளதோ ? அதனை யாவரும் செயல் வேண்டும்; ஒருவன் இறந்துவிடுகையில், கண்ணீர்விட்டழலவேண்டிய வழக்கமும் செய்யப்பட்டது; ஸர்வலோகநியாமகனான ஸ்ரீமந்நாராயணனை மீறி யொருசெயலும் எவராலும் செய்து முடிப்பதருமை; உலகத்தில் யாவும் உண்டாவதற்குத் தெய்வமே காரணம்; தெய்வமே எல்லாச் செயல்களுக்குந் துணையாகும்; எல்லாவுயிர்களையும் ஒரு செயலைச் செய்யும்படி யேவுதற்கும் தெய்வமே காரணம்; ஒருவனும் எச்செயல் செய்வதற்கும் கர்த்தாவல்லன்; ஒருவனை ஒருசெயல் செய்யும்படி யேவு தற்கும் திறமைகொண்டவனல்லன், எல்லோரும் ஈச்வரனுக்கு வசப் பட்டே யிருக்கின்றனர்கள்; எல்லாவற்றிற்கும் தெய்வமே தஞ்சம்; தெய்வமும் ஒருவர் நல்வினையுறுவதற்கும், தீவினை யுறுவதற்கும், உரிய காலத்தைக் கடந்து நடக்கின்றில்லது; தெய்வம் ஒருக்காலும் அழிகின் றிலது; ஆதலின், தத்தம் முன் வினையை யடைந்து ஒருவனும் தெய் வத்தை மீறி நடவான்; தெய்வமான ஸ்ரீமந்நாராயணனுக்கு இவர் இனத்தாரென்றாவது, இவர் வீரமுடையோரென்றாவது, இவர் தோழ ரென்றாவது, இவர் சுற்றத்தாரென்றாவது பக்ஷபாதஞ்செய்து தனது சங்கற்பத்துக்கு வேறாக ஒன்றுஞ்செய்தருளார். ஆதலின், பெருமாள் ஒருவர்க்கும் வயப்படார்; ஆகையால், எவரெவருடைய காலம் எப்படி யெப்படி முடிகிறதோ ? அது தெய்வச்செயலெனவே யறிந்து வருந்தா திருத்தல்வேண்டும்; அறம்பொருளின்பம் வீடு என்னும் நால்வகைச் சித்திகளும் ஸ்ரீமந்நாராயணனாலேதான் கிடைக்கும்; ஆதலின், வாலியும் இப்போது தன் முன்வினையின்பயனையடைந்தனன்; அன்றியிலே, அவன் அறம்பொருளின்பங்களையும் சேர்ந்தமையின், நற்கதியையே யடைந் தனன்; தருமத்தையே மேற்கொண்டு போரில் பின்செல்லாது வெற்றி கொண்டு உயிரைத் துரும்பாக நினைத்து மடிந்தமையின், அவன் பொன்

னும் பெறுவதிலும் ஐயமுளதோ? இப்போழ்து வாலி எந்தக்கதியை யடைந்தனனோ? அக்கதி மிகச் சிறந்தது; ஆதலின், வருந்தியதுபோதும்; இனிச் செய்யவேண்டிய கருமங்களைச்செய்க; என்று தேறறி யருளிச் செய்தனர். அப்பொழுதிளையபெருமாளும் சோகமுற்று வருந்துகின்ற மஹாராஜனை நோக்கி, மஹாராஜரே! பெருமாளிவவண்ணம அருளிச செயகையிலும், ஏன் துனபுற்று வருந்துகின்றீர்; உன் தமையனுககுச் சரமகைங்கரியங்களை விரைவாகச் செயவிக்கக்கடவீர். தாரையையும, அங்கதனையும் தேறறி யவர்களுடன சேர்ந்து வாலிக்கு ஸம்ஸ்காரஞ் செய்வதற்குப போதுமான உலர்ந்த காஷ்டங்களை மிகுதியாகக் கொண ருமபடி கட்டளைசெயதழைப்பிக்கககடவீர். அககடடைகளும சிறந்த சந்தனககட்டைகளாகவே யிருப்பது நனறு; மிக வருந்திப்புலமபுகின்ற இவ்வங்கதனையும் தேறறுக; இனி இந்நகரமெல்லாம் உனனதீனமாயின மையின, புன்மதிகொளளாமல பெருமதிபூண்டு தககபடி கட்டளைசெய்க; அங்கதன் சிறந்த மாலைகளையும, பலவகை யாடைகளையும, கந்தங்களையும், எண்ணெய் நெய முதலிய மற்றும வேணடிய திரவியங்களையும் கொணா வான்; வாரீர தாரரே! நீர வாலியை முதுகாட்டிறகுக் கொண்டுபோவ தற்காகச சிவிகையை விரைவாகக கொணர்க; எச்செயலும் விரைந்து செயவதே தகுதியானது; இப்படிபபட்ட தருணததிலே மிகவுந் துரை யுடன செயல்களைச்செயது முடித்தல்வேணடுமே; அச்சிவிகைக்கு வாஹகர்களும் ஸமர்த்தராகக்கடவாகள வாஹகர்கள மிகவும பலமுடை யோராகவேண்டுமே, எனறு அருளிசசெய்துவிட்டுப் பெருமாளுடைய அருகில வந்து நினறருளினா. தாரனென்னும் ஸேநாபதியும விரைவுடன கூடிக் கிஷ்கிந்தாகுகைககுள் புகுந்து சிவிகையை எடுப்பிததுககொண்டு புறத்திலே வந்து சிறந்த தோள்வலிகளுடையவர்களினாலே தாங்கிக கொளளப்பட்டதும், சிறந்த பக்ஷிவகைகளாகவும், செடி கொடி வகைக ளாகவும், சித்திரமெழுதி யலங்கரிக்கபபட்டதும, சிறந்த இனிய பீடங்களை யுடையதும், சிறந்த தேர்க்கு நிகராகியதும, சித்திரங்களின் வரிசைகளி னாலே அடர்ந்ததும், தேவவிமானம் போனறதும், சாளரங்களை யுடைய தும, அகலமாகவும், நீண்டதாகவும, விசுவகாமனாலே இயற்றப்பட்டதும், விளையாட்டுக்குரிய மலைபோன்ற சிகரத்தை யுடையதும், நன்றாகத் துடைத் தலங்காரஞ்செயயபபடடதும், சிறந்த மணியணிகளினாலும், முத்துவடங்களினாலும், சிறந்த மாலைகளினாலும் சிங்காரிக்கப்பட்டதும், குகைகளாகவும், காடுகளாகவும் செய்து இயற்றப்பட்டதும், செஞ்சாந்த மபபியதும், நறுமலர்கள் தூவபபட்டதும், தாமரை மலர்மாலைத் தோரா ணங்கட்டியதும், ஆகியப் பாலசூரியன்போல வொளிவிடுகின்ற தங்கச் சிவிகையைப் பெருமாளுக்கெதிரில் கொணர்ந்து சேர்த்தனன். இத்தன் மையதான சிவிகையைப பெருமாளும் கண்டு மகிழ்ந்து இளையபெரு மாளை நோக்கி, அடா தம்பி! விரைவாக வாலியை இச்சிவிகையிலேற்றி

முதுகாட்டிற்குச சேர்க்கும்படியும், தகனாதி ஸம்ஸ்காரங்களைச் செய்யும் படியும் செயயடா என்று நியமித்தருளினர். உடனே மகாராஜா் வாலியை யெடுப்பித்து அங்கதனுடன் அழுதுகொண்டே அசசிவிகையிலேற்று வித்து, உடனே அருகிலுள்ள தலைமையானவாகளை நோக்கிக் கேளீர் அன்பர்களே ! என் தமையருக்குக் கந்தபுஷ்பாதிகளாயுள்ள அலங்காரங் களினாலே அலஙகாரஞ்செயது அவருக்குத் தககபடி எல்லாசசடங்கு களையும் குறைவறச செயவிக்கக்கடவீர்கள். சிறந்த பலவகை மணிகளை யும மிகுதியாகக் கொடை யளிககக்கடவீர்கள். வானரர்களெலலோரும் ஆசந்திககுச சமீபத்திலே முனனே செல்லக்கடவர்களெனறு கட்டளை செயதனா. உடனே அவாகளும் மிகச செலவமுடைய வேந்தர்களுக்கு எவ்வண்ணம செயவாாகளோ ? அவ்வண்ணமே சடங்குகளையெல்லாஞ் செயவித்தனர்கள. தாரன் முதலிய வானராகளெலலோரும் அங்கதனைப் பிடித்துக்கொண்டு துன்புற்றுக்கொணடே சென்றனர்கள். தாரை முதலிய வாலியின மனைவியர்களும், பலாககணமபாடி யழுதுகொண்டே வாலி யைப் பினறொடர்ந்து சென்றனர்கள. அந்த வானரபபெண்கள் அப்போ ழ்து அழுகையில், அவர்களினுடைய அழுகுரலினாலே அங்குள்ள காடு மலை யாறுகளடஙகலும கூவி யழுதனபோலொலித்தன ; உடனே மலையி னின்றும் பெருகி வருகின்ற மலையாற்றினது மணற்குன்றிலே இவ்விடம் மிகவும் தூயதும், ஏகாநதமுடையதுமாகின்றதென்று அநேகம் வாநராகள் வாலிக்குச சிதை யடுககினர்கள. வாஹகாகளும் சிவிகையை யவ்விடத்தி லிறககி வருந்தி நினறனர்கள். அப்பொழுது தாரை தன் பர்ததா சிவிகை யிலே படுத்திருககககணடு அவன தலையைத் தனது மடிமேலெடுத்து வைத்துக்கொண்டு கடுந்துயரஙகொண்டு ஐயையோ ? வானரர்களெல் லோர்க்கும் நல்வேந்தரோ ! அந்தோ ? என் பிராணநாதரோ ! அய்யோ ? எனமேல் ஆவலும், அன்புமுடைய இனியரோ ! அந்தோ ? மிகச சிறந்த வரோ ! நீண்டிருண்ட திருத்தோள்களை யுடையவரோ ! அய்யோ ? என்னு யிர்க்காவலரோ ! நான் இவவண்ணம் வருந்திப் புலம்பி யழுதுவாக் காணீரோ ? இங்கெல்லோரும் துயர்கொண்டு வருந்துவதைக்கண்டு என் இனியமொழிகளை மொழிந்து தேற்றுகின்றிலீர். அந்தோ ? என் நாயகரோ ! தேவர் உயிர்மாண்டிருக்கையிலும், தேவருடைய திருமுகம் மகிழ்வுற்றதுபோல மலர்ந்து விளங்கி அத்தகிரியை யடைந்த கதிர வனுக்கு நிகரானவண்ணமுடையதாகிக் காணபபடுகின்றது ; அந்தோ ? என்னுயகரோ ! இந்த ஸ்ரீமந்நாராயணரோ ஸ்ரீராமசந்திரருருவங்கொண்டு

தேவரைப்பற்றி யழுகின்றனர்; இந்த ஸ்ரீராமனொருவராலேதானே ஒரு கணையினால் யாங்களெல்லோரும் கைம்பெண்களாயினோமல்லேமோ? அந்தோ என்னுயகரே! தேவர்க்கு மிகவும் பிரியமுள்ள இம்மனைவியர்களெல்லோரும் தேவரைத் தொடர்ந்து நெடுந்தூரம் நடந்து வருந்திப் புலம்புகின்றனர்களே? தேவர் ஏன அறிகின்றிலீர்; இப்போழது மஹாராஜர் வானரர்களெல்லோர்க்கும் தலைவராகி எதிரிலிருக்கின்றாரே? ஏன் காணுகின்றிலீர்; தாரன் முதலிய சேனபதிகளெல்லோரும் நகரத்தார்களுடன் வந்து உம்மைச் சூழ்ந்து வருந்துகின்றனர்களே? இவர்களுக்குத்தக்கபடி மரியாதை செய்து விடைகொடுத்தனுப்புக; பின்பு, நாமிருவரும் மற்றுள்ள தேவர் மனைவியர்களுடனும் கூடித் தேன்பொழியுஞ் சோலைகளிலே இன்புற்று மகிழுவோம், என்று புலம்பினள். இவ்வண்ணஞ் சோகத்தினால் புலம்புகின்ற தாரையை மற்றுள்ள வானரர்கள் பற்றியெடுத்து எழுந்திருக்கச்செய்து வருந்தி நின்றனர்கள்; அங்கதனும் மஹாராஜருடன் அழுதுகொண்டே வாலியைச் சிதையிலேற்றி விதியின்படி அக்கினி ப்ரதானஞ்செய்து சடங்குகளை முடித்து நீரிலாடி நீர்க்கடனை முடிப்பதன்பொருட்டு நன்னீரையுடைய நதியை யடைந்தனன். உடனே மஹாராஜர் தாரை முதலிய யாவரும் அங்கதனை முன்னிட்டுக்கொண்டு நீரிலாடி வாலியினம்பொருட்டுத் தருப்பணஞ்செய்தனர்கள். மஹாராஜர் துன்புற்றிருந்தமையின், பெருமாளும் துன்புற்று வாலிக்குச் செய்யவேண்டிய சரமகைங்கரியங்களையெல்லாம் விதியின்படி செய்வித்தருளினார். மஹாராஜரும் வாலிக்குச்செய்யவேண்டிய சடங்குகளையெல்லாம் முடித்துவிட்டுப் பெருமாளுடைய அருகில் வந்து சேர்ந்தனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் இருபத்தைந்தாவது சருக்கம் முற்றிற்று.



# இருபத்தாறுவதுசருக்கம்.

மழைகாலம் நேர்ந்தமையின், அது முடியுமளவும் சீதையைத்தேட முடியா தாதலின், இப்போழுது நீர் பட்டாபிஷேகஞ் செய்துகொள்க வென்று பெருமாள மகாராஜருக்கு அருளிச்செய்து பட்டமும் கட்டுவித்து, அங்கதகுமாரனு க்கும் இளவரசுப்பட்டங் கட்டு வித்தருளியது.



அநந்தரம மஹாராஜா வாலிக்குச் செய்யவேண்டிய கிரியைகளை முடித்துவிட்டு ராவானையுடன வானராகளெல்லோர்களாலும் சூழப் பட்டுச சோகத்தினல் வருந்தப பெருமாளுடைய அருகில வந்து கைகு வித்து நிற்கையில், மேருமலைபோலப பருத்துயாந்தவரும், பாலஸூரியன் போன்ற முகமுடையவருமாகிய சிறியதிருவடி பெருமாளுக்குத் தண்டம் ஸமர்ப்பித்து அவரை நோக்கி, ஸ்வாமி! தேவருடைய அனுக்கிரஹத் தினல மஹாராஜா தாதை மூதாதை முதலிய குலமுறையாக வந்த வாநர ராஜஜியத்தைப பெறறகரியதாயினுமப பெறறனா. ஆதலின், தேவர் இப் போழுது அனுமதிசெயதருளுமாயின், மஹாராஜா கிஷ்கிந்தைக்குள் சென்று ராஜகாரியங்களையெல்லாம திட்டஞ்செயது குறைவற நடப்பித்து இனத்தார சுற்றத்தார தோழா முதலானோர்களுடன் கூடி விதியின்படி அபிஷேகம்பூண்டு நவமணி யணிகளாலும, நறுமலா மாலைகளாலும், தேவர்க்குப்பூஜைசெயது மகிழ்வாா, ஆதலின், தேவா மஹாராஜருடைய தோழமையைப் பாராட்டியருளித் தேவரும கிஷகிந்தைக்குள்ளே எழுந் தருளி வானராகளெல்லோரையும் மகிழவித்தருளுக; என்று விஜ்ஞா பனஞ்செயதனர் பெருமாளும அதைத் திருச்செவிசார்த்தித திரு வடியை நோக்கிக் கேளீா அன்புள்ள மாருதி! பதினைகுவருஷங்கள் கழியுமளவும யான் நகரிக்குளளாவது, ஊருக்குளளாவது புகேன்; இவ் வண்ணம் எந்தநதையின கட்டளையாதலின, அதனை யொருக்காலும் தவிரேன்; ஆதலின, மஹாராஜர் மிகச செல்வமுடைய கிஷ்கிந்தைக்குட் புகுந்து விதியின்படி விரைவாகப் பட்டாபிஷேகஞ் செய்துகொள்ளக் கடவர். அவ்வண்ணம நீவிரெல்லீரும சேர்ந்து நடப்பிக்கக்கடவீர்கள் என்று அருளிச்செயது மஹாராஜரையும நோக்கிக கேளீர் தோழரே! உம்முடைய தமையனர் குமாரனும், தோளவலியினல் உமக்கு நிகரான வனும், பெருந்தன்மையுடையவனும், இளவரசுப்பட்டத்துக்கு உரி யோனுமாகிய இந்த அங்கதனுக்கும் இளவரசுப்பட்டங் கட்டுவிக்கக் கடவீர். இப்போது கார்காலமாதங்கள நான்கில முதலாவதான ஆடி

மாதம் இப்போது நேர்ந்துளது; இது முதல் நான்குமாதங்களும் மழை பொழிவதினால் போர்செயவதற் குரியனவல்ல; ஆதலின், யான் இந் நான்குமாதங்களையும் லக்ஷ்மணனுடன் கூடி இம்மலையிலேதானே வாழ்ந்து போக்கிக்கொண்டிருப்பேன; கார்த்திகைமாதம் பிறப்பதன்முன் நீர் ராவணனைக் கொலைசெய்ய முயற்சி செய்க; நம்மிருவர்க்கும் இது தான ஏற்பாடு, இப்போது நீர கிஷ்கிந்தைக்குட்சென்று அபிஷேகஞ் செய்து கொள்க; தோழர்களையும மகிழ்ச்செய்க, என்று அனுமதி செய்தருளினர். மஹாராஜரும் உடனே பெருமாளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அநேகமாயிரம் வானரர்களினால பணிந்து சூழப்பட்டுக் கிஷ்கிந்தைக்குள புகுந்து தம்மைக்கண்டு தலைவணங்கித்தொழுத நகரத்தாரெல்லோரையும தக்கபடி மரியாதைசெய்து ஆதரித்து வாலியின் அந்தப்புரஞ்சேர்ந்து முற்றும்பார்த்து ஏற்பாடுசெய்து புறத்தில வருகையில, வானரர்களெல்லோரும தேவர்கள தேவேந்திரனுக்குக் கொப்பாக அபிஷேகஞ் செய்யவேண்டுமென்று நிச்சயஞ்செய்து வெண்குடையினையும், வெண்சாமரங்களையும், பற்பல சிறந்த மணிகளையும், நவதானியங்களையும், பற்பல ஔஷதிரஸங்களையும், பாலுள்ள மரங்களின் முளைகளையும், மலர்களையும, வெண்பட்டுகளையும், வெண்சந்தனத்தையும், நன்மணமுள்ள மாலைகளையும், நிலத்தாமரை மலர்களையும, திவ்விய சந்தனங்களையும், பலவகை கந்தங்களையும், அக்ஷதங்களையும், தங்கத்தையும், யவதானியங்களையும், தேன் நெய்களையும, தயிரையும், புலித்தோல்களையும், பன்றித்தோலினால் செய்த பாதரக்ஷைகளையும், பூசிக்கொள்ளுந திரவியத்தையும், கோரோசனத்தையும், மனசிலையையும கொணர்ந்தனர்கள. சிறந்த மகிழ்ந்த பதினாறு கன்னிப்பெண்களும் வந்து சேர்ந்தனர்கள். அநந்தரம் வானரர்களெல்லோரும் ஆடையாபரணங்களாலும, பலவகை யுண்டிகளாலும வேதியர்களை மகிழ்ச்செய்து, தீயை வளர்த்துத் தருப்பங்களைப் பரப்பி விதியின்படி மந்திரத்தினால் ஹவிஸ்ஸை ஹோமஞ்செய்து, தங்கமயமான கால்களை யுடையதும், சிறந்த சித்திராஸனமுடையதும், பலவகை மாலைகளினால் அலங்காரஞ்செய்யப்பட்டதும், மிக வழகியதுமாகிய மேல் மாளிகையிலே சிறந்த சிங்காஸனத்தைப்போட்டு கடல்களினின்றும், பலவகை நதிகளினின்றும், மற்றுள்ள புண்ணிய தீர்த்தங்களினின்றும் தீர்த்தங்களை யழைப்பித்து, தங்ககுடங்களிலவைத்து மந்திரித்து மஹாராஜரை யந்தச் சிங்காஸனத்திலுட்காரச்செய்தனர்கள. அப்போது கஜன், கவாக்ஷன், கவயன், சரபன், கந்தமாதனன், மைந்தன், துவிவிதன, அநுமான், ஜாம்பவான், நளன என்னும்,

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

## மஹாராஜர் பட்டாபிஷேகம்.

అభ్యంషిఞ్చన్త సుగ్రీవం ప్రసన్నేనసుగన్ధినా
సలిలేనసహస్రాక్షం వసవో వాసవం యథా॥

அப்யஷிஞ்சந்த ஸுக்ரீவம் ப்ரஸந்நேந ஸுகந்திநா
ஸலிலேந ஸஹஸ்ராக்ஷம் வஸவோ வாஸவம் யதா

மந்திரிகள் பத்துப்பேர்களும், நன்மணமுள்ள தெளிந்த புண்ணிய தீர்த்தத்தினால் வஸுதேவதைகள் தேவேந்திரனுக்குப்போல மஹாராஜர்க்கு ஆயிரம் கண்களையுடைய ஸஹஸ்ராரம் என்கிற தட்டினால் அபிஷேகஞ் செய்தனர்கள். அதனைக் கண்ணுற்று வானரர்களெல்லோரும் மகிழ்ந்து புகழ்ந்து களித்தனர்கள். பின்பு, மஹாராஜரும் பெருமாளுடைய வாக்கியத்தின்படி அங்கதகுமாரனை மகிழ்ந்து தழுவிக்கொண்டு இளவரசுப்பட்டங்கட்டுவித்து அன்பு செய்தனர். அதைக்கண்டு வானரர்கள் நன்குநன்கென்று புகழ்ந்து, பெருமாளையும், இளையபெருமாளையும் சிலாகித்துத் துதி செய்தனர்கள். அப்பொழுது மலைக்குகையிலுள்ள அந்தக் கிஷ்கிந்தாபுரியானது, மணக்களிப்பும், மேனியழகுமுற்ற ஜனங்களை யுடையதாகியும், தோரணங்கட்டிச் சூளிகைநாட்டப்பட்டதாகியும், மிக வழகியதுமாகித் திகழ்ந்தது; மஹாராஜரும் இங்கே நிகழ்ந்த செய்திகளை யெல்லாவற்றையும், பெருமாள் எழுந்தருளியிருக்குமிடஞ் சென்றும் அறிவித்துவிட்டு அவரிடத்தில் விடைபெற்று மீளவும் அந்தப் புரம் சேர்ந்து ராஜ்ஜியத்தையும், மனையாளான ருமையையும் பெற்று விண்ணுலகினில் தேவராஜன்போல மகிழ்ந்தின்புற்று வாழ்ந்துகொண்டிருந்தனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் இருபத்தாறாவது சருக்கம்

முற்றிற்று.

---

கார்காலம் ஆவணி புரட்டாசி இரண்டுமாதங்களே யாதலின், நான்கெனபது எப்படி சரியாகுமெனின், மழைகாலத்துக்கு முன்னொருமாதமும், பின்னொருமாதமும் மழையிருக்குமாதலின், ஆடி ஐப்பசியையும் கூட்டிக் கார்காலமென்றனர்; என்று சிலர்கூறினர்கள். பதினைந்து தினமான ஒருபக்ஷத்துக்கே மாதமென்று வேத

## இருபத்தேழாவது சருக்கம்.

**பெருமாள் இளையபெருமாளுடன் மழைகாலத்தை மலைக்குகையில் போக்கிப் பிராட்டியாரை நினைந்து வருந்துகையில், இளைய பெருமாள் சோகந்தணியத் தேற்றி யருளியது.**

---

இப்படி மஹாராஜா பட்டாபிஷேகம்பூண்டு பெருமாளிடத்தில் அனுமதிபெற்றுப் பரிஜன பரிவாரங்களுடன் கிஷ்கிந்தாகுகையை நோக்கிச் சென்ற பின்னர், பெருமாளும் இளையபெருமாளுடன் புறப்பட்டு மான், புலி, கரடி, சிங்கம், குரங்கு, கோலாங்கூலம், பூனை முதலிய விலங்குகளினால் சூழப்பட்டும், காடு, மரம், செடி, புதர்கள் அடர்ந்தும், எந்நாளும் குளிர்ந்தும், மணங்கமழ்ந்தும், தெளிந்தும், தூய்மை கொண்டுமுள்ள நன்னீருடைய குளங்களையுடையதும், நீருண்டகொண்டல் போல நீண்டிருண்டுயர்ந்ததுமாகிய பிரஸ்ரவணமெனனும் மலையை யடைந்து அதன் சிகரத்தில் வியன்றகன்ற தோர் குகையைக் கண்டு இக்கார்

---

த்தில பெய்ய கூறப்பட்டுளதாயினு, ஆவணி புரட்டாசி இரண்டுமாதங்களும நான்கு மாதங்களெனப்பட்டன; என்று சிலர் கூறினார்கள்

ஐப்பசி மாசத்திலேதானே சீதையைத்தேட முயற்சிசெய்யும்படி பெருமாள் கட்டளைசெய்தனர்; அப்போது வாநரர்களைச் சோபபதற்காகவே கட்டளையிட்டருளினர். சுயம்பரபாபிலத்தினின்றும அனுமான் அங்கதன் முதலிய வாநரர்களெல்லோரும் புறப்பட்டவுடன் இளவேனிற்பருவம் ஸமீபித்ததாகக் கூறுகின்றமையின், இக்காலங்களின் விவரம் முறையே கூறப்படுகின்றது. ஒருபக்ஷத்தில் இளவேனிற்பருவம் பங்குனி சித்திரை இரண்டும் என்று உரைக்கப்பட்டன. பெருமாள் சித்திரைமாஸத்தில் அயோத்தியினின்றும் புறப்பட்டருளியது; அகஸ்தியாசிரமத்திற்கெழுந்தருளுகையில், பத்துவருஷங்களாயினவென்று கூறப்பட்டன பஞ்சவடியில் மூன்றுவருஷம், பதினுன்காவது வருஷம் சித்திரைமாதத்தில் சூர்ப்பணகையின் நாசியை யறுத்ததும், கராதிகளைக் கொலைசெய்ததும், அம்மாசத்திலேதானே ராவணன் பிராட்டியாரைப் பறித்தது. ஆடிமாசத்தில் வாலியைக்கொலைசெய்தது முன் பனிப்பருவத்தில் சேனைகளைச்சேர்த்தது. மார்கழி மாசத்தில் வாநரர்களை யனுப்பியது. பங்குனிமாசத்தில் சுக்லபக்ஷத்திரயோதசியில் சிறியதிருவடி கடலைத் தாண்டியது. மறுநாள் மீண்டு வந்தது. பூர்ணிமையில் பெருமாள் சேனைகளுடன் புறப்பட்டருளியது. என்று முறை யுணர்க. இனிமேல் யுத்தகாண்டத்தில் கூறப்படுகின்றன.

முற்காலத்தில் வாநரர்களும நரர்களைப்போலவே இரண்டுகால்களினால் நடந்து கொண்டிருந்தனவென்று தோற்றுகின்றது. பாஷையும் வடமொழியே? அன்றியில், இவர்கள் தேவாம்சமாகையால், இவர்கள் மாத்திரம் மனிதர்போலிருந்தனர்களெனினும் ஒக்கும்; வாநரர்களுள்ளும பிராஹ்மணாதி ஜாதிகளுளவாகும்; அன்றியில், அங்குள்ள வேதியர்களை யழைப்பித்து அபிஷேகத்திற்கு ததீயாராதனஞ் செய்வித்தனர்களெனினும் ஒக்கும்.

காலத்தைக் கழித்து வாழவதற்கு இஃது தக்க இடமென்று தேர்ந்து, இளையபெருமாளை நோக்கிய பாரடா தமபி ! இந்த மலைக்குகையானது மிக வழகியதும், விசாலமாகியதும, மங்கமாருத முடையதுமாயிருக்கிறது; இக்காரகாலங்களை இங்குறைந்து போக்குவோம; இம்மலைசசிகரமும் மிக வுயர்ந்தும், கறுத்தும, வெளுத்துமிருககின்ற பலவகைச சிலைகள் பொருந்தியும், பற்பலதாதுககள நிறைந்தும், குகை புதா முதலியவைகளுற்றும், பற்பல மரஞ் செடி கொடிகளடர்ந்தும், பறபல பறவைகளொலித்தும், குந்த திந்துக சிந்துவார மல்லிகா மாலதீ குரண்ட கதம்பாரஜுநஸர்ஜ காதிகளான செடி கொடிகள மலாந்தும் திகழகின்றது ; இந்தத் தாமரை யோடையும் மலாந்த தாமரைமலாகள நிறைநது இககுகைக்கு அருகிலே விளங்குகினறது ; இக்குகை இமமலையின மேறகுத்திசையில் தென மேற்குமுகமாக வாயிலை யுடையதாய பினபுறததிலுயாநதிருககின்றமைம யின், கீழகாறறடிக்காமல் கயமெனறிருக்கும, இக்குகையின வாயிலில வியனறகன்ற கலலும், ஏற்றத்தாழவின்றி மழுமழுவென்று வழுழுண்டு பொடிசெயதிழைதத மெயயின குழைவபோல மின் மின எனறு திகழ கினறது; அடா லக்ஷ்மணா ! இம்மலைசசிகரததின் வடபுறத்தைப் பாராய்; அது அஞ்சனத்திரள்போலவும், நீாகொணட கொணடலபோலவும் உயர்ந்து விளங்குகினறது; தெனபுறததிலோவெனில், வெளளைககல்லொன்று கயிலைமலைச சிகரமபோல உயாநதிருககின்றது , இககுகையின் கீழ்புறத்தில் கீழ்த்திசையை நோக்கிய பெருகி விழுகினற இந்நதி மூன்று சிகரங்களையுடைய திரிகூடமலையில் பெருகி விழுகின்ற கஙகைபோல விளங்குகின்றது; சம்பக சாம்பேய திலகா மலக தாலத மால ஸரள வகுளா திமுக்த பதம ககேதக தவ வாநீர திமிச திரிட நீப வேத்ர கருத மால ஹிந்தாலாதியாயுள்ள பலவகை மரஙகளும் அநநதியின் இருகரைகளிலும் செழித்துத் தழைத்து விளஙகுகினறன ; இவைகளினல இந்நதி தனிர் மலர்களையே வஸந்தகாலததில அணியாக அணிந்துகொண்டுலாவுகினற தருணிபோலத்திகழகின்றது; பலவகைப் பறவைகளும, தனிததனி காந்தைகளுடன்கூடி மகிழ்ந்து கூவுகினறன , மனறகுனறுகளும், அன்னப்புள், சாரஸப்புள, சககரவாகம முதலிய நீர்பபறவைகள நிறைந்தொலிக்கின்றன ; ஆதலின, இந்நதி மதமுற்ற மானினி மனமகிழந்து நகைக்கின்றாற்போல விளங்குகின்றது ; இஃது சிலவிடத்தில் கருநெய்தல்களினும், சிலவிடத்தில செந்தாமரை செங்கழுநீர்களினும், சிலவிடத்தில் வெண்டாமரை குமுதங்களாலும் நிறைந்து மறைக்கபபட்டு விளங்குகின்றமையின், பலகலனுமணிந்த காந்தைபோல வொளிக்கின்றது; இது பல வகைப்பறவைகளாலும ஒலிககபபடடும், மாமுனிவர்களினலடையப்பட்டும்; மிக வழகுற்றிருக்கினறது காணய் ; கடமபமரஙகளும், சந்தனமரங்களும், தொடுக்கப்பட்டனபோல அடர்ந்து விளங்குகினறன ; அஹோ இவ்விடம் மிகவும் மனமகிழத்தக்கதாகின்றது; ஆதலின், நாம் இவ்விடத்

திலேதானே நன்கின்புறறு வாழ்வோம்; இவ்விடத்திறகு மஹாராஜர் வாழும் [illegible]கிந்தாபுரியும் நெடுநதூரமனறு; அவ்விடத்தில கூவுகினற வா[illegible]ன் சிங்கநாதமும், தேவாதித்திரகோஷமும் கேட்கப்படுகின்றன வலல[illegible]! மஹாராஜா சிறந்த வாநரராஜ்ஜியத்தையும், மிகுந்த செல்வத்தையும, மனத்துக்கினிய மனையாளையும் பெறறு நனகு மகிழவுற்று வாழவார்; எனறிவ்வணணம் அருளிச்செய்து இளையபெருமாளுடன் அம்மலையெங்குஞ்சுற்றிப பறபல விநோதஙகளையுங் கண்டு அவவிடத்திலேதானே வாழந்தருளினா. இவவணணம அவவிடம பறபல விநோதங்களை யுடையதாகியும், பெருமாளுககுக் கிஞ்சிததாயினும இன்பந்திலது; தம்முயிரினும் பிரியமுள்ள பிராட்டியாரைப் பறிகொடுதது நினைந்து வருந்துகையில், இனபமெனபது எங்குளதாகும; பெருமாள இரவுகளில இனிய சயநத்தில படுததிருககினும, கீழததிசையில் உதிககின்ற சந்திரனைக் கணடு விரஹததீபறறி யெரித்தமையின, இனபுறறுத் துயிலகொணடிலர்; இவவாறு நாடோறும பெருமாள துயிலின்றிச் சோகமுறறு வருந்துகையில், இளையபெருமாளும் மிக வருநதி அய்யனை நோக்கிக் கேடடருளீர் தனிவீரரே! தேவரீர் இதுகாறும் துன்புறறது போதும, தேவரும் இவவண்ணம் சோகிப்பது தகுமோ?—

శోచతోవ్యవసీదన్తి సర్వార్థావిదితంహితే
భవాన్క్రియాపరోలోకే భవాన్దైవపరాయణః
ఆస్తికోధర్మశీలశ్చ వ్యవసాయీచ రాఘవ॥

சோசதோவயவஸீதநதி ஸாவாாததாவிதிதமஹிதே
பவானகரியாபரோலோகே பவானதைவபராவண:
ஆஸதிகோதாமசீலசச வயவஸாயீசராகவ.

சோகமுற்று வருந்துபவர்களுககு எல்லாப்பயனகளும அழிந்துவிடுகின்றன; இவவிஷயம தேவா திருவுளமறிந்ததேயன்றி, வேறில்லையே? அன்றியிலே, தேவர் இவவுலகினில் புருஷகாரத்தை முதன்மையாகவுடையவரும், தெய்வஸங்கற்பமும் அதறகுத் துணையென வறிந்தவரும், மறுமையுளதென்னும் உண்மையை யறிந்தவரும், தருமத்தையே இயல்பாகவுடையவரும், முயறசி யுடையவருமாகின்றீரல்லீரோ? முயற்சியிலாதோர் பகைவரை வெலவதெவ்வண்ணம், மேலும் கபடமுடைய கொடிய அரக்கர்களைத் தேவர் மிக முயற்சிசெய்தே கொலைசெயல்வேண்டும்; தேவர்தான் அவர்களைக் கொலைசெய்யவல்ல தோள்வலியுற்றவர்; ஆதலின், தேவர் இந்தச சோகத்தை வேருடன் களைந்தழித்து அழியாமுயற்சியை மேற்கொண்டருள்க; பின்பு, ராவணனைப் புத்திரமித்திரகளத்திராதிகளுடன் கொலைசெயதருள்க; தேவர் திருவுளஞ் சிறியருளுவீராயின், காடு

கடல மலைகளுடன் கூடிய இப்பார முழுதையும் வேறுபடுத்தவல்லீர்; எனின் இவவரக்கனைக் கொலைசெய்தலரிதாகுமோ? இப்பொழுது கார்காலம் நிகழகின்றமையின, இககாலங்கழிந்து கூதிர்காலம் வருமளவும் எதிர்பார்த்திருந்தருளக; அநந்தரம, ராவணனை நாடு நகரத்தவர்களுடன் கொலைசெய்தருளவீர்; நீறுபூத்த நெருப்பை நெய்யாகுதிகளினால் ஜொலிக்கும்படி செய்வதுபோல மானிடபாவனையினுல உள்ளடங்கிய தேவருடைய இயல்பான பராக்கிரமமெனனும் பெருந்தீயைத் தகக காலங்களில நினைவூட்டி மேலெழுந்தெரியச்செய்வேன்; எனறிவவகையாக விணணப்பஞ்செய்து பெருமாள சோகந்தணியுமாறு தேற்றியருளினர். பெருமாளும் அன்பும் பத்தியும் ஆவலும் பூணடு தேற்றிய இளையபெருமாளுடைய இவவாக்கியங்களைக்கேட்டருளி மகிழந்து புகழ்ந்து அவனைநோக்கி, அடா எனனன்புள்ள ஸஹோதரா! அன்பும் நேசமும் பிரியமும் இதமும் சத்தியமும் பராககரமமும் உடைய தோழன் சோகமுறுங்கால் எவ்வணணமுறைசெய்து தேற்றுவானே? நீயும் அவ்வண்ணமே யுரைசெய்தாய்; எல்லாக்காரியஙகளையும் அழிககவல்ல சோகத்தை யான் துறந்துவிட்டேன்; விக்கரமங்களில் தடையின்றிச செலலுகினற தேஜஸ்ஸை மேறகொண்டேன; கூதிர்காலத்தையும எதிர்பாரத்திருககின்றேன்; உன்னுடைய வாக்கியத்தினபடியே திரமுறறிருக்கின்றேன்; மஹாராஜருடையவும், நதிகளினுடையவும பிரஸாதததை (அனுககிரஹத்தை—தெளிவை) க்கோரியிருககின்றேன், மஹாராஜா நம்மிடத்தில் உபகாரத்தை யடைந்திருக்கினறமையில, நமககும் அவர பிரதியுபகாரஞ்செய்வார்; உபகாரததை யடைந்தவன் நன்றியை மறந்து பிரதியுபகாரஞ்செய்யானுகில், எல்லாருக்கும பகையாகி எலலோராலும மனம நொந்து பழிக்கப்படுவான்; என்றருளிச்செய்தனர் இளையபெருமாளும இவ்வருளிச்செயலகளைககேட்டு மகிழந்து புகழந்து ஞானககணணினுல முனவருவதையெலலாமறிந்து அதனைப் பெருமாளிடததிலும விஜ்ஞாபனஞ்செய்து மீளவும அவனை நோக்கி, எம்மையனே! தேவா அருளிச்செய்தபடியே மஹாராஜர் தேவர் திருவுள்ளத்தையெல்லாம நிறைவேற்றுவர்; கூதிர்காலத்தை எதிர்நோக்கி, இககார்காலங்கழியுமளவும் சோகததையும் கோபத்தைம் உள்ளடக்கி ஆடி ஆவணி புரட்டாசி ஐப்பசியெனனும் இந்நானகுமாசங்களையும் என்னுடன் கூடி இம்மலையிலேதானே கழிததுப் பினபு பகைவனைக் கொலைசெய்வதில் முயற்சிசெய்தருளக; என்று விண்ணப்பஞ்செயது தேறறிப் பெருமானையும் மகிழவித்துத் தாமும் மகிழந்து வாழந்தருளினர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் இருபத்தேழாவது சருக்கம் முற்றிற்று.

---

# இருபத்தெட்டாவது சருக்கம்.

## பெருமாள் இளையபெருமாளுடன் கார்காலத்தை வர்ணனைசெய்தருளியது

---

அந்தப்பெருமாள் அவ்வண்ணம் வாலியைக்கொன்று மஹாராஜர்க்கு அபிஷேகமும் செய்வித்தருளி மால்யவந்தமென்னும், ப்ரஸ்ரவணமெனவுங் கூறப்பட்ட மலையின் சிகரத்தில் வாழ்கையில், இளையபெருமாளை நோக்கி, அடா தம்பி லக்ஷ்மணா! இப்பொழுது கார்காலம் நன்றாகத் தோன்றிற்று; மலைபோலப்பருத்துயர்ந்த நீருண்ட கொண்டல்களினால் விண்டலமெங்கும் மண்டிதமாய் இருண்டிருக்கின்றது; விண்ணென்னும் ஒண்டொடியாள் கதிரவன் கிரணங்களினால் கடலினின்றும் ஆகர்ஷிக்கப்பட்ட உப்புநீரைக் கார்த்திகைமாதம் முதல் ஆடிமாதமளவாக ஒன்பதுமாதம் கர்ப்பந்தரித்து உருசியுள்ளதாக்கிப் பெறுகின்றது; உலகிலுள்ள வனிதையர்களும் தத்தம் நாயகனுடன் புணர்ந்திவ்வாறே கர்ப்பந்தரித்து நன்மக்களைப் பெறுகின்றனர்களல்லரோ? பிராட்டியும் பிரிந்திலளாயின், இவ்வண்ணமே மக்கட்பேறுடையாளாகுவாளன்றோ? மேகங்களென்னும் படிவழியாய விண்ணின்மிசையேறி கிரிமல்லி முதலிய நறுமலர்களினால் ஸூர்ய மண்டலமத்தியிலெழுந்தருளியிருக்கின்ற நங்குலதெய்வமான ஸ்ரீமந்நாராயணனைப் பூஜிப்பது தகும்; சந்தியின் செம்மைபடர்ந்து இடையிடையில் வெண்மையையும் பொருந்திக் கண்டங்கண்டமாயுள்ள மேகங்களினால் ஆகாசம் மெய்முழுதும் காயமுற்று அதனை யாற்றுவதன்பொருட்டு மருத்துச்சீலை (ப்ளாஸ்திரி) யுற்றிருப்பதுபோலக் காணப்படுகின்றது; விண்டலம் மந்தமாருதமென்னும் பெருமூச்சுற்றதும், சந்திசெவ்வியென்னும் செஞ்சாந்தமப்பியதும், வெண்மேகங்களினால் மெய் வெளுத்ததுமாகிக் காமாதுரன்போலக் காணப்படுகின்றது; இப்பூமாமகளும் தன் மகளான சீதைபோலவே தாபத்தினால் பீடிக்கப்பட்டும், தாரைதாரையாய்ப் பெருகிவரும் தெளிநீரில் நனைந்தும், பாஷ்பத்தை (கண்ணீரை—ஜலதூமத்தை) விடுகின்றனள்; மேகத்திடையில் தோன்றி செங்கழுநீர்மலர்களில்படிந்து தண்மையுற்று, தாழைமடல்களையுஞ் சேர்ந்து மணமுற்று வீசுகின்ற இக்காற்றுகளும் கைகளினால் வாரியணைந்தெடுத்துப் பருகத்தக்கனவாகின்றன; இந்த மாமலை மஹாராஜர்போல மலர்ந்த மலைமல்லி கடம்புகளையுடையதாகித் தாழை மடல்களினால் மணமுற்றுத் தீர்த்த தாரைகளினால் அபிஷேகஞ்செய்யப்படுகின்றது; இம்மலைகளும் கருமுகிலென்னும் கிருஷ்ணாஜினத்தையுடுத்து, வர்ஷதாரையென்னும் யஜ்ஞோபவீதம் பூண்டு, காற்றினால் பூரிக்கப்பட்ட குகைகளுடையதாகித் தொனியுற்றிருக்கின்றமையின், வேதமோதும் மாணாக்கர்கள்போலக் காணப்படுகின்றன; ஆகாச

மும் மின்னற்கொடிகளென்னும் பொன்னூற்செய்த கசைகளினாலடிக்கப் பட்டு முழங்கும் மேகங்களினால் வேதனையுற்றழுகின்றதுபோலும், கருமுகி லிடையில் துடிக்கின்ற மினகொடியைக்கண்டபின்ன ரென்மனத்திடையில் குடிகொண்ட துடியிடையாளும், கொடிய ராவணனுடைய மடியில் இவ் வண்ணந் துடித்துக்கொண்டே சென்றிருப்பளெனத் தோற்றுகின்றது; மேகங்களினால பூசபபட்டனபோன்ற இப்பத்துத்திசைகளும் காமித்துக் காமினியாகளைப் புணரும் காமுகாகளுக்கு மிகவும் இனியன; சிலவிடத் தில கிரிமலலிகள் ஜல தூமங்களினால் சூழப்பட்டுக கார்காலத்தை எதிர் நோககி மலர்ந்திருக்கின்றமையின், கணவனைப்பிரிந்து கண்ணீாபெருக்கிக் காாகாலம நேர்ந்தமையின், கணவன வருவானெனறு மகிழ்ந்து நகை கொண்ட நாணுதலார்போலிருக்கின்றன; இவைகள விரகமடைந்த எனக் குத துனபந்தருகின்றன;—

రజఃప్రశాన్తం సహిమోద్య వాయుః నిదాఘదోషప్రసరాః ప్రశాన్తాః
స్థితాహి యాత్రా వసుధాధిపానాం ప్రవాసినో యాన్తి నరాః స్వదేశాన్,

ரஜ:பரசாநதமஸஹிமோதயவாயு: நிதாகதோஷபரஸராச்சசாநதா:
ஸ்திதாஹியாதராவஸுதாதிபாநாம் பரவாஸிநோயாநதிநராஸ்வதேசான.

வானம மழைபொழிகினறமையின், தூளிகளடங்கின; காற்று குளிர் ந்து வீசுகின்றது, முதுவேனிற்காலத்திலுணடாகிய வெம்மை வேர்வை முதலிய தோஷஙகளெலலாம அழிநதன; வெறறிததார்வேநதர்கள் பகை வர்மேல படையெடுத்துச் செலலும முயற்சிகள் நின்றன; தூரதேசஞ் சென்றவர்களெலலோரும மீண்டு தத்தமிருப்பிடமபோயச சேர்கின்றனர் கள அனனப்பறவைகள மானஸஸரோவரத்தை நோககிப் புறப்பட்டுச் செலலுகின்றன; சக்கரவாகங்களும் காமவேட்கையினால் பேடுகளுடன் சோநதிருககின்றன; வழிகளெஙகும நிரந்தரம மழைபொழிந்தழிந்திருப் பதினால வணடி முதலிய வாகனஙகள செலலுகின்றில; ஆகாயம மேகங் களினால் பரவபபட்டு சில விடங்களில் பிரகாசமாகவும, சில விடங்களில் பிரகாசமின்றியும், சில விடங்களில் மலைகளினால தகையபபட்டு அலைக ளின்றித தேஙகிய கடலபோலும விளங்குகின்றது; வேஙகை கடமபை களின் பூவினால நன்மணமுறறும், மலைத்தாழவரைகளிலுள்ள தாதுக்களி னால் பறபலவணணமுறறுமுள்ள புதிய மழைநீா மயில்களின் கேகா என்னு மொலியினால் வளர்ந்த பேரொலிகொண்டு மலை யருவிகளில் வீழ்ந்து பெருகுகின்றது; வண்டுகள்போல கறுத்த மதுரமுள்ள நாவல் பழத்தை யாவரும் மிகவும் புசிக்கின்றனர்கள; பறபல வண்ணமுளள மாம்பழங் களும் தரையிலுதிர்ந்து வீழ்கின்றன; போர்க்களத்தில் நிற்கினற யானை கள்போல மேகங்கள் மின்னலாகிற பதாகைகளை யுடையனவும், நாரைப் பறவைகளின் நிரையாகிய மாலையையுடையனவும், மலைச்சிகரங்கள்போன்ற

மேனி யுடையனவுமாகிக் கர்ஜனை செய்கின்றன; பாரடா தம்பி! இந்த வனங்கள் மழைநீரினால் செழிப்புற்ற இளம்புல்லுகளை யுடையனவும். எங்கும் பொன்சிறகை விரித்தாடுகின்ற மயிலினமுடையனவும், பொழிகின்ற மேகங்களையுடையனவுமாகி இப்போழ்து மாலைப்பொழுதில நன்கு விளங்குகின்றன; மேகங்கள நீர்ச்சூலுற்றுக் கர்ஜனை செய்துகொண்டு கருவுடைய பெண்கள்போல மலைசசிகரங்களில இறங்கி யிறங்கி இளைப்பாறிச செல்லுகின்றன; காப்பத்தை தரிப்பதனபொருட்டு மேகத்திற கெதிராக எங்கும் பறக்கின்ற நாரைகளின நிரையானது வானிடையில் கட்டிய காற்றினலசைக்கப்பட்ட சிறந்த வெண்டாமரை மலர் மாலைபோல விளங்குகின்றது; இந்திர கோபங்களுடன கூடிய இளம்புற்களினாலே கிளிபோன்ற காந்தியுள்ள செம்புள்ளிசளையுடைய பட்டுடுத்த பான்மொழியாளபோலப் பார்மகள விளங்குகின்றனள். துயில் மெல்ல மெலல முகிலவண்ணனுனை கண்ணைச சேர்கின்றது, ஆறுகள விரைவாகச சாகரத்தைச் சேர்கின்றன; நாரை நீருண்ட கொண்டலை மகிழ்ந்து தாவிச் சேர்கினறது; காமினியாகள காமவேட்கை மிகுந்து காந்தனைச் சேர்கினறனாகள. காடெங்கும மயிலின மாடுகினறது; கடம்பமரங்களெங்கும முகிழத்தன; காளைகள ஆவலகொண்ட ஆனிரைகளுடன் கூடி வேட்கையுறுகின்றன; பாரெங்கும பயிர்களினுல் செழித்துத் திகழுகினறது; நதி மேகம் மதவேழம் வனம, வநிதையைப் பிரிந்தவா மயில குரங்கு இவைகள முறையே பெருகுகின்றன; மழை பொழிகின்றன; பிளிறுகினறன; செழிப்புறறு விளங்குகினறன; சிந்தை யுறுகின்றனர்கள; ஆடுகின்றன; இளைப்பாறுகின்றன; மதயானைகள் தாழைமடலின் மணத்தை மோந்து மலையருவிகள மலைததாழவரைகளின் வீழுகினற தொனியைச செவியுற்று வெருண்டோடி மயில்களுடன் கூடிக கூவுகினறன; மழைவேகத்தினலடிபட்டு வணங்கிய கடம்பமரங்களின கிளைகள் தாழநதசைகினறன; அதிலிருநத வண்டுகளும மழையினுலடிபட்டு அந்த மரத்தின மலாகளிலுள்ள மதுவைப் பானஞ்செயததனுலுண்டான மதமுமிழ்ந்து அலைகின்றன; கரிகளபோலக் கறுதத பழங்கள நிறைநத நாவல்மரங்கள் வணடுகளினுல சூழப்பட்டனபோல் விளங்குகின்றன; மேகங்கள் முனனே கூறியபடி போாககளத்தில் நிற்கின்ற யானைகளபோலவே விளங்குகின்றன; சிறந்த யானையானது தன் வழிபற்றிச செல்லுகையில், மேக காஜனத்தைக கேட்டுப் பகை யானையென்றெண்ணி, எதிர்ததுச செலலுகினறது, காடுகள் கூவுகின்ற வண்டுகளினுலே சிலவிடத்தில் பாடுகினறனபோலும, மயில்களினுல் ஆடுகின்றனபோலும், யானைகளினுல் மதமுற்றனபோலும காணப்படுகின்றன; காடெங்கும கதம்பாஜுன ஸாஜகந்தளிகளினுலே நிறைந்து, மழைநீர் தேங்கி, மயில்கள் மதமேறிக் கூவி யாடியுமிருக்கின்றமையின், சாராயக்கடைபோல விளங்குகின்றது; மழைநீர் இலைகளினிடையில் வீழ்ந்து முத்துபோல விளங்குகின்றது; பறபலவண்ணமுற்ற சாதகப்பறவைகள் மழைநீரை வானிடை

யிலேயே பானஞ்செய்கின்றன; வண்டுகளாகிற வீணையின் தொனியோங்கியும், தவளைகளின் கண்ட வொலியினால் தாளமுயர்ந்தும், மேகத்தின் தொனியினால் மர்தளம் முழங்கியும் விளங்குகின்றமையின், அவ்வனம் பாடுகின்றதுபோலும், மயில்கள் சில விடங்களில் ஆடிக்கொண்டும், சில விடங்களில் கூவிக்கொண்டும், சில விடங்களில் மரங்களின் நுனிகளிலுட்கார்ந்து சிறகை விரித்துத் தாழ்த்திக்கொண்டுமிருக்கின்றன; மேகங்களினுடைய தொனியைக் கேட்டும், மழை தாரையினாலடிக்கப்பட்டும், தவளைகள் கூவுகின்றன; நதிகளும் நீரில் நீந்துகின்ற சக்கரவாகப் பறவைகளென்னும் கொங்கைகளை யுடையனவும், ஆடை நழுவியதுபோல இடிந்து விழ்ந்த கரைகளை மோதிக்கொண்டும், பற்பல மலர்த்தூளிகளினால் மதங்கொண்டும், நீரில் வீழ்ந்த புதிய பூ கனி முதலியனவென்னும் உபகாரங்களை யலைகளென்னும் கைகளிலேந்திக்கொண்டும், காமவேட்கைகொண்ட காந்தையர்கள் விரைவாக நாயகனிடஞ் செல்வதுபோலத் தம் நாயகனை ஸமுத்திரராஜனை நோக்கி, விரைவாகச் செல்லுகின்றன; நீரைப் பருகிக் கறுத்த மேகங்கள் தம்போன்ற மேகங்களின்மேலே சென்று காட்டுத் தீயினாலெரிக்கப்பட்ட இந்திர நீல மலையின்மேலே வளர்ந்த மலைகள்போல விளங்கின; மதயானைகள் மகிழ்ந்து கூவுகின்ற மயில்களையுடையனவும், பட்டுப்பூச்சிகளுடன் கூடிய இளம்புலலுடையனவும், கடம்பப்பூ முதலியவற்றால் மணமுற்றனவுமாகி யழகிய கானகங்களிலே மகிழ்ந்து திரிகின்றன; வண்டுகள் புதிய மழையினால் மடக்கப்பட்ட தாதுகளையுடைய தாமரை மலர்களை விட்டு விட்டு அன்று மலர்ந்த கடம்பமலர்களைச் சேர்கின்றன; காடுகளில் யானைகளும் மதங்கொண்டன; காளைகளும் மகிழ்ந்தன; சிங்கங்களும் இளைப்பாறின; மலைகளும் அழகுற்றன; வேந்தர்களும் போர் முயற்சியை விட்டடங்கினார்கள், இந்திரனும் மேகங்களுடன் விளையாடுகின்றனன்; மேகங்கள் ஊழிகாலத்திய பொங்கோதம்போல வொலிக்கின்றனவாகி மழையினால் ஆறு ஏரி குளம் நடவாபி கிணறுகளை நிரப்பிப் பாரெங்கும் பெருகச் செய்கின்றன; மழைநீர் வேகமாகப் பருத்து வீழ்கின்றது; காற்று மொலியுற்று வீசுகின்றது; ஆறுகளும் கரைகளை யுடைத்துக்கொண்டு வழிகடந்து வேகமாகப் பெருகுகின்றன; தாரவேந்தர்கள் மனிதர்களினாலே போலச் சிறந்த மலைகள் மேகங்களினாலே அபிஷேகஞ் செய்யப்பட்டனவாகி யழகிய தம்மழகினைக் காட்டுகின்றனபோலும், ஆகாயமெங்கும் அம்புதத்தினால் மறைக்கப்பட்டது; ஸூரியனகண்ணுக்குக் காணப்படுகின்றிலன்; பாரெங்கும் நீர் பாய்ந்து நனைந்தது; திசைகளெல்லாமிருளமூடி விளங்குகின்றில; பருத்துயர்ந்த மலைசிகரங்கள் அருவிநீர்களினாலே முத்துமாலை பூண்டனபோலத் திகழ்கின்றன; அந்த அருவிகளே கற்களில் சிதருற்ற மயில்கள் கூவுகின்ற குகைகளில் தேங்கி அறுபட்டுதிர்ந்த மணிவடம்போலக்காணப்படுகின்றன; நாற்புறங்களிலும் மழை தாரைகளும் புணருங்காலயி லறுந்துவிழ்ந்த விண்ணுலகிலுள்ள

பெண்களின் முத்துவடங்கள்போலவே விளங்குகின்றன ; பறவைகள் கூடு களிலடங்குகின்றமையினாலும், தாமரைமலர்கள குவிகின்றமையினாலும், ஜாதிமலர்கள் மலர்கின்றமையினாலும், கதிரவன் அத்தகிரியை யடைந்தனனென்றறிகின்றேன ; ராஜாகளின் யுத்த யாத்திரை தீர்ந்தமையின், சேனைகள் மீண்டு வருகின்றன; பகை யடங்கிற்று; வழி மழை நீரினால நிரப்பப் பட்டது ; ஸாமவேதிகளுக்கு அத்தியயனாரம்பகாலமான புரட்டாசிமாதம் வந்தது ; பரதன் இப்போது எல்லாச்செயல்களையும் நிறுத்திவிட்டு வேண்டும பொருள்களையெல்லாம் ஸம்பாதித்துச் சித்தஞ்செய்துகொண்டு கோஸலநாட்டிலே சாதுர்மாசிய ஸங்கல்பஞ் செய்துகொண்டு விரதம் பூண்டிருப்பன் ; நான வனவாஸம் புறப்படுகையில, அயோத்தியிலே எவ வண்ணங் தொனியுண்டாயிற்றே ? அவ்வண்ணமே இப்போழ்து ஸரயூ நதியிலே மேல் வெள்ளத்தினாலே பேரொலி யெழுந்திருக்கும் ; இந்த மழை காலங்களில் மஹாராஜரும பகையின்றி யரசுபெற்று மனைவியுடன் சேர்ந்தின்புற்று மகிழ்கின்றனா ; யானொருவனே இப்பொழுது பாரிழந்து, பத்தினியையும பறிகொடுத்து, நதியின் கரைபோலக் கரைந்து நைந்து வருந்துகின்றேன ; அடா லக்ஷ்மணா ! என சோகமும் மிக வளர்ந்தது ; காரபருவமும கழிகின்றிலது ; பகைவனோ கொடிய அரக்கர்கோனான ராவணன் ; ஆதலின், இம்மூன்றும் முடிவற்றதெனத் தோற்றுகின்றது ; இப்போழ்து யுத்த யாத்திரைக்குத்தக்க காலமன்றென்பதையும், வழி யெங்கும் சேறுகி யாறுகளினால தடுக்கப்பட்டுளதென்பதையும் கண்டே மஹாராஜா இப்போழ்தே பிராட்டியைத்தேட முயற்சிசெய்யக் கட்டளை செய்தருளகவென்று வணங்கி வேண்டுகையிலும் உடன்படாமலிருந்து விட்டேன் ; அன்றியும், நெடுநாளாய மிகவுந் துன்புற்று இப்போழ்தே இல்லாளுடன கூடிய மஹாராஜனைச் சிறிதுகாலமாவதின்புறச்செய்யாமல் என காரியத்தையே பெரிதாக நினைந்து வருத்தமுறுவிக்க மனங்கொண்டி லேன ; அவன் இப்போழ்தின்புற்று இளைப்புத்தீர்ந்து சரத்காலம வருகை யில் தாமே யறிந்து நன்றியுடையனாகி என் காரியத்தைச் செய்வனென் பதில் ஸந்தேஹமில்லை ; ஆதலின, யான் அந்தக் காலத்தையே எதிர்பார்த் திருக்கின்றேன ; மஹாராஜரும் நதிகளும் எப்போழ்து தெளிவுறுவார் களோ ?—

ఉపకారేణవీరోహి ప్రతికారేణయుజ్యతే
అకృతజ్ఞో ప్రతికృతో హన్తిసత్త్వవతామ్మనః

உபகாரேணவீரோஹி பரதிகாரேணயுஜ்யதே
அக்ருதஜ்ஞோப்ரதிக்ருதோ ஹந்திஸத்வவதாம்மனஃ. '

சூரனை அவனை நாம் செய்த உபகாரம் ப்ரதியுபகாரஞ் செய்யும் படி செய்யும் தன்மையை மறந்து பிரதியுபகாரம் செய்யாதான் பெரியோர்

கனிலுடைய மனத்தை வருத்தமுறச் செயவானல்லனே ? என்றிவவண்ண*மருளிசசெய்கையில, இளையபெருமாளதைச்செவியுற்று மகிழ்ந்து பெருமானை நோககி, எம்மையனே ! தேவரருளிசசெயதது உண்மையே ? மஹாராஜர் இம்மழைகாலங் கழிந்ததும் பிராட்டியைத்தேட முயறசிசெய்வதில் தடையில்லை; ஆதலின, தேவா சரதகாலத்தையே யெதிாநோக்கி இக்காலத்தைத துன்புறுமல் கழித்தருள்க; என்று வேண்டி விண்ணப்பஞ் செயதனர்

கிஷ்கிந்தாகாண்டததில இருபததெட்டாவது சருக்கம முற்றிற்று.



## இருபத்தொன்பதாவதுசருக்கம.

சிறியதிருவடி மஹாராஜர்க்குணாவூட்டிச சேனைகளை யழைபபிக்குமபடி கட்டளை செயவித்தது



அங்கே மஹாராஜர் கார்காலம நீஙகி யாகாசம மேகமின்றி நிமலமாகி அன்னபபறவைகளினெலிகொண்டு சந்தனமபோலக குளிாந்தும் வெண்மைநிறமுற்றுமுளள நிலவினல் திகழந்திருக்கையிலும், காமமயக்கினலறியாமல் தர்மாாததங்களையுந்துறந்து நல்வழிதபபி யெபபொழுதும் அந்தபபுரத்திலேயேயிருந்து மதுபானஞ்செய்து மதங்கொணடு தன் கோரிகையெல்லாமீடேறித தன மனைவியான ருமையையும, மனததுக்கினிய தாரையையும் அடைந்து அசசமதீாந்து அல்லும பகலும இடைவிடாமல விஹாரஞ்செயதுகொணடு நந்தநவனத்தில் தெயவபபொதுமகளிர்களுடன் கூடி விளையாடுகின்ற விண்ணவா வேந்தன்போல மகிழ்ந்து ராஜ்ஜிய காரியங்களை மந்திரிகளாதினஞ்செய்து அவர்கள யாது செயததையும் ஆராயாமல் காமமோகிதனுகியிருபபதைச் சிறியதிருவடி கண்டு மிகவும் ராஜபத்தியுடையவரும், காலதேசவிசேஷங்களையறிந்தவரும், மிகவும் நுண்ணறிவுடையவருமாதலால, இவா இபபொது பெருமானுடைய

---

* இந்த ஸர்க்கததில் பெருமாள் அடைககலமாக அடைந்தவர்களைப் பிரிவதில தமக்குளள துன்பததை அனயாபதேசமாய சுலோகந்தோறும் அருளிச்செயதிருக்கின்றனர் ; அதனை முறையே சுருக்கமாகக் காட்டுகின்றேன , சில சேதனாகளுக்கு புராதன காமபரிணமத்தாலே மடமையைத்தருகின்ற காலம சேர்ந்தது ; மனம் இருளாலே மூடப்பட்டது ; சிலர் நல்வினையினுலே என்னைததொழுகின்றனர் ; சிலர் காமக்குரோதாதிகளாலே பீடிக்கப்படுகின்றனர்கள ; என்றிவ்வகையாகவே நுண்ணறிவினுல உணர்ந்து கொள்க.

காரியத்தில் முயற்சியில்லாமலிருப்பது தகுதியற்றதென்று ஸமயம்பார்த்து மதுரவாக்கியங்களினாலே மஹாராஜனைமகிழ்வித்து தற்காலத்திலும் எதிர்காலத்திலும் மறுமையிலும் நன்மை விளையுமாறு ப்ரீதி விசுவாஸ பூர்வமாக மஹாராஜனைக்கிட்டிமொழியலுற்றனர். கேளீர் மஹாராஜரே! தாங்கள் கிஷ்கிந்தாராஜ்ஜியத்தைப்பெற்று கீர்த்தியுற்று குலமுறையாகவந்த செல்வத்தையும் அடைந்து மகிழ்ந்தீர்; ஆயினும், மித்திரர்களைச் சேர்த்துக்கொண்டு மகிழ்விக்கவேண்டும்; தங்களுக்கு அந்த காரியமொன்றே யிருக்கின்றது; யாவன் மித்திரர்களிடத்தில் காலத்தை யறிந்து நடந்து கொள்ளுகின்றானோ? அவனுக்கே இராஜ்ஜியம் கீர்த்தி பராக்கரமங்கள் வளரும்; யாவனுக்கு பொருள் சேனை தோழர் செங்கோலிவை சேர்ந்திருக்கின்றனவோ? அவனே நெடுங்காலம் பாராளுவான்; ஆதலின், தாங்களும் நற்குண நற்செயலுடையீரும், நலவழி துறந்திலீரும் ஆகின்றீர்கள்; ஆகையால், முன்னமே யுதவிசெய்த தோழருடைய காரியத்தை முயற்சி செய்து முடிக்கக்கடவீர்கள். யாவனொருவன் எல்லாக்காரியங்களையும் விட்டு விட்டாவது மித்திரகாரியத்தையே மேற்கொண்டு செய்து முடிக்கின்றானோ? அவனுக்கு ஒருக்காலும் தீமைகள் நேரா; இப்போது நமக்கு மித்திரகாரியம் ஸீதாபிராட்டி யெழுந்தருளியிருக்குமிடத்தைத் தேடுவதே யாகின்றது; அந்தக் காரியம் செய்யும் காலமும் நோக்குளது; செய்தற்குரிய காலங் கடந்தபின்பு, யாவனொருவன் மித்திரகாரியங்களில் முயற்சியுறுவானோ? அவன் அக்காரியத்தைச் செய்து முடித்துத்தரினும் உதவி செய்தவனாகான்; பெருமாளுக்கு உடனே பிராட்டியாரைத் தேடுவிக்கவேண்டுமென்று கருத்திருக்கினும் தாங்களோப்படுத்திய காலங்கழிவதன்முன்னம் அவஸரப்பட்டுத் தங்களுக்கறிவித்தருளார், தங்களுடைய குலஞ் செழிப்பதற்குக் காரணமும், நீங்கா நட்புடையவரும், அளவிடற்கரிய பிரபாவமுடையவருமாகிய அந்த ஸ்ரீராமசந்திரருக்குத் தாங்களும் நிகரான தோழராகின்றீர்கள்; அவர் தங்களுக்கு முன்னமே யுதவிசெய்திருக்கின்றமையில், அவர் காரியத்தைத் தாங்கள் ஆவலுடன் செய்க; வானரசேனைகளைச் சேர்ப்பதற்காகத் தூதர்களுக்குக் கட்டளைசெய்தருள்க; பெருமாள் தங்களை ஏவுமளவும் மித்திரகாரியஞ் செய்யவேண்டிய காலங் கழிந்திலதென்றே யெண்ணவேண்டும், ஏவினபின்பு, அந்தக்காலங்கழிந்து விட்டதாகவே யாகும்; முன்னம் உபகாரஞ் செய்யாதவர்களுக்கும் தாங்கள் உபகாரஞ் செய்தவர்களாகின்றீர்கள்; ராஜ்ஜியத்தினாலும், தனத்தினாலும் உபகாரஞ்செய்த பெருமாள் விஷயத்தில் கேட்கவேண்டுமோ? அநேகமாயிரம் ருக்ஷவானர கோலாங்கூலாதிகளுக்கு இறையாகிய தாங்கள் அந்தக் காரியத்தைச் செய்யும் திறமையுடையீராகியும், கட்டளையிட ஏன் தாமஸஞ் செய்கின்றீர்கள்; பெருமாளும்முடைய உதவியின்றியே ஸுராஸுர மஹோரகராக்ஷஸாதிகளையும்கொன்று வெற்றிக்கொள்ளத்திறமையுடையவராகியும், தாங்கள் பிராட்டியிருப்பிடத்தை, யானை வானரர்களைக்

கொன்று தேடுகின்றேனென்று பிரதிஜ்ஞைசெய்திருக்கின்றமையின், அந்தப் பிரதிஜ்ஞையை நிறைவேற்றுவதன்பொருட்டு எதிர்பார்த்திருந்தருளுகின்றனர்; பெருமாள் தங்களுக்குத் தம்முயிரை விடுவதிலும் அச்சமின்றி மஹோபகாரஞ்செய்தருளினர், ஆகலின், பிராட்டி மண்ணுலகிலோ? விண்ணுலகிலோ? எங்கிருக்கினும் தேடி வருவோம், தேவாஸுர கந்தர்வ யக்ஷகின்னரோரகாதியர்களும் பெருமாளுக்குத் தீமைசெய்யத் திறமை கொள்ளார்களாயின், அரக்கர்கள் எவ்வண்ணந் தீமைசெய்யவல்லவராவார்கள். ஆதலின், அத்தன்மையரான பெருமாளுக்கு உதவிசெய்ய முயற்சி செய்க; தங்களுடைய கட்டளையினாலே யாங்கள் செல்வோமாயின், பாதாளத்திலாயினும், பூமியிலாயினும், ஜலத்திலாயினும், வானிடையிலாயினும், விண்ணுலகிலாயினும் தடையிலது, ஆதலின், கட்டளை செய்தருள்க; யாவன் எவ்விடத்தில் யாது செயல் செய்யக்கடவன், அநேகங்கோடி வானரர்கள் தங்கள் கட்டளையை எதிர்பார்த்திருக்கின்றனர்களல்லரோ? என்றிவ்வண்ணமுரைசெய்த சிறியதிருவடி வாக்கியத்தை மஹாராஜா கேட்டு மனந்தெளிந்து ஸேநாபதியான நீலனை யழைத்து நாற்றிசைகளிலுமுள்ள வானரசேனைகளை யெல்லாம் அழைப்பிக்கும்படி நிச்சயித்து அவனை நோக்கிக் கட்டளைசெய்லுற்றனர் கேளடா நீலா! அங்கங்குள்ள சேனைகள் கட்டளையைக் கேட்டவுடனே சிறிதுந் தாமஸமின்றி எவ்வண்ணம் புறப்பட்டு வருமோ? அவ்வண்ணம் வேகமுள்ள வானரஸேநாந்த பாலர்கள் விரைவாகச் சென்று அழைத்துவரக் கடவார்கள் நீயுமருகிலுள்ள சேனைகளை யழைத்து வருக; பதினைந்து நாளைக்குள்ளே எல்லோரும் இங்கே வந்து சேர்ந்துவிடவேண்டும், அந்நாள் கடந்து யாவன் வருவானோ அவனுக்குடனே விசாரணையின்றி உயிர் வாங்கும் தண்டனை விதிக்கப்படும். ஆதலின், நீ யிப்பொழுதே அங்கதகுமாரனுடன் சேர்ந்து ஜாம்பவான் முதலிய பெரியோர்களைக்கண்டு என் கட்டளையை நன்கு ஆராய்ந்து தடையின்றிச் செய்க; என்றிவ்வண்ணம் மஹாராஜா கட்டளைசெய்துவிட்டு அந்தப்புரத்தினுள்ளே சென்று மகிழ்ந்தனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் இருபத்தொன்பதாவது சருக்கம்

முற்றிற்று.

---

## முப்பதாவது சருக்கம்.

*காரகாலம் கழிந்தும் மஹாராஜா முயற்சியின்றி யிருப்பதறிந்து பெருமாள் திருவுளஞ் சீறி யருளியது.*

அங்கே பெருமாளும் காரகாலம் நீங்கி, மேகங்களின் தடையின்றி, யாகாயம் நின்மலமாக விளங்குகையில், காரகாலம நானகு மாதஙகளையும் காமசோகமோக பீடையினுல் வாடி வருந்திக் கழித்து ஆகாயம வெண்மை யுறறிருப்பதையும், சநதிரன் நினமலமாக விளங்குவதையும, சரதகால ராத்திரியும், நிலவென்னும வெண்சாந்தம்பூசி யொளிபபதையுஙகண்டு மஹாராஜா முயறசியினறிக் காமவேட்கைகொண்டிருபபதையும, சீதா தேவி பிரிந்து வருநதுவதையும் நினைந்து மிக வருந்தி மோகமடைந்து பின்பு தெளிந்து பிராட்டியையே நினைந்து கொணடு திரிந்து நாநாவித தாது ராகமுறற அம்மலையின்மிசை யுடகார்ந்து நினமலமான வானை நோக்கி, யன்னப்புளளின் ஒலியையும கேடடு நாயகியை நினைந்து வருநதி யழுததொடஙகினர். அந்தோ ? முன்பு ஸாரஸப்பறவைகளின் தொனிகளை என்னுடன் சேர்ந்து செவியுறறு மகிழந்த பானமொழியளான எனனுயகி இப்போழது அவைகளின் தொனியைககேட்டு எவ்வண்ணம் மகிழவுறு வாள் ; மலாந்த பொன்போன்ற பந்துகமலர்களைககணடும் என்னைக் காணுமல் எவவண்ணம் மகிழவாள : முன்பு யாவள களஹம்ஸஙகளின் கலநாதத்தினுல் துயிலுணர்ந்து மகிழந்தனளோ ? அவள இப்போது எவ் வாறு மகிழவாள் ; மகிழந்தொலிக்கினற சககரவாகபபுளளின் தொனியைக கேடடும் எவ்வண்ணம் என்னைப்பிரிந்து உயவள; அந்த மனததுக்கினிய மனையாளின்றி, வாபீகூபதடாககிரிகானனஙகளைக காணினும் மகிழவுறு கின்றிலேன் ; என்னைப்பிரிந்து வருந்துகின்ற என மனையாளை சரதகால குணஙகளினுல நிறைநத காமன நன்கு வருத்தாது அருளசெய்வன கொலோ ! என்றிவவண்ணம் பெருமாள் நீரின்றிச சாதகம் புலமபுவது போலப் புலம்பி வருந்திக்கொணடிருந்தனா. அப்பொழுது காய் கனிகள் கொணர்வதன்பொருட்டுப் புறததில் சென்றிருந்த இளையபெருமாள் எழுந் தருளிப் பெருமாளிவ்வண்ணம் சோகமுறறு வருந்துவதைக்கணடு பெரு மாளை நோககி, எம்மையனே ! தேவர் இபபொழுது காமனுக்குக்குறியாகி வருந்துவதினுலாயினும், இயல்பாயுள்ள பௌருஷத்தை யிகழவதினுலாயி னும், பிராட்டியைத்தேடுவதில் முயற்சிசெய்யவேண்டுவதைத் துறபபதினு லாயினும் யாது பயன் ; மனந்தேறி யுகந்தருள்க ; காரியத்தில் முயறசி யையும், மனந்தெளிவுற்றிருப்பதையும், தைரியம் உபாயங்களை மேற் கொள்ளத்தக்க காலம் நேர்ந்ததையும், மஹாராஜர் முதலானோர்களின் உதவி செய்யுந் திறமையையும், தேவபூஜை முதலியனவைகளால் வாய்த்த

நல்வினையையும் கண்டு மகிழ்ந்தருள்க; தேவருடன் கூடிய பிராட்டியை மனதினால் விரும்புவதற்கும் வேறே யொருத்தனும் திறமைகொள்ளான்; தீயின ஜுவாலையைக் கிட்டிய எவன்தான எரிந்தழியான்; என்றிவ்வண்ணம இதமாகவும், உண்மையாகவும், இனிதாகவும மொழிந்து தேற்றினர். பெருமானும அதுகேட்டு மனந்தேறி யவரை நோக்கி, அடா தம்பி லக்ஷ்மணா! நீ மொழிந்தவாறு சீதாதேவியைத் தேடுவதில முயற்சிசெயல்வேண்டுமே? போர்செய்வதற்குரிய உற்சாஹாங்களையும மேற்கொளல்வேண்டும்; சீதையைப்பெறும் உபாயம் நன்றாக ஆலோசனை செயல்வேண்டுமே? இவ விஷயத்தில் சிறிதும் ஐயமிலது; என்று அருளிச்செயது பிராட்டியை நினைந்து முகம் முகிழ்ந்து வருந்தி மீளவும் இளையபெருமாளை நோக்கி, அடா தமபி! பாஜன்யதேவனும மழைபொழிந்துலகங்களை மகிழ்வித்து மீண்டுச சென்றனன; மேகங்களும் நாடு நகா காடு மலை முழுதலும பரவி முழங்கி மழை பொழிந்திளைதது மால்யானைகள் மதமேறி யெங்குமலைந்து மதம் நீங்கி யிளைபபுற்றனபோலாயின; மழைக்காற்றுகளும் குளிர்ந்தும், குடஜம, அாஜுனம், கேதகிகளின மணங்கொணடு வீசி யிளைததொழிந்தன; மேகங்களினுடையவும, மதவேழங்களினுடையவும, மயிலகளினுடையவும, மலையருவிகளினுடையவும், மிக்க வொலிகள குலைந்தன; மலைகளும மழையினால் நின்மலமாகிபபற்பல தாதுக்களின் காந்திகொணடு நறசாந்தமப்பின போல விளங்குகின்றன; இககாலததிலாறுகள முதன்முதல் நாயகருடன் புணாகின்ற குலமகளிாகள வெட்கத்தினால் மெலல மெலல ஜகனத்தைக் கட்புலனுக்குவதுபோல மணற்குன்றுகளை வடிவினால் மெல்ல மெல்லக் கட்புலனாககுகின்றன; இபபொழுது இந்த சரத்காலம தன்னுடைய செல்வத்தை யேழிலை வாழைமரஙகளின கிளைகளிலும, ஸூரியன சந்திரன் விண்மீன்களின் ஒளிகளிலும, சிறந்த யானைகளின லீலைகளிலும், பகிர்த்துக்கொண்டு விளங்குகின்றது; இவ்வண்ணம் பற்பல இடஙகளில பலவகைபபட்ட சரத்காலத்தின் செல்வமானது இப்பொழுது கதிரவன்கிரணததினால் மலாக்கபபட்ட தாமரைமலர்களினமேலே மிகவும் அதிகமாக விளங்குகின்றது; ஏழிலம்பாலை மலர்களின் மணஙகொண்டு களிவண்டுகளின் ஒலி மிகுந்து வீசுகின்ற காற்றும் மதவேழஙகளினுடைய திரளை மனம் வெகுண்டு மதம்மிகுந் துலாவசசெயகின்றது; மழைகாலததில் புறததில் போயவந்து அழகிய சிறகுகளையுடைய கமலமலாகளின தூளிகள படிந்து நீரிலுலாவி மஹாநதிகளின் மணற்குன்றுகளிறகூடிய சக்கரவாகங்களுடன் சேர்ந்து அன்னப்பறவைகள் விளையாடுகின்றன, மதங்கொண்டு பிளிறுகின்ற, களிறுகளும், இறுமாப்புற்ற காளைகளும் கலககமினறித தெளிவுற்ற ஆறுகளும் மிகவும் ஒளிகொணடு விளங்குகின்றன, மயில்களும் கருமுகிலினால் விடப்பட்டு நின்மலமான விண்தலத்தைக்கண்டு, தோகைகளையுமுதிர்த்து ஒளிகுன்றி பேடுகளினிடத்திலாவலழிந்து சிந்தைகொண்டிருக்கின்றன; இனியகந்தங்கள் பொருந்தி மலர்களின் பாரத்தினால் முனையில்

வணங்கிப் பொன்னிறமுற்றுக் காணற்கினிய பந்தூகமரங்களினால் காடெங்கும் மிகவும் ஒளிகொண்டு விளங்குகின்றது; வசைகளுடன் கூடினவும், தாமரைகளின் மேல் ஆசையுடையனவும், காட்டிருமலைந்த ஏழிலம்பாலை மலர்களின் பரிமளத்தை மோந்து மதங்கொண்டனவுமாகிய யானைகள் இப்போது மெல்ல மெல்ல நடக்கின்றன; ஆகாசம் மேகங்களினற்று தீட்டிய சஸ்திரம்போன்ற வண்ணமுற்று விளங்குகின்றது, ஆறுகளும் நீர்வற்றி மெதுவாகப் பெருகுகின்றன, காற்றும் செங்கழுநீர் மணம்பொருந்திக் குளிர்ந்து வீசுகின்றது, திசைகளும் இருளின்றி விளங்குகின்றன; பூமியும் கதிரவன் கிரணங் காய்வதினால் சேறுலர்ந்து துகளெழுகின்றது; ஆதலின், ஒருவர்க்கொருவர் பகையும் பொருமையுங்கொண்ட அரசர்களுக்கு இது போர்முயற்சி செய்யுங்காலம் நேர்ந்தது, சரத்காலகுளங்களினால் வளப்பந்த மத்தகங்கியுற்று மகிழ்ந்து தூளிபடிந்து மதங்கொண்டு போருக்கின்ற காளைகள் தம்மினத்திடையில் ஒலிக்கின்றன; காமவேட்கைகொண்டு காட்டிடையில் மெல்ல மெல்ல உலாவுகின்ற மதயானையை யானையுடன் வசைகளும் சூழ்ந்து செல்லுகின்றன, மயில்களும் தம்மழகுக்கணிகள்போன்ற தோகையை யுதிர்த்துவிட்டு அன்னங்களின் ஒலியினால் மிதட்டப்பட்டனபோலத் தீனங்கொண்டு நதிகளின் கரையில் மதமடங்கியிருக்கின்றன, மயக்குற்ற யானைகள் பிளிறல்களினாலே காரண்டவம் முதலிய நீர்ப்பறவைகளை யச்சமுறச்செய்து தாமரைமலர்களமலர்ந்திருக்கிற குளங்களிலிறங்கிக் கலக்கிக் கலக்கி நீர் குடிக்கின்றன, கலக்கந்தெளிந்து மணற்குன்றுகள் தோன்றி உருசியுற்ற நீர் பொருந்திக் கோகுலங்களுடன் கூடி ஸாரஸப்புள்ளின் தொனியும் பொருந்தி விளங்குகின்ற நதிகளில் அன்னப்பறவைகள் மகிழ்ந்து வந்தடைகின்றன; இப்போது நதிகளினுடையவும், மேகங்களினுடையவும், மலையருவிகளினுடையவும், பெருங்காற்றினுடையவும், மயில்களினுடையவும், மண்டூகங்களினுடையவும் ஒலிகள் அழிந்தன, பற்பலவண்ணமுடைய கார்ப்பருவத்தில் புற்றிலடங்கி யிரைதேடாதிருந்த நாகங்களும் பசியினால் சினங்கொண்டு விடமிகுந்து இரைதேடித் திரிகின்றன; சந்திரனென்னும் காந்தனுடைய கிரணங்களென்னும் கைகளின் ஸம்பந்தத்தினால் மகிழ்ந்து மலர்ந்த தாரகை (விண்மீன்—கருவிழி) யுடைய சந்தியென்னும் காந்தை ராக (செம்மை—ஆசை) முற்றுத் தானேயவ்வம்பரத்தை (ஆகாயத்தை—ஆடையை) விட்டுவிடுகின்றனள். அந்தோ! இரவென்னும் வனிதையும், சந்திரனென்னும் முகத்தையும், விண்மீன்களென்னும் கண்களையும், நிலவென்னும் வெண்பட்டும் உடையளாகி விளங்குகின்றனள். பக்குவமான செம்பாகக்கதிர்களைத் தின்று மகிழ்ந்த ஸாரஸப்பறவைகளின் நிரையானது விரைவாக ஆகாயத்தில் பறந்து செல்லுகையில், காற்றினாலசைக்கப்பட்ட தோரணமாலைபோல விளங்குகின்றது; ஓரன்னப்பறவையுறங்குகின்ற குமுதங்கள் மலர்ந்த இக்குளமானது மேகங்களின்றி, விண்மீன்கள் நிறைந்து சந்திரனையுமுடைய விண்ணிடைபோல விளங்குகின்றது;

கும்பலாகக்கூவுகின்ற அன்னங்களைப்பொருந்தி மலர்ந்த கமல குமுத கல்ஹார மலர்களுற்ற சிறந்த வாபிகளின் காந்தி பலகலனுமணிந்த காமினிகளின் காந்திபோல விளங்குகின்றது ; மூங்கில்களின் தொனியிலே தூரியமுழங்கியும், காலையிலேயாகிய காற்றிலே வளர்ந்துமுள்ள கடைகளையுடையர்ப் பானைகளினுடையவும், காளைகளினுடையவும், பசுக்களினுடையவும், மிருதங்கவொலியானது தம்முளொன்றனையொன்று வெல்லுகின்றதுபோலும், நதிகளின் கரைகள் மலர்ந்த மலர்களினாலே வெண்மைநிறமுற்ற நாணல்களினாலே வெண்பட்டணிந்தனபோல விளங்குகின்றன ; காடுகளில் வேகமுற்று மதுவுண்டு மதமேறிய வண்டுகள் மகிழ்ந்து காற்றைப்பின்றொடர்ந்து கமல தூளிகள் படிந்து செல்லுகின்றன , நீர் தெளிவுற்றது , ஆம்பல் மலர்ந்தது ; அன்னமொலிக்கின்றது , செய்பாய்ப்பயிர் கதிர் பழுத்துப் பொன்னிறமுற்றிருக்கின்றது , மந்தமாருதம் வீசுகின்றது , சந்திரனும் நிலவுகின்றனன் ; ஆதலின், கார்காலம் கழிந்ததென்று நன்கு விளங்குகின்றது ; மீன்களுலாவுகின்ற நதிகளின் வேகமும் மந்தமாயிற்று ; அது உதய காலத்தில் காந்தனைப் புணர்ந்தெழுந்து சோம்பலுற்றுச் செல்லுகின்ற காந்தையர்களின் கமனம்போல விளங்குகின்றது ; நதிகளின் முகங்கள் சக்கரவாகம் வெண்பாசி நாணல் மலர்களுடன் கூடியிருக்கின்றமையின், கோரோசனைதிலகம் மகரி காபத்திரம் வெண்பட்டு இவைகளையுடைய காமினி முகம்போல விளங்குகின்றது ; மலர்ந்த பாணம் அசனம் இவைகளின் மலர்களினாலே பலவண்ணம் பொருந்தியும், மதமேறிய வண்டுகளொலித்துமுள்ள வனங்களில் காமன் பாணாசனமுடையனாகிக் கொடுமை கொண்டிருக்கின்றனன் , மேகங்களும் மழையினாலுலகங்களை மகிழ்வித்தும், ஆறு குளங்களை நிறைத்தும் பயிர்களைச் செழிப்பித்தும் மறைந்துவிட்டன ; மடுக்களும் குரரி சக்கரவாகம் முதலிய பறவைகளினொலிக்கப்பட்டுத் தெளிந்து விளங்குகின்றன , மலைத்தாழ்வரைகளிலே அசனம் கோவிதாரம் ஸப்தபர்ணம் பந்துஜீவம் என்னும் இவைகள் மலர்ந்து விளங்குகின்றன , பாரடா லக்ஷ்மணா ! ஹம்ஸஸாரஸ சக்கரவாககுரரங்களினாலே நதிகளின் மணற்குன்றுகள் விளங்குகின்றன , ஆதலின், பகைகொண்ட வேந்தர்கள் படையெடுத்துப் பகைவர்மேல் செல்லும் வேளை நேர்ந்துளது ; ஆதலின், இப்பொழுதே மஹாராஜரும் முயற்சிசெய்ய வேண்டுமன்றோ ? அவரையும் காணகின்றிலேன் ; அவ்வண்ணமான முயற்சியையும் அறிகின்றிலேன் ; கார்காலமான நான்கு மாதங்களும் எனக்கு அநேகமாயிரம் வருஷங்கள்போலக் கழிந்தன ; சக்கரவாகப்பெண் தன் பர்த்தாவை விட்டுப் பிரியாமல் கூடவே செல்வதுபோல என்னையும் கோரமான தண்டகாரணியத்தையும் உத்தியானவனமாக எண்ணி என்னுடன்றொடர்ந்து வந்தனளல்லளோ ? அடா தம்பி ! யான் அத்தன்மையளான மனைவியையுமிழந்து, ராஜ்ஜியத்தையுந்துறந்து துன்புற்றிருக்கையிலும், மஹாராஜர் என்மீதருள்செய்கின்றிலரந்தோ ! யான் அநாதனென்றும்,

ராஜ்ஜியத்தை யிழந்தவனென்றும், பத்தினியைப் பறிகொடுத்தவனென்றும், தீனமடைந்தவனென்றும், பரதேசியென்றும், காமுகனென்றும், என்னையே தஞ்சமடைந்தவனென்றும், இக்காரணங்களினாலேயோ ஸுக்கிரீவன் துர்புத்தியுற்று என்னை மதிக்காமல் இகழ்கின்றனன்; சீதையைத் தேடும் விஷயத்தில் அவன் எனக்குப் பிரதிஜ்ஞை செய்துகொடுத்த அக்காலம் நேர்ந்ததை யறியாமல் மதிகெட்டிருக்கின்றனன்; ஆதலின், நீ இப்பொழுது கிஷ்கிந்தைக்குள்ளே சென்று வானரர்களுட் சிறந்தவனும், மூர்க்கனும், சிற்றின்பங்களில் மயக்குற்றுழல்பவனுமாகிய சுக்கிரீவனை நோக்கி, யானுரைத்ததாக வுரைசெய்க.—

అర్థినాముపసన్నానాం పూర్వంచాప్యుపకారిణాం
ఆశాం సంశ్రుత్య యో హన్తి స లోకే పురుషాధమః

அர்த்திநாமுபபந்நாநாம் பூர்வஞ்சாப்யுபகாரிணாம்
ஆசாம்ஸம்சருத்யயோ ஹந்திஸலோகேபுருஷாதம:

முன்னம் உபகாரஞ்செய்தவர்கள் ஆபத்தை யடைந்து தனக்குதவி செய்யும்படி யாசனைசெய்கையில், அப்படியே செய்வேனென்று அவர்களுக் காசை காட்டிப் பின்பு, உதவி செய்யாமல் எவன் வருத்துகின்றானோ? அவன் உலகினில் எல்லோரிலும் கடையானவன்; பாவமோ புண்ணியமோ யாவனொருவன் தான் சொல்லியபடி தவறாமல் செய்வானோ? அவனே மிகவும் சூரன், யாவரிலுமுயர்ந்தவன், ஒருவரால் உபகாரத்தை யடைந்தபின் அவர்களுக்கு ஸமயத்தில் யாவனொருவன் பிரதி யுபகாரம் செய்கின்றிலனோ? அந்த நன்றி மறந்தவனை இவ்வுலகினில் யாவரும் பழிப்பதுமன்றி, இறந்த பின்னும் அவனுடலைக் கழுகு முதலிய ஜந்துக்களும் தின்னா! அந்த ஸுக்கிரீவன் இப்போது என் காரியத்தில் முயற்சியின்றி யிருக்கின்றமையின், போர்க்களத்தில் பொன்னணியமைந்த என்னுடைய கோதண்டத்தின் கோரமான மின்போன்ற ரூபத்தைக்காண விரும்புகின்றனன்போலும், சீற்றங்கொண்டு கோதண்டத்தில் யான கணையைத் தொடுக்கையில், அதன் நாணின் தொனியைச் செவியுறக் கோருகின்றனன்போலும், உன்னையே துணையாகவுடைய என்னுடைய தோள்வலியை நன்கறிந்திருந்தும், அதனை இலக்ஷியம் செய்யாமலிருப்பானோ? யாம் எந்தப்பயனைக் கோரியே இவ்வண்ணம் அவனுடன் தோழமைசெய்துகொண்டு வாலியையும் கொன்று முடிசூட்டிவித்தனமோ? அந்தப்பயன் விளையும் முயற்சிக்குரிய காலம் நேர்ந்திருக்கினும், தன்னுடைய காரியம் ஆகிவிட்டதென்று இறுமாந்தறியாமலிருக்கின்றனன். மழைகாலம் நான்கு மாதம் மாத்திரம் பொறுத்தருள்க; பின்புடனே முயற்சிசெய்கிறேனென்று பிரதிஜ்ஞைசெய்தும் அக்காலம் கழிந்துவிட்டதை யுணராமல் மயக்குற்றிருக்கின்றனன். அவன் இன்னும் இனத்தார் சுற்றத்தார்களுடன் கூடி மதுபானஞ்செய்து யவ்வி

யிருக்கின்றனனேயன்றி, எம்மேல சிறிதும் தயைசெயகின்றிலன்; ஆதலின், நீ சென்று யான் சினமுறுவேனுகி லெவவண்ணமிருப்பேனே ? அந்த கோரரூபததையும் அவனுககறிவித்து யானுரைத்ததாக மீளவுமிவ்வாறுரை செயாய ,—

నచస్సంకుచితఃపంథా యేనవాలీహతోగతః
సమయేతిష్ఠసుగ్రీవ మావాలిపథమన్వగాః

நசஸங்குசிதஃபந்தா யேந வாலீஹதோகதஃ
ஸமயேதிஷ்டஸுக்ரீவ மாவாலிபதமன்வகாஃ

கேளாய் ஸுக்கிரீவா ! வாலி யென்னாலடிபட்டு எந்தவழியிலே சென்றானே ? அந்த வழி யின்னும் புலலெழுந்து மறைநது குறுகியிலது, ஆகையால், ஸத்தியததிலே உறுதியாய நின்று வாழ்க ; வாலி சென்ற வழிபறறிச செல்ல விருப்பமுறறக ; முன்பு யான் வாலி யொருவனையே கொன்றேன் ; இபபோது நீ சத்தியம் தவறுவாயாகில், உன்னை இனததார் சுறறத்தார்களுடன் கொலை செயவேனேயன்றித தனியே கொல்லேன் , ஆகையால், காரியம இவ்வண்ணமிருககையில் யாது செயின நலமோ ? அதனைச்செயக; என்றுரைதது மேலும் யாது யாது உரைசெயின் தகுமோ ? அவ்வாறு மொழிக ; காலம் கழிகின்றமையின், துரை செயக; மஹாராஜனே ! ஸத்தியம் செய்தபடி செயக; வாலியின் வழியைச சேரறக; என்று மேன்மேலும் உரைசெயக ; என்றிவ்வண்ணம் கட்டளைசெயதருளிப் பெருமாள் சினமும் சோகமும்கொண்டு மனம் வருந்துவதை இளையபெருமாள கண்டு ஸுக்கிரீவனமேல கடுஞ்சினங்கொண்டு அவன விஷயத்தில் கெடுமதிகொண்டு ஜொலித்தனர்.

கிஷ்கிந்தாகாண்டததில் முப்பதாவது சருககம
முற்றிற்று.



## முப்பத்தொன்றாவது சருக்கம்.

**இளையபெருமாள சினங்கொண்டு கிஷ்கிந்தைக் கெழுந்தருளுகையில்**
**அங்கதன் அதுகண்டு மஹாராஜருக் கறிவித்தது.**



பெருமாளிவ்வண்ணம் காமசோக பீடிதராய்ச சினங்கொண்டதைக் கண்டு இளையபெருமாள் அவரை நோக்கிக் கேட்டருளீர் எம்மையரே ! அந்த ஸுக்கிரீவன் நன்னடக்கைகொண்டு ஸத்தியத்தில் நிலையுறான் ; இது

செய்வினை நன்று, இது செய்வினை தீது என்பதையும் அறியான்; ஆதலின், இந்த வானரராஜ்ஜியத்தையும் நெடுங்காலம் ஆட்சிசெய்து இன்புறான்; அவன் புத்தி இப்போதும் நங்காரியத்தில் ஊக்கங்கொண்டிலதன்றோ? அவனைக் கொன்று வாலியுடன் சேர்த்தல்வேண்டும்; தீக்குணமுடைய இவனுக்கு ராஜ்ஜியமளிப்பதும் தகுதியுடையதன்று; மிகவும் பெருகி வளரும் கோபத்தைப் பொறுக்கவுந் திறமைகொள்ளுகின்றிலேன் யான்; ஆதலின், ஸத்தியம் தவறின அவனை இப்போதே கொலைசெய்து வருவேன்; வாலி புத்திரனை அங்கதகுமாரனை அபிஷேகம்பண்ணி வானரசேனைகளுடன் கூடிப் பிராட்டியானைத் தேடக்கடவன் ஆதலின், இவ்வண்ணம் அநுமதி செய்தருள்க, என்று விண்ணப்பஞ்செய்து வில்லுங்கணையுங் கையிலேந்தி சினத்துடன் புறப்பட்டனன். பெருமாள் அவர் மிகவும் சினமுற்றிருப்பதைக் கடாக்ஷித்து அவனை நோக்கி, அடா தம்பி லக்ஷ்மணா! உன்னைப் போன்றவர் உலகத்தில் இவ்வண்ணம் பாவஞ்செய்யலையொருவரும் செய்யார், நல்விவேகத்தினாலே இவ்வகையான கெடுமதியை யாவன் போக்கி நற்செயல் செய்வானோ? அவனேயன்றோ சிறந்தவன்; அடா இவ்வண்ணம் கொலைசெய்வதை நற்செயலென்று எண்ணாதே, முன்பு வனமீதுள்ள அன்பினையும், நட்பினையும், ஆராய்ந்தறிந்து செய்க, அவன் காலந்தப்பியிருக்கினும், வன்மொழி மொழியாமல் நன்மொழியாலேயே செய்தியையறிவிக்கக்கடவை என்று இதமுரைத்துத் தேற்றிச் சினத்தைத் தணித்தருளினர் இளையபெருமாளும் இவ்வண்ணம் பெருமாள் மொழிந்ததைக் கேட்டுத் தொழுது விடைபெற்றுக்கொண்டு விரைவாகச்சென்று கிஷ்கிந்தையைக் கிட்டிப் பட்டணத்தினுள்ளே புகுந்து இந்திரன் வில் மலைமுடிகள் போன்ற கோதண்டத்தைக் கையிலேந்திக் காலாந்தகன்போல ஜொலித்து மந்தரமலைபோலசைந்து தேவகுருவுக்கு நிகரான புத்தியுடையாராதலின், தான் சுக்கிரீவனுக்குரைக்கவேண்டிய வசனங்களையும், அதற்கு அவன் இது பதிலுரைப்பான் என்பதையும், அதற்கு பதிலிது உரைக்கவேண்டுமென்பதையும் நன்காராய்ந்து கொண்டு பெருமாளுடைய காமசோக கோபங்களினாலே தாமும் மிகச் சினங்கொண்டு பெருங்காற்றுப்போல எழுந்தருளி ஸால தால தமால அசுவகர்ணம் முதலிய பற்பல மரங்களை வேகத்தினால் முறித்தும், மலைச்சிகரங்களை யுருட்டியும், கால்களினாலே சிலைகளைப் பொடிசெய்துகொண்டும், நெடுந்தூரமாயினும் ஓரடியைப்போல வேகமாக மதயானைபோல நடந்து மலைகளினிடையிலிருக்கின்ற பற்பல வானரசேனைகள் நிறைந்த அந்தக் கிஷ்கிந்தையைக் கண்டு சுக்கிரீவன்மேலுள்ள கோபத்தினாலே உதடுகள் துடித்து அந்தக் கிஷ்கிந்தைக்குப் புறத்திலே திரிகின்ற வானரர்களைக்கண்டு கிட்டிச் சென்றனர். அந்த வானரர்கள் இவர் இவ்வண்ணம் சினங்கொண்டு வருவதைக் கண்டு போர்செய்ய வருவதாக நினைத்து அவர்களும் மரங்களையும், சிலைகளையும் கையிலெடுத்துக்கொண்டு போர்செய்யச் சித்தங்கொண்டு நின்றனர்கள். இளையபெருமாளும், அவர்

கள் இவ்வண்ணம் நிற்பதைக்கண்டவுடனே மிகுதியாக விறகுகளை யுடைய தீபோல இருமடங்கு சினங்கொண்டு ஜொலித்து விளங்கினர். அந்த வாந ராகளும இவர் இவவாறு மிகச சினமுற்றதைக கண்டு அசசங்கொண்டு பிரளயகால மிருத்தியுவாகவெண்ணிப் பததுத்திசைகளிலுமோடி மஹா ராஜர் மனே சோநது இளையபெருமாளிப்படி சினங்கொண்டு வந்திருப் பதை யுரைத்தனர்கள. ஆயினும், சுக்கிரீவன் தாரை முதலிய வனிதையர்க ளுடன் கூடி மதுவுண்டு மதிமயங்கி யிருக்கின்றமையின, அவர்கள் இவ் வண்ணங் கூவி யுரைததனைதச செவியுறாமல அநதபபுரததிலுள்ளே யிருந் தனன். பினபு, மந்திரிகள் எல்லோருமு யோசனைசெயது யானை மலை மேகங்களுககு நிகரான வாநராகளை யேவினாகள் ; அவர்கள எலலோருங கோரரூபமுடையவாகளும், சிங்கம் புலிகளபோன்ற வீரமுடையவாகளும், சிலா பததுயானை பலமுடையவாகளும, சிலா நூறு, சிலா ஆயிரம, சிலா பதினாயிரம், சிலா லக்ஷம, எனறவவணணம் மேனமேலுயாந்த யானை களின பலமுடையவாகளுமாதலின், யாவரும் கோட்டைவாயில் வநது தடுபபவாகளாக நின்றனர்கள. அவாகளிவ்வண்ணங் கறகளையும், கிளைகளை யும, மரங்களையும கையிலேந்தி யெதிாத்து நிறபதை இளையபெருமாள கண்டு, சினம மூண்டு வாநரர்கள இவவணணம உளளும புறமும நிறைந்தி ருபபதையும, சுககிரீவன மதிமயஙகி யூக்கமறறிருபபதையும, பெருமாள காமமும் சோகமுமுறறு வருந்துவதையும் ஆராய்ந்து வெமமைகொண்டு நெட்டுயிாததுக கணசிவந்து புகையுடைய பாவகம்போல மூண்டெரிந்து பாணங்களின் முனைகளென்னும நாவினையும், கோதண்டமென்னும் உட லையும், தேஜஸ்ஸென்னும் விஷத்தையுமுடைய ஐநதலை நாகம்போலச் சீறி எரிகின்ற ஊழிகாலத்தீபோலவும, தூண்டப்பட்ட நசசரவமபோலவும் திகழ்ந்தனர். இவா இவவணணம இருபபதை யங்கதகுமாரன் கண்டு தன் புறறு நினறனன ; இளையபெருமாள அந்த அங்கதனையழைத்து அடா குமாரா! யான உரைத்ததாக மஹாராஜரிடம சென்று லக்ஷ்மணன தஙகளை ககாணபதன்பொருட்டு வந்திருககின்றனன்; அவன் தம்மையரின் துயரத் தினால் மிகத்துயரஙகொணடு வாயிலில நிறகின்றனன்; அவருடைய வாக்கி யத்தில் தங்களுக்கு ஆவலுளதாயின்; தாங்களே யஙகேசெல்வதோ ? அவ னையே இங்கேயழைப்பிபபதோ ? இரணடிலொனறு செய்க ; என்றுரை செயது அவர் அதறகுபதில யாதுமொழிவதையுங கேட்டுணர்ந்து விரை வாக வந்து செயதிசொல்லாய ; என்று உரைசெயதனுபபியருளினர். அங்க தகுமாரன் அந்த வாக்கியத்தைக் கேட்டு விரைவாக வோடிவந்து மஹாரா ஜர் தாரை ருமை யிவாகளைத்தொழுது பினபு நிகழ்ந்தவணண முரைசெய் தனன். ஸுக்கிரீவன் தூக்கத்தினாலும், மததகினாலும மயக்குறறிருக்கின் றமையின், அதனை யுணராமல் காமமோஹிதனாயிருந்தனன் ; பின்பு, அங் கதன் விரைவாக வராமையினாலே இளையபெருமாள் சினங்கொண்டு வரு வதை யங்குள்ள வாநரர்கள் கண்டு அவரை நல்வார்த்தைகளினால் ஸமா

தானஞ்செய்து யாது செயவரோவெனறு கிலகிலென்று கூவினாகள சிலா பெருவெள்ளமபோல வேகஙகொணடு வசசிராசனிபோல கொலியுற்று வருகின்ற இவரைக்கணடு சிஙகநாதம செயதனாகள இவவளவையாசப பேரொலியெழுநதுபட்டணமெஙகும ஒலிக்கையில சுககிரீவன்அது கேட டுத் திடுக்கிட்டு மலா மாலை மணிவடஙகளெலலாமசைநது எழுநதனன. அததருணத்தில அஙகதன ஓடி யழைகக சுககிரீவனுககு மிகவும இனியா களும, அந்தப்புரததிற சென்று இராணிகளைபபாாககததககவாகளுமாகிய இரணடு மநதிரிகளான பலக்ஷன பரபாவன் என்னும இரணடுபோகளும உளளே சென்று இளையபெருமாளிவவணணம வநதிருககின்றனரெனபதைத யறிவிததனாகள. தேவேநதிரனைபபோல போகமுடைய அநத ஸுககிரீ வனை யவாகள நலவாககியஙகளினல புகழநது தேறறுக கேளீா மஹா ராஜரே! ஸததியந்தவறுதவாகளும, மஹாபாககியமுடையவாகளும, பாரா ளததக்கவாகளுமாகிய ராமலக்ஷமணரெனனுமிருவா தஙகளுடன நடபுச செய்துகொணடு வாலியையும கொலைசெயது கிஷகிநதாராஜஜியததையும தங்களுககளிதது உபகாரஞ்செயதனாகளே? அவாகளுள ஒருவரான இளை யபெருமாள விலலுஙகணையுமாக நஙகோட்டைவாயிலில வநது நிறகினற னர், அவரைககணடு அசசஙகொணடே வாநராகளெலலோரும கூவுகினற னர்கள. அநத லக்ஷமணா பெருமாளுடைய கட்டளையைத தஙகளுககறி விபபதனபொருட்டே வநதிருககினறனா, இநத அஙகதனும அவரால தங களிடம் அனுபபபபட்டிருககின்றனன, இவரோ கணகளாலே வாநராகளை யெரிபபவாபோலச சினஙகொணடு வாயிலில் காததிருககினறனா, ஆத லின், தாஙகளே இனததாா சுறறததாாகளுடன கூடி யஙகுச்சென்று அவ ரைத தலைவணஙகி வேணடிச சினததைததணிததருளக; பெருமாள யாது கட்டளைசெயதனுபபியிருககின்றனரோ? அதனை யவவணணமே செயக; நல்லொழுககஙகொணடு ஸததியததைப பாதுகாததது மகிழக, என்று அங கதனுடன கூடி யுரைதது மனநதெளிவிததனாகள.

கிஷ்கிந்தாகாணடத்தில முபபத்தொனறாவது சருககம் முற்றிறறு.

---

## முப்பத்திரணடாவது சருக்கம்.

சிறியதிருவடி மஹாராஜாக்கு இதமுரை செய்தது.

---

பின்பு, ஸுக்கிரீவன் இவவண்ணம் அங்கதனும் மந்திரிகளும் உரை செய்த வாக்கியததைக் கேட்டு அறிவுற்று அசசங்கொணடு சினமுற்ற இளை

யபெருமாளை யெவ்வண்ணம் ஸமாதானஞ்செய்வேனென்று சிந்தைகொ
ண்டு ஆஸனத்தை விட்டிறங்கி ஆலோசனையில் மிகவும் புத்தியுடைய மந்தி
ரிகளை நோக்கிக் கேளீர் அமைச்சர்களே! யான் பெருமாள்விஷயத்திலாயி
னும், இளையபெருமாள் விஷயத்திலாயினும், சிறிதும் வன்மொழி மொழி
ந்திலேன், தீச்செயலுஞ் செய்திலேன், ஆயினும், இளையபெருமாள் என்
சினமுற்றனரென்று சிந்தை செய்கின்றேன்; ஒருகாலையில் என்மீது பகை
கொண்ட யாரேனும் எனக்குத் தீங்குசெய்யச் சமயம்பார்த்து என்மீதில்
லாத தோஷங்களையுரைத்து இளையபெருமாள் சினமுறச் செய்தனர்கள்
கொலோ? இவ்விஷயத்தில் நீவிரெல்லீரும் நன்காராய்ந்து, அவர் சினமு
றுவதற்குக் காரணம் யாதாகுமோ? உண்மையாக அறிந்தாயின், பெரு
மாளிடத்திலாயினும், இளையபெருமாளிடத்திலாயினும் எனக்கு அச்சமுற
விரகில்லையே? ஆயினும் காரணமின்றித் தோழமைகொண்டவர் என்சின
முற்றனரென்று எண்ணுகின்றேன், அதனாலேயே நடுக்கமுறுகின்றேன்,
யாவருடனும் தோழமை செய்துகொள்வதென்பது எளிதே? அன்பு, அத்
தோழமை யழியாவண்ணம் பாதுகாத்துக்கொள்வது மாத்திரம் அரிது;
சித்தஞ் சஞ்சலமாதலின், அற்பவிஷயத்திலும் ப்ரீதி யழிந்துவிடுகின்றன
ன்றோ? ஆதலாலேதான் யான் அச்சமுறுகின்றேன், பெருமாள் எனக்குச்
செய்த மஹோபகாரத்துக்கு யான் என்னசெய்தாலதான் ப்ரதியுபகாரமா
கும், என்றிவ்வண்ணம் முறைசெய்கையில், அருகிலுள்ள சிறியதிருவடிகேட்
டுத் தாமே கைகளைக் குவித்து மஹாராஜனை நோக்கிக் கேளீர்மஹாராஜ
ரே! தாங்கள் பெருந்தகவுடையாராதலின், இவ்வண்ணம் நன்றிமறவாமலி
ருப்பதென்பது இயல்பே யாதலின், ஆச்சரியமுறத்தக்கதன்று; பெரு
மாள் தங்களுக் குபகாரஞ்செய்வானபொருட்டே யன்றோ? அச்சமின்றித்
தேவேந்திரனுக்கு நிகரானபராக்கிரமமுடைய வாலியைக் கொலைசெய்தரு
ளினர் எவ்வகையாலோசனை செய்யினும் பெருமாளிப்போது தங்கள்மீது
கொண்டிருக்கின்ற கோபம் ப்ரணயகோபமாகக் காணப்படுகின்றதேயன்றி,
யுண்மையானதாகத் தோற்றுகின்றிலது; தாங்கள் மதிமயக்குற்றிருக்கின்ற
மையின், வர்ஷகாலம் கழிந்து சரத்காலம் புகுந்ததென்பதையும் அறிகி
ன்றிலீரென்று காலத்தை யறிவிப்பதன்பொருட்டே பெருமாள் இளைய
பெருமாளை யிங்கனுப்பியருளியிருக்கின்றனர், மலர்ந்த எழிலம்பாலை மரங்
களினால் அழகுற்ற சரத்காலம் வந்திருக்கின்றதன்றோ? ஆகாசமும் மேக
ங்களின் மறைவின்றி நிர்மலமான விண்மீன்களையுடையதாகி விளங்குகின்
றது, ஆறு குளங்களும் தெளிவுற்றன; திசைகளும் விளங்குகின்றன;
இவ்வண்ணம் உத்யோககாலம் நேர்ந்திருப்பதையும் தாங்களுணர்கின்றி
லீர்; ஆதலின், தாங்களிவ்வண்ணம் ஊக்கமற்றிருப்பதையறிந்தே இளைய
பெருமாளிங்கெழுந்தருளினர் பெருமாள் பாரிழந்து பத்தினியையும் பறி
கொடுத்துத் துயருற்றிருக்கின்றமையின்; அவராலேவப்பட்ட இளையபெரு
மாள் ஏதேனும் வன்மொழி மொழியினும் சினமுறாமல் பொறுத்தருள்க.

కృతాపరాధస్యహి తేనాన్య త్పశ్యామ్యహం క్షమం
అన్తరేణాఞ్జలింబధ్వా లక్ష్మణస్యప్రసాదనాత్

க்ருதாபராதஸ்யஹிதே நாந்யத்பச்யாம்யஹம்க்ஷமம்
அந்தரேணாஞ்சலிம்பத்வா லக்ஷ்மணஸ்யப்ரஸாதநாத்.

தாங்கள் பெருமாள்விஷயத்தில் விஸ்வாஸமில்லாமல் காலந்தப்பினமையின், அபராதஞ்செய்தீராயினீர், ஆதலின், இப்போழுது தாங்கள் கைகூப்பித் தொழுது இளையபெருமாளை இனியமொழிகளினால் சினந்தணியுமாறு தேற்றிச் சமாதானஞ் செய்வதைவிட மற்றொன்றும் தங்களுக்கிப்போது தக்கதாக என்னுகின்றிலேன், மந்திரிகளாயிருப்பவர் கேட்குங்காலையில், இதமுரைக்கவேண்டுவது கடமையாதலின், யான் இப்போது அச்சமின்றி யுரைசெய்தேன்; பெருமாள் சினமுற்றுக் கையில் கோதண்டத்தை யெடுத்து நிற்பாராகில், தேவாஸுரகந்தர்வாதிகளுடன் கூடிய எல்லாவுலகங்களையும் தம்வசம் செய்து கொள்ள வல்லவரல்லரோ? ஆதலின், அவரை இப்போது சினமுறுவிப்பது தகுதியன்று; பின்பும் சமாதானஞ்செய்யும்படியே நேருமன்றோ? அன்றியிலே, நன்றிசெய்தவர் விஷயத்தில் இனியமொழி மொழியவேண்டுமென்பதை விளம்பவேண்டுமோ? ஆதலின், தாங்கள் புத்திர மித்திராதிகளுடன்கூடி யவரை வணங்கிக் கணவனுக்குக் காந்தை யடங்கி யிருப்பதுபோலவே அடங்கியிருத்தலே நன்று, பெருமாளுடையவும், இளையபெருமாளுடையவும், கட்டளைகளைத் தாங்கள் மனதிலும் தவற நினைப்பது தீது; தேவர்கோனுக்கு நிகரான ரூப பல பராக்கிரமமுடைய பெருமாளுடைய திறமையும், தோள்வலியும், தங்கள் சித்தத்துக்கு விசதமே யன்றோ? ஆதலின், அவரை யன்புடனழைத்து வணங்கிச் சமாதானஞ் செய்தருள்க; என்று அமைச்சர்களின் நடுவில் மேன்மையாக மொழிந்து தேற்றி மகிழ்ந்தனர்

கிஷ்கிந்தாகாண்டத்தில் முப்பத்திரண்டாவது சருக்கம்

முற்றிற்று.



## முப்பத்துமூன்றாவது சருக்கம்.

சினங்கொண்டு வந்த இளையபெருமாளைத் தாரை இனிய மொழி

களினால் தேற்றிச் சீற்றத்தை யாற்றியது



அநந்தரம் சிறியதிருவடி யுரைசெய்த வாக்கியங்களை மஹாராஜர் கேட்டு அதுவே இதமென்றுணர்ந்து இளையபெருமாளை எழுந்தருளப்

பண்ணிக்கொண்டு வரும்படி கட்டளைசெய்ய அவ்வண்ணமே வானரர்களால் அழைக்கப்பட்ட இளையபெருமாள் பெருமாளுடைய நியமனப்படிக்குக் கிஷ்கிந்தைக்குப் போய்ச் சென்றனர். வாயில் காப்பவரெல்லோரும் இவரைக் கண்டு கைகூப்பி நின்றனர்கள். இவர் பெருமூச்செறிகின்ற நாகம்போல வருகின்றமையினால், வானரர்களெல்லோரும் அச்சங்கொண்டு கிட்டிச் சூழ்ந்துகொள்ளாமல் ஒதுங்கி நின்றனர்கள். இளையபெருமாளும் இரத்தினங்களிழைக்கப்பட்டும் மலர்ந்த காடு சோலைகளையுடையதும், மாளிகை மேன்மாளிகைகளின்மேலே அடர்ந்தும், பலவகைப்பண்டங்கள் நிறைந்தும், வேண்டும் கனிகள் பழுத்த மரங்களினாலே மணங்கமழ்ந்து விளங்கியும், தேவ கந்தர்வாதிகளின் அம்சமுடைய வானரவீரர்கள் திவ்விய மால்ய வஸ்திரங்கள் தரித்து காணமகிழ்ச்சியராகி விளங்கியும், சந்தனம் அகரு தாமரை முதலிய வாஸனை திரவியங்களினாலே மணமுற்றும், ஸுகந்தங்களின் வாஸனை வீசியுமுள்ள ராஜவீதியுடையதுமாகிய அந்தக் கிஷ்கிந்தையையும், நின்மலமான மலையருவிகளையும், முறையே அங்கதன், மைந்தன், துவிவிதன், கவயன், கவாக்ஷன், கஜன், சரபன், வித்யுன்மாலி, ஸம்பாதி, ஸூர்யாக்ஷன், அனுமான், வீரபாகு, ஸுபாகு, நளன், குமுதன், ஸுஷேணன், தாரன், ஜாம்பவான், ததிவக்த்ரன், நீலன், ஸுபாடலன், ஸுநேத்ரன் முதலிய வானரர் தலைவர்களுடைய மாளிகைகளையும் கண்டு அம்மாளிகைகள் மிகச் செல்வமுடையனவும், வெண்மைநிறமுற்ற சரத்கால மேகம் போன்ற வன்மையுடையனவும், திவ்விய மாலைகளுடையனவும், மிகுந்த தனதான்யங்களுடையனவும், சிறந்த பெண்மணிகள் நிறைந்தனவுமாகி விளங்குவதைக் கண்டு வியப்புற்று வெண்மைநிறமுள்ள கோட்டைச் சுவரினாலே சூழப்பட்டுப் பகைவர்கள் புகற்கரிய மஹாராஜனுடைய தேவேந்திர பவனம்போன்ற மாளிகை கைலாஸமலைச் சிகரங்களைப்போன்ற மேன்மாளிகைகளின் சிகரங்களாலும், பலவகைப் பழங்கள் பழுத்து மலர்கள் மலர்ந்து மணங்கமழ்ந்து தழைத்த பற்பல மரங்களினாலும், தேவேந்திரனாலளிக்கப்பட்ட கற்பக மரங்களினாலும் மிக விளங்கியும், சஸ்திரபாணிகளான சிறந்த பலமுடைய வானரர்களினால் வாயிலிலே காக்கப்பட்டும், திவ்விய மாலைகளினால் அலங்கரிக்கப்பட்டும், பொன் மணித் தோரணங்கள் கட்டப்பட்டும் விளங்குவதைக்கண்டு அதனுள்ளே கதிரவன் மேகமண்டலத்திடையில் தடையின்றிப் புகுவதுபோலப் புகுந்து ஏழு கோட்டைகளையும் தாண்டிச் சென்று பொன் வெள்ளிகளினாலே செய்யப்பட்ட கட்டில் முதலிய ஆஸனங்களையுடையதும், பற்பல அலங்காரங்களையுடையதுமான மஹாராஜருடைய அந்தப்புரத்தைக்கண்டும், இனிய விருத்த கீதவாத்தியங்களின் தொனியைச் செவியுற்றும், பற்பல ரூபயௌவனகர்விதர்களும், நற்குலத்திற் பிறந்தவர்களும், சிறந்த ஆடையாபரணங்களைத் தரித்தவர்களும், திருப்தி யுடையவர்களும், காமபோகங்களில் ஆவலுடையவர்களும், சிறந்த போகோபகரணங்களை யுடையவர்களுமாகிய பெண்களையும், பரிஜன

பரிவாரங்களையுங் கண்டும் அப்பெண்களின் சதங்கைத்தண்டைகளின்
ஒலியைக் கேட்டும் வெட்கமடைந்து அவைகளினொலியினாலே சினங்கொ
ண்டு நல்லொழுக்கமுடையவராதலின், அப்பெண்களைக்காணாது அச்சங்
கொண்டு மறையும்படி செய்வதற்காகத் தநுஷ்டங்காரஞ்செய்தார் அதனால்
நகைகளெல்லாம் முழங்கச்செய்து ஏகாந்தமானவோரிடத்திற்சென்று பெ
ருமானுடைய சோகத்தை நினைந்து வருந்தி நின்றனர். அந்த வொலியினால
இளையபெருமாள் அருகில் எழுந்தருளியிருப்பதை யறிந்து மஹாராஜர்
அச்சங்கொண்டு சிறந்த சிங்காஸநத்தினின்றும் அசைந்து அங்கதன் முன
பென்னிடம் வந்துணைசெய்த துணைமையே? அவ்வண்ணமே யிளையபெரு
மாள் அருகில் எழுந்தருளிவிட்டனர், தநுஷ்டங்காரம் கேட்கப்படுகின
றது, என்று ஆராய்ந்திருந்து முகம்வாடிச் சிந்தைகொண்டு நடுங்கித் தாரை
யை நோக்கி, கேளாய் அன்புள்ள என்னுயிரே! இயல்பாகவே சாந்தகுண
முடைய இளையபெருமாள் சினங்கொண்டவர்போல் வருவதற்குக் காரணம
யாதாகுமோ நீ பெண்மனையநினைக்கின்றனை நரசிங்கமான அவர்காரண
மின்றிச் சினமுறாரல்லரோ? நாமிருவேனும் இவர் விஷயத்தில் தீங்குசெ
ய்ததனரோ? இதனை நீ விரைவாக ஆராய்ந்து கோபந்தணியச்செய்க; அன்றி,
நீயே நேராகச்சென்று அவரைக்கண்டறிந்து இனியமொழிகளினாலே தேற
றிச் சீற்றந்தணியுமாறு செய்யக்கடவை அவர் உன்னைக்காண்பராயின்,
மனம் மகிழ்வாரேயன்றிச் சினமுறார், பெரியோர்கள் பெண்களிடங்களில்
ஒருகாலும் தீமைசெய்யார்கள், நீபோய் இனியவாக்கியங்களினாலே தேற
றக்கேட்டு மனமகிழ்ந்திருக்கையில், யான் இடையிலே வந்து இளையபெருமா
ளைக்கண்டு வார்த்தைசொல்லித் தேற்றுவேனென்று ஆணைசெய்தனுப்பினர்
தாரையும் மகாராஜரால் அவ்வண்ணமேவப்பட்டு மதமயக்கினால் கண்கள் சுழ
ன்று கால்களிடற அரைநூல்தந்தாங்கவிட்டுக் கொங்கைகளின் பாரத்தி
னால் வளைந்து யிளையபெருமாள் நகர்ந்துசென்றுநின்றனள். அந்த இளையபெரு
மாளும் இந்தத் தாரையைக் கண்டு பரத்தையர்களை யுற்றுப்பார்ப்பது
பாவமென்று தலைகுனிந்து பெண்ணருகிலிருப்பதனால் கோபந்தணிந்து
உதாசீனமாக நின்றனர், ஆயினும், அந்தத் தாரை மதுபானஞ்செய்ததினா
லே நாணமின்றி இளையபெருமானுடைய கண்ணோக்கமொதுளிர்ந்து தெளிந்
திருந்தமையினால் அச்சந்தீர்ந்து இளையபெருமாளை நோக்கி, அன்புகூர
ந்து நல்வார்த்தைகளினாலே தேற்றி மகிழ்விக்க முயன்றனள். கேட்டருளீர்
தயரதன் திருமகரான இளையபெருமாளே! தேவர் சீற்றங்கொண்டதற்கு
யாதுகாரணமுளது, தேவருடைய கட்டளையின்படி யாவன் நடக்கின்றி
லன்; உலர்ந்த காடெங்கும் பற்றியெரிகின்ற காட்டுத்தீயை யாவன் அச்ச
மின்றிப் புகுந்து துளைந்து செல்பவன் என்றுவண்ணம் மொழிந்த தாரை
யின் வாக்கியத்தை இளையபெருமாள் கேட்டு அவளை நோக்கிக் கேளம்ம
பெண்ணரசே! நீ மிகவும் நுண்மதி யுடையளாயிருந்தும் உன்பர்த்தாவா
மஹாராஜர் இவ்வண்ணம் காமமயக்குற்றுச்செய்கருமங்களை யுணராதிருக்

ன்றென்பதையும் அறிகின்றிலையோ? அவர் எம்மால் ராஜ்யம் தமக்கு வாய்த்ததென்பதையும், யாங்களிவ்வண்ணம் அவரை யடுத்திருக்கிறோமென்பதையும், அறிகின்றிலரோ? இனத்தார் சுற்றத்தார் மந்திரிகள் எல்லோர்களுடனும் மதுவுண்டு மயங்கிக் கிடக்கின்றனரே? அவர் எங்களுக்கு நான்கு மாதம் காரகாலம் கழிந்தவுடன் பிராட்டியைத் தேடுவிக்கின்றேமென்று பிரதிஜ்ஞை செய்து கொடுத்து அது கழிந்ததையும் அறியாமல் மதுவுண்டின்புற்றே மயங்கிக்கிடக்கின்றனரோ?

నహిధర్మార్థసిద్ధ్యర్థం పానమేవంప్రశస్యతే
పానాదర్థశ్చధర్మశ్చ కామశ్చపరిహీయతే

நஹிதர்மார்த்தஸித்த்யர்த்தம் பாநமேவம் ப்ரசஸ்யதே
பாநாதர்த்தச்ச தர்மச்ச காமச்ச பரிஹீயதே

பானத்தினால் தர்மார்த்தகாமங்கள் மூன்றுங் குறைந்தழிக்கப்படுமையின் தர்மார்த்தங்கள் சித்திப்பதன்பொருட்டாக இவ்வண்ணம் பானஞ்செய்வதைப்பெரியோர்கள் புகழ்கின்றிலர்கள், நன்றிசெய்தவர்களுக்குப் பிரதியுபகாரம் செய்யாததாகக்குத் தருமம் மிகவுங் குறைந்துவிடுகின்றது; குணவானதோழனைத் துறப்பதனாலே பொருளும் அழிந்துவிடுகின்றது, தோழனே தருமத்திற்கும், அர்த்தத்திற்கும் காரணமல்லனோ? மித்திரனை யுபேக்ஷைசெய்வதினால் அவ்விரண்டும் அழிந்துவிடுமன்றோ? இப்பொழுது எமது காரியம் இவ்வண்ணம் நேரிருக்கையில், மஹாராஜா இவ்வண்ணமிருப்பாராயின், யாங்கள் யாதுசெயில் தகுமோ அதனை நுண்ணறிவுடைய நீயே யாராய்ந்துரையாய் என்று மொழிந்தனர். அந்தத் தாரையும் அவர்வாக்கியங்களைக்கேட்டு பெருமாளுடைய காரியத்தில் விசுவாஸம் தோற்றும்படியாக இளையபெருமாளை நோக்கி மொழியலுற்றனள். கேட்டருளீர் இளையபெருமாளே! தேவரீர் இப்பொழுது மஹாராஜர்மேல் சினமுறத்தக்க காலமன்று, பெரியோர்கள் தம்மையடுத்தவர்கள் மேலும் கடுஞ்சினங்கொள்வார்களோ? தேவரீராலேதானே பொருளின்பங்களையுடைய இம்மஹாராஜருடைய மதமயக்கினாலூக்கமற்றிருப்பதாகிய இப்பிழையையும் பொறுத்தருள்க; ராஜகுமாரரே! வீரமுடையோர்கள் தமக்கு நிகரான வல்லமைகொண்டெதிர்க்கின்ற பகைவர்மேலன்றோ சினமுறுவார்கள், தமக்கீடில்லாத எளியார்மேலெவ்வண்ணஞ் சினமுறுவார்கள்; அன்றியிலே, தேவரீர்போன்ற ஸத்துவகுணமுற்றுத் தவத்திற்கும் பிறப்பிடமானவர்கள் யார்மேலாயினும் சினமென்பதை யெவ்வண்ணம் எவர்தானுறுவார்கள், பெருமாள் சினமுற்றதையும் அறிவேன்; அதற்குக் காரணமான காலக்கழிவையும் அறிவேன்; தாங்கள் செய்த நன்றியையும் அறிவேன்; இப்போது யாதுசெயல்வேண்டுமோ அதனையும் அறிவேன்; காமனுடைய திறமை மிகவும் வலியதென்

பதையும் அறிவேன்; அந்தக் காமனால் மஹாராஜன் எந்த ஜனத்தின்மீ தாசையுறுவிக்கப்பட்டனனோ? அதனையும் அறிவேன், தேவர் இவ்வண்ணம் சினமுற்றமையின், தேவர் புத்தி காமதந்திரத்திலாகக்கொண்டிலது; காமவேட்கை மிகுந்த மனிதன் தேசகாலங்களையாயினும், அறம்பொருள்களையாயினும் அறிகின்றிலனல்லனோ? எப்பொழுதும் என்னருகிலிருக்கின்றமையின், காமவேட்கை யதிகரித்து நாணமுமற்று மயங்கிக் கிடக்கின்ற மஹாராஜா தேவர் தமையருக்குத் தோழரெனனும் முறையினால் தேவர்க்குச் சஹோதரராதலின், அவர்மீதுள்ள இப்பிழையைப்பொறுத்தருள்க; உண்டு சுருங்கிய புலன்களையென்று போகஞ்செய்துகொண்டிருந்த மஹாமுனிவர்களும் காமனுக்குக்குறியாகி மயங்குவார்களெனின், இயல்பாகவே சஞ்சலசித்தமுடைய கபிஜாதியான இம்மஹாராஜா விஷயஸுகங்களிலழுந்தி மயங்கிக் கிடப்பதென்பது வியப்போ என்று தாரை இவ்வண்ணம் மொழிந்து இளையபெருமாளைமகிழ்வித்து மீளவும் அவரை நோக்கி, மஹாராஜாக்கிதமாகமொழியலுற்றனள் கேட்டருளீர் ராஜகுமாரரே! மஹாராஜர் காமக்கடலில் மூழ்கி மயங்கியிருக்கினும் தேவர்கள் காரியத்தில் முன்பே முயற்சிசெய்யும்படி கட்டளைசெய்தேயிருக்கின்றனர், ஆதலால், நாநாதேச நகரவாஸிகளான வாநரர்கள் ஆயிரம், பதினாயிரம், கோடி, பத்துக்கோடி, நூறுகோடிகளாகச்சேர்ந்து வந்திருக்கின்றனர்கள், இதுவரையில் பரத்தையலைக் கண்ணுறலாகாதென்று புறத்திலேதானே நின்ற தேவரால் நல்லோர் நடக்கை பாதுகாக்கப்பட்டது; தோழர் தோழருடைய பாரியையைக் காண்பது கபடமின்மையினால் இகழப்படாததாதலின், அந்தப்புரத்தினுள்ளே எழுந்தருள்க; என்றிவ்வண்ணம் தாரையின் மொழியைக்கேட்ட இளையபெருமாள் தாரையின்வேண்டுதலாலும், காலகழிவாகின்றதென்பதினாலும் உட்பட்டுள்ளேசென்று சிறந்த ஆஸ்தரணமுடைய சிறந்த தங்கசிங்காதனத்தின்மேல் கதிரவன்போல விளங்குகின்றவரும், திவ்வியாபரணங்களினால் நாநாவண்ணமுடையமேனியுடையவரும், சிறந்த மாமலர்மாலைகள்சூடி நல்லாடையுடுத்து அலங்காரஞ்செய்துகொண்டவரும், மஹேந்திரன்போல பிறரால் வெல்லவொண்ணாதவருமான மஹாராஜா திவ்வியாபரணாலங்காரங்களையுடைய காமினியர்களுடன்கூடிச் சூழப்பட்டிருக்கக்கண்டு இருமடங்கு சினங்கொண்டு கண்கள் சிவந்த ஊழிகால யமன்போல கோரரூபமுற்றுச் சென்றனர். மஹாராஜரும் சிறந்த சிங்காஸநத்திலுட்கார்ந்து ருமையென்னும் தனமனையாளைத் தழுவிக்கொண்டு இளையபெருமாளெழுந்தருள்வதைக்கண்டனர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் முப்பத்துமூன்றாவது சருக்கம்

முற்றிற்று.

---

## முப்பத்துநான்காவது ஸர்க்கம்.

### இளையபெருமாள் மஹாராஜாக்குப் பெருமாளுடைய கட்டளையை யறிவித்தருளியது



மஹாராஜா இவ்வண்ணம் தடையின்றிச் சினங்கொண்டு வருகின்ற அந்த இளையபெருமாளைக் கண்டு அச்சங்கொண்டு மூண்டெரிகின்ற தீபோன்றவரும், பெருமாளுடைய வியஸனத்தினாலே பீடிக்கப்பட்டவருமான அவர் கிட்டுவதன்முன்னமே யாஸனத்திலிருந்து அலங்கரிக்கப்பட்ட நெடிய சக்கரனுடைய த்வஜம்போல வெழுந்து நிற்கையில், ருமை முதலிய பெண்களும் உடனே வானிடையிலெழுகின்ற சந்திரனைத்தொடர்ந்து விண்மீன்களெழுவதுபோல எழுந்தனர்கள், அப்பொழுது மஹாராஜரும் கைகூப்பிக் கற்பகம்போல அசைந்து நின்றனர்; இளையபெருமாளும் ருமை முதலிய பெண்களுடன்கூடின மகாராஜா விண்மீன்கள் சூழ்ந்த பூர்ணசந்திரன்போலொளிக்கக்கண்டு சினங்கொண்டவனாய் நோக்கிக் கேளீர் மஹாராஜரே !—

సత్వాభిజనసంపన్న స్సానుక్రోశో జితేంద్రియః
కృతజ్ఞస్సత్యవాదీచ రాజాలోకేమహీయతే.

ஸத்வாபிஜனஸம்பன்ன ஸ்ஸாநுக்ரோசோ ஜிதேந்த்ரிய:
க்ருதஜ்ஞஸ்ஸத்யவாதீச ராஜாலோகேமஹீயதே

ஸத்துவமுடையோனும், நற்குலத்திற்பிறந்தோனும், கருணை கூர்ந்தவனும், புலன்களைவென்றவனும், நன்றிமறவாதானும், ஸத்தியந்தவறாதவனுமாகிய ராஜனே உலகினில் புகழப்படுகின்றனன் எந்த வேந்தன் அதருமமுற்றவனும், உபகாரஞ்செய்த தோழர்களா விஷயத்திலேதானே பொய்யாகப் பிரதிஜ்ஞைசெய்தவனுமாகின்றனனோ? உலகினில் அவனிலுங் கொடுமை கொண்டவன் யாவனுளன்,—

శతమశ్వానృతేహన్తి సహస్రన్తుగవానృతే
ఆత్మానంస్వజనంహన్తి పురుషఃపురుషానృతే.

சதமச்வாந்ருதேஹந்தி ஸஹஸ்ரந்துகவாந்ருதே
ஆத்மானம்ஸ்வஜனம்ஹந்தி புருஷ:புருஷாந்ருதே

குதிரைவிஷயத்தில் பொய்யுரைப்பவன் நூறு குதிரைகளைக் கொலைசெய்தபாவத்தை யடைவன்; பசுவிஷயத்திலே பொய்யுரைசெய்பவன், ஆயிரம்பசுக்களைக் கொலைசெய்த பாவத்தை யடைவான்; மனிதன் விஷயத்தில் பொய்சொல்லுமவன், தன்னினத்தாரையுங்கொலைசெய்து தானுங் கொலைசெய்து கொண்ட பாவத்தையடைவன், புருஷோத்தமரான பெரு

மாளவிஷயத்தில் பொய்யுரைப்பவன், யாது கதியை யடைவனோ? நீயே யாராய்ந்தறியாய்; கேளாய் வாநரராகோனே! முன்பொருவரிடத்தில் நன்றி பெற்றுக்கொண்டு பின்பு, அந்நன்றியை மறந்து பிரதி யுபகாரம் செய்யாதவன்யாவனோ? அவன் எல்லாராலும் கொலைசெய்தற்குரியவன்; முன்பு, திசைமுகதேவர் நன்றிமறந்தவனைக்கண்டு சினங்கொண்டொரு சுலோகமுரைசெய்தனர். அதனை மொழிகின்றேன் கேளாய்,—

బ్రహ్మఘ్నే చ సురాపే చ చోరే భగ్నవ్రతే తథా
నిష్కృతిర్విహితా సద్భిః కృతఘ్నే నాస్తి నిష్కృతిః

பிரஹ்மக்னே ச ஸுராபே ச சோரே பக்நவ்ரதே ததா
நிஷ்க்ருதிர்விஹிதா ஸத்பி꞉ க்ருதக்னே நாஸ்தி நிஷ்க்ருதி꞉

பிரஹ்மஹத்திசெய்தவனுக்கும், ஸுராபானஞ்செய்தவனுக்கும், களவுசெய்தவனுக்கும், பிரஹ்மசரியம் முதலிய விரதத்தைத் துறந்தவனுக்கும், முனிவர்கள் பிராயச்சித்தம் விதித்திருக்கின்றனர்கள், நன்றி மறந்தவனுக்குமாத்திரம் பிராயச்சித்தம் விதித்திலர், இல்லையென்றே கூறினர்கள்; என்னும் பொருளுடையசுலோகமே அது. நீயவ்வண்ணம் நல்லொழுக்கமிலாதவனும், நன்றிமறந்தவனும், பொய்யனும் ஆகின்றனை, முன்பு பெருமாளிடத்தில் உபகாரத்தைப்பெற்றுக்கொண்டு இப்போது அதற்கு பிரதி யுபகாரஞ்செய்கின்றிலையல்லையோ? நீ ஸ்ரீராமனுக்குப்பிரதியுபகாரஞ்செய்யக்கருத்துற்றிருக்கின், இதுவரையில் பிராட்டியைத்தேடும் விஷயத்தில் முயற்சி செய்திருக்கவேண்டுமன்றோ? நீயிவ்வண்ணம் அற்பமான கிராமியபோகங்களிலே விருப்பங்கொண்டு பொய்யாக பிரதிஜ்ஞைசெய்து தவளைபோலக் கத்தித் தன்னிடத்தில் வரும் தவளையைத்தின்னும் நச்சரவம்போன்றவன் என்பதைப் பெருமாளிதுவரையிலுமறிந்திலர், ஆதலாலேதான் மஹாபாகரான பெருமாள் தூராத்துமாவான உன்னுடன் தோழமைசெய்துகொண்டு வாலியையுங் கொலைசெய்து வாநரராஜ்ஜியப்பட்டாபிஷேகஞ் செய்வித்தருளினர். நீ யிப்போது பெருமாள் செய்த நன்றியை மறந்து மயக்குற்றிருப்பாயாகில், உடனே கொடிய கணைகளினலடிபட்டு முன்சென்ற வாலியைப் போய்க்காண்பாய்; வாலி சென்றவழி யின்னும் புல்லெழுந்தழிந்து மறைந்திலது; ஆதலின், சத்தியத்தில் நிலைகொண்டு கட்டுண்டிருக்க; வாலிசென்ற வழியைச் சேரற்க; நீ பெருமாளுடைய கூரிய கணைகள் வச்சிராயுதம் போலப் பாய்ந்துவருவதைக் கண்ணுறக் கருதுகின்றனைபோலும், ஆதலாலேதான் இவ்வண்ணம் நிரந்தரம் விஷய ஸுகங்களையே யனுபவித்துக்கொண்டு பெருமாளுடைய காரியத்தை மனதிலுங்கருதுகின்றிலை, என்று சிறிது தாக்ஷிண்யமின்றிப் படபடவென்று மொழிந்தருளினர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் முப்பத்துநான்காவது சருக்கம் முற்றிற்று.

## முப்பத்தைந்தாவது சருக்கம்.

### மீளவும் தாரை இளையபெருமாளை இனியமொழிகளினால ஸமாதானஞ்செய்து சீற்றத்தைத்தணித்தது.

இவ்வண்ணம் கொடுமொழிமொழிந்திகழ்ந்த இளையபெருமாள் ஒளிகொண்டெரிகின்ற தீபோல ஜொலிக்கக்கண்டு முழுமதிபோன்ற முகத்தையுடைய தாரை இளையபெருமாளைநோக்கி கேட்டருளீர் இளையபெருமாளே! தேவர் இவர் விஷயத்தில இவ்வண்ணம் வன்மொழிமொழிவதும் தகுதியற்றது; இவரும் கொடுமொழிமொழிவதற்கு இடமாகார, விசேஷமாக தேவர் வாக்கினும் கூறப்பட்ட கொடுமொழிகளை வானரராஜனான இவர் செவியுறுவது தகுமோ? இம்மஹாராஜா தேவர் உரைசெய்தவாறு நன்றியறியாதாருமல்லர்; ஏகாந்தத்திலே தீங்குசெய்பவருமல்லர்; கொடுமைகொண்டவருமல்லர், பொய்யருமல்லர்; குடிலமுடையருமல்லர், தாங்கள் செய்த உபகாரத்தை இவர் மறந்திலர், பெருமாளுடைய அருளினாலேயே மிகுந்த கீர்த்தியையும், பெறற்கரியகிஷ்கிந்தாராஜ்யத்தையும், ருமையையும், என்னையும் அடைந்தனரல்லரோ? ஆயினும், இவர் முன்பு நெடுங்காலம் ஆகாரநித்திரையின்றித் துன்புற்றமையின், இப்போது இப்பேரின்பத்தைப்பெற்று மயங்கி அவ்வக்காலங்களில செயற்குரியவைகளையும் செய்யுமுணர்வற்றிருக்கின்றனர்; முன்பு விசுவாமித்திரமஹாமுனி நெடுங்காலம் தவஞ்செய்துகொண்டிருந்தொருநாள கிருதாசியென்னும் தெய்வப்பொதுமகளைக் கண்டு காமுற்று அவளுடன் புணர்ந்துகொண்டிருந்து பத்துவருஷங்கள் கழிந்தும் அவைகளை யொருபகலாகவே நினைத்தனரல்லரோ? அந்த மஹாமுனியே காமமயக்கினால காலக்கழிவை யறிந்திலரெனின், மற்றவர்கள் மயங்கியிருப்பது வியப்போ? தேஹதர்மமான ஆஹார நித்திராமைதுனங்களையே முக்கியமாக எண்ணி நெடுங்காலந் துன்புற்று இப்பொழுதே இன்பமுற்று மயங்கிய இவருடைய இப்பிழையைப் பொறுத்தருள்க, உலகின் தன்மையை யாராய்ந்து உண்மையையறியாமல மூடன்போல விரைவாகச் சினத்தையேமேற்கொண்டு வருத்தற்க; தேவர் போன்ற ஸத்துவகுணமுடைய பெரியோர்கள் ஆராய்ந்தறியாமல சீற்றமுறுவார்களல்லரோ! மஹாராஜா பொருட்டாக யானே தேவரை வேண்டுகின்றேன்; இக்கடுங்கோபத்தைத் துறந்து மகிழ்ந்தருள்க; பெருமாளுக்குப் பிரியமாயின், மஹாராஜா ருமையையும், என்னையும், கிஷ்கிந்தாராஜ்யத்தையும், மற்றுமுள்ள தனதான்யாதிகளையுந் துறந்துவிடுவரென்றே யான் நம்புகின்றேன், மஹாராஜா ராவணனைக் கொலைசெய்து பெருமாளைப் பிராட்டியுடன் சேர்த்து ரோஹிணியுடன் கூடின சந்திரனைப்போல விளங்கச்செய்வார்; இலங்காபுரியிலே அநேக லக்ஷங்கோடி ராக்ஷஸர்கள் குவைகுவையாக மிகக்கொடியவர்கள

கவும், வேண்டியபடி ரூபந்தரித்துக்கொள்ள வல்லவர்களாகவுமிருக்கின்றனர்கள், அவர்களெல்லோரையும் கொலைசெய்யாமல் ராவணனைக் கொலைசெய்வது ஒருவராலும் முடியாது; அவனைக் கொலைசெய்யாமல் பிராட்டியை மீட்பதுமரிது; ஆதலின், அவனைக் கொலைசெய்வதற்குப் பலபேர்களுடைய உதவிவேண்டும்; இவ்வண்ணம் வாலி யெனக்குரைத்திருக்கின்றனர்; அவர் ராவணனுடைய ஸாரமெல்லாம் நன்றாக அறிந்தவர்; நான் நேராகக் கண்டிலேனாதலின், கேட்டபடி யுரைசெய்தேன், அன்றியிலே, தேவர்களுக்கு ஸஹாயஞ்செய்வதன்பொருட்டே அங்கங்குள்ள வாநரஸேனைகளையழைத்துவரும்படி தூதர்கள் அனுப்பப்பட்டனர்கள், அவர்கள் வருவதை யெதிர்பார்த்தே மஹாராஜா இதுவரையில் புறப்படாமலிருக்கின்றனர், இவர் தூதர்களை யனுப்பும்காலையிலேயே இன்று முதல் பதினைந்து தினத்துக்குள் யாவன் வருகின்றிலனோ? அவன் உடனே விசாரணையின்றி உயிர்வாங்குந்தண்டனைக்கு உள்ளாகுவானென்று கண்டிதமாகக் கட்டளைசெய்திருக்கின்றனர், இன்றியதினமே அவர்கள் எல்லோரும் வந்து சேரவேண்டியவேளை, ஆதலின், அநேகமாயிரங்கோடி கரடிகளும், அவ்வளவு கோலாங்கூலங்களும், அவ்வளவு கருங்குரங்கு செங்குரங்கு வெண்குரங்குகளும், இப்பொழுதே இங்கு வந்து கூடப்போகின்றன; சீற்றந்தணிந்து மகிழ்ந்தருள்க, தேவருடைய திருமுகமண்டலம் சினத்தினால் ஜ்வலித்துக் கண்கள் சிவப்புற்றிருப்பதைக்கண்டு மஹாராஜர் பத்தினிகளெல்லோரும் வாலியைக் கொலைசெய்ததை நினைந்து மகிழ்வுகுன்றி வருந்துகின்றனர்களேயன்றி, இன்புறுகின்றிலர்கள்; ஆதலின், மகிழ்ந்தருள்க; என்று தாரை இளையபெருமாளைத் தேற்றி மகிழ்வித்து மகிழ்ந்தனள்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் முப்பத்தைந்தாவது சருக்கம் முற்றிற்று.



## முப்பத்தாறுவது சருக்கம்.

இளையபெருமாளும் மஹாராஜரும் சினமும் மயக்கமுந்தீர்ந்து மகிழ்வுடன் ஸம்பாஷணஞ்செய்து கொண்டது.



இவ்வண்ணந் தாரையுரைசெய்த வாக்கியம் விநயமும் தருமமும் இனிமையும் பொருந்தியிருந்தமையின், குளிர்ந்த தன்மையையுடைய இளையபெருமாள் அதற்குடன்பட்டுக் கடுஞ்சினந்தீர்ந்து அருள் கூர்ந்து மகிழ்வுகொண்டு திகழ்கையில், மஹாராஜா அதுகண்டு அவரிடத்தில் தோன்றிய அச்சத்தை நனைந்த வஸ்திரத்தைப்போலத் துறந்து தன் கண்டத்திலே

அணிந்துகொண்டிருந்த சிறந்த நறுமலர்மாலைகளையும் அறுததெறிந்து விட்டு மதுபானமயக்கும் காமமயக்குந்தீர்ந்து சிறந்ததோளவலியுற்ற இளைய பெருமாளைநோக்கி மகிழவுறுமபடி மொழியலுற்றனர் கேட்டருளீர் இளைய கோவே! முன்பு என்னுடைய செல்வமும, புகழும, கபிராஜ்ஜியமும அழிந்துவிட்டன; பின்பு இப்போழ்து பெருமாளுடைய அருளினாலே தானே அவை என்னால் அடையப்பட்டன; அவ்வண்ணம மஹோபகாரஞ்செய்த அந்த மஹானுபாவனான பெருமாளுக்குப பிரதியுபகாரஞ்செய்ய எவன் தான திறமையுடையவனாகுவான; ஆதலின, பெருமாளே தமது திறமையினாலே பிராட்டியையும் அடைவார், ராவணனையும் கொலைசெய்வார்; யான் ஸஹாயமாத்திரனாக அவருடன சேர்ந்திருக்கவல்லேனையன்றி மற்று யாது செய்ய வல்லேன; அந்த மஹாபுருஷனுக்கு யாருடைய உதவிதான் விரும்பத்தக்கதாகும்; அவர் ஓரம்பினாலேதானே ஏழு ஸாலமரங்களையும, மலையையும, பூமியையும துணிததுத துளைத்துப பிளந்தருளினரல்லரோ? அன்றியிலே, இவர் நாணோசையை செய்கையிலே காடு மலை கடல்களுடன்கூடின பார்முழுதும கிடுகிடென்று நடுங்கியதன்றோ? அவருக்கு யாருடைய உதவிதான் வேண்டும்; பெருமாள் புத்திர மித்திர களத்திராதிகளுடன் கூடின ராவணனைக் கொலைசெய்வதன்பொருட்டெழுந்தருளுகையில், யானும பின்றொடர்ந்துமாத்திரம செல்வேன,—

యదికిఞ్చిదతిక్రాన్తం విశ్వాసాత్ప్రణయేనవా
ప్రేష్యస్యక్షమితవ్య మ్మేనకశ్చిన్నాపరాధ్యతి,

யதிகிஞ்சிததிக்ராந்தம விசவாஸாதபரணயேநவா
பரேஷயஸய க்ஷமிதவயம மேநகச்சின்னாபராதயதி.

தேவர்கள் அடியேனிடத்தில மிகவும அருளபுரிந்திருக்கின்றமையின், பிழைசெயினும பொறுததருளவீரகளொன்னும விசுவாஸத்தினாலாயினும், தேவர் விஷயததிலே அபராதஞ்செயதேனாயினும, யான தொண்டு பூண்டவனென்பதினாலே அப்பிழையைபபொறுத்தருளக; உலகினில் ஒருவனாயினும் அபராதம செயயாதானென்பதில்லை; ஆராயந்துணரில் எல்லோரிடத்திலும ஏதேனும ஒருபிழையிருக்கவேயிருக்கும; ஆதலின், சினந்தணிந்து மகிழ்ந்தருளக; என்றிவ்வண்ணமுரைசெய்த மஹாராஜருடைய வாக்கியத்தை இளையபெருமாள் கேட்டு மகிழ்ந்து அவரை நோக்கிக் கேளீர் மஹாராஜரே! நீர் இவ்வண்ணம வணக்கமுற்று அன்புகூர்ந்திருக்கின்றமையின், எமமையா எவ்வகையினாலும் உமமால இறையுடையராயினர்; உம்மிடத்தில் சிறந்த வலிமையும மங்களமும, தூயமையும் குடிகொண்டிருக்கின்றமையின், இந்தக்கபிராஜ்ஜியததை யாட்சிசெயவதறகு நீரே தக்கவர்; பெருமாள உமமைத்துணையாகக்கொண்டுவிரைவாகவே ராவணனைக்கொலை செய்தருள்வாரென்பதிலையமிலது; நீர் தருமமுணர்ந்தவரும், நன்றியுடை

யவரும், போர்க்களத்தில் மீளாது போர்பவருமாதலின், நீர் இவ்வண்ணம் இனிமையாக மொழிந்தது மிகவும் தகுதியானது ;—

దోషజ్ఞస్సతిసామర్థ్యే కోన్యోభాషితుమర్హతి
వాజయిత్వామమజ్యేష్ఠం త్వాంచ వానరసత్తమ.

தோஷஜ்ஞஸ்ஸதிஸாமர்த்யே கோந்யோபாஷிதுமாஹதி
வாஜயித்வாமமஜ்யேஷ்டம த்வாஞ்சவாநரஸத்தம.

தன்னை யிகழ்பவரை யழிக்குந்திறமையிருக்கையிலேயும், தன்மீது நாட்டிய தோஷத்தை யுண்மையென்றுடன்பட்டு அதனைப் பொறுக்கும்படியா வணங்கி யிவ்வண்ணம் மொழிபவர்; உம்மையும் எம்மையரையும் விட்டு மற்றெவருளர்; ஒருவருமிலர்; ஆதலின், நீர் தோளவலியினாலும், பலத்தினாலும், குணங்களினாலும், பெருமாளுக்குத்தக்கவராகவே நீங்கள் துணை கூடினீர்கள்; ஆதலின், நீர் இப்பொழுதே இங்கிருந்து புறப்பட்டுச்சென்று மனைவியைப் பறிகொடுத்ததினால மிக வருந்தி இளைத்திருக்கின்ற எம்மையரைத்தேற்றி மகிழ்வித்தருளக, பெருமாள் சோகத்தினால மொழிந்த வாக்கியத்தைக்கேட்டுச் சினங்கொண்டு நும விஷயத்தில் யான மொழிந்த வன மொழிகளையும் பொறுத்தருளக, என்று மொழிந்து மகிழ்வித்து மகிழ்ந்தருளினார்

கிஷ்கிந்தாகாண்டத்தில முப்பத்தாறாவது சருக்கம

முற்றிற்று



## முப்பத்தேழாவது சருக்கம்.

மஹாராஜருடைய கட்டளையின்படி வாநரசேனைகள் வந்து கூடியது.



இவ்வண்ணம் இளையபெருமாளருளிச்செய்த வாக்கியத்தை மஹாராஜர் கேட்டு மகிழ்ந்து அருகிலிருந்த சிறியதிருவடியைநோக்கிக் கேளீர் மாருதியே! மஹேந்திரம், இமையம், விந்தியம், கைலாஸம் முதலிய வெண்மை நிறம்பொருந்தியும், செம்மையுற்று இளம்வெயில்போலவும் விளங்குகின்ற நாற்றிசைகளிலுமுள்ள மலைகளிலும், மேற்றிசையில் கடலோரங்களிலும், உதயகிரி அஸ்தகிரிகளிலும உள்ள சந்தனம் பனை முதலிய பற்பல மரங்களடர்ந்த காடுகளில் வாழ்கின்றவர்களும், அஞ்சனமலைபோன்றவர்களும், கருமுகில்போன்றவர்களும், மதவேழத்தை நிகர்த்த தோள்வலியுடையவர்களும், ஆகியவர்களும், அஞ்சனமென்னும் மலையிலே வாழ்கின்றவர்களும்,

மேரு தூம்ரம் மஹாருணம் என்னும் மலைகளில் வாழ்பவரும், மற்றும் பல பல காடுகளிலும்,முனிவர்களின் ஆசிரமங்களிலும் வாழ்பவர்களுமான வான ரர்களை ஸாமதானங்களினாலே மகிழ்வித்து விரைவாகவந்து சேருமாறு செய்க; முன்பு நான் அவர்களை யழைப்பதன்பொருட்டே கட்டளைசெய்தனுப் பிய தூதர்கள் தாமஸஞ்செய்யாமல் விரைவாக வருவதற்காக மீளவும் தூதர் களையனுப்புக; காமமயக்கிலமயங்கி யாவர் தாமஸஞ்செய்கிறார்களோ?அவர் களை என்னெதிரில் அழைத்துவருக; என்னுடைய கட்டளையின்படி பத்து தினத்துக்குள்ளே எவர் வந்து சேருகின்றிலர்களோ? அவர்களுக்குடனே உயிர்வாங்கும் தண்டனை விதிக்கப்படும்; ஆதலின், அநேகமாயிரம் கோடி வானரர்கள் என்னுடைய கட்டளையினால் விரைவாக ஆகாயத்தை மறைத்தெழுந்து சென்று சேனைகளெங்கெங்கிருக்கின்றனவோ? அவைகளை யுணர்ந்து கையுடனழைத்துவரக்கடவர்கள், என்று கட்டளையிட்டனர். சிறி யதிருவடி யந்தக் கட்டளையைக்கேட்டு அவ்வண்ணமே சிறந்த பலமுடைய வானரர்களை யனுப்பினர் அவர்களும் அவ்வாறே ஆகாயமார்க்கத்தில் வாயு வேகமனோவேகமாய்ச் சென்று அங்கங்குள்ள வானரர்கொல்லோரையும் பெருமாளுடைய காரியத்திற்காகத்துரைசெய்து மஹாராஜா கட்டளையையு மறிவித்தனர்கள் அவ்வானரர்களும ஊழிகாலயமன்போன்ற அம்மஹாரா ஜருடைய கட்டளையைச் செவியுற்றவுடனே சிறிதும் தாமஸம் செய்யாமல் புறப்பட்டனர்கள். அவர்களுள் அஞ்சனகிரியில்வாழ்ந்துகொண்டு அஞ்சன வண்ணமுற்றிருந்தவர்கள், மூன்றுகோடி சேனைகள்; அஸதகிரியில் வாழ் ந்து தங்கநிறம்பொருந்தியவர்கள், பத்துக்கோடி சேனைகள், கைலாஸசிகர த்தில் வாழ்ந்து சிங்கத்தின் கேஸரம்போன்ற மேனியுடையவர்கள், அநேக மாயிரங்கோடிகள், இமையமலையில் வாழ்ந்து வெண்மைநிறமுற்றவர்கள், ஆயிரமாயிரங்கோடி சேனைகள்; விந்தியமலையில் வாழ்ந்து அங்காரகன் போன்ற வண்ணமுற்றவர்கள், அநேகமாயிரங்கோடிகள், திருப்பாற்கட லின் கரையில் பச்சிலை மரக்காடுகளில் வாழ்ந்து பசிய நிறமுடையவர்கள், கணக்கிறந்தவர்கள்; இவ்வண்ணம் வநங்களினின்றும, குகைகளினின்றும், ஆறுகளினின்றும, அநேகமாயிரஞ் சேனைகள் வானிடையில் பரவி கதிர வனை யுண்பனபோலப்புறப்பட்டன, முன் சென்றவர்களை துரைப்படுத்து வதற்காக பின்சென்ற வானரர்கள் அப்பொழுது இமயமலைபோய்ச் சேர்ந்த னர்கள். அம்மலையிலேதான் முன்பு சகல தேவர்களும மகிழ்வுறும்படி மகா தேவன் சிறந்த யாகம் செய்தனன்; அந்த யாகத்தின் ஹோமதிரவியங் களின் பெருக்கினால் மதுரமுள்ள கந்தமூலபலாதிகள் உண்டாயின, அவை களை யாவன் ஒருவன் ஒருவேளை புசிக்கின்றானோ? அவன் ஒருமாதம்வரை யில் பசிதாகமின்றி மகிழ்வான்; அக்கனி காய கிழங்குகளை அவ்வானரா கள் பறித்து உண்டும், மகாராஜாபொருட்டு அவைகளையும், மற்றுமங்குள்ள நறுமலர்களையும் பறித்தெடுத்துக்கொண்டும, அங்கங்குள்ள சேனைகளை விரைவாகவரும்படி துரைசெய்தும், மீண்டு அச்சேனைகளுக்கு முன்பே

கிஷ்கிந்தை வந்து சேர்ந்து மகாராஜனைக் கண்டு வணங்கி அவைகளை அளி த்து அவனைநோக்கி வேந்தே! யாங்கள் தங்கள் கட்டளையின்படி மலை, கடல், காடு முதலிய எல்லா இடங்களையும் சுற்றி அங்கங்குள்ள வானரப்படைகளை யும் துரைப்படுத்தி வந்தனம் அவர்களும் வந்துகொண்டிருக்கின்றனர்கள்; என்று விண்ணப்பஞ்செய்தனர்கள் மகாராஜனும் அதுகேட்டு மிகமகிழ்ந்து அவ்வுபாயனங்களையும் அங்கீகரித்தருளினா

கிஷ்கிந்தாகாண்டத்தில் முப்பத்தேழாவது சருக்கம்

முற்றிற்று.



## முப்பத்தெட்டாவதுசருக்கம்.

மஹாராஜா இளையபெருமாளுடன் பெருமாளெழுந்தருளியிருக்கு மிடத்திற்கு வந்து அவனைக்கண்டு மகிழ்ந்தது.



இவ்வண்ணம் மஹாராஜா அவ்வுபாயனங்களைப்பெற்றுக்கொண்டு அவ் வானரர்களை இனியமொழிகளினால் மகிழ்வித்தனுப்பி தம்மையும் பெருமா ளையும் கிருதார்த்தர்களாக நினைத்து மகிழ்ந்தனர் இளையபெருமாள் அப் பொழுது அவனை நோக்கி, மஹாராஜனே! நும்மனம் உகக்குமாயின், காலக் கழிவுசெய்யாது இப்பொழுதே இங்கிருந்து புறப்படுக, என்று மொழிந்த னர். மஹாராஜா அதுகேட்டு மகிழ்ந்து இவ்வண்ணமே ஆகுக வென்று உடன்பட்டு தாரை ருமை முதலிய மனைவியர்களையும் அனுப்பிவிட்டுவருக வென்று வானரர்களைநோக்கிமொழிந்தனர் வானரர்களும் அதுகேட்டு விரை வாக ஓடிவந்து கைகூப்பி நிற்கையில், மஹாராஜா அவர்களுக்கு விரைவாகச் சிவிகையை கொணர்கவென்று கட்டளையிட்டனர். அவர்களும் அவ்வண் ணம் விரைவாக சிறந்த சிவிகையைகொணர்ந்து அறிவித்தலும், மஹாராஜா இளையபெருமாளையும் அதின்மீது எழுந்தருளியிருக்கும்படி வேண்டித் தா மும் அவருடன் அதிலேறி இருந்து வெண்குடை பிடித்து, வெண்சாமரங் களவீசி, சங்கம பேரிமுதலிய வாத்தியங்களை முழக்கி மகிழவுகொண்ட பற் பல வானரர்களினால் புகழப்பட்டும், படையேந்தி கொடுமைகொண்ட பல கோடி வானரப்படைகளினால் சூழப்பட்டும் புறப்பட்டு பெருமாள் எழுந்த ருளியிருக்குமிடம் சேர்ந்து இளையபெருமாளுடன் இறங்கி பெருமாளைக் கிட்டி வணங்கி கைகூப்பி நிற்கையில, உடன் வந்த வானரர்களெல்லோரும் அவ்வண்ணமே தொழுது கைகுவித்தனர்கள் பெருமாளும் முகிழ்ந்த கமல கோசங்களை உடைய தேங்கிய தடாகம்போன்ற வானரசேனையைக் கடாக்ஷி த்து மகிழ்ந்து தம் திருவடிகளில தலைவணங்கிய மஹாராஜனையும் பிரீதியி

ஹூம், வெகுமானத்தாலும் எடுத்தணைத்து அருகில் வீற்றிருக்கும்படி செய்து அவரை நோக்கி, மஹாராஜனே! அறம் பொருள் இன்பங்களை அவ்வவற்றிற்குரிய காலங்கள் அறிந்து யாவன் பகிர்ந்தனுபவிக்கின்றவனோ? அவனே அரசுக்குரியனாகுவான்; யாவன் அறம்பொருள்களைத்துறந்து காமத்தையே மேற்கொண்டு மயலுறுகின்றானோ? அவன் மரத்துநுனியில் துயில்பவன்போல தன்னிலையினின்றும் வீழ்ந்தே தாழ்மைகொண்டு விழித்துக்கொள்வான்; பகைவரைக் கொல்வதிலும், தோழரைச் சேர்ப்பதிலும் ஊக்கங்கொண்டு அறம் பொருளின்பம் மூன்றினையும் தக்கபடி உண்பவனே ராஜதர்மமுடையவனாகுவான்; ஆதலின, இப்பொழுது முயறசி செயயும காலம் நேர்ந்திருக்கினும், ஊக்கமற்றிருப்பது தகுதி அறறதனறே? ஆதலின, வாநரமந்திரிகளுடன் கூடி நனகு ஆராயக; என்று அருளிச்செய்தனா. மஹாராஜா அதுகேட்டுப பெருமானைநோககி, இனியதோழரே! என்னுடைய செல்வமும், புகழும், கபிராஜியமும், மனைவியும, யாவும் தேவருடைய திரு அருளினாலேதான் மீளவும அடியேனுக்கு வாய்த்தன; ஒருவன் செய்த உபகாரத்திறகு பிரதி உபகாரம் எவன செயயானோ? அவன் யாவரினும் கடையனாகி இகழப்படுவான்; ஆதலின, அடியேன் தேவர் காரியத்தில் ஊககமற்றிலேன; இவவாநராகள பாரெங்கும் சென்று அங்கங்குள்ள கரடி வானரகோலாங்குலங்களை அழைத்து வநதனர்கள்; அவாகள் காடு மலை கடலகளிலுள்ள எலலா இரகசியஙகளையும் அறிநதவர்களும், தேவகந்தர்வர் முதலான தேவகணங்களின் புத்திரர்களும், வேண்டும்படி ரூபங்கள் தரிபபவாகளும், சிறந்த தோளவலி யுடையவாகளுமாகின்றனர்கள்; அவர்கள் இபபொழுது நூறு, ஆயிரம், பதினாயிரம், லக்ஷம், பத்து லக்ஷம், கோடி, அாபுதம், பிருநதம், கர்வம், நிகர்வம், மகாகர்வம, ஸரோஜம், சங்கு, சமுத்திரம், அந்தம், மத்தியம், பரார்த்தம் எனறு ஒன்றுக்கொன்று பதின்மடங்கு அதிகமுள்ள கணக்குடையனவும், கணக்கிறந்தனவுமாகிய பற்பல வாநரசேனைகளுடன் கூடி வழியில் வந்துகொண்டிருககின்றனர்கள்; அவர்கள மேருமந்தரம் போன்றவாகளும், சிறந்த பராககிரமமுடையவர்களுமாதலின், அச்சமன்றி நொடிப்பொழுதிலிங்கு எய்துவாாகள; ராவணனையும் குலத்துடன் களைந்து வெற்றிகொண்டு பிராட்டியையும் மீட்டு அளிப்பார்கள்; ஆதலின், தேவா ஒன்றுக்கும் சிந்தையின்றி மகிழ்ந்து உகந்தருள்க; என்று விண்ணபபஞ்செய்து மகிழ்வித்தனர். பெருமானும் அதுகேட்டு மஹாராஜருடைய முயறசிக்கு உகந்து அன்று மலர்ந்த கருங்குவளைபோன்ற திருமேனிவண்ணமுறறு விளஙகியருளினர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் முப்பத்தெட்டாவது சருக்கம் முற்றிற்று.

## முப்பத்தொன்பதாவது சருக்கம்.

### வானரசேனைகள் எல்லாம மஹாராஜரிடம் வந்து கூடியது.



இவ்வண்ணங்கூறிநின்ற கைகுவித்து நின்ற மஹாராஜனைப் பெருமாள் மகிழ்ந்து தழுவி அவனை நோக்கித் தோழரே! மேகம் மழைபொழிவதும், கதிரவன் இருளை அகற்றி வானை நின்மலமாக்குவதும், சந்திரன் பூமியை நிலவினால் திகழ்விப்பதும், எவ்வண்ணம் வியப்பன்றோ? அவ்வண்ணமே நும்போன்ற தோழர்களும் பிரகிருதி உபகாரம் செய்வதும் வியப்பன்று; உபகாரத்தை விரும்பாமலே உதவி செய்பவர்களுக்கு இது எவ்வண்ணம் வியப்பாகும்; ஆதலின், நீர் என் காரியத்தில் இவ்வண்ணம் முயற்சியுற்றிருப்பதும் வியப்பன்று; நீர் இத்தகவுடையவரென்பதை முன்னமே அறிவேன்; யான் உம்முடன்சேர்ந்து போர்க்களத்தில் பகைவர்களை எல்லோரையும் கொல்லவும் வல்லேன்; ஆதலின், நீரே எனக்கு தோழரும், இனியருமாகி உதவிசெய்க; ராக்ஷஸாதமனான இராவணன் அனுஹ்லாதன் இந்திராணியை எடுத்தோடி ஒளித்ததுபோலச் சீதாதேவியை வஞ்சனைசெய்து பறித்தோடினன்; புலோமாஸுரனைப் பௌலோமீமணாளன் கொலைசெய்தாற்போலவே யான் அந்த ராவணனைப் போரில் கூரிய கணைகளினாலடித்துக் கொலைசெய்வேனென்று அருளிச்செய்துகொண்டிருந்தருளினர். அத்தருணத்திலேதானே பெருந்துகள் பூமியினின்றுமெழுந்து வெப்பமுற்ற கிரணமுடைய கொடிய வெயிலையும் மறைத்திருளமூண்டு வானெங்குமபரவியெழுந்தது, அத்துகளினாலே திசைகளும காணப்படவில்லை, காடு கடல் மலைகளுடன் கூடிய பூமியும் அசைந்தது, உடனே வருகின்ற கூரிய கோரப்பல்லுடையவர்களும், சிறந்த பலமுடையவர்களுமாகிய கணக்கிறந்த வானரசேனைகளினாலே பத்துத்திசைகளும் மறைக்கப்பட்டன; அவர்களுள் ஒவ்வொருவரும் அநேகமாயிரங்கோடி பரிவாரங்களுடையவர்கள்; சிலர் நதிகளிலும், சிலர் கடல்களிலும், சிலர் மலைகளிலும், சிலர் காட்டிலும் வாழ்பவர்கள்; எல்லோரும் மாமலைபோன்றவர்களும், மேகம்போல் கர்ஜனை செய்பவர்களுமானவர்கள்; சிலர் பாலஸூரியன் போன்றவர்கள்; சிலர் பூர்ணசந்திரனை நிகர்த்தவர்கள்; சிலர் தாமரைத்தாதுவண்ணர்; சிலர் வெண்மைநிறத்தவர்; சிலர் மேருமலையில் வாழ்பவர்; அவர்களுள் முதன் முதல் சதவலியென்னும் யூதபதி பதினாயிரங்கோடி வானரர்களுடன் காணப்பட்டனன்; பின்பு, தாரையின் தந்தையான ஸுஷேணன் அநேகம் பதினாயிரங்கோடி சேனைகளுடனும், ருமையின் பிதாவான தாரன் ஆயிரங்கோடி சேனைகளுடனும் காணப்பட்டனர்கள்; பின்பு, வானரர்களனைவர்களுள் சிறந்தவனும, புத்திமானுமாகிய சிறியதிருவடியின் தகப்பனாகிய கேஸரியென்பவன் அநேகமாயிரங்கோடி சேனைகளுடன் காணப்பட்டனன்; பின்பு, கவாக்ஷன் ஆயிரங்கோடி கோலாங்கூல சேனைகளுடனும், தூம்ரன் இ

ண்டாயிரங்கோடி கரடி சேனைகளுடனும், பனஸன் மூன்றுகோடி சேனைக ளுடனும், நீலன் பத்துக்கோடி கருங்குரங்கு சேனைகளுடனும், கவயன் ஐந்துகோடி வானரசேனைகளுடனும், தரீமுகன் ஆயிரங்கோடி சேனைகளு டனும், அசுவினி தேவர்களின் குமாரர்களான மைந்த த்விவிதர்களிருவ ரும் தனித்தனி யாயிரங்கோடி சேனைகளுடனும், கஜன் மூன்றுகோடிகளு டனும், ஜாம்பவான் பத்துக்கோடி கரடி சேனைகளுடனும், ருமண்வான் நூறுகோடி சேனைகளுடனும், கந்தமாதனன் பத்துலக்ஷங் கோடி சேனைக ளுடனும், யுவராஜனான அங்கதன் பதினாயிரம் லக்ஷங்கோடி சேனைகளுட னும், ருமையின் தாதை யன்றியிலே மற்றொருதாரனென்பவன் ஐந்துகோ டி சேனைகளுடனும், இந்திரஜானு பதினொன்றுகோடிசேனைகளுடனும், ரம் பன் பதினோராயிரத்தொருநூறுகோடிசேனைகளுடனும், துர்முகன் இரண் டுகோடி சேனைகளுடனும, அனுமான் ஆயிரங்கோடி சேனைகளுடனும், நளன் நூறாயிரங்கோடி சேனைகளுடனும், ததிமுகன் பத்துககோடி சேனை களுடனும் காணபபட்டனர் ; இவவண்ணமே சரபன், குமுதன், வஹ்நி, ரம்ஹன் என்பவாகளும் தனித்தனி பத்துககோடி சேனைகளுடன் வநதன ர்கள்; இவர்போன்ற மற்றுமுளள கணக்கிறந்த யூதபதிகளும, அநேகமா யிரங்கோடி சேனைகளுடன் காடு கடல மலையடங்கிய மண்டலமெங்கு நிறை நதுவந்தனாகள; இவர்களெலலோரையுங்கணக்கிடுவைப்பது ஒருவர்க்கும ஸாததியமனறு ; இவ்வண்ணம உலகினிலுள்ள வானராகளெல்லோரும் தாவிக்கொண்டும, மேலெழும்பிக்கொணடும், கர்ஜனை செயதுகொண்டும், மேகங்கள் ஸூரியமண்டலத்தைச் சூழ்ந்துகொளவதுபோல மஹாராஜ ரைச சூழ்ந்துகொண்டனர்கள் ; பின்பனவர்களும் தத்தம் நாமங்களை யுரைதது மஹாராஜர்க்குத் தலைவணங்கி யறிவித்தனாகள ; சிலர்கள வின யங்கொண்டு கைகூபபி மஹாராஜரருகில நின்றனாகள் ; மஹாராஜரும் இவாகளெலலோரையுங்கண்டு மகிழநது சேனைகளெலலோரையும் காடு மலை முதலிய இடஙகளில சுகமுறுமாறு இறககிய பெருமாளிடத்திலும அவரவர்களினுடைய ரூபபல பராகரமாதிகளை விண்ணப்பஞ் செயதனர். மஹாராஜா யாவுமறிந்தவராதலின், அச்சேனைகளின தன்மைகளை நன கறிய வல்லவரலலரோ ?—

கிஷ்கிநதாகாண்டததில முப்பததொன்பதாவது சருககம
முறறிற்று.

---

இந்தச்சருக்கத்தில் கணக்கிறநத சேனைகள் மஹாராஜரிருககுமிடத்திறசேர்நத னவென்று கூறப்பட்டுளளது , சிறியதான அவ்விடததில அவவளவு சேனைகளெவவண ணமடங்கியிருந்தனவென்று சிலர் ஆக்ஷேபஞ்செயவர்கள , ஆயினும, இச்சருககததி லேயும் அங்கதற்கு (காமரூபிணீ) வேணடுமாறு ரூபநதரிககவல்லர்கள், என்று விசேட ணமுரைத்திருப்பதினாலேயே அந்த ஆக்ஷேபததிறகு சமாதானம் அறிநதுகொள ளலாம்; எல்லோரும் வானிடையிலிருக்க வலலவாகளாதலினாலும், சிலா ஆகாயத்தி லும், பலர் பாரிலும், மேனியைச் சுருக்கிக்கொண்டிருநதனாகளென வுணர்க.

## நாற்பதாவது சருக்கம்.

### பிராட்டியைத் தேடுவதற்காக விநதனென்னும் யூதபதியை மஹாராஜர் கிழத்திசைக்குக் கட்டளைசெய்தனுப்பியது.



அநந்தரம மஹாராஜா பெருமகிழ்வுகொண்டு மஹாபல பராக்ரமமுடைய பெருமானை நோக்கிக் கேட்டருளீர் அன்புள்ள தோழரே ! காமரூபிகளும், சிறந்த பலமுடையோர்களும், மதவேழம் போன்றவர்களுமாகிய என் கட்டளைக்குட்பட்ட வாநரர்களெல்லோரும் வந்து சேர்ந்துவிட்டனர்கள். இவர்கள் அநேகமாயிரஞ் சேனைகளுக்கு இறையவர்கள்; தைத்திய தானவர்களைப்போலக் கொடுமை கொண்டவர்கள்; வியப்புறத்தக்க செயல்களினாலே பெரும்புகழுடைந்தவர்கள்; எவ்வளவுகாரியஞ்செயினும இளைப்புறார்கள்; முயற்சிசெய்வதிலும், மேற்கொண்ட காரியத்தை முடிப்பதிலும சிறப்புடையவர்கள்; சிலர் பாரிலும், சிலர் நீரிலும நடப்பவர்கள்; இவர்கள் எல்லோரும் தேவர்க்குத்தொண்டர்களாகித் தேவருடைய கட்டளையையே யெதிர்பார்த்து நிற்கின்றனர்கள்; மிகவும் குருபக்தியுடையவர்கள்; இப்பொழுது தேவர் திருவுளத்திலிருக்கின்ற காரியத்தைச் செய்து முடிக்குந் திறமையுடையவர்கள்; அநேகமாயிரங்கோடி வாநரர்களுடன் தேவரையே யெதிர்பார்த்து நிற்கின்ற இவர்களுக்கு இப்பொழுது யாதுகட்டளைசெயின் தகுமோ? அதனை யருளிச்செய்தருள்க; இச்சேனைகளெல்லாம் தேவருடையனவே ? தேவராதீனமாயினவே ? ஆதலின், கட்டளைசெய்தருள்க; இவர்கள் செய்யவேண்டும காரியத்தையும யான் நன்குணர்வேன் ; ஆயினும், தேவரே உண்மையாக அருளிச்செயல்வேண்டும் ; என்று விண்ணப்பஞ்செய்து வேண்டினர். பெருமாளும இவ்வண்ணமொழிந்த மஹாராஜர் வாக்கியத்தைக் கேட்டருளி மகிழ்ந்து அவரைத் திருக்கைகளினால் தழுவி யவரை நோக்கி, மஹாராஜரே ! இப்பொழுது இவர்கள் செயல்வேண்டுவதைக் கூறுகின்றேன் கேளீர் ; என பிராணநாயகியான ஜானகி பிழைத்திருக்கின்றனளோ? இலளோ? அந்த ராவணன் எங்குறைகின்றனனோ?இவ்விஷயத்தைமாத்திரம் இவர்கள் உண்மையாக அறிந்து வரல்வேண்டும் ; அதனை யறிந்த பின்பு நாமிருவரும் ஆலோசித்து யாதுசெயின் தகுமோ ? அதனை யப்பொழுது செய்வோம் ; இவ்விஷயத்தில் யானுமினும், லக்ஷ்மணனுமினும் பிரபுவல்லோம் ; வாநரர்களெல்லோருக்கும் இறையான நீரொருவரே பிரபு; ஆதலின், என்னுடைய காரியத்தின் நிச்சயத்தை நீரே கட்டளைசெய்தனுப்புக; என்னுடைய காரியத்தை யுண்மையாக அறிவதற்கு நீரொருவரே நன்குணர்கின்றீரல்லீரோ ? நீர் நமக்குத் தோழரும், குருகுலவாஸஞ்செய்து கலைகளெல்லாவற்றையுமோதியவரும், மஹாபல பராக்ரம

முடையவரும், காலதேசங்களை யறிந்தவரும், நம் காரியத்தை நன்குணர்ந்தவரும், பற்பல காரியங்களைசசெயது முடித்தவரும் ஆகின்றீர்; ஆதலின, நீரே இவர்களுக்குக் கட்டளைசெய்தனுபபுக; என்று அருளிச்செய்தனர். பெருமாளிவவண்ணம் அருளிச்செயத வார்த்தையை மஹாராஜர் கேட்டு மகிழ்ந்து பெருமாளிளையபெருமாளிருவருக்கெதிரிலேயே விநதனென்கிற சேனாபதியையழைத்து அவனை நோககி மொழியலுறறனர். கேளாய் சேனாபதியே!சோமசூர்யாம்சமுற்ற வாநரசேனாபதிகளும, நீயும மிகுதியாயுள்ள சேனைகளுடன்கூடிக்காலதேசங்களுககுத்தககபடி செயறகுரியனவும்,செயற்கரியனவும் இவையெனத்தேர்ந்து, காடு கடல்களுடன் கூடின கீழ்த்திசையிற்சென்று அங்கே சீதாபிராட்டி எழுநதருளியிருககுமிடததையும், இராவணன் வாழுமிடததையும் தேடி யோரிடமும் விடாமல நனகாராயந்துவருக; அத்திசையில் வழியிலே பாகீரதி, ஸரயு, கௌசிகி, காளிநதி என்னும் நதிகளும், யாமுனமென்னும் மலையும், ஸரஸ்வதி, ஸிந்து, சோணம என்னும் நதிகளும், பற்பல காடுமலைகளடாந்த காளமலா என்னும் நாடும், பாஹ்மமாலம், விதேஹம், மாளவம, காசி, கோஸலம, மாகதம, புண்டரம, வங்கம் எனனுந்தேசஙகளும், கோசகாரரெனனும் ராஜாகளின் ராஜதானியும், வெள்ளிகனியுடைய பூமியும முறையே யிருககினறன, இவை யெல்லாவறறையும் முறையே தேடுக; அதற்குமேல் குணகடல, அதனடுவில பறபல மலைகளும, நகாகளும், மநதரமலையின சிகரமும் இருககினறன ; அவைகளில் செவியில்லாதவாகளும, உதடிலே செவியுடையவாகளும, எஃகுபோனற முகமுடையவாகளும், ஜவனரென்பவர்களும், ஓரோகாலுடையவர்களும், அழிவறறவரும், பல்முடையவரும், மனிதாகளைத்தின்கினறவாகளும், ஆகியவர்களும், கிராதர்களும்,செவியில சிகையுடையவாகளும,தஙகமபோன்ற மேனியுடையவர்களும், பசசைமீனை யுண்பவருமாகிய பற்பல ஜாதிகள் வாழகின்றனர்கள; அங்கு நீரினுளளும பாதி புலியுருவமும், பாதி மானிடவுருவமுமமைமந்த கொடியஜாதிகளுமிருககின்றனவாம; இதுவனறியில ஜம்பூதவீபம், அதன்மேல் சிலத்தீவுகள மலைவழியாலும், சிலத்தீவுகள நாவங்களினாலும் அடையததக்கவை; சிலத்தீவுகள ஆகாசமார்ககமாகவே செல்லுதற்குரியன; அவைகளிலும் சென்று தேடுக; அதன்மேல ஏழுகணடமாகப்பிரிநத யவத்வீபம், அது நவமணிகளுடையதும், வெள்ளி தஙகங்களின் நிறமுடையதும், தங்கககனியுடையதுமாகின்றது; அதனைத தாண்டிச சிசிரமென்னும் மலை, அதனுடைய சிகரம் வானுலகைச சோந்துளது; அஙகு தேவதானவர்கள் வாழகின்றனர்கள் ; இஃசசொலலிய இடங்களில் ஓரிடமாயினும் விடாமல் காடு மலை யாறு குளங் குட்டை கோட்டை நாடு நகர்களெங்கும் பிராட்டியைத்தேடிவருக; அதன்மேல் செவபபுறறும், ஆழ்ந்தும், விரைவாகப் பெருகுகின்ற சோணமென்னும் நீரிருக்கின்றது; அதனமேல் கடலின் அக்கரை அங்கும் சித்தசாரணஸேவிதமான பற்பல தீர்த்தங்களிருக்கின்றன; அங்கும் பிராட்டியாரையும் ராவணனையுந்தேடுக ; அதன்

மேலும் பற்பலத் தீவுகளிருக்கின்றன; அதன்மேல் கரும்பின்சாற்றின்கடல் அது காற்றினால மிக வெழுந்தலைத்தொலிக்கின்றது; அங்கு மிகவும் மாயாவிகளான அஸுரர்கள் வாழ்ந்துகொண்டு மேலே செல்பவர்களை நிழலைப் பற்றி யிழுக்கின்றனர்கள; அவர்களுக்கிவவண்ணந் திசைமுகதேவர் வரமளித்திருக்கின்றனர்; அங்கு நீங்கள் உபாயத்தினால் தரையிலேயேசென்று தாண்டுக; அதன்மேல் லோஹிதமென்னும் கடல் ரத்தம்போலிருக்கின்றது; அதன்மேல ஓங்கியுயாந்த இலவமரம் (சால்மலி) இருக்கின்றது; அதனால் அதன்மேலுள்ள தீவுக்கு சாலமலித்வீபமென்ற பெயர்; அங்கு பெரிய திருவடிக்கு விச்வகர்மன கையிலேமலைபோன்ற திருமாளிகையை யியற்றியளித்திருக்கின்றனன; அங்குள்ள மலைகளில் பற்பல உருவங்களுற்று பயங்கரர்ளான மந்தேஹரென்னும் அஸுரர்கள் தொங்குகின்றனர்கள்; அவர்கள்தான் தினந்தோறும் கதிரவனுதிக்கையில வேதியர்களளித்த அர்க்யமென்னும் வச்சிரங்களினாலடிபட்டு நீரில மடிந்து வீழகின்றனர்கள; கதிரவன் கிரணங்களின் வெப்பந்தணிதலும் அவர்கள முன்போலவே எழுந்து மலைகளினமேலேறுகின்றனர்கள, இவ்வண்ணம உப்பு, கரும்பின்சாறு, ஸுரா, நெய், தயிா என்னும் ஐந்து கடலகளையும, ஜம்பூ, யவம், பலக்ஷம, சால்மலி, குசம, க்ரெளஞ்சம என்னும ஆறு தீவுகளையுமகடந்து செல்லின் வெண்மையுற்ற மேகம்போன்ற க்ஷீரோதமென்னுந்திருப்பாற்கடலிருக்கின்றது; அது அலைகளினிரையினால்முத்துவடமபோலககாணப்படும்; அதனடுவில ரிஷபமென்னுமமாமலை வெணமைநிறமுற்று திவிய கந்தரசங்களுடைய வெள்ளிபோன்ற மலாந்த மரஙகளினாலும் விளங்குகின்றது; அதில் தங்கத்தாதுள்ள வெள்ளிததாமரைகள மலா்ந்த சுதாசனமென்னும புஷ்கரிணியிருக்கின்றது, அஙகு தேவசாரண கந்தாவ கின்னர கிம்புருஷாதி தேவகணஙகள் மகிழ்ந்து விளையாடுகின்றனர்கள; அக்கடலையும் தாண்டிச செலவீர்களாயின், நன்னீர்க்கடல காணப்படும், அதனிடையில்தான் படபாநலம எரிந்துகொண்டிருக்கின்றது; அதனாலேதான ஊழிகாலததில எலலா நீரிரும பருகப்படுகின்றது, அக்கடலிடையில வாழ்கின்ற சிறந்த உயிர்களும் அந்தத தீயைககணடசசங்கொணடு கூவுகின்றன; அங்கு அவவொலி மிக வொலிக்கின்றது; அத்தண்ணீாககடலினக்கரையில பதின்மூன்று காதத்திலே ஜாதரூபசிலமென்னும சிறந்த தங்கமலையொன்றுளது; அம்மலையின்மேலே சந்திரன்போல ஒளிவிடுகின்றவரும், தாமரையிதழ்போனும கண்களையுடையவரும, ஸகல லோகங்களாலும பூஜிக்கப்பட்டவரும், ஆயிரம் தலையுடையவரும், நீலவஸ்திரமுடுத்தவருமாகிய திருவநந்தாழ்வான எழுந்தருளியிருக்கின்றனர்; அம்மலையின் நுனியிலேதானே மூன்று கிளையுள்ள பருத்துயர்ந்த தோர் தங்கப்பனைமரம் கிழத்திசைக்கெல்லையாக நாடடப்பட்டு வேதியுடன் விளங்குகின்றது; அதற்குமேல பொன்மயமான உதயகிரியிருக்கின்றது; அதன் சிகரம் நூறுயோஜனம் உயர்ந்துளது; அதிலுள்ள ஸால தால தமால கர்ணிகாரம் முதலிய மரங்களும் பொன்மயமாக

லு யலர்ந்து விளங்குகின்றன; அதில் ஒரு யோஜனம் விஸ்தாரமும், பத்து யோஜனம உயரமுமுள்ள ஸௌமனஸமெனனும் ஒரு சிகரமிருக்கின்றது; முன்பு, பெருமாள உலகத்தை யளக்குகையில, அதன்மேலேதான் முதலடியையும், மேருவினமுனையிலிரண்டாவதடியையும வைததருளினர்; கதிரவன் தினந்தோறும மேருவுக்கு வடபுரத்தைச சுறறிவருகையில், அச்சிகரத்தை யடையும்பொழுதுதான் தென்புறத்திலுளளோர்களினால காணபபடுகின்றனன்; அங்கு வைகானஸரென்னும, வாலகில்யரென்னும வேற்றுமையுடைய மாமுனிவர்கள தவஞ்செய்துகொணடு கதிரவனுக்கு நிகராகக காணப்படுகின்றனர்கள; அதற்கு எதிரிலிருக்கின்ற ஸ்தானத்தில கதிரவன் யாவராலுங் காணபபடுகின்றமையில், அதறகு ஸுதர்சன தவீபமென்று பெயா கூறபபட்டுளளது, அம்மலைகளின சிகரங்களிலும, குகைகளிலும், ராவணனும் பிராட்டியும இருககின்றனரகளோவென்று தேடிவருக; அம்மலையினொளியும, கதிரவனொளியுஞ்சோந்து செம்மையுறறு விளங்குகின்றமையின், காலைசசந்தியென்னபபடுகின்றது; பிரஹ்மா உலகினைப்படைக்கையில, முதனமுதல பூலோகததிறகு உதயகிரியை துவாரமாகச்செயது சூரியனையும அந்த இடத்தொடங்கிச சுறறும்படி செயதமையின், அததிசைக்குப பூர்வதிசை (கீழததிசை) யெனனும அம்மலைக்கு உதயகிரியென்று பெயரிடபபடடது; அம்மலையின பின்புறங்களிலும் தேடுக, அம்மலையினபபுறத்திலே ஸூரிய சந்திராதிகளின ஒளிகளின்றி இருளமூடியிருக்கின்றது; ஆகலின், அங்குசசெலவது ஒருவராலும முடியாது, அதுவரையிலும்தான வானரர்களால் செல்லலதகும், ஆதலின், நீங்கள அதுவரையிலுமுளள இடங்களில ஓரிடமாயினுமவிடாமல முழுதும் தேடிவரக்கடவீர்கள, அதறகுமேல் இருளமூடியிருக்கின்றமையின், அதன் முடிவை யாமறிந்திலோம்; இவ்விடங்களுக்கும ஒரு மாதததிற்குளளாகவே சென்று பிராட்டியையும், ராவணனையுந்தேடி இன்றைககு முபபதாவதுதினந் தப்பாமலிங்குவந்து சேரககடவீர்கள, ஒருவரும மாதங்கடந்து வரல்கூடாது, அப்படி வருபவன் உயிர்வாங்குந் தணடனைககுள்ளாகுவான், ஆதலின, நீவிரெல்லீரும இந்திரன் திசையான கீழததிசையையடைந்து யான் கூறினவும், கூறபபடாவுமாகிய இடங்களெல்லாவறறிலும பிராட்டியையும, ராவணனிருப்பிடத்தையுந்தேடி ஒரு மாதததுக்குள்ளாக இவ்விடம வந்து சேர்ந்து செய்திகூறி பின்புறறு வாழ்வுறககடவீர்கள, என்று மஹாராஜர் விநதனென்னும் யூதபதிககுக கட்டளைசெயது முடிததனர.

கிஷ்கிந்தாகாணடததில் நாறபதாவது சருககம்

முற்றிற்று.

---

இந்தச் சருக்கததில கீழததிசையின எலலை கூறபபடடுளளதே? இது கிஷ்கிந்தை முதலாகவா ? மேருகிரிமுதலாகவா ? திருவயோததிமுதலாகவா ? என்று சிலா சந்

கிப்பார்கள் ; இமையம், விந்தியம் என்னும் இரண்டு மலையின் நடுவில் சராவதியெ ன்னும் ஒரு நதியுளது ; அதுமுதலாகவென றுணர்க ; சூரிய சித்தாந்தம், ஆர்யபடீயம் முதலிய சோதிட நூல்களில் பூமி எண்ணூறு யோஜனமே நீளமுள்ளதென றும், ஐந தாயிரரு சிலலரையோஜனமே பரிதியுள்ளதென்றும் கூறியிருப்பதனாலும், இப்பொ ழுது ஊணா முதலியோாகளும் அவ்வண்ணமே கண்டதாகக கூறுகின்றமையினாலும், பூமி யுருண்டைவடிவாக விளங்கனிபோலச் சிறிதாகவே யிருககின்றதென றும், ஸ்ரீபா கவதம், ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலிய புராணஙகளில் பூமிதட்டையாகவும, ஐம்பது கோடி யோஜனம விஸததீர்ணமென றும், மேரு முதலிய மலைகள மிகவும் உயரமுள் ளனவென றும, உபபுநீாககடல் முதலாக ஏழுகடல்களுளவென்றும், முறையே ஒவ் வொரு கடலகளும, ஒவ்வொரு தீவுகளும், லக்ஷம் லக்ஷம யோஜனம் விஸ்தீாணமுள ளனவென றும கூறபபட்டது பொருநதாதென றும் சிலா சஙகிபபாாகள ; சோதிட நூல செயதவாகளதாம கிருஹாதிகளை ஸ்புடஞசெயவதறகு எவவகை யெளிதோ அவ்வகையாகக கணககோபபடுததிககொணடனாகளே யனறி, பிரபஞசததின உண் மையைக் கூறவநதவாகளலலா, ஆதலின, அவாகளினுடைய வாககியம் திதி நிாணயா திவிஷயஙகளில பிரமாணமேயனறி, ததுவவிஷயததில பிரமாணமாகாது ; ஊணர் முதலியவர்களும, ஓா சிறியகிணறறிலிருககினற ஆமை அககிணறறைவிடப பெரிய ஆறு குளங கடலகளிருபபதாகவே உடனபடாததுபோல சாாவாகாபோலத் தாம் கணணாலகணடவளாயிலுமே பூமியெனபவாகளாதலின, அவா வாககியமும தத்துவ விஷயத்தில பிரமாணமாகாது , ஆதலின், அவர்களின வாககியஙகளைககொண்டு முக் காலபபொருளகளையும ஞானககணணினால முறறுமுணர்நத ஸ்ரீசுக சௌநக வியாஸ பராசராகளின திருவாககுகளைப் பொயயெனத்துணிபவன எநத மடையன ; அன்றி யிலே, சோதிடநூலகளுககும, புராணஙகளுக்கும் ஆராயுஙகால விரோதமேயில்லை. ஏனெனின, சோதிடாகள நாமிபபோழ்திருககும இவவிடத்தையே பூமியின மேற்புற மாகவைததுககொணடு ககோளம பூகோளததைச சுறறுவதாகக் கூறினர்கள ; இப் போழுது நாமிருககுமிடம பூமியின மேறபுறமேயனறு ; இது மேருகிரியின தென்கி ழககான தாழவரையே யனறி, பூமியின மேறபுறம் அன்று ; ஆதலின, மேருமலை யின அடிவாரம் இதறகு மிகவும நெடியதூரததிலிருக்கின்றது ; அதறகுமேலேதான் பூமியின விஸதீாணமிருக்கின்றது ; அதற்கு மேறபுறத்திலதான் உப்புநீர்கடலின் விஸ் தீாணமிருககின்றது , அதறகுமேலேதான மறற ஆறு கடல்களும, ஆறு தீவுகளும் மேன்மேலும விஸதீாணமாயிருககின்றன, அதறகுமேல் லோகாலோக பாவதமிருககி ன்றது ; இவவுணமையை மாமுனிவாகள் கேசரகதி சித்தியினால சென்று கண்டறி நது மேருவின் நுனியை மேலாகவைததுக் ககோளம் மேருவைச்சுற்றுகிறதென்றும், பூகோளத்தின் நிலை யித்தனமைததென்றும், புராணங்களில தததுவததை யருளிச் செயதிருககின்றனர்கள்; ஊணா முதலானோாகளும் இப்போழ்து நாமிருக்கும் பரி தியைமாததிரம் சுற்றி வருகிறாாகளேயனறி, மேருவின நுனியையாயினும், இதற்குத் தென்முனையையாயினுஞசென்று கண்டிலாகள் ; அவர்கள இதறகுத தெற்கில சுமார் இரண்டாயிரம மயிலதூரம் சென்றிருபபதும் அரிது ; அதறகுமேல் லக்ஷம் மயில தூரம செலலினும் பூமி முடிவுபெறாது ; அதறகுமேலேதான் பூமியின் விஸ்தீர்ண மிருககின்றது ; இதனுண்மையை யறியாமல் முனிவர்களின் மொழியைப்பழிப்பது மடமையென்பதிலும் ஐயமுறுவார்களோ சானறோர்கள ; இப்போழ்திந்த கண்டத் தைச சுற்றியிருககும் கடலும் உப்புநீர்க்கடலின் முனையேயன்றி, யதன்விஸ்தீர்ணம் பூமியின் விஸ்தீர்ணத்துக்கப்புறமே யுளது ; அன்றியிலே, அவர்கள் பூமியே சுழன்று கொண்டிருககின்றதென்றும், சூரியன் ஓரேயிடததில் நிற்கின்றனெனவும், மற்றுள்ள

கிரஹங்கள்மாத்திரம் சுழலுகின்றனவென்றும், வேகத்தினால் நமக்குப் பூமி சுழ
லுவதாகத் தோற்றுகின்றிலதென்றும், சூரியன் சுழலுவதாகத் தோற்றுவது பிராந்
தியென்றும், இப்பூமியும் கோளங்களைப்போலவே ஆதாரமின்றி ஆகாயத்திலிருக்
கின்றதென்றும் கூறுகின்றனர்கள்; இதுவும் மடமையை விளக்குகின்றது; பூமி
கிழக்குமுகமாகச் சுமார் ஒரு நிமிஷத்திற்கு இருபத்தைந்து மயிலுக்குக் குறையாமல்
சுழல்வதாக அவர் கூறியிருக்கின்றமையின், அது மிகவும் பொருந்தாது, ஏனெனின்,
கருடன் முதலிய சிறந்த பறவைகள் நாடோறுங் காலையிலெழுந்து ஆகாயத்தில் பற
ந்து சுமார் இரண்டு மூன்று மணிவரையிலும் கீழே யிறங்காமல் வேண்டும் திசை
களிற்சென்று இரை தேடிக்கொண்டு மீளவும் தங்கூடுகளில் மாலையில் வந்தடைகின்
றன வல்லவோ? அது எவ்வண்ணம் பொருந்தும், அவை கீழே யிறங்குவதற்குள்
இப்பூமி யெவ்வளவுமயில்தூரம் சுழன்றிருக்கவேண்டும், சுமார் இரண்டாயிரம் மயி
லுக்குமேலேயே சுழன்றிருக்கவேண்டுமே? இவ்வளவு வேகமாகப் பூமி சுழன்று
கொண்டிருக்கையில், மறுபடியும் அப்பறவை யக்கூட்டையடைத்தான் எவ்வாறடையக்
கூடும், ரயில்வண்டி வேகமாகச்செல்லுகையில், யாராலாயினும் ஏறக்கூடுகின்றதோ?
ரயில்வண்டி வேகமாகச்செல்லுகையில், அதன்மேற்புறத்திலொருவனிருந்துகொண்டு
ஓர் பறவையை யுயரப்பறக்கவிட்டு ஒரு நாழிகை யப்பறவையை யாகாயத்திலேயே
பறந்துகொண்டிருக்கச்செய்வானாகில், மீளவும் அப்பறவை யந்த வண்டியைச் சேரு
மா? சேராதென்பது மடையனுக்கும் தெரியுமன்றோ? அதற்குள் அந்த வண்டி சுமார்
நாற்பது மயிலுக்குக் குறையாமல் சென்றிருக்குமே? பூமிக்குத்தான் சுழலும் வழி
யிலேயே எல்லாவற்றையும் இழுக்கும்படியான சக்தியுள்ளதெனின், பறவைகள் எப்
பொழுதும் கீழ்த்திசையைநோக்கியே செல்லவேண்டுமேயன்றி, மற்றத்திசைகளில்
ஒருக்காலும் செல்லக் கூடாது, ரயில்வண்டியிலும், நாவாயிலும் இருப்பவர்களுக்கு
ஒருக்காலையில் பூமியும் நீரும் சுழல்வதாகத் தோற்றினபோதிலும் ஆராயுங்கால் ரயில்
வண்டியும் நாவாயுமே சுழல்வதாக நன்கு விளங்குகின்றது; அவ்வண்ணமே சூரியன்
சுழல்வதாகத்தோற்றினும் நன்றாக ஆராய்ந்து பார்க்குங் காலையிலாயினும் பூமி சுழல்
வதாகத் தோற்றவேண்டுமன்றோ? அப்படி யொருவர்க்குந் தோற்றுகின்றிலதே?
இப்படியிருக்க முனிவர்களின் வாக்கியங்களையும் பொய்யென்று வாதித்து அனுபவத்
துக்கும் விருத்தமாகப் பூமியே சுழலுகின்றதென்று சாதிப்பது என்ன மடமை, ஆத
லின், சோதிடர்களின் கருத்தையும், மாமுனிவர்களின் மகிமையையும் அறியாமல்
தூற்றுகின்ற பேதையர்களின் வார்த்தையினால் மயக்குறற்க, இதனைக்கண்டவர்
களுக்கு ஒரு விரோதமும் தோன்றாது, சூரியாதி கிரஹங்களின் நிலை சில விடங்
களில் ஒருவிதமாகவும், சில விடங்களில் மற்றொருவிதமாகவும் கூறப்பட்டிருப்பதற்கு
ஒன்று மண்டலங்களின் நிலையையும், மற்றொன்று அம்மண்டலாதிஷ்டான தேவதை
யின் நிலையையும் கூறினதாகப் புலவர்கள் கருத்துரைத்திருக்கின்றனர்கள்; ஆதலின்,
இவ்வண்ணமுரைப்பது ஒரு நூலுக்கும் விரோதமில்லை; இந்தச் சருக்கத்திலும் மஹா
ராஜர் கீழ்த்திசையின் விஸ்தீரணமுறைகளை யுரைத்திருப்பதை யாராயுங்காலையிலும்
இப்பொருளே நன்கமையுமென வனவாக்கும் விளங்கும்; இதிலுரைத்தற்குரியது
வெகுவாகவுளதாயினும் விரிவுக்கஞ்சி மௌனமடைந்தனம்.

• இராவணனுடைய இருப்பிடம் தென்திசையில் இலங்கையென்பது மஹாராஜா
க்குத் தெரியுமாயினும், அவன் மாயாவியாதலாலும், ஸ்ரீராமசந்திரனுடைய தோள்
வலிக்கஞ்சி வேறிடத்திலோடி யொளித்துக்கொண்டிருப்பனோவென்கிற ஐயத்தி
னாலும், நாற்றிசைகளிலும் தூதனுப்பினரென வறிக.—

## நாற்பத்தொன்றாவது சருக்கம்.

### மஹாராஜர் தென்றிசைக்கு வாநரர்களை யனுப்பியது.

மஹாராஜரிவ்வண்ணம் கீழ்த்திசைக்கு விநதன் முதலிய வாநரசேனை களை யனுப்பிவிட்டுத் தென்றிசைக்கும் சிறந்த வாநரர்களை யனுப்பும்படி நிச்சயங்கொண்டு அநலகுமாரனாகிய நீலனையும், அநிலகுமாரராகிய சிறிய திருவடியையும், திசைமுகதேவர் மைந்தனான ஜாம்பவந்தனையும், ஸு ஹோத்ரன், சராரி, சரகுல்மன, கஜன், கவாக்ஷன், கவயன், ஸுஷே ணன், ரிஷபன், மைந்தன், துவிவிதன, விஜயன, கந்தமாதனன, உல்கா முகன், அஸங்கன, அங்கதன முதலியவர்களையும் அழைத்து இராவண னுறைவிடமத்திசையிலென்பதை யறிந்தவராதலின், சிறந்த மிகுந்த சேனை களையும் கூட்டிக்கொண்டு தென்றிசையைத் தேடும்படி கட்டளைசெய்து மொழியலுற்றனர். கேண்மின அன்புடைய சேனாதிபதிகளே! நீவிரெல்லீ ரும் சென்று தென்றிசையில் எங்கெங்கு ஏகாந்தமான இடங்களுளவோ? அங்கங்கே சென்று சீதாதேவியாரையும், இராவணப்பயலையும் தேடி வருக; அதற்கு முறையே வழியுரைக்கின்றேன கேளீர்; அநேக சிகரங் களையுடைய பற்பல காடுகளடர்ந்த விந்தியமலையையும், கொடிய கருநாகங் களையுடைய நர்மதாநதியையும், கோதாவரி, கிருஷ்ணா, வரதா, மேகலா, உத்கலா என்னும் நதிகளையும், தசார்ணதேசத்திலுள்ள நகரங்களையும், அசவவந்தி, அவந்தி என்னும சிறந்த நாடுகளையும, விதர்ப்பம, ரிஷிகம, மாஹிஷகம், வங்கம, களிங்கம், கௌசிகம என்னும் தேசங்களையும் முறையே தேடிப் பற்பல காடு மலைகளடர்ந்த தண்டகாரணியத்தையும், அங்குப் பெருகி வருகிற அந்தக் கோதாவரியையும், ஆந்தரம், புண்ட்ரம், சோளம், பாண்ட்யம், கேரளம என்னும தேசங்களையும், அயோமுகமென் னும், ஸஹ்யமென்னும பெயருடைய மலைகளையும், அதினின்றும்பெரு கிவருகின்ற காவேரியையும், அதன சிகரத்தில் வீற்றிருக்கின்ற அகஸ்த்ய மஹாமுனிவரையும் சென்று காண்க. பின்பு, அவரிடத்தில விடைபெற றுக்கொண்டு தாம்ரபாணியென்னும் நதியையுந் தாண்டிச் செல்க; அந்த நதி இருகரையிலும் சந்தனமரங்களடர்ந்து தெளிவுற்றுப் பெருங்கடலைச் சேர்கின்றமையில், காமினி காமுற்றுக் காந்தனிடம் செல்வதுபோல விளங்கும்; அதன்மேல் பொன்மயமான பாண்டியராஜர்களின் ராஜதானி கட்புலனாகும்; அதன்மேல் தென்கடலின் கரையில் அகஸ்தியமுனிவ ராலே தாபிக்கப்பட்ட மகேந்திரமென்னும் மலை யிருக்கின்றது; அது பொன்மயமாகியும், பற்பல காடுகளடர்ந்துமுளது; அதில் தேவகந்தர்வ வித்தசாரண கிந்நரகிம்புருஷாதி தேவர்களும், தேவரிஷிகளும் வாழ் வுற்று மகிழ்கின்றனர்கள்; அம்மலைக்குப் பர்வங்கள்தோறும் தேவேந்தி

ரன் வருகின்றனன்; அதற்குமேல நூறுயோஜன தூரத்தில் இலங்காதுவீபமிருக்கின்றது; அதுதான் அந்த ராவணனுக்கு வாழ்விடம்; ஆதலின், அங்கு மிகவும் ஊக்கத்துடன் பிராட்டியை நன்கு தேடுக; அங்கு மனிதர்கள செல்வதரிது; அதற்குச செலலும வழியிலே அங்காரகையென்னுமொரு கொடிய அரக்கி கடலிடையில் வாழகின்றனள; அவள் ஆகாசத்தில் செலலுமவர்களையும், அவாகளின் நிழலைப்பற்றி யிழுத்துக் கொலை செய்கின்றனள்; ஆதலின, அவவிடங்களில் மிகவும் ஊககத்துடன் சென்று எவ்வெவவிடஙகளில் ஐயந்தோற்றுகின்றதோ? அவவவவிடங்களை நன்காராயந்து ஐயந்திாந்து பிராட்டியைத் தேடுக; அந்த இலங்காபுரிககுத் தெறகில் நூறு யோஜனதூரத்தில புஷ்பிதகமென்னும் சிறந்த மலை பல சிகரங்களை யுடையதாகிக கதிரவன்போல ஜொலிககின்றது; அதில் ஒரு சிகரம் பொன்மயமா●யது; அதுதான் ஸூரியனுக்கு வாழவிடம்; மறறொன்று வெள்ளிமயமாயிருககின்றது; அது சந்திரனுக்கு வாழவிடம்; அதில் மறறும் பறபல தேவகணஙகளுமவாழகினறன;—

నతంకృతఘ్నాఃపశ్యన్తి ననృశంసాననాస్తికాః

ప్రణమ్యశిరసాశైలం తంవిమార్గతవానరాః.

நதமகருதகனாஃபசயநதி நநருசம்ஸாநநாஸதிகாஃ

பரணமயசிரஸாசைலம தமவிமாாகதவாநராஃ.

அம்மலையை நன்றியிலலாதவாகளும, கொடுமைகொண்டு ஜீவஹிம்ஸை செயபவாகளும, வேதததைப பிரமாணமாக உடன்படாமல் நிரீசுவரவாதம் செயகின்ற நாஸ்திகாகளும் கண்ணுறாாகள; நீங்கள அதனைக் கணடு வணஙகிப் பின்பு, பிராட்டியைத்தேடுக; அதறகுமேல் பதினொன்கு யோஜனதூரததில் ஸூரியவான் என்னும் மாமலையிருககின்றது; அதறகு வழி மிகவும செலவதற்கு அரியதாகும; அதறகுமேல் வைதயுதமென்னும் மலை பறபல மரஙகள தளிாததுப் பூததுக காயததுக கனிததுள; நீங்களங்கே சென்று காய கனிகளை யுண்டு தேனையும பருகி மகிழநது மேலே செல்லக்கடவீாகள; அதறகுமேல் மிகவும கண்ணுறத்தக்க குஞ்சரமென்னும் மலை யுளது; அதன் சிகரததிலேதான விசுவகாமன அகத்தியமாமுனிவருககு ஆசிரமம இயற்றி யளிததிருககின்றனன; அம்மலையின்மேல் பததுயோஜனமுயரத்தில் ஒரு யோஜனம் விஸ்தாரமுளள போகவதியென்னும் வாழ்விடமிருக்கின்றது; அதிலும் பனனகர்களே வாழகின்றனர்கள்; அங்கு நாகராஜனான வாஸுகியும வாழந்துகொணடிருக்கின்றனன்; அங்கும் சென்று பிராட்டியைத் தேடுக; அதற்குமேல் பறபல கூடமான இடங்களுள; அங்கும் நன்காராயந்து பிராடடியைத் தேடுக; அதற்குமேல் ரிஷபம்போலவே உருவமமைந்த ரிஷபமென்னும் மலையுளது; அந்த ரிஷபகிரியில் கோரோசனவண்ணமுறறதும், பதுமதள

வண்ணமுற்றதும், தமாலதளவண்ணமுற்றதும், தீபபொறிபோன்றதுமா கிய திவிய சந்தனம் உண்டாகின்றது ; நீங்களதைககணடு விருப்புறறு கையினால தொடற்க ; அவ்வநத்தை ரோஹிதரொன்னும் கந்தர்வர்கள பாதுகாததுககொண்டிருககின்றனாகள ; அவாகளுக்கு இறையவர்கள் சைலூஷன், கிராமணி, சிக்குரு, சுபரன், பப்ரு என்னும் ஐவா வாழ்கின்றனர்கள் ; சூரியன், சந்திரன், அக்கினிகள்போன்ற மேனியுடைய நல்வினை செய்தவாகளும் அங்கு வாழ்கின்றனாகள ; வானுலகம பெற்றவாகளும் அங்கிருக்கின்றனாகள; அதுவரையிலதான் இவவுலகததவர்களால் செல்லலாகும ; அதற்குமேல் மிகவும கொடியதான பிதிராகளின் உலக மிருக்கின்றது ; அது உங்களுககுச செல்வதற்குரியதாகாது ; அது மிகவும் நளளிருளினுல் மூடப்பட்டிருக்கும் ; அங்கேதான் யமதாமராஜனுடைய ஸம்யமினியென்னும் ராஜதானி யுளது ; இதுவரையிலதான நீங்கள செல்வதற்கும், பிராட்டியாரைத தேடுவதறகும் திறமை கொள்வீாகள ; ஆதலின், நீங்கள் அதுவரையிலும் சென்று எல்லாவிடங்களிலும் நனறுகப பிராட்டியைத் தேடி யவா செயதியை யறிநது வரககடவீர்கள்; யாவனொருவன் இவவணணங் தேடி ஒரு மாததததுக்குளளாக என்னிடம் வநது கண்டேன் சீதாதேவியை யென்று மங்களங்கூறுவானே ? அவன் எனனுடன் கூடி எனக்கு நிகரான போகங்களைபபெற்று மகிழநது வாழுவான்; அவனிலும் இனியன் எனக்கு மறறொருவனுமிரான ; அவனே எனககு உயிரினும் இனியவன் ; அவன ஏதேனும அபராதஞ்செயினும, எனக்கினியனுகவே எண்ணப்படுவான் ; நீங்கள அளவறற பல பராக்கிரமமுடையவர்களும, நற்குலத்திற பிறந்தவர்களும், நுணணறிவுடையவாகளுமாகின்றீர்கள ; ஆதலின், நீங்கள பிராட்டியை எவ்வணணங்கண்டு மகிழுவீாகளோ ? அவ்வண்ணம் நன்முயற்சிசெயது சென்று காரியத்தை நிறைவேற்றிக் கொண்டு வரக்கடவீாகள ; என்று மஹாராஜா, ஜாமபவான், அனுமான், அங்கதன் முதலானோாகளுக்குத் தென்திசையின் வழி யுரைத்து விடைகொடுத்தனுப்பினா.

கிஷ்கிந்தாகாண்டததில் நாற்பததொன்றுவது சருக்கம் முறறிற்று.

---

கீழத்திசையிறபோலத் தெனதிசையில முழுதலும் செலவதறகு நடுவில் யமலோகம் புகறகரியதாதலின, தடையாகினறது ; தென கிழக்காகவாவது, தென் மேறகாகவாவது சுறறிக்கொண்டே பூமியினடிபபுறததை யடையவேண்டும்.

புஷ்பிதகம் எனனும் மலையிலுமே சூரிய சந்திரர்கள் தக்ஷிணயனத்தில் சாய்கின்றனாகள , அதற்குமேலுள்ளவாகளுககு சூரிய சந்திரர்கள் எப்பொழுதும் வடபுறததிலேயே காணப்படுவார்கள் , ஒருவர்க்கு பல விடங்களில் வீடிருப்பது

# நாற்பத்திரண்டாவது சருக்கம்

## மஹாராஜர் மேற்குத்திசைக்கு வாநரர்களை யனுப்பியது.

---

மஹாராஜா இவ்வண்ணம் ஜாம்பவான் முதலானோர்களைத் தென் திசைக்கு அனுப்பி மேற்றிசைக்கனுப்புவதற்காக தாரையின் தந்தையான ஸுஷேணனை யழைத்துத் தமக்கு மாமனாராதலின், அவரை வலஞ் செய்து வணங்கி மொழியலுற்றனர். கேளீர் மரீசிமஹாமுனியின் குமார ரான மாரீசரே ! நீர் மற்றுமுள்ள மரீசி குமாரர்களுடனும், மற்றுமுள்ள ரிஷி குமாரர்களான வாநரர்களுடனும் புறப்பட்டு மேற்றிசைக்கு இரண்டு லக்ஷம் சேனைகளின் திரள்களுடன் சென்று தேடுக , சராவதி நதியினின் றும் மேற்காக நீங்கள் செல்வீர்களாயின், முறையே ஸுராஷ்டரம், பாஹ லீகம், சூரம், பீமம் முதலிய செழிப்புள்ள தேசங்களும், பற்பல நகரங் களும், புன்னைகவகுளோத்தாலகங்களின் திரளுடைய பெரிய வனமும், தாழைச்சோலைகளும் காணப்படும் ; மேற்குத்திசைநோக்கிப் பெருகுகின்ற பற்பல நதிகளும், பற்பல யோகிகளின் ஆசிரமங்களும், பற்பல காடு களும், மலைகளும், நீர் மரஞ் செடி கொடிகளற்ற மருகாந்தாரமும், உயர்ந்த சிலைகளும், முறையே காணப்படும், அங்கெல்லாம் பிராட்டியை நன்றாகத்

---

போலவே ஸூரிய சந்திராக்ஸதிய வாஸுகி முதலானோர்களுக்கும் வேண்டுங்காலங் களில் வாழ்வதற்காக அங்கங்கு வாழ்விடங்களுளவென்றுணர்க. அவர்கள் தெய்வத் தன்மை யுடையவர்களாதலின், ஒருவரே பலவிடங்களிலும் பல உருவங்கொண்டிருப் பார்கள்

மஹாராஜா முன்பு பெருமாளுடன் ராவணனிருப்பிடந்தெரியாதென்றுரைத் திப்பொழுது இராவணனிருப்பிடத்தை யுரைத்தனர் , ஆதலின், அவர் பொய்யரல் லரோவெனின், பொய்யரல்லர், முன்பு ராவணனுக்கு வாழ்விடம் இலங்கையாயினும், பிராட்டியைப் பறித்துவந்த பின்பு, அங்கு வாழ்கின்றானென்பது நிச்சயமில்லை, அச்சத்தினால் வேறிடத்திலும் ஒளிந்து வாழ்வான் ; அப்பொழுது அவனிருக்குமிடத் தைத் தேடுவதற்குச் சேனைகளும் ஸ்வாதீனத்திலில்லை ; ஆதலின், அப்பொழுது பெருமாளுக்கிருந்த துயரில் சந்தேகமா யுரைசெய்யினும், அப்பொழுதே பிராட்டி யைத்தேட முயற்சி செய்வர் ; அவ்வண்ணம் இலங்கைக்கு வந்து பார்த்து இராவ ணன் அங்கிரானாகில், பின்பு செய்வது யாது ; ஆதலின், பெருமாள் காரியம் அப் பொழுது முடிவுபெறுமல் சிரமமாத்திரம் அதிகமாகும் , என்று ஆராய்ந்தே அப் பொழுது அந்தச் சங்கதியை யுரைசெய்யாது மறைத்தனரென்றுணர்க ; ஒருவருக்குத் தீங்கு நேரும்படியான பொய்யே பொய்யாகுமல்லது, ஒருவர்க்குந் தீங்கில்லாமல் ஒருவர்க்கு இதமான பொய் பொய்யாகாது ; மஹாராஜர் முன்னமே பெருமாளுக்கு இராவணனிருப்பிடத்தை யுரைசெய்யின், தமது காரியம் முடிவுபெறாதென்று பொய் யுரைசெய்தனரென்று சிலர் கூறுவார்கள் ; அது தோழமைக் குரியதாகாதாதலின், பொருந்தாது.

தேடி அதற்கு மேற்கில் செல்வீர்களாயின், பச்சிமசமுத்திரம் தென் படும்; அதன் தீரததில் தாழை தமாலங்களின் காடுகள் மிகுந்துள; வானரர்கள அவ்விடங்களில் மிகவும் மகிழவுறுவார்கள; அங்குள்ள காடு களிலும், மலைகளிலும, பிராட்டியையும், இராவணனையும் தேடுக; அன்றி யிலே, அங்கே முரசிபடடணம, ஜடீபுரம, அவந்திபுரம், அங்கலோபை, மிகவும் மரஙகளடர்ந்த அலக்ஷிதமென்னும் வனம், மறறும் பறபல நாடு நகரங்களுமுள; வரிந்து நதிக்கும், ஸாகரத்திற்கும், ஸங்கமபூமியிலே ஹேமகிரியென்னுமொருமலை பறபல சிகரங்களை யுடையதாகி விளங்கு கின்றது; அதன தாழவரைகளிலே சிறகுகளையுடைய சிங்கங்கள் வாழ கின்றன; அவைகள திமிதிமிஙகிலஙகளையும, யானைகளையும எடுததுப் பறந்து தததம கூடுகளுககுச் செலலுகினறன; மதமேறி மிறுமாப்புற்று மேகங்களபோலப் பிளிறுகின்ற களிறுகளும அக்காடுகளில திரிகினறன; அமமலையின சிகரமும பொனமயமாகி வியன்றுயர்நதுளது, அவவிடங களிலும் தேடுக; அதறகுமேல பசசிமசமுத்திரததில் பாரியாத்திரமென் னும் மலையுளது; அதனுடைய சிகரம பொனமயமாகி நூறுயோஜனம் வியனறுயர்ந்துளது; அதனமேலே வேணடுமாறு ரூபநதரிக்கவல்லத் தீபோல விளங்குகினற இருபத்துநானகுகோடி கந்தாவா வாழகின்றனர் கள; அவாகள மிகக கொடியாகளாதலின, நீங்களவரருகிற் செல்லறக; அங்குள்ள காய கனி முதலியவைகளையும் விரும்பறக; அவர்கள அவை களைக காததுககொண்டிருக்கினறனாகள; அவவிடங்களில நீங்கள மிகவும் ஊக்கத்துடன் முயறசிசெயது பிராட்டியைத் தேடுக; வானரஜாதியுடைய வாகளுக்கு அவாகளிடத்தில அசசமுறல் வேண்டுவதில்லை; அதற்குமேல் வைடூரியவணணமுறறு வச்சிரமணிகளுடையதாகிய பறபல மரஙசெடிக ளடர்ந்துளள வசசிரமெனனும மாமலை நூறுயோஜகம உயாந்தும், அகன் றும, ஒளிகொணடு விளஙகுகினறது; அங்குள்ள குகைகளிலும் பிராட்டி யாரைத் தேடுக; அதறகுமேல் கடலில நானகாவது பாகத்திலே சக்கர வான் என்னும் மலை யுளது; அங்கு முனபு விசுவகாமன் ஆயிரம அரமு டைய திருசசக்கரத்தையியற்றினன; ஸ்ரீமநநாராயணன ஓரவதாரததில ஹயககிரீவனென்றும் தானவனைக் கொலைசெயது அவனால் பறிக்கப்பட்ட சக்கரத்தையும், பஞசஜனனெனறுந்தானவனைக் கொலைசெய்து அவனு டையஎலும்பினுலுண்டாகிய பாஞசஜன்யமென்னும் சஙகத்தையும பறித்த ருளினா. அந்தசசக்கரவானென்னும் மலையின்தாழவரைகளிலும், குகைக ளிலும், இராவணனையும் பிராட்டியாரையும் தேடுக; அதற்குமேல் அறு பதினாயிரம் யோஜனதூரம் தாண்டிச செல்வீர்களாயின, வராஹமென்னும் மலை பொனமயமான சிகரங்களையுடையதாகி யாழ்ந்த கடலிடையில் விள ங்குகின்றது; அதன்மேலேதான் ப்ராக்ஜ்யோதிஷமென்னும் பொன்மய மான பட்டணமிருக்கின்றது; அதில் மிகவுங்கொடிய தன்மையுடைய நரகா ஸுரன் வாழ்ந்துகொண்டிருக்கின்றனன்; அவ்விடங்களிலும் இராவண

லையும் பிராட்டியாரையுந் தேடுக; அதனையுந் தாண்டிச் செல்வீர்களா யின்,* மேகவான் என்னும மாமலை பொனமயமாகி யெங்கும் விளங்குகி ன்றது; அதில பனறி, யானை, புலி, காடி, சிங்கம, முதலிய விலங்கு கள் கர்ஜனை செய்து அதனுல தோனறிய பிரதி தொனியைக்கேட்டு மிக வும் கூவுகின்றன; அதன்மேலேதான் முதலில தேவேந்திரன தேவராஜ்ஜிய பட்டாபிஷேகஞ்செயயப்பட்டனன; அதனைக்கடந்து முறையே அறுபதினு யிரந்தஙகமலைகளைககாஸ்ரீாகம்; அதிலுளள மரங்களும் பொன்மயமாகிப் பூத்துத் தழைத்து விளங்குகினறன; அம்மலைகளின நடுவிலே ஸாவ ர்ணி மேருவென்னும ஒரு மலை மறறுள்ள மலைகளுக்கு அரசன்போலவே விளஙகுகின்றது; அது வையோனிடததில் வரம்பெற்று ஓிரவும் பகலும் தன்மேல் வாழுந்த தேவகநதர்வ தானவ பசு பக்ஷி முதலிய வெல்லா வஸ் துக்களையும் பொன்மயமாககுகின்றது, தேவகந்தாவாதிகளும, ஸபதரிஷி களும், அஷ்டவஸுக்களும், விசுவேதேவாகளும், மறறுமுளள தேவ முனிக்குழாஙகளும் தினநதோறும் அஙகெயதி மாலைபபொழுதில் ஸூரி யனை நோககிப பூஜை செயகின்றனாகள; அவாகளால பூஜிககபபட்டவு டனேதான இரவி இஙகுளளோாக்கால காணற்கரியனுகி அஸதகிரியை ய னுடகின்றனன்; அஙகிருந்து அஸ்தகிரிககுப் பதினுயிரம்யோஜனதூரமிருக் கின்றது; அவவளவுதூரததையும கதிரவன அரை முகூாததததில தாண்டி மறைந்து விடுகின்றனன; அம்மலையின சிகரத்திலே பொனமயமாகியும, பொன்மயமான பசு பக்ஷி முதலியவைகளையுடையதும், பலவகை மரங்க ளடர்ந்ததுமாகியதோர்பட்டணம் விசுவகர்மனுலே இயற்றபபடடுளது; அதிலேதான் பாசஹஸ்தனுன வருணன் வாழகின்றனன்; அந்த ஸாவ ரணி மேருவுககும, அஸ்தகிரிககும, இடையில பதது புனையுளள பருத் துயர்ந்த பனைமரமொன்றுளது; அதுவும பொன்மயமாகியதும், விசித்தி ரமான வேதியுடையதுமாகி விளங்குகின்றது; அங்குளள எலலாவிடங்க ளிலும, ஆறுகுளங்களிலும, பிராட்டியாரைத்தேடுக; அந்த ஸாவாணி மேருவின்மீது மேருஸாவர்ணி யென்றும் மஹாயோகி தமது தேஜஸ்வி னுலேயே விளங்குகின்றனா; கதிரவன்போல் ஒளிக்கின்ற அம்மேரு ஸாவ ர்ணி மாமுனிவரை நீங்களெல்லோருங் கண்டு பணிந்து பிராட்டியின் சங் கதியையும் கேட்டறிந்து கொள்க; இவவளவுதூரம் வரையிலேதான் கதிர வன் ஒளிக்கச்செய்து இருளையகற்றி யஸ்தகிரியை யடைந்து மறைகினற ன்; இதுவரையிலும்தான் உங்களாலே செல்லல்தகும்; அதற்குமேல் கதிரவனுெளியின்றி யிருள்மூண்டு அளவற்றிருக்கின்றது; அதற்கும

மேலே நாம் சென்றிலோம்; கேட்டறிந்துமிலோம்; இதுவரையில் நீங்கள் சென்று பிராட்டியின் செய்தியையும், இராவணனொளித்திருக்குமிடத்தையும் அறிந்துகொண்டு ஒருமாதத்திற்குள் மீண்டெய்திச் செய்தி யுணர்த்தக்கடவீர்கள்; ஒருமாதத்திற்குமேல் ஒருவனுமிருக்கக்கடவனல்லன்; அப்படியிருப்பவன் உயிர்த்தண்டனைக் குள்ளாகுவான்; உங்களுடன் கூடவே எனக்கு மாமனாரும், மிகவும் வீரமுடையவருமாகிய இந்த ஸுஷேணர் வருகின்றனர், நீங்களெல்லோரும் இவருடைய கட்டளையின்படி நடந்துகொள்ளக்கடவீர்கள், இவரும் சிறந்தவர்; நீங்களும் சிறப்புற்றவர்கள்; ஆதலின், நீங்களிருவரும் எனக்கு முதன்மையானவர்கள்; ஆதலின், இவரை முன்னிட்டுக்கொண்டு மேற்றிசையைத் தேடிவருக; பெருமாளுடைய பிரிய மஹிஷியான பிராட்டியாரைக் கண்டு வருவீர்களாயின், பெருமாள் செய்த உபகாரத்திற்குப் பிரதியுபகாரமாகுமாதலின்; எல்லோரும் நல்வினையராகுவோம்; ஆதலின், யானுரைசெய்யாவிடினும், காலதேசங்களுக்குத்தக்கபடி யெவ்வண்ணஞ் செயல்வேண்டுமோ? அவ்வண்ணஞ் செய்து காரியத்தை முடித்துக்கொண்டு வருக; என்றிவ்வண்ணம் மஹாராஜா கட்டளைசெய்தனர் ஸுஷேணன் முதலிய வானரர்களும் அதனைக்கேட்டு மகிழ்ந்து அவ்வண்ணமே மேல்திசைமுழுதும் தேடிவருவோமென்று உடன்பட்டு அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு பிரயாணப்பட்டனர்கள்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் நாற்பத்திரண்டாவது சருக்கம்

முற்றிற்று.

---

கீழ்த்திசையைப்போலவே மேல்திசையிலும் ஸூரியகிரணம் முழுதும் வியாபிக்கின்றமையின், ஸஞ்சரிக்கத்தக்கதாகின்றது, தென்திசையில் அவ்வண்ணமில்லாமல் இருள்மூடியிருக்கின்றமையின், செல்லற்கரியதென்றே யியம்பினரேயன்றி, முடிவு கூறவில்லை; இத்திசையிலும் ஏழுகடல்களும் அதனதனது தீவுகளும் உள; விசேஷமின்மையின், எடுத்துக் கூறப்படாவாயினும், கூறப்பட்டனவாகவே எண்ணல்வேண்டும், இவ்வண்ணம் நாற்றிசைகளிலும், ஏழுகடலையுங் கடந்து லோகாலோக பர்வதம் சுற்றி யிருக்கின்றது, அதற்குமேலும் இருள்மூடி யளவற்ற இடமுமிருக்கின்றது; இப்படி லோகாலோகந்தாண்டி நெடுந்தூரம் இருளில் ஸ்ரீகிருஷ்ணபகவான் அர்ஜுனனை யழைத்துக்கொண்டுபோய் பிரகிருதி மண்டலத்துக்குள்பட்ட ஸ்ரீவைகுண்டமெனனும் வேறொரு திவ்விய லோகத்திற்கு எழுந்தருளினரென்று ஸ்ரீமஹாபாரதாதிகளிலுமிருக்கின்றது, இவ்வண்ணமாராயுங்கால் முனிவர்கள் முக்காலப் பொருள்களையுமுணர்ந்து உண்மையாகக் கூறியதைப் பிழையென்று பழிப்பவரைவிட மடையருமுளரோ? ஆதலின், எல்லோரும் இவ்விடங்களிலெழுதிய நோட்டுகளை நன்காராய்ந்து பழிப்பவர்களுக்குத்தக்க ஸமாதானங் கூறக்கடவர்கள்.

## நாற்பத்துமூன்றாவது சருக்கம்.

### மஹாராஜா வடதிசைக்குச் சதவலியென்னும் யூதபதியைக் கட்டளைசெய்தனுப்பியது.

---

மஹாராஜா இவ்வண்ணம் தம்மாமனாராகிய ஸுஷேணனை மேற்குத் திசைக்கு வழியுரைத்தனுப்பிவிட்டுப் பின்பு சதவலியென்னும் மிகவும் வீரமுடைய வானரனை யழைத்து ராஜதருமத்தை நன்குணர்ந்தவராதலின், தமக்கும் பெருமாளுக்கும் நலம் விளையுமாறு மொழியலுற்றனர். கேளாய் சதவலி! நீ உன்னைப்போன்ற சிறப்புற்ற அநேகமாயிரம் வானர சேனைகளுடனும், யமகாமராஜன் குமாரர்களுடனும், அமைச்சர்களுடனும் கூடிப் புறப்பட்டு இமயமலையையே அலங்காரமாகவுடைய வடதிசையை நோக்கிச் செல்லுக, அங்குள்ள விடங்களுள் ஓரிடமும் விடாமல் பிராட்டியாரைத் தேடுக, இக்காரியம் நிறைவேறுமாயின், பெருமாள் திருவுள் முகந்தருளுவர், அப்பொழுதுதான் நாம் கடன் தீர்ந்தவர்களாகுவோம்; நமக்குப் பெருமாள் பேருதவிசெய்தருளினரல்லரோ? ஆதலின், அதற்குப் பிரதியுபகாரஞ் செய்தோமாயின், நம்பிறவி பயன்பட்டதாகும்;—

అర్థినఃకార్యనిర్వృత్తి మకర్తురపియశ్చరేత్
తస్యస్యాత్సఫలంజన్మ కింపునఃపూర్వకారిణః

*அர்த்தின꞉கார்யநிர்வ்ருத்தி மகர்த்துரபியச்சரேத்*

*தஸ்யஸ்யாத்ஸபலஞ்ஜன்ம கிம்புந꞉பூர்வகாரிண꞉.*

ஒருவன் நமக்குபகாரஞ் செய்திலனாயினும், அவன் காரியத்தை யாவன் செய்கின்றனனோ? அவனுடைய பிறப்பும் பயனுள்ளதாகுமெனின், முன்பே நன்றி செய்தவனுடைய காரியத்தைச் செய்பவனுடைய பிறவி பயனுள்ளதாகுமென்பதில் ஐயமுறல் வேண்டுமோ? ஆதலின், இதனை இதயத்தில் நினைந்துகொண்டு நமக்கிதனைச்செய்பவர்களாதலின், பிராட்டியார் எவ்வண்ணம் காணப்படுவாரோ? அவ்வண்ணம் முயற்சிசெய்து தேடுக; அன்றியிலே, இந்தப் பெருமாளும் ஸர்வ பூதங்களுக்கும் இறையவரும், பூஜை செய்துகொள்வதற்குரியவரும், நமக்கும் இனிய தோழருமாகின்றனர்; ஆதலாலும், நீங்கள் இக்காடுகளிலும், நதிகளிலும், மலைகளிலும், நன்கு தேடுக; அங்கிருந்து புறப்பட்டு மலேச்சம், புளிந்தம், சூரஸேனம், ப்ரஸ்த்தலம், பரதம், குரு, மத்ரம், காம்போஜம், யவனம், சகம், ஆரட்டம், பாஹ்லீகம், ரிஷிகம், பௌரவம், கண்டகம், சீனம், பரமசீனம், நிஹாரம், தரதம் என்னும் தேசங்களையும் சென்று தேடுக; அங்கிருந்து

இமயமலை சேர்ந்து லோத்ரம், சந்தனம், தேவதாரு முதலிய காடுகளி லும், இராவணனுடன் பிராட்டியாரைத் தேடுக; அங்கிருந்து தேவகந்தர்வ ஸேவிதமான சோமாசிரமத்தையும், அங்கிருந்து காளமென்னுமுயர்ந்த மலையையும் சேர்ந்து அங்கங்குள்ள காடு குகை முதலிய விடங்களிலும் பிராட்டியாரைத் தேடுக; அங்கிருந்து செல்லின பொன்மயமாகிய ஸுதர் சனமென்னும் மாமலையும, அதற்குமேல் அநேகஙசோடி பறவைகளுடைய தேவஸகமென்னும மாமலையும் காணப்படும, அவவிடங்களிலும தேடுக; அங்கிருந்து நூறுயோஜநமவரையில ஆறு குளங குட்டை காடு செடி பசு பக்ஷி மிருகங்களொன்றுமின்றி மருகாந்தாரமாயிருக்கின்றது; அதனை மிகவும விரைவாகத் தாவிச் செல்வீர்களாயின, வெள்ளிநிறமுள்ள கைலாஸ மெனனும் மாமலையையடைந்து மகிழ்வீர்கள, அமமலையினமேலேதான் சரதகால மேகமபோனற பொன்னாலலங்காரஞ்செயயப்பட்ட சிறந்த பெருமாளிகையை விசுவகாமன குபேரனுக்கு இயற்றி யளித்திருக்கின்ற னன; அவவிடத்தில்தான் விசாலமான மானஸமெனனும ஸரோவரம தாமரை அல்லி ஆம்பல் கருநெய்தல் செங்கழுநீர் முதலிய மலர்கள மலர்ந் தும, ஹம்ஸஸாரஸாதியான நீர்ப்பறவைகளொலித்தும, தெய்வப பொது மகளிர்களினாலே நீர்விளையாடலாடப்பட்டுமவிளங்குகின்றது, அங்கேதான் யக்ஷர்களனவர்க்கும இறைவனாகிய குபேரன் யக்ஷர்களுடன் மகிழ்ந்து வாழுகின்றனன; அங்கும அதைச்சூழ்ந்த மலைகளிலும பிராட்டியாரையும ராவணனையும தேடுக; அங்கிருந்து க்ரௌஞ்சமென்னும மலையைசசேர ந்து மிகவும ஊக்கத்துடன் அதனது பிலத்திலுளபோ செல்லுக; அங்கு தேவர்களாலும பூஜைசெயயப்பட்ட சிறந்த மாயோகிகள வாழ்கின்றனர் கள்; அம்மலையிலுள்ள எல்லாவிடங்களிலும பிராட்டியாரைத் தேடுக; அங்கிருந்து அவருக்ஷம், காமசைலம், மானஸம, விஹகாலயம என்னும் நான்கு மலைகளையும் சேர்ந்து தேடுக; அங்கு தேவதானவ ராக்ஷஸர்க ளொருவரும் செல்லுகின்றிலர்; அங்குள்ள விடங்களிலும் தேடுக. இம் மலைகளெல்லாம க்ரௌஞ்சகிரியைச சூழ்ந்துள்ள மலைகள்; அங்கிருந்து செல்லின் மைநாகமலை, அங்கேதான மயாஸுரன தனக்கு அரண்மனை கட்டிக்கொண்டிருக்கின்றனன; குதிரையின முகமுள்ள கிம்புருஷர்களின் பெண்டிர்களும் அங்கு வாழ்கின்றனர்கள், அவ்விடங்களிலும் தேடுக; அங்கிருந்து செல்லின், சித்தர், வைகானஸர், வாலகில்யர் முதலிய மாயோகிகளின் ஆச்ரமமிருக்கின்றது, அங்குச்சென்று அவர்களைக்கண்டு வணங்கி விநயம்பூண்டு பிராட்டியாருடைய செய்தியையும் வினவி யறிந்து கொள்க; அங்கு பொற்றாமரைகள மலர்ந்து பாலஸூரியன்போன்ற அன்னப்பறவைகளொலித்து வைகானஸமென்னும் சிறந்த ஸரோவரமொன் றுளது; அவ்விடத்திலேதான் குபேரனுக்கு வாஹனமான ஸார்வபௌம மென்னும் திக்கஜம் பெண் யானைகளுடன் கூடி யுலாவிக்கொண்டிருக்கும்; அந்த வைகானஸ ஸரஸ்ஸைத் தாண்டிச் செல்லின், ஸூரியசந்திர நக்ஷத்

திரங்களொன்றுமின்றியும், மேகங்களின்றியும், அளவற்றும் இருக்கிறுய் அங்குள்ள மாயோகிகள் கதிரவன் கிரணங்கள்போல வொளிக்கின்றமை யின், அவ்விடமெங்கும் எப்பொழுதும் பகல்போலவே அம்முனிவர்களின் தேஹ காந்தியினுலே விளங்கும்; அவ்விடத்தைத் தாண்டிச் செல்லின் சைலோதையென்னும் பெரிய நதி யிருக்கின்றது; அதன் இருகரையிலும் கீசகமென்னும வேய்கள அடாந்திருக்கின்றன; அவைகளே அங்குள்ள சித்தர்களை இககரையிலிருந்து அக்கரையிலும், அக்கரையிலிருந்து இக் கரையிலும் சாய்ந்து ஏற்றிககொணடு கொணாந்து விடுகினறன; அவ்வி டத்திலேதான உத்தரகுருக்ஷேத்திரமிருக்கின்றது; அந்த இடத்திலும் நலவினை யறறவாகள வாழவுறுாகள; அதற்குமேல் பொறறுமரை மலர் களையும, இந்திரநீல வைடூரியமயமான இலைகளையுமுடைய பற்பல தாமரை களையுடைய ஆறுகள பலவாறுக இருககின்றன; அங்குளள மடுவுகளும, கதிரவனபோலொலிக்கினற பொற்றுமரைகளினுலே விளங்குகின்றன; அவவாறுகளிலும் சிறநத மணிமயமாகிய இலைகளையும, பொன்மயமாகிய தாதுகளையுமுடைய கருநெயதலகளும், பொன்மணலுற்று முததுக்கள சூழநத மணற்குனறுகளும, நவமணிமயஙகளும், பொன்மயங்களுமாகி ஏப்பொழுதும் தளிாத்தும பூத்துங் காயத்தும் கனித்துமுள்ள மரங்களும், மணிமயமாகிய பறவைகளும விளங்குகினறன; அன்றியிலே அம்மரங்கள் அங்குளளவர்களுககு வேணடியவைகளையெல்லாமளிக்கின்றன; சில மரங கள் அங்குளள காமினியாகளும், காமிகளும அணிவதறகுரிய பறபல அணிகளையும், ஆடைகளையுமளிககினறன, சில மரங்கள் பற்பல விநோத மான சயனஙகளையும், மலர் மாலைகளையுமளிககின்றன; சில மரங்கள் பல வகைப் பானஙகளையும, பறபல பக்ஷியங்களையுமளிக்கின்றன; அங்குள்ள பெண்களும நறகுண நறசெயகை யுற்றவாகளும, ரூபயௌவனமுடையவா களும் ஆகினறனர்கள, அவவிடஙகளில தேவகந்தாவ கின்னர கிம்புருஷ வித்த வித்யாதர நாக யக்ஷாதி தேவகணங்களும, காந்தையர்களுடன் கூடி இன்புறுகின்றனாகள; அங்குளள யாவரும கதிரவனபோன்ற மேனி யுடையவாகளும், நல்வினை செய்தவாகளும், இன்பமுடையவர்களும், வேண்டியவைகளை யெல்லாம் பெற்று மகிழந்தவர்களும், காமினியாக ளுடன் சேர்ந்திணைபிரியாதவர்களுமாகின்றனாகள, அவவிடத்தில் நிருத்த கீத வாத்தியங்களினெலியும், மந்தஹாஸவொலியும் கூடி யாவருக்கு மினிமையாகக் கேழ்க்கப்படுகின்றது; அவ்விடத்தில் மகிழ்வற்றவனும், மனைவியைப் பிரிந்தவனும் ஒருவனுமிலன்; தினந்தோறும் அவ்விடத்தில்

நற்குணங்கள் வளர்கின்றன ; அதனைக் கடந்து செல்லின வடகடல கட்புல னாகும் ; அதனிடையில் ஸோமகிரியெனனும பொன்மலை யொன றுளது ; இநதிரலோகத்திற்கும், பிரஹமலோகததிறகும செல்லுகின்ற தேவர்கள அவவழியாகவே செல்லல் வேண்டுமாதலின, அதனைக கண்ணுறுவாாகள் ; அவ்விடம இரவில் கதிரவனுடைய காநதி யுறறிலதாயினும, அமமலையி ஞெளியினாலே பகலபோலவே விளங்கும் ; அமமலையினமேலும் விசுவ ரூபியும், ஸ்ரீயபதியுமாகிய பகவானும, பதினொறு ருததிரரும், நான முகனும, பறபல பிரஹமரிஷிகளினாலே சூழபபட்டவாகளாகி எழுந்தருளி யிருககின்றனர்கள் ; அந்த உததரகுருக்ஷேத்திரத்திறகு மேலே நீஙக ளொருக்காலையிலும செலலறக ; அதறகுமேல் ஒருவாகரும் செலவதெளி தாகாது; அந்த ஸோமகிரி தேவாகளாலும செல்லறகுரியதன்று; ஆதலின, அந்த ஸோமமலைவரையிறசென்று அதனைககணடு உடனே மீணடெயதுக; இதுவரையிலுமே வாநராகளால செலலறகுரியது ; அதற்குமேல கதிரவ ஞெளியின்றியும, முடிவின்றியும இருத்தலால அதனமேல் யாமறிநதி லோம ; இதுகாறும எமமால் கூறபபடட இடஙகளிலும கூறபபடாதுள்ள இடங்களிலும் சென்று பிராட்டியாரையும, இராவணனையும தேடி வருக ; இவ்வணணம் நீங்கள சென்று பிராடடியாரைத தேடி வருவீர்களாயின், பெருமானுக்கும் நமக்கும் இனிது செயதீர்களாகுவீாகள ; அன்றியிலே, நம்முடன் சேர்ந்து பகைவாகளையும வெனறு பிராட்டியாரையும் பெரு மானுககளித்து எமமால் பூஜை செயதுகொளளபபட்டவாகளாகி புத்திர மித்திர களத்திராதிகளுடன் கூடி வாழவீாகள ; ஆதலின, இககாரியத்தில் மிகவும் ஊக்கஙகொணடு தேடி வாரீாகள என்று மஹாராஜா கட்டளை செய்தனுபபினர்.

கிஷ்கிநதாகாண்டத்தில் நாறபததுமூன்றாவது சருக்கம

முறறிறறு

---

மஹாராஜர் வடதிசைககு வழி கூறுவதில மேருமலையைக கூறியிலரே யென்று சிலர் கேட்பார்கள ; அநேகமாயிரம் பொனமலைகளுளவெனனுமிடததிலேதானே மேருகிரியுமிருப்பதாக வெண்ணுக ; அன்றியிலே, முனனா தாம சேராகசசென்று கணணால கணட வழியைமாத்திரம மூறையே கூறினாராதலின, தாம் செல்லும் காலை யிலும மேருகிரிக்குசசெல்லாது அதனது கிழக்குபபககமாகச சென்றிருப்பாராத லின், அவ்வாறே கூறினரென வுணாக; வடதிசையிலும மற்றத்திசைகளிறபோலவே ஏழுகடல்களும், தீவுகளும் உளவாயினும தாம சென்றிலராதலாலும, மனுஷியருஞ சாரமதறகுமேலில்லாமையாலும், மஹாராஜா கூறிலா; இவவணணமுறைசெய்ததி னால் அனுபவத்திற்கும், சோதிடததிறகும், புராணஙகளுககும், சிறிதும் விரோதமி லலை ; ஆதலின, இவ்வண்ணமே யுண்மையென்றுணர்நது அறபர்களின் வாக்கியங்க ளினால் ஐயமுறற்க ;—

## நாற்பத்து நான்காவது சருக்கம்.

### பெருமாள் சிறியதிருவடியிடத்தில் தமது மோதிரத்தைப் பிராட்டியாருக் கடையாளமாக அளித்தருளியது



மஹாராஜா இவ்வண்ணம் நான்குதிசைகளுக்கும் வானரர்களை யேவி விட்டு மீளவும் சிறியதிருவடியை யழைத்து இவரே மிகச் சிறந்தவரும், யாவுமறிந்தவரும், தாம் மேற்கொண்ட காரியத்தை யூக்கத்துடன் செய்து முடிப்பவருமாதலின், இக்காரியத்தையும் எவ்வகையிலும் செய்து முடிப்பரென்று நிச்சயங்கொண்டு மொழியலுற்றனர். கேளீர் வாயுகுமாரராகிய அனுமானே! உமக்குப் புவியிலாயினும், ஆகாயத்திலாயினும், வானுலகிலாயினும், பொன்னுலகிலாயினும், நீரிலாயினும், தீயிலாயினும் தடைகண்டிலேன்; நீர் தேவாஸுர நாககந்தர்வ நரகின்னரா முதலானோர்களையும், எல்லாவுலகங்களையும், காடு கடல் மலைகளையும் நன்குணர்கின்றீர்; கதியும், வேகமும், தேஜஸ்ஸும, உபாயமும், உம்முடைய தந்தையிடத்திற் போலவே உம்மிடத்திலும் குடிகொண்டிருக்கின்றன, தோள்வலியிலும், வலிமையிலும், காந்தியிலும், புத்தியிலும், உமக்கு நிகரான பூதம் ஒன்றுமிலது; ஆதலின், பிராட்டியார் எவ்வண்ணங் கட்புலனாகுவாரோ? அவ்வண்ணம் நீரே யாராய்ந்து செய்யக்கடவீர் அதற்குத்தக்க பல புத்தி பராக்கிரமங்கள் உம்மிடத்திலேதானிருக்கின்றன; காலதேசங்களுக்குத் தக்கபடி நீரே நடக்க வல்லவர்; என்று மகிழ்ந்து மஹாராஜா மொழிந்தனர். மஹாராஜரிவ்வண்ணம் சிறியதிருவடியிடத்தில் நம்புதலுற்று மீளவும் மொழிந்தமையினாலும், இவரும் தாம் மேற்கொண்ட காரியத்தை முடிப்பவர்போலவே தோற்றப்படுகின்றமையினாலும், இவரே இக்காரியத்தை ஸாதித்துக்கொண்டு வருவாரென்றாராய்ந்துணர்ந்து தீரமும், முயற்சியும், ஊக்கமுங்கொண்டு விளங்குகின்ற அவரைக் கடாக்ஷித்துப் பிராட்டியார் தமது திருக்கரத்திலுள்ளிருப்பதாகவே எண்ணி மகிழ்வுகொண்டு அவ்வானர யருகிலழைத்துத் தமது திருநாமத்துடன் விளங்குகின்ற கணையாழி மோதிரத்தைக் கழற்றி யவர் கையிலளித்து அவரை நோக்கிக் கேளீர் நல்லன்பரே! ஜனகராஜன் திருமகளாகிய எனதுயகிக்கு இஃது நல்லடையாளமாகும்; அவள் இதனைக் கண்ணுறுவளாயின் நீர் நம்மிடத்தி லிருந்து வந்தீரெனவே நிச்சயங்கொண்டச்சந்தேகிந்து கண்டு செய்தியுரை செய்வாள்; உம்முடைய முயற்சியும், பலமும், பராக்கிரமமும், சிறந்த நல்லறிவும், மஹாராஜர்க்குமிடத்திலுள்ள நம்புதலும் சேர்ந்து எனது காரியம் கைக்கூடித்தென்று நம்புவிக்கின்றனபோலும் என்றருளிச்செய்தனர். அந்தச் சிறியதிருவடியும் அம்மோதிரத்தை வாங்கிக்கொண்டு தலைமேலஞ்சலிசெய்து வணங்கிப் பெருமானுடைய திருவடிகளைத் தொழுது

சிறந்த மிகுந்த சேனைகளுடன் கூடிப் புறப்படுகையில், கார்ப்பருவந்தீர்ந்து மேகங்களின் மறைவின்றி விளங்குகின்ற வானிடையில் விண்மீன்களுடன் கூடிய முழுமதிபோல விளங்குகையில், மீளவும் பெருமாளவனை நோக்கிக் கேளீர் மகாபல பராக்கிரமமுடையோரே! உம்முடைய தோளவலியைச் சேர்ந்தே யான எனது காரியத்தை முடித்துக்கொள்ள நிச்சயங்கொண்டிருக்கின்றேன்; ஆகையால், அந்த ஜனகச்சக்கரவர்த்தியின் திருமகள் எவ்வண்ணங் காணப்படுகின்றாளோ? அவ்வண்ணம் முயற்சிசெய்து காரியத்தை முடித்துக்கொண்டு மகிழ்ந்து மீண்டெய்துக; என்று அருளிச்செய்து வாழ்த்தி யனுப்பியருளினர். *

கிஷ்கிந்தாகாண்டத்தில் நாற்பத்து நான்காவது சருக்கம் முற்றிற்று.



## நாற்பத்தைந்தாவது சருக்கம்.

### நாற்றிசையிலுமனுப்பப்பட்ட வானரர்களெல்லோரும் பிரயாணப்பட்டது

பின்பு மஹாராஜா மீளவும் வானரசேனாபதிகளெல்லோரையும் அழைத்து அவர்களை நோக்கிக் கேளீர்கள் அன்பர்களே! நீவிரெல்லீரும் சென்று யானுரைத்தவண்ணம் எல்லாவிடங்களிலும் பிராட்டியாரைத் தேடிப் பெருமாளுடைய காரியத்தை எவ்விதத்திலும் நிறைவேற்றிக்கொண்டு யானிட்ட அவதிக்குள்ளாக வந்து சேர்ந்து செய்தி யுரைசெய்யக்கடவீர்கள்; என்று கட்டளையிட்டனர் அவ்வானரப்படைத்தலைவர்களெல்லோரும் அக்கொடிய ராஜசாஸனத்தைக்கேட்டு உடனே வானிடையிலெழுந்து மின்மினிப் பூச்சிகளைப்போல எங்கும் பரவிப் பூமியை மறைத்துக்கொண்டு புறப்பட்டனர்கள். பெருமாளும இளையபெருமாளுடன் அந்த ஒரு மாஸம் வரையில் அந்தப் பிரஸ்ரவண மலையிலேதானே யெழுந்தருளியிருந்தனர். அப்பொழுது சதவலியென்னும் யூதபதி யநேகமாயிரம வானரசேனைகளுடன் கூடி

---

* மஹாராஜா மீளவும் சிறியதிருவடியை யழைத்துப் புகழ்ந்துரைசெய்தமையினாலே, மஹாராஜாக்கும் தெய்வத்தன்மையுள்ளதென்றும், முக்காலப்பொருளறிவுள்ளதென்றும் நன்குவிளங்கும்; பெருமாளும் கணையாழிமோதிரமளித்தருளினமையின், தாமே பரதெய்வமெனபதும், தமது சங்கற்பம் இவ்வண்ணமே யுள்ளதென்பதும் தோற்றுவதற்காகவே அவ்வண்ணஞ் செய்தருளினரென்றறிக; அங்ஙனமில்லாயின், அநேகமாயிரம் யூதபதிகளிருக்கையில், சிறியதிருவடியையே மீளவுமழைத்து ஏன் கணையாழி யளித்தருளினர் பெருமாளென்னின்.—

மேருகிரியினுல் விளங்குகின்ற வடதிசையை நோக்கிச் செல்வதற்குச் சன்னுகஞ் செயதனன. விநதனும் அவவண்ணமே கிழக்கு நோக்கிச் செல்ல முயன்றனன். சிறியதிருவடியும் தாராங்கதாதிகளுடன் கூடித தெனதிசை நோக்கிப் புறப்பட்டனா. ஸுஷேணனை மேறறிசையை நோக்கிப் புறப்பட்டனன். இவ்வண்ணம மஹாராஜர் எல்லாத்திசைகளுக்கும் வாநராகளை யேவிவிட்டு மனமகிழ்வுகொண்டனர். அவ்வாநராகளும இவ்வண்ணம மஹாராஜரால் ஏவப்பட்டவாகளாகித் தத்தம் திசையை நோக்கிப புறப்பட்டனர்கள். அவாகள செல்லுங்காலையிலேயும், எவ்வகையிலும் பிராட்டியாரை யெழுந்தருளபபண்ணிக்கொண்டு வருவோம, 'இராவணனையும கொலைசெய்வோம ; என்று கூவிககொண்டும, காஜனை செயதுகொண்டும, துளளிக்கொணடும, தாவிககொணடும, ஓடிககொண்டும், வீரவாதம் பேசிககொணடும, யான் ஒருவனே இராவணனைப போாக்களத்திற கொலை செயது விடுவேன் ; அவனை வலுவிலடிததுப பிராட்டியாரையும் மீட்பேன; யானொருவனே செல்வேன ; நீவிரெல்லீரும் நினமின ; இராவணன பிராட்டியாரைப் பாதாளத்தில் மறைத்திருபபாறாயினும கணடு பிடிதது மீட்டுக்கொண்டுவருவேன ; மரங்களையும் முறிபபேன ; மலைகளையும போதுக்த் தளளுவேன ; பூமியையும பிளபபேன ; கடலகளையும் கலக்குறச் செய்வேன ; யான நூறுயோஜனம தாண்டுவேன ; யான் ஆயிரம யோஜனம தாணடுவேன் ; யான் எவ்வளவுயோஜனமாயினும தாணடுவேன; எனககுப் பாரிடையிலாயினும, கடலிலாயினும, மலைகளிலாயினும், காடுகளிலாயினும, பாதாளததிடையிலாயினும் செல்வதறகுத் தடை சிறிதுமிலது ; என்று வாநராகளெலலோரும தனித்தனி வீறு கூறிககொண்டும், மஹாராஜரிடத்தில விடை பெறறுககொணடு புறபபட்டனாகள.

கிஷ்கிந்தாகாண்டத்தில நாறபதனைந்தாவது சருக்கம் முற்றிறறு.



## நாற்பததாறுவது சருக்கம்.

மஹாராஜர் தாம் முன்பு பார்முழுதும் சுற்றியதறகுக் காரணத்தைத் தம்மை வினவியருளிய பெருமாளுக் குரைசெய்தது.



இவவண்ணம் வாநரர்களெல்லோரும் தத்தம திசை நோக்கிச் சென்ற பின்னர், பெருமாள் மஹாராஜரை நோக்கித் தோழரே ! நீர் நாற்றிசைக்கும் வழியுரைசெய்தனரே ? அதனை யெவ்வண்ணம் நீர் அறிகின்றீர் என்று வினவியருளுதலும், மஹாராஜர் பெருமானை நோக்கிக் கேட்டருளீர் எம்

பெருமானே ! யாவற்றையும் விரைவாக வுரைசெய்கின்றேன் ; முன்பு
மஹிஷவேஷங்கொண்டு வந்த துந்துபியெனனும் அஸுரனை என் தமைய
னை வாலி துரததிக்கொண்டு எப்பொழுது மலயமலையை நோக்கி யோடி
னனோ ? அப்பொழுது துந்துபி அமமலயமலையின குகைக்குளளே சென்ற
னன ; வாலியும் அவனைக கொலைசெய்ய நினைதது அதறகுளளே புகுந்
தனன் ; பின்பு யான் ஒரு வருஷம்வரையில அக்குகையின் வாயிலைக காத்
துககொண்டிருக்கையிலும் வாலி வந்திலன ; பின்பு, அதினின்றும் மிகு
ந்த இரத்தந்தோன்றி அக்குகை நிறைந்துவிட்டது, யானதனைககண்டு
வியப்புறறு வாலியே யிறந்துவிட்டனனென்றெண்ணி இதுகாறும் வாலி
மீண்டுவாராமையினால பிழைத்திலனென றேநிசசயங்கொணடு அந்தமஹி
ஷன வெளியே புறபபடாமல் அககுகையினுள்ளேயே அழிந்து றககககடவ
னென்று அககுகையின் துவாரதனைதப பெருஞசிலையினலமூடிவிட்டு இனி
யன்னன வருவானெனனுமாசை நீங்கித் துனபுறறுக கிஷ்கிந்தைக் கெய்
தித் தாரையுடனும, ருமையுடனும கூடிக் கிஷ்கிந்தாராஜ்யததைப் பெற
றுத் தோழாகளுடனுங் கூடி யசசமினறி யரசாட்சிசெயது வாழநதுகொண
டிருநதேன் ; பினபு, வாலியும அந்தத துந்துபியைக கொலைசெயது வெற
றிக்கொணடுவந்தனன் ; யானவனைக்கணடவுடனே மகிழவும பயமுமகொ
ணடு கௌரவஞ்செயது தலைவணங்கி வேணடிக கபிராஜ்ஜியததை யளித
துவிட்டேன ; இவவண்ணம யான் உணமைகூறி வேணடி வணங்கியிருக்
கையிலும், வாலி யென்மீது சினங்கொணடு என்னைக கொலைசெயயத்துணி
நது கொடுமைகொணடு மதிகெட்டு என்னை நாட்டினின்றும ஓடிவிட்ட
னன ; யானும அவ்வண்ணமே அனுமான் முதலிய நானகுமந்திரிகளுடன்
கூடி நாடுவிட்டோடுகையிலும, அவன சினந்தணியாமல பின்றொடர்ந்
தோடிவந்து துரத்தினன ; அப்பொழுது யான் அவனால் துரததப்பட்டவ
னகிச செல்லுகையில், காடு செடி மலை யாறு கடல் நாடு நகர் தீவுகளுடன்
கூடின இப்பாருமுழுதும அலாத சக்கரமபோலக காணபபட்டு மாட்டின்
குளப்படிபோல் தாண்டவுமபட்டது ; அப்பொழுதுதான் யான வாலியி
னலே துரத்தப்பட்டு முன்பு கிழக்குதிசையிற்சென்று பறபல காடு கடல்
ஆறு தீவுகளையும, உதயகிரியையும, திருப்பாறகடலையும கண்டு மீண்டு
வந்து தென்றிசையிலோடிப பறபல மலைகளைக்கணடு மீண்டுடயங்கி மேறறி
சையிலோடிப பறபல தேசங்களையும், கடல்களையும், அஸ்தகிரியையும்
கண்டு மீண்டு வடதிசையிலோடி இமயம மேரு முதலிய மலைகளையும், வட
கடலையும் கண்டு அங்குந் துரத்தப்பட்டு எஙகும புகலிடமின்றித் தவித்
தேன் ; அப்பொழுது மிகவும் புத்தியுளள அனுமான் என்னை நோக்கி,
மஹாராஜரே ! இப்போழுதுதான் எனக்கோரிடம நினைவில்வநதது ; மத
ங்கமாமுனி தம்மாசிரமததில் வாலி வருவானாயின், தலையிற சிதறுண்டு
இறக்கக்கடவனென்று சாபமிட்டிருக்கின்றனா ; அவ்விடத்திற்சென்று
யாம் வாழ்வுறுவோமாயின், அச்சந்தீர்ந்தின்புறுவோம் ; என்றுமொழிந்த

னர். யானதுகேட்டுணர்ந்து உண்மையென்றுடன்பட்டு ரிசியமூகமலை சேர்ந்து வாழ்வுற்றேன் ; வாலியும் மதங்கசாபபயத்தலே அந்த மதங்கா சிரமத்தினுள் வந்திலன் , ஸ்வாமீ ! இவ்வண்ணம் யான் முன்பு பார்முழு துந் திரிந்து பின்பு ரிசியமூகஞ்சேர்நதேன் , ஆதலால்தான் யான் கண்ட வண்ணம் வழியுரைசெய்தேன் என்று விண்ணப்பஞ் செயதனர்.

கிஷ்கிந்தாகாண்டததில் நாறபத்தாறுவது சருககம

முற்றிறறு.

## நாற்பத்தேழாவது சருக்கம்.

தென்திசை நீஙகலான மூனறு திசைகளிலும சென்ற வாநரர்கள

பிராட்டியாரைத்தேடிக காணுமல மீணடெயதிவிடடது

முனபு, பிராடடியாரைத தேடிப பாாபபதனபொருடடு மஹாராஜ ராலே கட்டளைசெயதனுபபபபடட வாநராகளெல்லோரும புறப்படடு ஆறு, குளம், குட்டை, புதருகள, ஆகாயம், நாடு, நகரங்கள, கோட்டைகள, கடல்கள, மலைகள முதலிய எல்லாவிடங்களிலும் பிராட்டியைத் தேடிக் கொணடு மஹாராஜராலே கூறபபடட ஆறு, கடல, மலைகளிலுங் தேடி னர்கள ; எல்லோரும இவவணணம பகல முழுதும ஆகாயததினமேற சென்று தேடி இரவில் பாரிலிறங்கினாகள ; இவ்வண்ணம புறபபட்ட தினம் முதலாககொண்டு ஒருமாசம் வரையிலும தேடி யெஙகும் பிராட்டி யைக் காணுமல ஆசை யொழிந்து மீண்டெயதி மஹாராஜரைக் கண்டு செயதி யுரைசெயது மாலியவந்த மலை சோநதனாகள இவ்வண்ணம் மஹாபலமுடைய விநதன் அமைசசர்களுடனும, சேனைகளுடனும், கிழ்த்திசை முழுதலும் தேடிப் பிராடடியைக் காணுமல ஒரு மாசத்திற குளளாக மஹாராஜரிடம வந்து விட்டனா ; பின்பு, வடதிசையி னின்றும சதவலியும் அவவண்ணமே மகிழவுகுனறி வநதுவிட்டனன். பின்பு, ஸுஷேணனும் சேனைகளுடன் மேல்திசை முழுதலும் தேடிப் பிராட்டியாரைக் காணுமல மாதம் முடிவுதினத்தில வந்து சேர்ந்தனன் ; இவ்வண்ணம் எல்லோரும் மீணடு வந்து அநத பிரஸ்ரவணகிரியில் பெருமாளிளையபெருமாளகளுடன் வீறறிருந்த மஹாராஜரைக் கண்டு வணங்கி மஹாராஜரே ! எங்களால் எல்லாமலைகளும், எல்லாக் காடுகளும், எல்லாப் புதர்களும், எலலா நதிகளும், எல்லாக் கடல்களும், எல்லாத்தீவு களும், எல்லாகாடுகளும், எல்லாக்குகைகளும், தங்களால் கூறப்பட்டன வும், கூறப்படாவும், பறபல செடி கொடிகளடர்ந்த குஞ்சங்களும் தேட

ப்பட்டன; புகற்கரிய தேசங்களிலும், புகற்கரிய ஏற்றத்தாழவுள்ள இடங்களிலும் சென்று தேடினோம், மிகப பெரிய உயிர்களையும் கண்டு கொலை செயதனம், எங்கும் பிராட்டியாரைக் கண்டு மகிழ்ந்திலோம; ஆயினும், பிராட்டியார் எந்தத்திசையை நோக்கி எழுந்தருளி யிருக்கின்றனரோ? அந்தத தென்திசையை நோககியே சிறந்த பல பராக்கிரமமும், நற்குலமும், நறசெயலும், நனமதியும், நற்புகழும், மகாமஹிமையும பொருந்திய மஹாபல குமாரராகிய அனுமான சென்றிருககின்றனர்; ஆதலின், அவரே தபபாமல பிராட்டியார் எங்கிருககினும் தேடிக கணடு மகிழ்ந்து வந்து நற்செய்தி யறிவிககப்போகின்றனர்; என்று எல்லோரும் ஒரு மொழியாக மொழிந்தனர்கள.

கிஷ்கிந்தாகாணடத்தில நாற்பததேழாவது சருககம

முற்றிற்று.



## நாற்பததெட்டாவதுசருக்கம்

தென்திசையிற்சென்ற சிறியதிருவடி முதலானோர் நடுவழியில் ஓரஸுரனைக் கணடு கொடிய ராவணனெனறெண்ணிக கொலைசெயதது.



அஙகே சிறியதிருவடியும தாரன, அஙகதன் முதலிய வானராகளுடன் கூடி மஹாராஜர் கட்டளையின்படி நெடுந்தூரஞ்சென்று விந்திய மலை தொடங்கி யதனுடைய குகைகளிலும, புகறகரிய காடுகளிலும, அதனைச் சூழ்ந்துள்ள மலைகளிலும, ஆறுகளிலும, குளஙகளிலும், அடர்ந்துயர்ந்து வளாநத காடுகளிலும், காடுகளடர்ந்துளள பறபல குன்றுகளிலும தேடியும், ஜனக சக்கரவர்த்தியின திருமகளாகிய ஸீதாதேவியை யெங்கும் கண்ணுற்றிலர்; ஆயினும், மேன்மேலும முயறசியுறறு அஙகங்குளள காய் கனி கிழங்குகளைப்புசித்துககொண்டும், அங்கங்கிரவிலுறைந்துகாணடும் செல்லுகையில், பறபல குகைகளையுறறும, நீர மரஞ செடி கொடிகளின்றியும், பசு பக்ஷி மிருகம் முதலிய உயிர்களின்றியும, கோரமாயுளளதோர் தேசம் காணப்பட்டது; அந்த வானர யூதபாகளெல்லோரும் அவவிடத்தையுந் தாண்டிச சென்றும், அத்தன்மையதாகிய காடுகளே நோநதமையின், அங்கும் பிராட்டியாரைத் தேடி மிகவும் இளைப்புற்று வருந்தியும், அச்சமின்றி மறறொரு காட்டினுள்ளே புகுந்து அங்குள்ள மரஙகளும், தளிர் மலர் காய் கனிகளின்றியும, ஆறுகள் நீரின்றியும் இருந்தமையின், கிழங்குகள் கூட வாய்க்காமல எருமை, மான், யானை, குதிரை, புலி, கரடி முதலிய விலங்குகளும், காட்டிலுள்ள பறவைகளுமின்றியும், மரஞ்செடி கொடிகளி

ன்றியும், குளங்களிலும் நீர் வற்றித் தாமரை முதலியவை யுலர்ந்து தும்பி யன்னம் முதலியனவைகளியென்றலியற்றும் இருந்தமையின், மிக வாடிய பசி தாகங்களினால் வருந்தினர்கள்; முன்பு, அவ்வனம் செழிப்புற்றிருக்கையில், கண்டு வென்னும் மாமுனி யங்குத் தவஞ்செய்துகொண்டிருந்தனர். அப் போழ்தொருநாள் பதினாறுவயதுள்ள அம்முனிவருடைய குமாரன் வழிதப்பி யக்காட்டினுள்ளேசென்று மீண்டெய்தாமலிறந்துவிட்டனன். அதனால் அம்முனிவர் மிகச சீற்றங்கொண்டு அந்தககாடழிந்து மரஞ் செடி கொடிக ளின்றியும், நீரின்றியும, பசு பக்ஷிகள முதலிய உயிர்களின்றியும், கோர மான மருகாந்தாரமாகும்படி சாபமிட்டனர். அதுமுதல்தான அக்காடு அவ் வண்ணமாகிவிட்டது; அந்த வானரர்கள அந்தக் கோரமான காட்டிலுஞ் சென்று மலைகளின் குகைகளிலும, ஆறுகளின் பிறப்பிடங்களிலும, மிக வும் ஊக்கங்கொண்டு தேடியும், பிராட்டியைககண்டின்புற்றிலர்கள; ஆயி னும், இவர்கள் இளைப்புறாமல மேனமேலும் தேடிச செல்லுகையில, மிக வுங் கொடுஞ்செயலுடையோனும, கொடிய ரூபமுடையோனும, அச்சமற் றோனுமாகிய ஓரசுரனைக கண்டு அவனுடன போவதன்பொருட்டு ஸங் காஹஞ் செயதுகொண்டனர்கள் அவனும் இவர்களைக்கண்டு வாரீர வானரர் களே! நீங்களெல்லீரும் என்கையிலகப்பட்டுக்கொண்டு இப்போழ்தே இறக் கக்கடவீர்கள; என்று வீரவாதஞ்செய்து மலைபோலசைந்தெதிர்த்தோடி வந்தனன்; இவ்வண்ணமவனகையை யுயரவெடுத்துக்கொண்டு முட்டி யால் குத்தும்படி வருவதை யுவராஜனான அங்கதன் கண்டு சினமூண்டு இவனிராவணனே யென்று எண்ணங்கொண்டு எதிர்த்து வந்து கரதலத் தினாலோங்கி யோரறையறைந்தனன; அந்த அஸுரன் உடனே வாயினால் உதிரத்தைக் கக்கிக்கொண்டு ஊழிகாலத்தில காற்றினால் சாயக்கப்பட்ட மாமலைபோலச் சாய்ந்து தரையிலவிழுந்துயிர்மாய்ந்திறந்தனன், அவ்வா னர வீரர்களும் அவனிறந்ததைக் கண்டு மகிழ்ந்து வெற்றியினால் விளங்கு பவர்களாகி அங்குள்ள மலைக்குகைகளிலெல்லாவற்றிலும் ஓரிடமாயினும பாக்கியின்றித தேடி அங்கிருந்து புறப்பட்டு மற்றோர் காட்டிற்சென்று அங் குந்தேடிப் பிராட்டியைக்காணாமல மகிழ்வு குன்றி இளைத்து எல்லோருஞ் சேர்ந்தோர்மரத்தடியிலுட்கார்ந்து சிந்தைகொண்டனர்கள.

கிஷ்கிந்தாகாண்டத்தில நாற்பதெட்டாவது சருக்கம

முற்றிற்று

---

## நாற்பத்தொன்பதாவது சருக்கம்.

### அங்கதன் முதலானோர்கள் மற்றும் பிராட்டியைத் தேடியது.

அநந்தரம் அங்கதகுமாரன் மிக வருத்தமுற்றிருக்கினும் யாவுமுணர்ந்தவனாதலின், நன்காராய்ந்து முகூர்த்தகாலஞ்சென்றிளைப்பாறி அவ்வாநரங்களெல்லோரையும நோக்கி மொழியலுற்றனன. கேளீர்களன்பர்களே! காடு, செடி, புதா, மலை, குகை, யாறு, குளம், குட்டைமுதலிய எல்லாவிடங்களிலுஞ் சென்று நன்றாகததேடியும ஸ்ரீ ஸீதாதேவியையாயினும, அந்த ராவணனையாயினுங கண்டிலோம்; மஹாராஜா கெடுவிட்டமாதம் ஒன்றிலும வெகுதினங்கடந்துவிட்டது அவரோ மிகவுங் கொடுமையான தண்டனைசெய்பவர்; ஆகையால், நீங்களெல்லோரும் கூடிச சோம்பலையும், துன்பத்தையும, துயிலையும் துறந்துவிட்டுப் பிராட்டியாரை நன்றாகததேட்கடவீர்கள; இவவண்ணஞ் செயவோமாகில பிராட்டியாரைக் காண்போம்.

అనిర్వేదశ్చ దాక్ష్యఞ్చమనసశ్చాపరాజయః
కార్యసిద్ధికరాణ్యాహుస్తస్మాదేతద్బ్రవీమ్యహం

அநிர்வேதஞ்சதாக்ஷயஞ்ச மனஸசசாபராஜய:
காரயஸித்திகராணயாஹுஸதஸமாதேததபரவீமயஹம.

வெறுப்பின்மை, நுண்ணறிவுடைமை, செயதிறமை, மனங்குன்றாமை, இவை யெவரிடத்திருக்கின்றனவோ? அவர்கள மேற்கொண்ட காரியம் கைக்கூடுமெனபாாகள், ஆதலின, யானிவவண்ணஞ் சொலலுகின்றேன்; ஆதலின, இப்போதும் துன்புறாமல் அந்தக்காடுமுழுதலுந்தேடிப் பிராட்டியைப் பாாக்ககடவீர்கள.

అవశ్యంక్రియమాణస్యదృశ్యతేకర్మణఃఫలం
అలంనిర్వేదమాగమ్య నహినోమీలనంక్షమం

அவச்யஙக்ரியமாணஸ்ய த்ருசயதேகாமண:பலம
அலம்நிாவேதமாகம்ய நஹிநோமீலநம்க்ஷமம்.

ஒருவன் மிகவும் ஊக்கங்கொண்டொருகாரியஞ் செய்வானாகில் எவவிதத்திலும அதற்குப் பலன்கிடைக்குமேயன்றிக் கிடையாமல்போகாது; ஆதலின், இதுவரையிலும் வெறுப்புற்றிருந்ததுபோதும், இனிமேல் யாமிவ்வண்ணம் கண்களை, மூடிக்கொண்டிருப்பது தகுதியற்றது; மஹாராஜர் மிகச சினமுடையவரும், கொடுந்தண்டனை செய்பவருமாதலின், எப்பொழுதும் அவரிடத்தில் அச்சமுறல்வேண்டும்; பெருமானாகும் மஹாமகிமை

புடையவராதலின், அவரிடத்திலும் அச்சமுறல்வேண்டும்; எல்லோரும் இதமுறல்வேண்டுமென்றிவவண்ணமுரைசெய்தேன்; பின்புங்களுக்கெவ வண்ணந் தோற்றுகின்றதோ அவ்வண்ணஞ்செயக; அன்றியில், யாதுசெயின் தருமமோ அதனை யுரைசெய்யக்கடவீர்கள். என்றிவவண்ணம் யுவராஜன் மொழிந்த வாக்கியததைக் கந்தமாதனனென்பவன் கேட்டு தாகத்தினாலே மிகவும வருத்தமுற்றிருந்தமையின், கூவியுரைக்கத் திறமையின்றி, மந்தமாக மொழியலுற்றனன். கேட்டீணாந்தீர்களோ வீரர்களே! யுவராஜர் மிகவும் நலந்தருமாறுமொழிகின்றனா. இதமாகவும், அனுகூலமாகவுமுள்ள இவருடைய வாக்கியத்தினபடிசெயக; மறுபடியும மலைகளையும, குகைகளையும், ஆறு, மலையருவி, காடு முதலிய விடங்களையுமடைந்து திரிவோம்; மஹாராஜா உரைசெய்தவிடங்களிலுஞ் சென்று தேடுக; என்று, கந்தமாதனனும் மொழிதலும், வாநரர்களெல்லோரும மீளவுமெழுந்து விந்தியமலையின காடுகள் துடஙகித் தெனதிசையைநோககிச்சென்று தேடிககொணடு வருகையில், சரத்காலமேகமபோன்ற குகைகளையும, சிகரங்களையுமுற்று விளங்குகின்ற வெள்ளிமலையையும், அதனமேலுள்ள ஏழிலைம்பாலைமுதலிய காடுகளையும்தேடியும பிராட்டியாரைக்காணுமல் மிகவும் இளைபபுற்று மனங்குன்றி அங்குள்ள மரத்தடிகளில் முகூர்த்தகாலமிருந்திளைப்பாறி மீளவும் புறப்பட்டுச் சிறிய திருவடி முதலாகவுள்ள வானரர்களும, ஒன்றுகச்சேர்ந்து விந்தியமலையினடிதொடஙகித தெனதிசை முழுதலும தேட முயற்சிகொண்டு அங்கங்குச் சுற்றி யலைந்தனர்கள்.

கிஷ்கிந்தாகாணடத்தில நாற்பத்தொன்பதாவது சருக்கம் — முற்றிற்று.



## ஐம்பதாவது சருக்கம்.

சிறியதிருவடி முதலானோர்கள் ரிக்ஷபிலமென்னுங் குகையினுள்ளே புகுந்துவிட்டது.



மீளவுமிவவண்ணம் தாரன, அங்கதன் முதலானோர்களுடன்சேர்ந்து விந்தியமலையின குகைகளிலும, அதனைச் சோந்துள்ள காடுகளிலும், சிங்கம், புலி, காடி முதலிய விலங்குகளுள்ள புதாகளிலும, ஆறுகளிலும, மேடுபள்ளங்களுள்ளமாமலைகளிலும, மலையருவிகளிலும, அமமலைகளின கொடுமுடிகளிலும் தேடிக்கொண்டு வருகையிலேதானே மஹாராஜா கெடுவிட்ட அந்த இருமாதமும் கடந்துவிட்டது; அவ்விடங்களில் புகறகரிய இடங்களெங்கெங்குளவோ! அவ்விடங்களிலெல்லாம சிறியதிருவடி தபபாமல் தேடிவந்தனர். அன்றியிலே, கஜன், கவாக்ஷன, கவயன், சரபன், கந்தமாத

வன், மைந்தன், துவிவிதன, ஜாம்பவான், அங்கதன, ஸுஷேணன், நளன், தாரன முதலிய யூதபதிகளையும, அருகிலருகில் சென்று ஓரிடமாயினும் தப்பாமல் தேடி வரச்செயதனர். இவவண்ணமெல்லோரும் பற்பல இடங் களிலுந் தேடிக்கொண்டு வருகையில, புகறகரிய ரிக்ஷபிலமெனனும் பெரிய தோபிலத்தின துவாரத்தைககணடு பசிதாகத்தினால மிகவும் வருந்தி இளை த்து நினறனர்கள் அந்தக குகை மயனெனனுந் தானவனால பாதுகாக்கப் படுகினறமையில, யாவராலும புகலரிது அதினின்றும் குரௌஞ்சம், அன னம, ஸாரஸம், சககரவாகம முதலிய நீரபபறவைகள் நீரினால நனைந்தும், தாமரைத்தாதுபடிந்து செமமையுறறும புறப்பட்டன ; குளிர்ந்து நனைம ணமுறறு மந்தமாருதமும்வீசிற்று; அநத வானரர்களெல்லோரும அதனைக கணடு வியபபுற்று அதனுளளே தாமரைக்குளமொனறிருததல் வேண்டு மென்றுநகைகொணடு மிகவும் பல பராககரமமுடையவாகளாகையாலே அசசமென்பதின்றி யந்த பிலத்தினுளளே புகுநதனாகள அது பற்பல ஜந் துககள் நிறைநதும், பாதாளமபோல் கன்னுறறகரியதாகிய புகுவதற்கும கூடாமலிருளமூடி யிருநதது; மாமலையின் சிகரமபோன்ற அனுமான் அது கண்டு காடுகளையெல்லாம் நன்குணாந்தவராதலின, மறறுளள வானராகளெ ல்லோரையும் நோக்கிக் கேளீா அன்புளள நேசாகளே! யாம காடு,மலை,புதா முதலிய எல்லாவிடஙகளிலும தேடினேம், ஓரிடததிலும பிராட்டியாரைக் காண்கினறிலோம் ; பெருமபாலும இளைப்புறறனம், இநதக் குகையினின் றும அனனம, ஸாரஸம, குரௌஞ்சம முதலிய நீாபபறவைகள நீரில் நனை ந்து மகிழ்ந்து வருகினறன ; இதனாலிககுகைககுள குளமோ நடவாபியோ சிறநத நீருறறிருத்தல் வேண்டும்; இந்தப் பிலத்தினவாயிலிருககினற மரங் களும் நனைநதிரமுறறிருககின்றன ; ஆதலின, எலலோரும இதனுள்ளே புகுந்து நெடுந்தூரம் சென்று பாாப்போம் எனறு மொழிநதனர். வாநரர்க ளெல்லோரும அதனைககேட்டு உடனபட்டு மிக விருளமூடிய அநதக் குகை க்குளளே புகுநது சிங்கம முதலிய மிருகங்களையும, பறவைகளையும் பாாத துக்கொண்டே இருளமூடிய இடஞ்சோநது அதனுளளேயும வாயுவேகமா கசசென்றனாகள. கணமாத்திரம ஒன்றினையுங்காணமல் பயனறறிருநதது; இவவண்ணம் அவர்கள கணகளைமூடிககொண்டு வேகமாகசசெல்லுகையில் நெடுநதூரம் சென்றபினனர் பிரகாசத்தைககணடு கண்களைத்திறந்து பார்க கையில, அங்கு மிகவும அழகுற்றதாகியும, பற்பல மரங்களுடாநதுமுளள இடததைக்கண்டாநந்தமடைந்தனர்கள, அதுவரையிலும எல்லோருமஒரு வாக்கொருவர் கைகளைப் பறறிககொண்டும, கட்டிக்கொணடும் சென்றனர் கள் ; இதறகுளளாக அவாகளுக்குப பசியும தாகமும் அதிகமாகி மதிமய ங்கி நீர் நீரென்று நீரையை கோரிக்கொண்டு ஒருகாதத்திற்குமேல் நடந்து இளைத்து முகமவாடி வெளிசசத்தைககாணமல இனிப் பிழைத்துப் புறத் திற் செல்வோமென்னுமெண்ணங்குன்றி இறப்போமென்றே நிச்சயங் கொணடு சிறிது காலஞ் சென்றபின்புதான் அந்த வெளிசசம் காணப்பட்

டது. பின்பு, அதனுள்ளே பொன்மயமாகி எரிகின்ற அக்கினிபோலொளிக்கின்றீ ஸால, தால, தமால, புன்னாக, குடஜ, வஞ்சுள, தவ, சம்பக, நாக, கர்ணிகாராதிகளான மரங்கள் பொன், வெள்ளி, நவமணிகள் மயங்களான பூங்கொத்துகளினுலும், செவ்விய தளிர்களினுலும், அதன்மேலே சிரோபூஷணம்போல்படர்ந்த கொடிகளினுலும், பொன்னணிகளினுலும் திகழ்வுற்று பால சூரியன்போல் விளங்கி வைடூரிய மணிமயமான வேதிகளையுடையனவாகி விளங்குவதையும், இந்திரநீலம் வைடூரியங்கள் போன்ற தண்ணீர்பொருந்திய தாமரைத் தடாகங்களிலும், பொன்மயமான கமலங்களும், நீர்ப்பறவைகளும், மீன் முதலிய நீர்வாழ் முயிர்களும், ஸூரியன்போல விளங்குவதையும், தங்கம் வெள்ளிகளால் செய்த விமானங்களும், கோபுரங்களும், பொன்மயமானகவாக்ஷங்களுற்றும், முத்துவடங்கள் தொங்கவிட்டும், நவமணிகளிழைத்தும் விளங்குவதையும், பொன், வெள்ளி, வைடூரியங்களால் செய்த சிறந்த வீடுகளையுங்கண்டு மகிழ்ந்தனர்கள். பொன்மயமான மரங்களும், தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துப் பொன்மயமான வண்டுகள் பொருந்தித் தேன் பெருகத்திகழ்ந்தன; நவமணிகளிழைத்த சயனங்களும், ஆஸனங்களும், சிறந்த வாஹனங்களும், பொன், வெள்ளி, வெண்கலம், இவைகளினுல்செய்த பாத்திரங்களும், அகரு, ஹரி, சந்தனம் முதலிய நன்மண வஸ்துக்களும், நின்மலமான கந்தமூலபலாதிகளாயுள்ள உண்டிகளும், சிறந்த பானங்களும், உருசியுள்ள மதுவும், உயர்ந்த விலையுற்ற ஆடைகளும், விசித்திரமான கம்பளங்களும், மான்தோல்களும், அங்கங்கு வைக்கப்பட்டு எரிதழல்போல விளங்கின; வாநரர்கள் அவைகளையுங் கண்டு வியப்புற்று அங்கங்கு தேடிக்கொண்டு செல்லுகையில், அருகில் ஒரு பெண்மணி மாவுரி யுடுத்து, மரையுரிபோர்த்து, உண்டிசுருக்கித் தவஞ்செய்து தேஜஸ்ஸினுல் ஜொலிக்கின்ற மேனியுற்று விளங்கக்கண்டு அச்சமும் வியப்புங்கொண்டு சுற்றிலுஞ்சூழ்ந்தனர்கள். அவர்களுள் சிறியதிருவடி தீரங்கொண்டு அவளருகிற்சென்று அவளைத்தொழுது கைகூப்பி வணக்கமாக அவளை நோக்கி, அம்மா பெண்ணரசே! நீ யாவர்; இக்குகையாருடையது; இக்குளமணிகளும், பொன் வெள்ளிகளும் யாருடையன; இம்மாளிகைகளுள் யார் வாழுகின்றனர்கள்; என்று வினவினர்.

இஷ்கிந்தாகாண்டத்தில் ஐம்பதாவது சருக்கம்

முற்றிற்று.

## ஐம்பத்தொன்றாவது சருக்கம்.

அந்த ரிக்ஷபிலத்தின் வரலாற்றை அங்குள்ள சுயம்பிரபையென்பவள் சிறியதிருவடி முதலானோர்க்குரைசெய்தது.

சிறியதிருவடி இவ்வண்ணம் வினவி மீளவும் மரவுரியுடுத்துத் தவஞ்செய்து தருமத்தை மேற்கொண்டு மஹாமகிமைகொண்ட அந்தப் பெண்மணியை நோக்கி, அம்மா! நாங்களெல்லோரும் பசிதாகத்தினால் மிகவும் இளைத்து வருந்தி நள்ளிருள் கொண்ட இக்குகையினுள்ளே விரைவாகப் புகுந்து வந்தோம்; இங்கு வந்தும் மிகவும் ஆச்சரியமுறத்தக்கனவும், எங்கள் போன்றவர்களால் கண்ணுறுவதற்கும், வினவுதற்கும் அரியனவுமாகிய இவ்விடங்களைக்கண்டு வியப்பும், அச்சமும் கொண்டோம்; இங்குள்ள பொன்மயமாகிப் பாலசூரியன்போன்ற உத்தியானவனங்களும், நின்மலமான காய், கனி, கிழங்கு முதலிய உணவுகளும், பொன்விமானங்களும், வெள்ளி வீடுகளும், பொன் ஜாளரங்களும், நவமணி வடங்களாலலங்கரிக்கப்பட்ட சயனங்களும், தளிர்ததுப் பூத்துக் காய்த்துக் கனித்துமுள்ள பொன்மயமான மரங்களும் எவருடையவைகள்; யாருடைய மகிமையினாலே பொற்றாமரைகளும், இவ்வண்ணம் பொன்மாளிகைகளும், பொன்மரங்களும் உண்டாயின; மீன், ஆமை முதலிய ஜல ஜந்துக்களும் பொன்மயமாகி யுலாவுகின்றனவே? இவ்விடத்திற்கு இவ்வளவு மஹிமை யாருடைய தபோபலத்தினாலுண்டாயிற்று, யாங்களிம்மகிமையை யறிந்திலோமாதலின், குறைவற மொழிந்து எங்களுடைய ஐயத்தைத் தீர்த்தருளீர் என்று வினவினர்.

அந்த யோகினியும், சிறியதிருவடி யிவ்வண்ணமுரைசெய்த வாக்கியத்தைக்கேட்டு எல்லாவுயிர்களுக்கும் இதமேசெய்பவளாதலின், சிறியதிருவடியை நோக்கிக் கேளீர் மஹானுபாவரே! மயனென்னுந் தானவன் சிறந்த மாயைகளையுடையனாகி யிருக்கின்றனன். அவன்தான் தன்மாயையினாலே இந்தப்பொன்மயமாகிய வனத்தையும், விமானங்களையும், மாளிகைகளையும், தடவாபிபொற்றாமரைகளையும் இயற்றினன். அவன்தான் முன்பு தானவர்களெல்லோருக்கும் விஸ்வகர்மனாகிச் சிற்ப வேலைகளெல்லாவற்றையும் செய்துவந்தனன். அவன் இந்த வனத்தில் அநேகமாயிரவருஷங்கள் தவஞ்செய்து நான்முகனைக்கட்புலனாக்கி யவரிடத்தில் சிற்பசாஸ்திரங்கள் யாவும் குறையின்றி யுணரும்படி வரம்பெற்ற பின்புதான் சிறப்புற்றனன். பின்பும் திறமையினால் இங்கு வெகு விநோதமான பொருள்களையுமியற்றிச் சிறிது காலம் வாழ்ந்துகொண்டிருந்தனன். இவ்வண்ணம் அவன் வாழ்ந்துகொண்டிருக்கையில், ஹேமையென்னும் தெய்வப்பொதுமகளைப் பலாத்காரஞ்செய்து புணர்ந்துகொண்டிருந்தமையின், அதனைத் தேவேந்திரனறிந்து

இங்குவந்து வச்சிராயுதத்தினாலவனையடித்து வெருட்டிவிட்டனன். பின்பு இந்தவனத்தையும் அந்த மயன் அந்த ஹேமையென்பவளுக்கே அளித்து விட்டனன். யான் மேருஸாவர்ணியின் குமாரி சுயம்பிரபையென்னும் பெயருடையேன்; யான் அந்த ஹேமையின் வசமாகிய இவ்விடத்தைப் பாதுகாத்துக்கொண்டிருக்கின்றேன். அந்த ஹேமை எனக்குத் தோழியாதலின், அவளுடைய வரத்தினால் மகிமையுற்றிதனைப் பாதுகாத்து வருகின்றேன்; இவ்வண்ணம் என்னுடைய வரலாற்றை யுரைசெய்தேன்; நீங்கள் இந்தக் கோரமான காடுகளில் திரிவதற்குக் காரணம் யாது; யாது பயன்; புகற்கரிய இவ்வனத்தை யெவ்வண்ணங்கண்டீர்கள், நீங்கள் மிகவும் பசிதாகத்தினால் இளைப்புற்றிருக்கின்றமையின், இங்குள்ள காய்கனிகிழங்குகளைப் புசித்துத் தண்ணீர் பருகி யிளைப்பாறிப் பின்பு விடை யுரைசெய்யக் கடவீர்கள் என்று அன்புகூர்ந்து மொழிந்து மகிழ்வித்தனள்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் ஐம்பத்தொன்றாவது சருக்கம்

முற்றிற்று.

---

## ஐம்பத்திரண்டாவது சருக்கம்

சிறியதிருவடி சுயம்பிரபைக்குத் தாங்களங்கேவந்ததற்குக்

காரணமுரைசெய்தது.

---

பின்பு, வானரர்களெல்லோரும் சுயம்பிரபையின் வாக்கியத்தைக் கேட்டு மகிழ்ந்து காய் கனி கிழங்குகளையுண்டு, தண்ணீர்பருகி, இளைப்பாறி மகிழ்கையில், தருமபுத்திரியுள்ள அந்த சுயம்பிரபை வீரமுடைய அந்தவானரர்களெல்லோரையும் நோக்கிக் கேளீர்கள் வானரர்களே! கனிகளையுண்டதினால் உங்களுக்குப் பசிதணிந்திளைப்புத்தீர்ந்ததா? யான் வினவியதற்கு விடை யான் கேட்பதற்குரியதாயின், உரைசெய்க; கேட்டு மகிழ்வேன் என்று மீளவும் வினவினள். சிறியதிருவடி யவ்வாக்கியத்தைக் கேட்டு அவளை நோக்கி வஞ்சமின்றி யுண்மையாக முறையே மொழியலுற்றனர். கோமமா பெண்ணரசே! சகலலோகங்களுக்கும் அதிபதியும், மகேந்திர வருணர்களுக்கு நிகரானவரும், தசரதசக்ரவர்த்தியின் திருமகனுமாகிய ஸ்ரீராமபத்திரர் இளையபெருமாளுடனும், சீதாதேவியென்னும் ஜனகசக்ரவர்த்தியின் திருமகளான பாரியையுடனும் கூடித் தந்தையின் சத்தியவாக்கியத்தை ரக்ஷிப்பதன் பொருட்டுத் தண்டகாரணியத்திற்கு எழுந்தருளினர். அந்தச் சீதாதேவியை இராவணன் கபடத்தினால் களவுசெய்து பறித்துக்கொண்டோடிவிட்டனன்; பின்பு, அவர் ரிசியமூகஞ்சென்று சுக்கிரீவரென்னும் மஹாராஜருடன் நட்புச் செய்துகொண்டு வாலியை வென்று

கிஷ்கிந்தாராஜியத்தை யவர்கனளித்தருளினர். மஹாராஜர் அந்த நன்றியி ஞலே எங்களை யந்தப்பிராட்டியார் எழுந்தருளியிருக்குமிடத்தைத் தேடி வருமாறு கட்டளை செய்தனர். அதனால் யாங்களெல்லோரும் இந்த யம திசையை நோக்கிப் புறப்பட்டுத் திரிகின்றனம்; அவ்வண்ணம் திரிந்து எங்கும் பிராட்டியைக்காணுமல் பசிதாகத்தினால் இளைத்து வருந்தி மரத் தடியிலுட்கார்ந்தோம்; அங்கெல்லோரும் முகம் வாடிச் சிந்தைகொண்டு சோகசாகரத்தின் கரையைக்காணுமல் வருந்தி நாற்புறங்களிலும் பார்க்கை யில், இந்த பிலத்தைக்கண்டனம்; இந்த பிலம் மரஞ்செடி கொடிகளடர்ந்து இருளமூடியிருந்தாலும் இதிலிருந்து ஹம்ஸஸாரஸாதிகளாயுள்ள நீர்ப்பற வைகள் நீரில்மூழ்கி யீரத்துடன் சிறகுகளை யுதறிக்கொண்டு புறப்பட்டன; யானதனைக்கண்டு இதனுள்ளே புகுந்து பார்ப்போம் இங்கே நீர் இருக்கு மென்று எல்லோரையும் பார்த்துரைத்தமையின், யாவரும் அதற்குடன் பட்டு இதனுள்ளே புகுந்தனர்கள். பின்பு, எல்லோரும் ராஜகாரியத்தில் துரையுடையோர்களாதலின், வழியில் நல்லிருளமூடியிருக்கினும் அச்ச முற்றுமல் ஒருவர்க்கொருவர் கட்டிக்கொண்டு இங்குவந்து கண்களைத்திற ந்து விநோதங்களைக்கண்டு மகிழ்ந்தனம்; இவ்வண்ணம் யாங்கள் பிராட்டி யைத்தேடுவதன்பொருட்டு முழுதுந்திரிந்து இங்கெய்தி யும்மையும் கண்டு மகிழ்வுகொண்டோம்; உம்மால் அதிதிபூஜையாக அளிக்கப்பட்ட காய் கனி கிழங்குகளைப் புசித்துப் பசிதீர்ந்து நன்னீரைப் பருகித் தாகமுந்தணிந்து உயிர்மாய்ந்திறக்குங்காலயிலே உம்மால் பாதுகாக்களிக்கப்பட்டு மகிழ்ந் தோம்; நீர் செய்த இந்த மஹோபகாரத்திற்கு யாங்கள் யாது பிரதியுப காரஞ் செய்யக்கடவோம் உரைசெய்யக்கடவீர்; என்றிவ்வண்ணம் சிறிய திருவடி யுரைசெய்த வாக்கியங்களை யாவுமுணர்ந்த அந்த சுயம்பிரபை கேட்டு மகிழ்ந்து வானரயூதபதிகளெல்லோரையும் நோக்கிக் கேளீர் வானரசேனைதிபர்களே! நீங்களிங்கெய்தி என்னிடத்தில் அதிதிபூஜையைப் பெற்றுக்கொண்டதனலேயே யான் மிகவும் ஆநந்தமுற்றேன்; தருமங் குன்றுமல் தவஞ்செய்கின்ற எனக்கு உங்களால் செய்யத்தக்க செயல் யாதுளது. ஒன்றுமில்லை; ஆதலின், நீங்களெல்லோரும் சுகமாகச்சென்று வாழ்க; என்று மொழிந்தனள்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் ஐம்பத்திரண்டாவது சருக்கம்

முற்றிற்று.

## ஐம்பத்துமூன்றாவது சருக்கம்.

வாநரர்களெல்லோரும் ருக்ஷபிலத்தினின்றும் புறத்தில் வந்து மஹாராஜர் கெடுவிட்ட காலங்கழிந்தும் பிராட்டியைக் காணாமல் போனதைக்குறித்து மிகச் சிந்தித்து வெறுப்புற்றிருந்தது.

இவ்வண்ணம் சுயம்பிரபை இனிமையாக மொழிந்த வாக்கியத்தைச் சிறியதிருவடி கேட்டு அவளை நோக்கி க்ஷேமமா உயோகினி! யாங்களெல்லோரும் உம்மையே சரணமாக அடைந்தோம், மஹாராஜா எங்களுக்குக் கொடுத்திருந்த கெடுவு இந்த பிலத்தில் புகுந்தலைந்ததினால் கடந்துவிட்டது, மீளவும் இதினின்றும் புறத்திற் செல்லும் வழியையும் நாங்களறிகின்றிலோம், ஆதலின், நீர் அருள் செய்து இதினின்றும் எங்களைப் புறப்படுத்தக்கடவீர் மஹாராஜா கட்டளையை மீறித் திரிந்து அச்சங்கொண்ட எங்களைப் பாதுகாத்தருள்வாய், எங்களால் மிகப் பெரிய காரியஞ் செய்யத்தக்கதுளது, ஆயினும், இதனுள் புகுந்து அதனையும் செய்து முடித்திலோம், என்று வேண்டினார் அந்த ஸ்வயம்பிரபை யதுகேட்டு அவரை நோக்கிக் கேளீர் நல்லோரே! இதனுள்ளே புகுந்தவர் மீளவும் உயிருடன் புறத்திற் செல்லார், ஆயினும், யான் செய்த தபோநியமபலத்தினாலே உங்களெல்லோரையும் புறத்திற் சேர்ப்பேன், நீங்களெல்லோரும் கண்களை மூடிக்கொள்க, கண்களைத் திறந்துகொண்டிங்கிருந்து புறத்திற் செல்வதரிது; என்று மொழிதலும், வாநரர்களெல்லோரும் உடனே கண்களை மூடிக்கொண்டு கைகளினாலும் மறைத்துக்கொண்டனர்கள். அவ்வண்ணமே அவர்களை சுயம்பிரபை தன்னுடைய யோகமகிமையினாலே ஒரு நொடிப்பொழுதுக்குள்ளாகவே அந்த பிலத்தினின்றும் புறத்திற்சேர்த்து புறத்தில் வந்து திசை யறியாமல் மயங்கிய அந்த வாநரர்களை நோக்கிப் பாரீர்கள் யூதபாலகரே! பற்பல மரஞ் செடி கொடிகளடர்ந்த இம்மலைதான் விந்தியம் என்னப்பட்டது, இங்கே காணப்படுகின்ற மலைதான் பிரஸ்ரவணமென்பது; எதிரில் காணப்படுகின்றதுதான் தக்ஷிண சமுத்திரம்; இனி நீங்கள் சுகமாகச் செல்லுக, யானிருப்பிடம்போய்ச் சேர்கின்றேன்; உங்களுக்கு நலமுண்டாகக்கடவது. என்றுரைசெய்து தேம்பி யந்த பிலத்தினுள்ளே புகுந்தனள். பின்பு, அந்த வாநரர்களும் அங்கிருந்தே அளவற்றுக் கரைகாணாமல் கோரமாக கர்ஜனைசெய்கின்ற தென்கடலைக்கண்டு திகைத்து நின்றனர்கள்; மயாஸுரன் மாயையினாலியற்றிய அந்த குகைக்குள்ளே இவர்களிருக்கையிலேதானே மஹாராஜா கெடுவிட்ட அந்த ஒரு மாதமும் தீர்ந்துவிட்டது; ஆதலின், அவர்களெல்லோரும் அந்த விந்தியகிரியின் தென்புறத்தில் உட்கார்ந்து சிந்தையுற்று வருந்தினர்கள். அப்பொழுது வஸந்தகாலத்தில் மலர்கின்ற மரங்களெல்லாம் மலர்ந்திருந்தமையின்

அவர்களதனையுங்கண்டு வஸந்தகாலம் வந்ததென்றறிந்து காலங் கழிந்து விட்டதேயென்று அச்சமதிகரிக்கது அங்கிருந்து கீழே யிறங்கினார்கள். பின்பு, மூப்புடையவர்களும், சிறப்புடையோர்களும், நன்மதியினர்களு மாகிய வானரயூதபதிகளெல்லோரையும் அங்கதகுமாரன் நோக்கி மொழிய லுற்றனன். கேளீர்கள் தோழர்களே! யாமெல்லோரும் மஹாராஜருடைய கட்டளையினாலன்றோ புறப்பட்டு வந்தோம், யாம் பிலத்திலிருக்கையிலே தானே அவர் கொடுத்த கெடுவு சென்று விட்டதை யறிகின்றிலீர்களோ? யாம் ஐப்பசிமாசத்திலேயே பெருமாள் மஹாராஜருக்கிட்டிருந்த வருஷா காலம் நான்குமாதங்களும் கழிந்துவிட்டனவென்று அறிந்தவர்களல்லே யோ? அதுமுதல் பிரயாண ஸந்நாஹஞ்செய்து புறப்பட்டோமே? பின்பு, மஹாராஜா நமக்கிட்ட காலமும் கழிந்துவிட்டதே? இனி யாம் செயல் வேண்டும் காரியம் யாதுளது, நீங்கள் மஹாராஜரிடத்தில் மிகவும் நம்பிக்கை யுடையவர்களும், நீதிமார்க்கத்தை நன்குணர்ந்தவர்களும், பிரபுவின் இதச்செயலில் அபிநிவேச முடையவர்களும், எல்லாச்செயல் களிலும் திறமை யுடையவர்களும், எல்லாவிடங்களிலும் மேற்கொண்ட காரியங்களைச்செய்து முடிக்க வல்லவர்களென்று புகழுற்றவர்களுமாதலின், என்னை முன்னிட்டுக்கொண்டு மஹாராஜருடைய கட்டளையின்படி வந்தீர் கள்; ஆயினும், இப்பொழுது மஹாராஜருடைய கட்டளையை மீறினமையின், எல்லோரும் அவருடைய தண்டனைக்குள்ளாகி இறந்தல்வேண்டுமென்பதி லையமில்லை, மஹாராஜருடைய கட்டளையை மீறி எவன்தான் இன்புறுவான், ஆதலின், காலம் சென்றுவிட்டமையின், நாமெல்லோரும் இங்கே பிராய யோபவேசஞ்செய்திருப்பதே நலமென்று தோற்றுகின்றது; மஹாராஜர் இயல்பாகவே கொடுமைகொண்டவர் இப்பொழுது இறையாகவுமாயினர்; ஆதலின், பிழைசெய்த நம்மைப் பொறுத்தருளார்; ஒருக்கால் சீதையின் செய்தியை யறிந்துகொண்டு சென்றாலும் பொறுப்பார்; இப்பொழுது காரியமின்றிச் செல்லின், பொறுப்பாரோ? ஆதலின், பிள்ளை, மனைவி, பொருள், வீடு முதலியவைகளை மறந்து இப்பொழுதிங்கே பிராயோப வேசஞ்செய்வதே நலமாகும், நாமிப்பொழுது மீண்டுச் செல்வோமாயின், மஹாராஜா நம்மைத் தண்டனைக்குட்படுத்துவாரென்பதிலும் ஐயமுளதோ? அங்கே சென்றிறப்பதைவிட இங்கே இறப்பதே மேலாகும், அன்றியிலே மஹாராஜா என்மீது அன்புகூர்ந்திளவரசுப்பட்டங் கட்டிவிததிலர்; குற்ற மென்பதின்றி யுருவபெருகி வளர்ந்த பெருமாளே எனக்கு இளவரசுப் பட்ட மளித்தருளினர். முன்பு என் தாதைமீதுள்ள பகையை என்மேலும் மிகக்கொண்ட மஹாராஜா என்மீதிந்தப் பிழையை வியாஜங்கொண்டு என்னைக் கொலைசெய்து விடுவர்; நீங்கள் என்மேல் அன்புடையீர்களாயி னும் மஹாராஜா என்னைத் தண்டனை செய்கையில், நீங்கள் துன்பங் கொண்டு தலைகுனிந்து துன்புறுவீர்களல்லது, வேறு யாதுசெய்ய வல்லீர் கள்; அவ்வண்ணம் உங்களைத் துன்புறுத்துவதினால் யாது பயன்; ஆதலின்,

தூய்மைகொண்ட இந்தத் தென்கடலின் கரையிலேதானே பிராயோப வேசஞ்செய்வேன்; என்றிவ்வண்ணம் யுவராஜன் மொழிந்த வாக்கியத்தை யவர்களெல்லோருங்கேட்டு தீனங்கொண்டு அங்கதனை நோக்கி, இளவரசே! நீர் உரைசெய்தது உண்மையே? மஹாராஜா கொடுமை கொண்டவர்; பெருமான் மனையாள்மேல் மிக மோகமுற்றவர்; ஆதலின், சீதாதேவியைக் காணாமல் நாம் அங்கே செல்வோமாயின், மஹாராஜா பெருமானுக்கு மகிழ்ச்சி செய்வதற்காக நம்மெல்லோரையுங் கொலைசெய்வார்; ஆதலின், பிழைசெய்தபின்பு மஹாராஜா அருகில் செல்வது தக்கதன்று, ஆதலின், இவ்விடத்திலேதானே பிராட்டியாரைத் தேடிக் கண்டாவது; அன்றியில், உண்மையாகச்செய்கி யறிந்தாவது செல்லலாகுமேயன்றி, இல்லாவிட்டால் இங்கேதானே பிராயோபவேசஞ்செய்லவேண்டும், இப்படியே மஹாராஜ ரிடம் செல்வோமாயின், யமலோகம்போய்ச் சேர்வோமென்பதில் ஸந்தேக மில்லை; என்றுரை செய்தனர்கள். இவ்வண்ணம் அச்சங்கொண்டு சிந்தை யுற்றுரைசெய்த வானரர்களின் வாக்கியத்தைத் தாரனென்பவன் கேட்டு அவர்களை நோக்கி, அன்பர்களே! நீங்கள் அச்சங்கொண்டு துன்புறற்க; நீங்களெல்லோரும் உடன்படுவீர்களாயின், மீளவும் இக்குகையினுள்ளே சென்று வாழ்வோம், இந்த பிலம் மயாஸுரனால் மாயாபலத்தினாலே இயற்றப்பட்டதாதலின், பிறர் புகற்கரியதும், பற்பல காய் கனிகளைத் தருகின்ற மரஞ் செடி கொடிகளை யுடையதும், நன்னீர் நலனுண்டிகள் மிகுந்தது மாகின்றது; இங்கு நாம் வாழ்வோமாயின், தேவேந்திரனுக் காவது, சக்கரவர்த்தித் திருமகனுக்காவது, மஹாராஜருக்காவது அச்ச முறல்வேண்டுவதில்லை, என்று மொழிந்தனன் வானரர்களெல்லோரும் அந்த அங்கதனுடைய வாக்கியத்தையும், தாரனுடைய வாக்கியத்தையுங் கேட்டு இதமென்றுணர்ந்து எல்லோரையும் நோக்கி, நேசர்களே! எவ்வகையி லாயினும் யாம் எவ்வண்ணம் மஹாராஜரால் கொலைசெய்யப்படாமல் இன் புற்று வாழ்வோமோ? அவ்வண்ணம் ஆலஸ்யஞ்செய்யாமல் உடனே செய்து கொள்ளல் வேண்டுமென்றும் ஒரே மொழியாக மொழிந்தனர்கள்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் ஐம்பத்து மூன்றாவது சருக்கம்

முற்றிற்று

---

விந்தியமலை கிஷ்கிந்தைக்கு வடக்கேயிருக்கின்றமையின், தென்றிசையில் தேடப்போனவர்கள் வடக்கேயுள்ள சென்றனர்கள்: சென்றினும் மீளவும் கிஷ்கிந் தையைத் தாண்டிச் செல்லுகையில், அங்குள்ளோர்களால் காணப்படவில்லர்களா? என்று சிலர் ஆக்ஷேபஞ் செய்வார்கள்; முன்பே சரவதியென்னும் நதியை நடுவாக வைத்துக்கொண்டு அங்கிருந்து கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்று திசைகளை யவரவர்களுக்கு மஹாராஜா வகுத்தளித்தனென்பதைக்குறித்துக் காட்டி யிருக் கின்றமையினால், அந்தச் சரவதி முதல்கொண்டு இவர்கள் தேடவேண்டிய பாக

# ஐம்பத்துநான்காவது சருக்கம்.

## சிறியதிருவடி அங்கதனுக் கிதங்கூறல்.

இவ்வண்ணம் முழுமதிபோன்ற காந்தியுடைய தாரன முதலிய யூத பதிகள் மொழிந்த வாக்கியத்தைச் சிறியதிருவடி கேட்டு அங்கதனுக்கு இளவரசுபட்டத்தை யாளுவதற்குரிய திறமையையும், ஒருவர் மொழி வதை விரைவிலறிந்து கொள்ளல், அதனை மறவாமை, நினைவுடைமை, அதனைப் பிறர்க்குரைக்குந்திறமை, கபடின்மை செயல், ஒருவர் கூறிய வாதத் திற்குத் தக்க பதில் கூறி யதனை நிராகரித்தல், ஒருவர் கூறிய வாக்கியத்தில் பொருளுணர்தல், உண்மையை யாராய்ந்தறிதல், (கிரஹணம், தாரணம், ஸ்மரணம், பிரதிபாதனம், ஊஹம், அபோஹம், அர்த்த விஜ்ஞானம், தத்வஜ்ஞானம்,) என்னும் புத்திகுணங்களொடும், பாகுபலம், மனோபலம், உபாயபலம், பந்துபலம், என்னும் நான்கு பலங்களும் காலதேசங்களை யறிதல்; மனவுறுதி, எல்லாத்துன்பங்களையும் பொறுத்தல், எல்லாவற்றை யும் அறிதல், திறமை, தோள்வலி, இரஹஸியத்தைப் புறப்படுத்தாமை, முன் நடந்ததை யொத்து நடத்தல், உற்சாஹமுடைமை, திறமை யறிதல், நன்றி யறிதல், தஞ்சமடைந்தவர்மேல் அருளுடைமை, பகைவர்மேல் பொறுமையுடைமை, சபலமுறுமை எனனும் பதினன்கு குணங்களும் நிறைந்து தேஜோபல பராக்ரமங்களாலே சுக்லபக்ஷத்தில் மூன்றாவது பிறைச் சந்திரன்போல மேன்மேலும்வளர்கின்ற தன்மைபொருந்திப் புத்தி யில் தேவகுருவையும், பராக்கிரமத்தில் தந்தையையும் நிகர்த்துத் திகழுந் தன்மையுடையவனென்று உணர்ந்து அவன் யாவுமறிந்தவனாயினும், தாரன வாக்கியத்தைக்கேட்டு மகாராஜாமேல் சந்தேகங்கொண்டு வருந்தி மயங்கு வதையும் கண்டு அவனைத் தேற்றி யுடன்படுத்த முயன்று ஸாமம், தானம், பேதம், தண்டம் என்னும் நான்குபாயங்களுள் மூன்றாவதான பேதோ

---

மாகலின், அதற்குத் தெற்கான விந்திய மலையையும் இவர்கள் தேடவேண்டுவது இயல்பேயன்றோ? முன்பு எங்குங் காட்டாகவே யிருந்தமையின், இவர்கள் மீண்டு வருகையில், அந்தக் கிஷ்கிந்தைக்கு மேற்காகவாவது, கிழக்காகவாவது வந்திருக்கின் அங்குள்ளோர்களுக்கு இவர்கள் எவ்வண்ணந் தென்படக்கூடும், அன்றியே, ஸேது கட்டுவதற்கு முன்பு அந்த விந்தியமலையின் சிறுகுன்றுகள் தென்கடல் சமீபம் வரையிலுள்ளவெனவும், அவற்றிற்கும் விந்தியமென்றே பெயருள்ளதெனவும் உடன்படல் வேண்டும்; ஆகையாலேதான் அந்த விந்தியமலையினின்றும் வானரர்கள் தென்கடலைக் கண்டார்களென்று கூறப்பட்டுள்ளதும், ஸம்பாதியை இவர்கள் விந்தியமலையும் அருகி லுள்ள தென்கடலுக்கு எடுத்துக்கொண்டு போயினார்களென்று கூறப்படுவதும் பொருந்துகின்றன; அன்றியில், தென்கடலருகிலுள்ள மலயம் என்னும் மலைக்கும் விந்தியமென்றும் பெயருள்ளதாக உடன்படல்வேண்டும்; இப்படியானால் ஒரு விரோதமுமில்லையென்று அதிகமஹாவீர சரித்திரத்தில் பவபூதி யுரைத்திருக்கின்றார்.

பாயத்தை யெடுத்துரைத்து வானரர்களெல்லோரையும் பிராயோபவேசஞ் செய்யவேண்டுமென்னும் ஒருமைப்பட்ட மதத்தை விட்டு வெவ்வேறு மதமுறுமாறு செய்து அங்கதனையும் நோக்கி, அச்சமுறுமாறு மொழிய லுற்றனர்.

கேளாய் இளவரசே! நீ மிகவும் திறமைகொண்டு பல விதத்திலும் உன் தந்தைக்கு நிகராகியவனாதலின், தந்தையினால் பாதுகாக்கப்பட்ட இந்தக் கபிராஜ்யத்தைப் பாதுகாக்க வல்லவனாகின்றனை; கபிகள் இயல்பாகவே நிலையற்ற புத்தி யுடையவர்கள், அன்றியும், இப்பொழுது மனைவி மக்கள் முதலோரைப் பிரிந்து திரிந்து வருந்தியிருக்கின்றமையால் உனது கட்டளையின்படி பொறுமைகொண்டு நடவார்கள், ஆதலின், ஜாம்பவான், நீலன், ஸுஹோத்திரன், கடையில் யான், இவ்வெல்லோரும் சாமதானாதிகுணங்களினாலே யுன்மதப்படி யொருக்காலேயிலும் நடவோம், எல்லோர்க்கும் எதிராகவே இவ்வண்ணமுரைசெய்கின்றேன், ராஜநீதி யுணர்ந்தோரும், பலமுடையோன் பலமிலாதானுடன் பகைத்திருப்பது நலந்தருவதெனக் கூறினர்களோ யன்றிப் பலமற்றவன் பலமுடையோ னுடன் பகைத்திருப்பதைப் புகழ்கின்றிலர்; ஆதலின், பலமிலாதான் நன்மை பெறவேண்டுமாயின், பலவானுடன் பகையுறக்கடவனல்லன், இப்பொழுது மஹாராஜா வானரர்களெல்லோர்க்கும் இறையும், பெருமா ளுக்குத் தோழருமாதலின், பலவானாகின்றனர், நீ பலமிலாதானாகின்றனை, ஆதலால், நீ மஹாராஜருடன் பகைகொண்டிவ்வண்ணமுரைப்பது தகுதி யற்றது, நீ இந்த பிலத்தை நல்லரணாக நினைக்கின்றனை போலும், இதனை யழிப்பது இளையபெருமாளுடைய கணைகட்கொரு பெரிதன்று, முன்னிந்திரன் வச்சிராயுதத்தினாலடித்திந்த பிலத்தற்கு த்வாரம் மாத்திரஞ் செய்தனன். இளையபெருமாளிதனைக் கூரிய கணைகளினால் உலர்ந்த இலையைப் போலச் சிதறுற வடித்தருளுவர்; இளையபெருமாளிடத்தவ்வண்ணந் திறமைகொண்டு மாமலைகளையும் பிளக்கவல்ல கணைகள் வெகுவாருண்டு; நீ யானைத்துறந்திங்கிருக்கவேண்டுமென்று எப்பொழுது கருதுகின்றனை யோ? அப்பொழுதே இவ்வானரர்களெல்லோரும் உன்னைத் துறந்து திரும்பிச் செல்வதுண்மை; புத்திரமித்திரகளத்திரங்களையுந் துறந்து சாலைகளி லலைந்து வருந்திப் பசிபூண்டு சிந்தைகொண்ட இவர்கள் உன்னைத் துறந்து மீண்டுஞ் செல்வர்களென்பதிலும் ஐயமுளதோ? இவ்வண்ணம் இனத்தார் சுற்றத்தார் முதலிய எல்லோர்களாலுந் துறக்கப்பட்டுத் தனியே நிற்பாயாகில், புல்லசைவினும் அதனைக்கண்டு பகைவரோ வருகின்றனர்களோ வென்று அச்சமுற்று வருந்துவாய்; நீ இவ்வண்ணம் ஸ்வாமிகாரியத்தி னூக்கமற்றுப், பகைத்துத் தனியே நிற்கின், இளையபெருமாளுடைய கணைகள் உன்மேல் பாய்ந்து வருத்துமென்பதில் சந்தேகமில்லை; இவ்வண்ணமன்றியிலே விநயம்பூண்டு எங்களுடன் சேர்ந்து வருவாயாகில், நாம

பட்ட பாடுகளை மஹாராஜா முறையே கேட்டுச் சரிதானென்றுடன்பட்டுப்பின்
மேல் பகையின்றி யுன்னையும் ராஜியத்திலே நிலைக்கச்செய்வர், மஹாராஜர்
உனக்கு சிறறப்பனும், தருமபுத்தியுடையோரும், உன்மீதன்புடையோரும்,
ஸத்தியம் தவறாதாரும், தூய்மையுடையோரும், கஷ்டமறவருமாதலின்,
உன்னை யொருக்காலும் கொலைசெய்யத் துணிவுகொள்ளார்; உன் தாயார்
மீது மிகவும் பிரியமுடையோராதலினாலும், அவர்க்கு நீயன்றி வேறே
புத்திரனில்லாமையாலும், அவர் உனக்கொருதீங்கும் செய்யார்; ஆதலின்,
நீ ணடையத்துக, என்று சிறியதிருவடி யங்கதகுமாரனுக்குத்தெங்கூறியருளினார்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் ஐம்பத்து நான்காவது சருக்கம்

முற்றிற்று.



## ஐம்பத்தைந்தாவது சருக்கம்.

வானரர்களெல்லோரும் தமக்குக்குறித்த காலம் தீர்ந்துவிட்டதன்மேல்
அச்சங்கொண்டு பிராயோபவேசஞ்செய்தது.



இவ்வண்ணம் சிறியதிருவடி இதமாகவும், தருமமாகவும், மதுரமாக
வும் உரைசெய்த வாக்கியத்தை யங்கதகுமாரன் கேட்டு மாருதியை
நோக்கி மகிமீ ஆஞ்சநேயரே! கலைக்குரு புத்தியும், ஆத்தும சுத்தியும்,
மனசுத்தியும், துன்புறுத்தாமையும், கஷ்டினமையும், பராக்கிரமமும்,
தீரமும், என சிறறப்பனிடத்தில் தோற்றுகின்றில; அவன் தமையனு
ராகிய என் தந்தை பிழைத்திருக்கையிலேதானே அவருக்குப் பிரியமுள்ள
பாரியையும், தமக்குத் தருமத்தினால் மாதாவுமாகிய என் மாதாவைச்
சேர்ந்தனனல்லனோ? அன்றியிலே, என் தந்தை யுத்தஞ்செய்வதன்பொரு
ட்டுக் குகையினுள்ளேசென்றிருக்கையில், அக்குகையின் வாயைக் கல்லினா
லடைத்துவிட்டு வந்தனனல்லனோ? அத்தன்மையனாகிய அவன் தருமத்தை
யெவ்வண்ணமறிவான், அன்றியிலே, பெருமாளுடன் அக்கினிஸாக்ஷி
யாகத் தோழமை செய்துகொண்டு அவரால் பேருதவியையும் பெற்று
அந்நன்றியை மறந்து மயங்கிக்கிடந்தனனே? பின்பு, இளையபெருமாளு
டைய சீற்றத்திற்கச்சமுற்றேயன்றோ? பிராட்டியாரைத் தேடும்படி வானரர்
களுக்குக் கட்டளையிட்டனன் இத்தன்மையனான என் சிற்றப்பனிடத்தில்
தருமமெவ்வண்ணமுளதாகும்; அவ்வண்ணம் பாவியும், நன்றியற்றவனும்,
உணர்வற்றவனும், சபலமுடையோனுமாகிய மஹாராஜனிடத்தில் உயிர்
வாழ்ந்துய்ய விருப்புற்ற எவன்தான் விசுவாஸமுறுவான்; உலகில்
அரசர்கள் தமக்கு ஔரஸனான மகன், நற்குணமுடையோனாயினும்,

அல்லோனாயினும், அவனுக்கேபட்டங்கட்டுவிப்பாகளோயன்றிப் பகையின் மகனுக்குக் கட்டுவிப்பாகளோ? யான அவனுக்குப் பகையான வாலியின புத்திரனும், பகைத்து வேறுபட்டிருப்பவனும், கட்டளையைமீறி யப்ராதஞ் செய்தவனும், அவனிலும் குறைந்த சத்தியுடையோனும், பலமற்றவனு மாதலின், மீளவும் கிஷ்கிந்தைக்குச்சென்றெவ்வண்ணமுயிர்வாழ்வேன்; அவன் கொடியவனும், தீயோனும், தீமைசெய்பவனுமாதலின், யான அங்கே சென்றவுடனே கட்டஞ்செய்து என்னைப்பற்றி விலங்குபோட்டுக் காவ[illegible], ஆதலின, யானங்கே சென்று இவ்வண்ணந் தீமையுற [illegible] இங்கேதானே ப்ராயோபவேசஞ்செய்திறப்பது நன்று, [illegible] இவ்வண்ணமெனக்கனுமதி செய்தருளி மீண்டு [illegible] போய்ச் சேர்ந்து வாழ்க, யானிங்கேதானே ப்ராயோ பவேசஞ்செய்திறந்துவிடுவேனேயன்றி, மீண்டேயேனென்று பிரதிஜ்ஞை செய்து மிகவும் பலவான்களான ஸ்ரீராமலக்ஷ்மணர்களையும், என் சிற்றப்பனையும் கண்டு யான் வந்தன பூர்வமாகக் குசலமுரைசெய்தே னென்று மொழிக, அவ்வண்ணமே ருமையையும், தாரையையும் கண்டு செய்தியுரைத்துக் கூறுக, என் தாய் என்மீது மிகவும் அன்புடையவ ளாதலின், யானிவ்வண்ணமிங்கே யிறந்துவிட்டேனென்பதைக் கேட்பா ளாயின, உடனே சோகத்தினாலுயிரை விட்டுவிடுவெனபதிலையமில்லை, என்று மொழிந்தனன் உடனே யெழுந்து தருப்பங்கொணர்ந்து பரப்பி ஜாம்பவான முதலிய பெரியோர்களைப்பணிந்து அழுதுகொண்டே யந்தப் புல்லணையில ப்ராயோபவேசஞ்செய்து இனி இவ்வண்ணம் காலங்கடந்தும் பிராட்டியைக்காணாமல் மீளுவதில்லையென்று துதிகொண்டனன். இவ்வண் ணம் அங்கதன ப்ராயோபவேசஞ்செய்துவிட்டதை வானரர்களெல்லோருங் கண்டு கண்ணீர் பெருக்கித் துன்புற்றுச் சுக்ரீவனை நிந்தனை செய்து கொண்டும், வாலியைப் புகழ்ந்துகொண்டும், அங்கதனுக்கு யாரணைச் சூழ்ந்து ப்ராயோபவேசந் தாமுஞ் செய்யத் துணிந்து யுவராஜாவினுடைய கருத் தையும் உண்மையாக அறிந்து கால் கைகளை யலம்பி யாசமனஞ்செய்து ஸங்கல்பித்துக்கொண்டு கிழக்கு முகமாகத் தெற்கு நுனியான தருப்பங் களின்மேல் படுத்து இறப்பதற்குத் துணிந்து பெருமாள் வனவாஸமெழுந் தருளியதையும், தசரதசக்ரவர்த்தி வானேறியதையும், ஜனஸ்தானத்தில் [illegible]யிறந்ததையும், ஜடாயு பெருவிசும்பு பெற்றதையும், இராவ[illegible] பிராட்டியாரைப் பறித்தோடியதையும், தனிவீரனான வாலி யிறந்து [illegible]தையும், பெருமாள் மஹாராஜாமேல் சீற்றங்கொண்டதையும்,

முறையே முறையிட்டுக்கொண்டு புலம்பினர்கள். இவ்வண்ணம் இவர்களி னுடைய அழுகுரலினாலே மேககர்ஜனையினாலே போல, அம்மலையெங்கு மொலிக்கப்பட்டு ஸம்பாதியைப் புறத்தில் வருமாறு செய்தமையின், அவர்களுக்கு மஹாபயத்தை விளைப்பதாயிற்று; *

கிஷ்கிந்தாகாண்டத்தில் ஐம்பத்தைந்தாவது சருக்கம்

முற்றிற்று

---

## ஐம்பத்தாறாவது சருக்கம்

ப்ராயோபவேசஞ்செய்த வாநரர்கள் ஸம்பாதியைக்கண்டு ஸம்பாஷணஞ்செய்தது

---

இவ்வண்ணம் அங்கதன் முதலிய வாநரர்களெல்லோரும் அவ்விடத் தில் ப்ராயோபவேசஞ் செய்திருக்கும்பொழுது [illegible] அவ்விடத்திற் கழுகு களுக்கிறையும், ஜடாயுவின் முதற்றோனும், சிரஞ்சீவியுமாகிய ஸம்பாதி யென்னும் கழுகு [illegible] பராக்கிரமமுடையோனுமாய், அச்சமயத்தில் அந்த மலையின் குகையினின்று புறப்பட்டு அவ்வானரர்களைக் கண்டு மகிழ்ந்து இவ்வண்ணம் மொழியலுற்றது ;—

విధిఃకిలనరంలోకే విధానేనానువర్తతే
యథాయంవిహితోభక్ష్య శ్చిరాన్మహ్యముపాగతః.

விதிஃகிலநரம்லோகே விதாநேநாநுவர்த்ததே
யதாயம்விஹிதோபக்ஷ்யச் சிரான்மஹ்யமுபாகத:.

அங்ஙோ? தெய்வமானது தகுதியான ஸம்விதானத்துடன் கூடியே அவனவனை யநுசரித்து வருகின்றது; அவனவன் வேறே உபாயம் தேட வேண்டுவதில்லை; நெடுங்காலமாகப் பசியுற்ற எனக்கிவர்களைத் தெய்வமே உணவாகக்கொணர்ந்தளித்தனன்றே? ஆதலின், ப்ராயோபவேசஞ்செய் திருக்கின்ற இவ்வாநரர்களுள் முறையே இறப்பவர்களைப் புசித்துப் பசி தணிந்து மகிழ்வேன்; என்றிவ்வண்ணம் ப்ராயோபவேசஞ்செய்த தம்மைப்

---

* வாநரஜாதியில் ஸோதரர்களுள் யாவன் இறந்துவிடுகின்றனனோ? அவன் மனைவியை யிருப்பவன் பாரியையாக வைத்துக்கொள்வது ஜாதிதருமமென்று காணப் படுகின்றது, ஆகையாலேதான் பெருமாள் ருமையுடன் புணர்ந்ததற்கு வாலியைப் பழித்தருளினர். தாரையுடன் புணர்ந்த மஹாராஜனைப் பழித்திலர்; இக்கருத்து இச் சருக்கத்திலும் அங்கதன் வாக்கியத்தாலும் விளங்கும் ;—

ின்றது ; ஜனஸ்தானத்தில என தமபிககும, இராவணனுக்கும, எவ்வண் ணம போா நோ்ந்தது ; அன்புள்ள ஸோதரனுடைய ஜடாயுவெனனும பெயா் நெடுங்காலததிறகு இபபோதுதான் கேழககபபட்டது ; புகறகாிய இமமலையினின்றும இறங்க விருமபுகின்றேன் ; ஆதலின் நீவிரெல்லீரும என்னைப்பறறி யிறககக்கடவீாகள. மிகவும தோளவலியினுல் புகழபபட்ட என் தமபியின பெயனை யுனைததமையின, உங்களிடததில மிகவும மகிழ வுளளுகினறேன் ; வானா வானரவீராகளே ! என தமபி ஜனஸ்தானததில் வாழகின்றனனே அவன் இராவணனுடன போாசெயது ஏன இறநதனன, இவன் தசரதசககரவாத்திககு எவவணணம தோழனுயினன, ஸ்ரீராம சநதிரன் அந்தத தசரதமஹாராஜாக்கு இனிய திருககுமாரரலலரோ ? இதுகளைக் கேடடுணர விருமபுகின்றேனுதலால, குறையற மொழிக ; யான கதிரவனுடைய கொடிய கிரணஙகளிளுலொிககபபட்ட சிறகுடையே னுதலால, இறஙகிவரத திறமைகொளளுகினறிலேன , ஆதலினுல், என்னை யும இறக்கிவிடக கடவீாகள் ; என்று ஸமபாதி மொழிந்தனன

கிஷ்கிந்தாகாண்டததில் ஐமபத்தாறுவது சருககம

முற்றிறறு.

## ஐம்பததேழாவது சருககம

வானராகளெல்லோரும ஸமபாதியின விணுவுக்கு விடை கூறியது

இவவணணம ஸமபாதி சோகததினுல தீனமாக மொழியிய அவவாககியத்தை யநத வானராகளெல்லோரும கேட்டும முதலில இறநது வாகளைப் புசிபபேனெனறுனைத்தமையின், அவவாககியததை நமபாயல இப்பறவை இவவணணம் ஆனபன்போல நமமருகில் வநதெல்லோரையும புசிததுவிடுமென்றே எண்ணங்கொண்டும, நாம எவவிததிலும பாா யோபவேசமே செயதுவிட்டமையின, இது புசிககின் வருததமின்றியே யிறநது மகிழ்வோமென்று மனநதுணிநது படுததிருநதனாகள. பின்பு, அங்கதகுமாரனெழுந்து இது யாதுசெயினுஞ் செய்கவென்று உறுதி கொண்டு அப்பறவையை மலையினின்றும் கீழேயிறக்கி யதனை நோக் மொழியலுறறனன். கேளாய புள்ளிறையே ! ரிக்ஷராஜஸ் என்னும் வான ராஜன் மிகவும் வீரமுடையனுகி யிருநதனன். அவனுககு வாலி, சுக்ரீவ என்னும் இரண்டு புததிரர்கள் ; அவாகளுள் வாலி யென்பவர் மற்றாபு பராக்கிரமமுடையராகிக் கிஷ்கிந்தாராஜ்யத்தைப் பாதுகாத்து வந்தன பின்பு, தசரதசக்கரவர்த்தியின திருமகனுராகிய ஸ்ரீராமசந்திரன் இளை பெருமானுடனும், பிராட்டியாருடனும, தந்தையின் வாக்கியத்தைப் பா

காப்பதன்பொருட்டுத் தண்டகாரணியத்துக்கெழுந்தருளினார். அத்தருணத்தில் இராவணனென்னும் அரக்கர்கோமான் அவ்விருவாகளையும் மோசஞ்செய்து பிராட்டியாரைப் பறித்தோடினன். அந்தத் தசரதமஹாராஜாக்குத் தோழராகிய ஜடாயுவென்னும் பக்ஷிராஜன் அதனைக்கண்டு இராவணனையெதிர்த்துப் போர்செய்து அவனுடைய தேரையும் முறித்துப் பிராட்டியைக் கீழே விடும்படி செய்து நெடுநேரம் போர்ந்து இளைப்புற்றனர். இவ்வண்ணம் அவர் மூப்பினாலும், நெடுநேரம் போர்ந்ததினாலும் வருந்தியிருக்கையில், அந்தக் கொடிய இராவணன் அவரை வாளாலறுத்து வெற்றிகொண்டு மீளவும் பிராட்டியைத் தோள்மேலேற்றிக்கொண்டு ஓடிவிட்டனன். பின்பு, பெருமாள் பிராட்டியைக்காணாமல் இளையபெருமாளுடன் தேடிக்கொண்டு வருகையில், ஜடாயு அவர்க்குச் செய்தியுரைத்து இறந்தனர். பின்பு, பெருமாள் அவர்மேலருள்கொண்டு அவருக்குத் தஹன ஸம்ஸ்காரம் செய்து நற்பேறு தந்தருளுதலும், உடனே யவர் வானேறி மகிழ்ந்தனர். அநந்தரம் பெருமாள் இளையபெருமாளுடன் மீளவும் தேடிக்கொண்டு வருகையில், என் தந்தையுடன் பகைகொண்டு மந்திரிகளுடன் ரிசியமூகமலையில் வாழ்ந்துகொண்டிருந்த என் சிறிய பஞ்சிய சுக்ரீவனைக் கண்டு அவனுடன் தோழமை செய்துகொண்டு என் தந்தையைக் கொலைசெய்து சிற்றப்பனுக்கு முடி சூட்டிவித்தருளினார். வானரர்களெல்லோர்க்கும் அதிபதியாகிய அந்த ஸுக்ரீவன் அந்த நன்றிக்காகப் பிராட்டியைத் தேடி யளிப்பதாக உறுதிகூறி எம்மெல்லோரையும் அழைப்பித்துப் பிராட்டியாரைத் தேடி வரும்படி நாற்றிசைகளிலும் அனுப்பினார். இவ்வண்ணம் யாங்கள் பெருமாளாலேவப்பட்டவுடனே புறப்பட்டு ஓரிடமும் விடாமல் தேடியும் இரவில் கதிரவனொளியைக் காண்பதரிதுபோலப் பிராட்டியையாம் காண்கின்றிலோம்; இங்கு மயனமைத்த ரிக்ஷபிலத்துக்குள் புகுந்து அலைந்தமையின், மஹாராஜா எங்களுக்கிட்ட கெடுவு ஒரு மாதமும் தீர்ந்துவிட்டது; அதனால் மஹாராஜாக்கு அஞ்சி ப்ராயோபவேசஞ் செய்யத் துணிந்திருக்கின்றனம், யாங்கள் பிராட்டியையும் காணாமல் காலமுங் கடந்து சென்றபின்பு, மகாராஜரும் பெருமாளும் சீற்றங்கொள்ளின் யாங்கள் உயிர் வாழ்வுற்று மகிழ்வது அரிதன்றோ? ஆதலின், அங்குச்சென்று இகழ்வுற்றிறப்பதை விட இவ்விடத்திலேதானே ப்ராயோபவேசஞ்செய்திறப்பது நலமென்று கருதி இவ்வண்ணம் ப்ராயோபவேசஞ்செய்திருக்கின்றனம்; என்று அங்கதகுமாரன் ஸம்பாதியை நோக்கி மொழிந்தனன்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் ஐம்பத்தேழாவது சருக்கம்

முற்றிற்று.

---

## ஐம்பத்தெட்டாவது சருக்கம்

### ஸம்பாதி வானரர்களுக்குப் பிராட்டி இலங்கையி லிருக்கின்றனளென்று உரைசெய்தது



இவ்வண்ணம் வானரர்கள் உயிரை விடுவதிலுந் துணிவுகொண்டு தீன மாக மொழிந்த வாக்கியத்தை ஸம்பாதி செவியுற்றுக் கண்ணீர்பெருக்கி யவர்களை நோக்கிக் கேளீர் வானர வீரர்களே! எவனைக் கொடிய இராவண னால் கொலைசெய்யப்பட்டனனென்று மொழிகின்றீர்களோ? அந்த ஜடாயு எனக்கிளையோனாகின்றனன், ஆகலின், அவனைக் கொலைசெய்த ராவணன் மேல் மிகவும் பகைகொள்ளுகின்றேன், ஆயினும், மூப்புற்றும், சிறகுகள் எரிந்தும் இருக்கின்றேனாதலின், அந்தப் பகையைத் தீர்த்துக்கொள்ள வல்லமை கொள்ளுகின்றிலேன், முன்பு மகேந்திரன் விருத்திராஸுரனைக் கொலைசெய்த காலத்தில் யானும் ஜடாயுவும் யௌவனமுடையவர்களாயி னோம்; அப்பொழுது யாங்களிருவரும் உயரப்பறப்பதில் யார் சிறந்தவர் என்பதை யறிவதன்பொருட்டு ஒருவர்க்கொருவர் வாது கூறிக்கொண்டு வெகு வேகமாகப் பறந்து ஸூரியமண்டலத்தருகிற் சென்றோம், அந்தக்கு ணத்தில் நடுப்பகலாயினமையின், ஜடாயு ஸூரியனுடைய வெப்பத்தை ஸஹிக்கமாட்டாமல் மிக வருந்தினன், யானது கண்டு அன்பினால் அவனைச் சிறகுகளினால் மறைத்துக்கொண்டேன், ஆகலின், யான் கதிரவ னொளியினாலெரிக்கப்பட்டு விந்தியமலைமேல் வீழ்ந்தேன், அதுமுதல் யானிவ்விடத்தில் வாழ்ந்துகொண்டிருக்கின்றேன், பின்பு, ஜடாயுவின் செய்தியை யறிந்திலேன்; என்று மொழிந்தவனை யுவராஜனாகிய அங்கதன் கேட்டு நுண்ணறிவினனாதலின், மீளவும் அவனை நோக்கிக் கேளீர் ஸம்பாதி! நீர் ஜடாயுவுக்குத் தமையனாயின், யானுரைத்த வாக்கி யத்தைக் கேட்டபின்பு, அந்த இராவணன்மேல் கடுஞ்சினந் தோன்றி யிருத்தல் வேண்டுமன்றோ? அவனைக் கொலைசெய்யுந்திறமையிலதாயினும் அவ்வாழ்விடத்தை யுணர்வீராயின் மொழிக; நன்காராயுந் தன்மையினால் இவ்வண்ணம் நம்மெல்லோரையும் பகைத்த அந்த ராவணன் அருகிலிருக் கின்றனனோ? நெடுந்தூரத்திலிருக்கின்றனனோ? என்று வினவினன். ஸம்பாதி யதுகேட்டு வானரர்களெல்லோரையும் நோக்கிக் கேளீர் வானர யூதபர்களே! யான் எரிந்த சிறகுடையோனும், மூப்பினனுமாதலின், யாது செய்வதற்கும் திறமை கொள்ளுகின்றிலேன்; ஆயினும், வாயினாலாயினும் பெருமானுக்கு உதவி செய்கின்றேன்; யான் அதலம், விதலம் முதலிய கீழேழு லோகங்களையும், பூர்புவ: முதலிய மேலேழு லோகங்களையும் நன் கறிகின்றேன்; முன்பு, தேவாஸுரர்கள் போர்செய்ததையும், அவர்கள் கூடித் திருப்பாற்கடலைக் கடைந்ததையும் அறிவேன்; யான் ஸ்ரீராமனுக்கு

உதவி செய்வேனென்று முயன்றாலும் மூப்பினால் வெற்றியும், திறமையும் அற்றிருக்கின்றேன்; யான் ஒருநாள் ஆகாயத்தில் அந்த ராவணன் ஒரு பெண்மணியைத் தேர்மீதேற்றிக்கொண்டோடக்கண்டேன், அவள் அந்தோ? ஸ்ரீராமா! அந்தோ? லக்ஷ்மணா! என்று கூவிக்கொண்டும், கால் கைகளை யுதறிக்கொண்டும், அணிகளை யறுத்தெறிந்துகொண்டும் வருந்தினாள்; உங்களுடைய வாக்கியத்தைச் செவியுற்றபின்னர், அவளே ஸீதாதேவி யாதல்வேண்டுமென்று எண்ணுகிறேன், அவள் [illegible] போன்ற அந்த இராவணனுடைய அருகில் மின்னற்கொடிபோல விளங்கினாள். அந்த ராவணன் வாழுமிடத்தையும் உரைக்கின்றேன், [illegible] அவன் விச்ரவஸ்ஸென்னும் மஹாமுனிவருக்குப் புத்திரன், [illegible] குத் தம்பி, அவன்தான் இராவணனென்னும் பெயருடையவன், [illegible] இலங்கையில் வாழ்ந்துகொண்டிருக்கின்றனன், அந்த இலங்கையும் இங்கிருந்து நூறுயோஜனதூரத்திலிருக்கின்றது, அதனை விசுவகர்மன் மிகவும் விசித்திரமாய் இயற்றினன், அஃது பொன்மயமாகிய துவாரங்களாலும், நவமணிகள் நிறைந்த விசித்திரமான பொன் வேதிகைகளாலும், க[illegible] போல வொப்பற்றனவாம் மிகவுயர்ந்த மதிள்களாலும் அலங்கரிக்கப்பட்டுளது, அவ்விடத்தில் இராவணனுடைய அந்தப்புரத்தில் [illegible] ராக்ஷஸிகளால் பாதுகாக்கப்பட்டு வாடி வருந்தி [illegible] பட்டையே யுடுத்துக்கொண்டு சிந்தையுற்றிருக்கின்றனள்; ஆதலால், நீவிர் எல்லீரும் நூறுயோஜனதூரங் கடலைக்கடந்து செல்வீர்களாயின், அவ்விடத்தில் பிராட்டியைக் காணலாகும், அங்கு இராவணனும் மிகவும் அரண் செய்துகொண்டிருக்கின்றனன், அவ்விடஞ் செல்வீர்களாயின், தடையின்றிப் பிராட்டியைக் காண்பீர்கள், யான் ஞானத்தினாலே இவ்வண்ணம் அறிகின்றேன், குளிங்கம் முதலிய தானியத்தால் பிழைக்கின்ற பறவைகளுக்குக் கண்ணோக்கம் முதன்மையானது, [illegible] முதலிய காய் கனிகளினாலே பிழைக்கின்ற பறவைகளுக்கு அவைகளைவிட இருமடங்கு அதிகமானது; நீர்காக்கை, க்ரௌஞ்சம், குரரம் என்னும் பறவைகள் அவைகளில் மும்மடங்கு சிறந்தவைகள், பருந்துகள் அவைகளைவிட நாலுமடங்கு சிறப்புற்றன, கழுகுகள் அவைகளைவிட ஐம்மடங்கு சிறந்தன; பலம், வீரியம், ரூபம், யௌவனம், இவைகளையுடைய அன்னப்பறவைகள் அவைகளைவிட ஆறுமடங்கு சிறந்தன; அருணகருடர்கள் அவைகளெல்லாவற்றிலும் சிறந்தவர்கள், அந்த அருணனிடத்தினின்றும் யாங்களெல்லோரும் பிறந்தனம்; ஆதலின், யானிங்கிருந்தே இலங்காத்தீவில் இராவணன் ஸீதாதேவி முதலானோர் இருப்பதைக் காண்கின்றேன்; எமக்கும், அந்த அருணகருடர்களுக்குள்ள திவ்ய தேஜஸ்ஸும், திவ்ய ஞானமும், சிறந்த பலமும் உள; ஆதலாலும், உண்டியின் திறமையினாலும், இயல்பினாலும், யானிங்கிருந்தே நூறு யோஜனதூரத்துக்கப்புறமிருக்கின்ற இலங்கையில் வாழ்கின்ற ராவணனையும், பிராட்டியையும்

கண்ணுறுகின்றேன் ; எங்களுக்கு நெடுந்தூரத்திலுள்ள உணவை யறியுந் திறமை இயல்பாகவே யுளது ; கோழிகள் காலினருகிலுள்ள பொருளையே யறியும் ; அந்த ராவணனை யாவராலும் இகழத்தக்க தீச்செயல் புரிந்து என் தம்பியைக்கொலைசெய்தமையின், அதற்குப் பிரதிசெய்யவேண்டுவது ஆவசியகமாகியது, ஆதலின், யான் அது செய்யுந்திறமையற்றவனாயினும், வாக்கினாலாயினும் ஸகாயம் செய்கின்றேன், ஆதலின், நீங்கள் இக்கடலைத் தாண்டி இலங்காத்தீவுக்குச் செல்லும் உபாயத்தை யாராய்ந்துணரக் கடவீர்கள் ; அங்குச் சென்றபின்னர் பிராட்டியைக்கண்டு ஸேவித்து மேற்கொண்ட காரியம் கைக்கூடி வருவீர்கள், யான் சிறகற்றிருக்கின்றமையின், என்னைக் கடலக்கரையைச் சேர்க்க ; யான் என் தம்பி ஜடாயுவின்பொருட்டுத் தருப்பணஞ்செய்யக் கருதுகின்றேனென்று மொழிந்தனர் வானரர்க ளெல்லோரும் அதுகேட்டு அவ்வண்ணமே யவரைக் கடல்கரை சேர்த்து அவர் நீரிலாடித் தருப்பணஞ்செய்தபின்பு, மீளவும் அவரை இருப்பிடஞ் சேர்த்துப் பிராட்டியின் செய்தி யுணர்ந்தமையின், மிக மகிழ்ந்தனர்கள். *

கிஷ்கிந்தாகாண்டத்தில் ஐம்பத்தெட்டாவது சருக்கம்

முற்றிற்று.

## ஐம்பத்தொன்பதாவது சருக்கம்

### ஸம்பாதி வானரர்களுக்கு மீளவும் பிராட்டியின் செய்தி கூறியது.

பின்பு, வானரர்களெல்லோரும் அமிழ்தத்துக்கு நிகராகிய அந்தச் சம்பாதியின் வாக்கியத்தைச் செவியுற்று மகிழ்தலும், அவர்களுள் புத்தியினாலும், வயதினாலும் சிறந்த ஜாம்பவான், மற்றுள்ள வானரர்களுடன் எழுந்து மீளவும் ஸம்பாதியை நோக்கிக் கழுகுகளுக்கிறையே! ஸீதாதேவி யெவ்விடத்தில் காணப்பட்டனள் ; யாரால் காணப்பட்டனள் ; அவளை யெடுத்தோடினவன் யாவன் ; இவைகளையெல்லாம் நீர் குறையறமொழிக ;

* ஐம்பத்தொன்பதாவது சருக்கமுதல், அறுபத்து மூன்றாவது சருக்கம் முடிவு வரையில், ஐந்து சருக்கங்கள் அநேகம் பிரதிகளில் எழுதப்படவில்லை ; சங்கதிகளும் முன்பின் தொடர்ச்சிகளுக் கொஞ்சம் விரோதமாகக் காணப்படுகின்றன, ஆதலின், வேறு கிரந்தங்களிலிருந்து சேர்க்கப்பட்டனவென்று எண்ணப்படுகின்றன ; ஆயினும், பல புத்தகங்களிலிருக்கின்றமையின், வியாக்கியானஞ் செய்யப்படுகின்றன ; என்று வியாக்கியானஞ் செய்தவர்களெல்லோரும் எழுதி யிருக்கின்றனர்கள் ; ஆதலாலே தானே யானும் அந்தச் சருக்கங்களுக்குத் தாஜமா செய்கின்றேன் ;—

எங்களெல்லோர்க்குந் தஞ்சமாகுக, பேரிடி விழுந்தாற்போல விழுகின்ற பெருமாளையபெருமாளகளினுடைய கூரிய கணைகளுக்கு யாவனிரை யாகப் போகின்றவன; என்று விளுவினா ஸமபாதியும் அதுகேட்டு முன்னமே மகிழ்வுகொண்ட அவ்வாநராகளை மீளவும் மகிழ்விப்பவராகி மொழியலுற்றனா. கேளீா வாநரயூதபாகளே! யான பிராட்டியை இராவ ணன் அபகரித்ததைக் கேட்டவணணம கூறுகின்றேன், அபபோது பார் த்தவனையும், பாாத்த இடத்தையம உணாசெயகின்றேன; அநேகம யோஜனை தூரம அகன்ற இந்த மலையினமேலே விழுந்து நெடுங்காலமாய பல பராக் கிரமங்களா ஒடுங்கி யடங்கி வாழகின்றேன், யானிவவண்ணம பறக்குந திறமை யற்றிருககின்றமையினா, ஸுபாாசவன் என்னும் என புக்கிரன் தினந்தோறும் எனக்குணவு கொணாந்தளித்துப்பாதுகாத்துவருகின்றனன்.

తీక్ష్ణకామాస్తుగన్ధర్వాః తీక్ష్ణకోపా భుజఙ్గమాః
మృగాణాం తు భయం తీక్ష్ణం తతస్తీక్ష్ణక్షుధా వయం.

தீக்ஷ்ணகாமாஸ்துகந்தாவாஸ தீக்ஷ்ணகோபாபுஜங்கமா:
மருகாணாந்துபயந்தீக்ஷ்ணம ததஸ்தீக்ஷ்ணக்ஷுதாவயம.

கந்தாவர்களா கடுங்காமமுடையாவாகளா; நாகங்களா கடுஞ்சினமுடைய வை, மானகளுககு அசசங்கடுமையானது, யாங்களா கடும்பசி யுடையவா களா; என்பது இயலபன்றோ? ஆதலின, எனககு வேளை தபபாமல் என புத்திரன் உணவுகொணடளித்து வருகையிலை, ஒருநாளா எனககுணவுதேடி யெங்குமகபபடாமல கதிரவன மறைநத பினபு வாளா வநது சோர்ந்தனன். ஆதலின, யான மூபபினாலும, பசிதாகத்தினாலும, சினமதிகமாகி யவனை யிகழநதேன; அபபோழதவன் எனனை வணஙகிச் சினந்தணியுமாறு இனிமையாக மொழியலுறறனன கேளீா அன்புளளா பிதாவே! யான் வழக்கபபடி யுமககாஹாரததைத் தேடிககொண்டே யாகாயததிற்பறாது மஹேநதிரமலையின் துவாரததை மறைத்துக கடலிடையிலுலாவுகின்ற அநேகமாயிரம ஜநதுககளையும கொலைசெயயுமாறு அவைகளின வழியை மறைத்து நினறேன; அபபோழுதொருவன நனறுகக் கூடடப்பட்ட மைபோன்ற மேனியுடையனாகிக கதிரவனுதித்தாறபோல ஒளிககின்ற ஓர் பெண்மணியை யெடுத்துககொணடோடி வந்தனன்; யானவாகளைககணடு இவர்களே யின்று உணவாகக கடவர்களென்று நிசசயித்து அவாகளை யெதிர்த்து வழியை மறைத்தேன்; அபபோழதவன எனனைககண்டு வினயம் பூண்டு வணங்கி வழிவிடுமபடி இனிமையாக வேணடி வருநதினன்.

నహి సామోపపన్నానాం ప్రహర్తా విద్యతే క్వచిత్
నీచేష్వపి జనః కశ్చిత్ కిమఙ్గ బత మద్విధః.

நஹிஸாமோபபந்நாநாம ப்ரஹாதாவித்யதே க்வசித்
நீசேஷ்வபிஜந:கச்சித் கிமங்கபதமத்விதஃ.

இனிய மொழிகளை மொழிந்து தஞ்சமெனறடைந்தவர்களைக் கடுமை கொண்டு கொலை செயபவன இழிகுலததோாகளிலும எங்குமொருவனும இலன் ; அங்ஙனமாயின், நறகுலததிறபிறந்த எனனைப்போன்றவன் சரண மடைந்தவனைக் கொலை செயவானோ ? ஆ ! ஆ ! ஆதலின, யான் அவாகளைக் கொலைசெய்யாமல் வழிவிட்டருளினேன , ஆதலின், அவன தடையின்றி யொளியினால் வானெங்குமொலிக்கச்செயது சென்றனன ; அப்போழ்து ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற பூதங்களெல்லாம வந்து எனனைக்கண்டு மகிழ்ந்தனாகள. மகாரிஷிகளும அயயா நீ நன்று செய்தனை ; நன்கு வாழ்க ; என்று வாழ்த்தினாகள அபபோழ்து யான் அவாகளை நோக்கி, அவன யாவனென்று வினவுகையில, அவன இராவணனென்றும், தசரத மஹாராஜன திருமகனாகிய ஸ்ரீராமசந்திரனுடைய தருமபத்தினியாகிய ஸ்ரீஸீதாதேவியைப் பறிததோடுகின்றனனெனவும மொழிந்தனாகள. அந்தப பெண்மணியும அணிகளறுந்து சிதறியும், வெணபட்டு நழுவியும, சோகத்தினால மோகமடைந்தும், ராமா ! லக்ஷ்மணா ! என்று கூவிககொண்டுமே சென்றனள. யான் அதனைப பாாததுககொண்டிருந்தமையின, காலக் கழிவாய விட்டது ஆதலின, இபபிழையைப பொறுததருளக ; என்று என் புத்திரனாகிய ஸுபாாசுவன வந்து கூறினன. அதனை யான் செவி யுறறும், அவன பிராட்டி விஷயத்தில பட்ட அபராததிறகுத தகக சிக்ஷைசெய்யுந்திறமை கொணடிலேனாகலின், யாதுந்தோறாமல அம்பன் போலிருந்தேன ; இபபோழ்து யான் வாக்கினால மாததிரம ஸஹாயம செயவது முடியும ; ஆதலின், உரை செயகின்றேன் கேளீர்கள , உங்க ளெல்லோாககும் புத்தியினாலுதவிசெயகினறேன் , பெருமாளுடைய காரி யம் யாதுளதோ ? அஃது எனனுடைய காரியநதான் ; இதில சிறிதும் சந்தேஹமிலலை ; நீங்கள சிறந்தவாகளும, புத்தி யுடையவாகளும, வாஸவ னாலும வெல்லவொண்ணாதவாகளுமாதலின, மஹாராஜா உங்களை யனுப்பி னா. பெருமாளிளையபெருமாள இவவிருவாகளுடைய பாணங்களும மூவுல கங்களையும் அழிபபதறகும, பாதுகாபபதறகும வல்லமை யுடையன ; இராவணனும் மிகவும தேஜோபல பராக்கிரமமுடையவனே ? ஆயினும், மிகவும் திறமை கொண்ட உங்களுக்கு ஒனறும அரியதன்று ; ஆதலின், இனி நீஙகள காலக்கழிவு செயல்வேணடாம்; உங்களைப்போன்ற புத்திமான் கள செயற்குரிய காரியங்களில் அசசமுற்றுக் காலக்கழிவு செய்யார்கள் ; ஆதலின், உடனே புறப்பட்டு இலஙகைக்குச்சென்று பிராட்டியைக் கண்டு மகிழ்க ; என்று ஸம்பாதி மொழிந்தனர்.

கிஷ்கிந்தாகாண்டததில் ஐம்பத்தொன்பதாவது சருக்கம் முற்றிற்று.

---

ஸுபார்சுவன் ராவணனைக் கொலைசெய்யாமல் விட்டதற்கு மாயோகிகள் மகிழ்ந்து வாழ்த்தினதற்குக் காரணம் யாதெனில், சரணமடைந்தவனைப் பாதுகாத்த

# அறுபதாவது சருக்கம்.

## ஸம்பாதி தன்னுடைய முற்செயலை மீளவும் வாநரர்களுக்கு மொழிந்தது.

அநந்தரம் அவ்வண்ணம் ஸ்நானஞ்செய்து ஜடாயுவின்பொருட்டுத் தருப்பணஞ்செய்து இருப்பிடம் வந்து சேர்ந்த ஸம்பாதியை அங்கதன் முதலிய வாநரர்கள் எல்லோரும் சூழ்ந்து உட்கார்ந்தனர்கள். ஸம்பாதியும் அவர்களிடத்தில் விசுவாஸமுற்று மகிழ்ந்து அவர்களை நோக்கி மொழியலுற்றனர். மஹாபலபராக்கிரமமுடைய வாநரர்களே! எனாச்சல்போடாமல் ஒருமனமுடையர்களாகிக் கேளீர்கள்; யான் பிராட்டியாரை எவ்வண்ணமறிகின்றேனோ அதனுண்மையை மொழிகின்றேன்; முன்பு, யான் இமமலையின் சிகரத்தில் சிறகுகளொடிந்து வீழ்ந்தேனே? அப்பொழுது உடனே மோகமடைந்து ஆறுதினங்கழிந்து மோகந்தெளிந்து மனம் வருந்தி யெழுந்து பத்துத் திசைகளிலும் கண்திறந்து பார்க்கையில், யாதொன்றுந் தெரிந்திலது; பின்பு, கடல், மலை, யாறு, குளம், காடு, கடற்கரைகளைக் கண்ணுற்றுப் பார்க்கையில், மகிழ்ந்த பறவைகளையுடையதாகிக் குகைகளையும், சிகரங்களையும்பொருந்தித் தென்கடலுக்கு வடகரையிலிருக்கின்றமையின், இஃது விந்தியமெனனும் பெயருடைய மலையென்று நிச்சயங்கொண்டேன்; முன் இவ்விடத்தில் தேவர்களாலும் பூஜிக்கப்பட்டு மிகவும் புண்ணியகரமான ஓராசிரமமிருந்தது, அதில் நிசாகரனென்னும் மாயோகி கடுமையாகத் தவஞ்செய்துகொண்டிருந்தனர் யான் அவரைக் காணவேண்டுமென்றெண்ணி இம்மலைச் சிகரத்தினின்றும் இறங்கி மிகவும் வருத்தமுற்று அவ்வாசிரமமடைந்தேன், அம்முனிவர் முன்பு ஜடாயுவினாலும், என்னாலும் பலமுறை காணப்பட்டவர், எங்கள்மேல் மிகவும் அன்புள்ளவர்; அவருடைய ஆசிரமத்தில் எப்பொழுதும் மந்தமாருதம் வீசும்; தளிர்த்துப் பூத்துக் காய்த்துக் கனிந்துத் தழையாத மரம் ஒன்றுமிலது; அவ்வாசிரமத்தில் ஓர் மரத்தடியில் அவரைக் காண்பதன்பொருட்டு உட்கார்ந்தேன்; பின்பு, அம்முனிவர் நீரிலாடித் துயபதுபிலுடுத்து வடக்கு நோக்கி யருகிலெழுந்தருளக்கண்டேன்; அவரைக் கரடி, சிங்கம், யானை, நாகம் முதலிய கொடிய ஜந்துக்களும், உயிர்களெல்லோரும் திசைமுகதேவனைச் சூழ்வதுபோலச் சூழ்ந்து பகை நீங்கி வருகின்றன; பின்பு, அம்முனிவர் ஆசிரமஞ்சேர்ந்தபின்னர், அரசன் அரண்மனை சேர்ந்தபின்னர் அவனைச்

---

னன் என்பதினாலும், இராவணனைக்கொலைசெயின், கூடப் பிராட்டியையும் கொலைசெய்து விடுவனென்பதினாலும், ஒருக்கால் இராவணனைமாத்திரம் கொலைசெய்தாலும் ராக்ஷசர்கள் எல்லோரும் பெருமாளால் கொலைசெய்யப்படார்கள் என்பதினாலும், அப்படிக்கெல்லாமில்லாமல் இராவணனைக் கொலைசெய்யாது விட்டுவிட்டதே மகிழ்ந்து வாழ்த்துவதற்குக் காரணமெனவுணர்க.

சூழ்ந்து வந்த சேனைகளெல்லாம மீண்டுசெல்வனபோல அவைகளும் மீண்டுசென்றன; பின்பு, அம்முனிவர் என்னைக்கண்டு மகிழ்ந்து மீளவும எழுந்து என்னருகில வந்து என்னை நோக்கிப் புள்ளிறையே! நீயிங்கு வந்த காரியம யாது; உன்னுடைய உரோமங்கள் விகாரமடைந்திருப்பதைக் கண்டால் உன சிறகுகள தீயால எரிக்கப்பட்டனவென்றும், உடல் மிகவும் விரணமுற்று மிகவும நோயுடையதென்றும அறியப்படுகின்றது; முன்பு, இரண்டு கழுகுகளைக் கண்டிருக்கின்றேன், அவை காற்றுக்கு நிகரான வேக முற்றும,வேண்டுமாறுஉருவந்தரித்தும,கழுகுகளுக்கிறைகளாகவிருந்தன; அவற்றுள மூத்தது ஸம்பாதி, இரண்டாவது ஜடாயு, அவர்களுள நீ ஸம பாதி யென்பவனல்லையோ? முன்பு நீங்களிருவரும மானிடரூபங்கொண்டு என்னை வணங்கினீர்களல்லீரோ? அதனைமையனுன உனக்கு இப்போழ்து வியாதி யுண்டாகியதும, சிறகுகளெரிந்ததுமேன், இவவண்ணம நீயேதே னுஞ் செய்த பிழைக்காக யாரேனும் தண்டனை செய்தாரோ? இவைகளை யெல்லாம விளவுகின்ற எனபொருட்டுமொழிக; என்று மொழிந்தருளினர்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் அறுபதாவது சருக்கம்

முற்றிற்று



## அறுபத்தொன்றாவது சருக்கம்.

இதுவுமது



கேளீர் வாநர யூதபர்களே! அநந்தரம யான் அந்த நிசாகரமாமுனி யை நோக்கிப பிறரால செய்தற்கரிய கொடியதாகிய யான செய்த ஸாஹஸச் செயலை யுரைசெய்லுற்றேன; கேட்டருளீர மாதவச செல்வரே! என்னு டைய சிறகுகளெரிந்து மெய்யெல்லாம விரணமாயிருப்பதினாலும, நாணத் தாலும, அதனை நனகு மொழியுந் திறமையுறுகின்றிலேன; யானும என தம்பி ஜடாயுவும் கொழுப்பினால செறுக்குற்று மதிமயங்கி யொருவர்க் கொருவர் வாது கூறிக்கொண்டு நம்மிருவருள யார சிறந்தவரென்பதை யறிவதன்பொருட்டு ஆகாயத்திலுயரப்பறக்கும்படி கயிலைமலையின சிகரத் தில் அங்குள்ள முனிவர்களுடைய முன்பாக ஸூரியன உதயமாகும பொழுது புறப்பட்டு சூரியன் அஸ்தமயமாகுமளவும அவனருகிற்சென்று பின செல்லல் வேண்டுமென்று பிரதிஜ்ஞை செய்துகொண்டோம; பின் பிருவரும் அம்முனிவர்களின் உடன்பாட்டினமேல் அப்படியே புறப்பட்டு வானிடையிற சென்று பூதலத்திலெங்கும் நகரங்களைத் தேர்ச்சக்கரம போன்றனவாகவும், சில விடங்களில் நிருத்தகீதவாத்திய கோஷங்களையும,

சில விடங்களில் வேத கோஷங்களையும், சில விடங்களில் செவ்விய வஸ்திரங்களையுடுத்து மகிழ்ந்து பாடுகின்ற தெய்வப்பெண்களையும் கண்டோம்; இவ்வண்ணம் மேன்மேலும் பறந்து கதிரவனை செல்லும் வழி சேர்ந்து கீழே பார்க்கையில், பாரிலுள்ள பற்பல உயர்ந்த மரங்களடர்ந்த காடுகளும் புல்லுள்ள விடங்களைப்போலக் காணப்பட்டன; பூமி பற்பல உயர்ந்த மலைகளுடையதாகியும் சிறிய கற்களுடையதுபோலும், அகன்ற நதிகளுடையதாகியும் மெல்லிய நூல்களினுலே சுற்றப்பட்டதுபோலும் காணப்பட்டது, இமயம், விந்தியம், மேரு முதலிய சிறந்த மலைகளும், மடுவினிடையில் யானைக்குட்டிகளிருப்பனபோலக் காணப்பட்டன, அவ்வண்ணம் மிகவும் உயரச்சென்றுகொண்டிருக்கையில், எங்களிருவர்க்கும் அதிகமான வேர்வை நீரும், சிரமமும், அசசமும, மயக்கமும, இருளும், மூர்ச்சையும் உண்டாயின, அப்பொழுது இது கிழக்கு, இது தெற்கு, இது மேற்கு, இது வடக்கு, என்று ஒரு திசையும் நன்குணரப்படவில்லது, ஊழிகாலத்தில் உலகமெல்லாம் ஸம்ஹாரக்கினியினுல எரிக்கப்பட்டாற்போலக் காணப்பட்டது, யான் அத்தருணத்திலும் உடபுலனைக் கடபுலனுடன் சேர்த்துத் தீரங்கொண்டு கதிரவனை நிமிர்ந்து பார்த்தேன்; அப்பொழுதவன் எங்களுக்குப் பூமிக்குச் சரியாகக் காணப்பட்டனன், அப்பொழுது ஜடாயு அந்த வெப்பத்தைப்பொறுமல வருந்திக் கீழே வீழ்ந்தனன் யானது கண்டு அவனைப் பாதுகாப்பதன்பொருட்டுச் சிறகுகளினுல மறைத்துக்கொண்டே கீழிறங்கினேன், ஆதலால், ஜடாயு எரிக்கப்படவில்லன், யான் அறியாமல அவனுக்கு மேலே சென்றமையின், எரிக்கப்பட்டேன்; அப்பொழுது யான ஜடாயுவை விட்டுச் சிறகுகளெரிந்து மோகங்கொண்டு விந்தியமலையின்மேல் வந்து வீழ்ந்தேன், அப்போது ஜடாயு ஜனஸ்தானத்தில் வீழ்ந்திருப்பானென்று ஊஹித்தேன்; கேட்டருளீர் மாயோகயே! யான இவ்வண்ணம சிறகுகளும எரிந்து கழுகுகளின் ராஜ்ஜியத்தையுந்துறந்து உடன்பிறந்த ஜடாயுவையும் விட்டுப் பிரிந்து திறமையுமழிந்து இவ்வண்ணம் வருந்துவதைவிட இறப்பதே சிறப்பென நினைக்கின்றேன்; ஆகலின், இதன் சிகரத்திலிருந்து கீழே வீழ்ந்திறப்பேன்; என்று மொழிந்து வருந்தினேன்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் அறுபதத்தொன்றுவது சருக்கம முற்றிற்று.

## அறுபத்திரண்டாவது சருக்கம்.

### நிசாகரமாமுனி ஸம்பாதிக்கு இதமுரைத்தது.



கேளீர் வாநரயூதபர்களே! யானிவ்வண்ணம் மொழிந்து கண்ணீர் பெருக்கி யழுது வருந்தினேன், பேரருள்பூண்ட அம்முனிவரும் என்னுடைய புலம்பலைக்கேட்டு என்மீதருள்கொண்டு முகூர்த்தகாலந் தியானஞ் செய்து பின்பென்னை நோக்கிக் கேட்பாய் ஸம்பாதி! நீ இவ்வண்ணந் துயர முறாதே, உன்னுடைய பக்ஷங்களும் முளைக்கப்போகின்றன; கண்களும் காணப்போகின்றன, வலிமையும் உறுதியும் வீரமும் உளதாகும்; சாஸ்திர ரஹஸ்யத்தில் உன் விஷயமாகச் சிறந்த காரிய முண்டாகுமென்று கேட்டிருக்கின்றேன்; இப்பொழுது ஞானதிருஷ்டியினால் பார்த்ததிலும் அது உண்மையெனவே காணப்பட்டது; இக்ஷ்வாகுமஹாராஜன் குலத்தில் தசரதனென்னும் மஹாராஜா ஒருவர் பிறக்கப்போகிறார். அவருக்கு ஸ்ரீராமனென்னுந் திருக்குமாரர் அவதரிக்கப் போகிறார். அவர் பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலிப்பதன்பொருட்டு லக்ஷ்மணனென்னும் தம்பியுடனும், ஸீதையென்னும் பிராட்டியுடனும், தண்டகாரணியஞ்சேர்ந்து வாஸஞ்செய்யப்போகிறார் அப்போது ராவணனென்னும் ராக்ஷஸராஜன் தேவதானவாதிகளினால் அழிவில்லையென்னும் செருக்கினால் அந்தச் சீதாதேவியை ஜனஸ்தானத்திலிருந்து மோசஞ்செய்து அபகரித்துக்கொண்டு போகப்போகிறான் அந்தச் சீதாதேவியும் அவன் வீடு சேர்ந்து வேண்டும் பொருள்களை யளித்து ஆசையுறும்படி செய்யப்பட்டும் பதி சோகத்தில் மூழ்கி பொன்னையும் இலக்ஷியஞ்செய்யாமல் உணவுமின்றி யிருக்கப் போகிறாள். அதனைத் தேவேந்திரனறிந்து அவளுக்கு இரஹஸ்யமாய்த் தேவர்களுக்கும் அரிய பரமான்னங் கொணர்ந்தளிக்கப்போகிறான். அதனைப் பிராட்டி கண்டு இந்திரனாலிஃது அளிக்கப்பட்டதென வுணர்ந்து அதில் முதலில் ஒரு பாகமெடுத்து என் பர்த்தா தம்பியுடன் உயிர்வாழ்ந்துயினும், தெய்வத்தன்மையை யடைந்திருக்கினும், இது அவர்பொருட்டாகக்கடவதென்று தரையில் வைத்துவிட்டு மிகுதியைப் புசிக்கப் போகிறாள். பின்பவளைத் தேடுவதன்பொருட்டு ராமனாலனுப்பப்பட்டு வாநரர்கள் தேடிக்கொண்டு வரப்போகிறார்கள். கேளாய் ஸம்பாதி! அப்பொழுது நீ யவர்களைக் கண்டு பிராட்டி யிருக்குமிடத்தை யுரைசெய்யக்கடவை. ஆதலின், நீ இத்தன்மையனாக எங்குஞ் செல்லற்க; திறமை யற்றவனாகி எங்கேதான் செல்வாய்; ஆதலின், தேசகாலங்களை யுணர்; இவ்விடத்திலேயே அவர்களுடைய வரவை எதிர்பார்க்க; அப்பொழுது உனக்குச் சிறகுகளும் முளைக்கப்போகின்றன; ஆதலின், உனக்கிப்பொழ்தே சிறகுகள் முளைக்குமாறு செய்வதற்குத் திறமையிருக்கையிலும், மனமுறு

கின்றிலேன்; நீ இங்கிருந்துகொண்டே இவ்வண்ணம் வாநரர்களைக்கண்டு பிராட்டி யிருக்குமிடத்தை யுரைசெய்வாயாக்கில், உலகங்களெல்லோர்க்கும் உபகாரஞ் செய்தவனாகுவாய்; அந்தக் காரியம் அந்த ராமலக்ஷ்மணர்க ளிருவர்க்குமாத்திரமே யன்று, அது ப்ராஹ்மணர்கள், தேவர்கள், முனிவர்கள், தேவேந்திரன், இவர் முதலிய எல்லோருடைய காரியமே யாகின்றது; யானும் அந்த ஸ்ரீராமலக்ஷ்மணர்களைக்கண்டு ஸேவித்துக் கண்கள் குளிர்ந்து மனமகிழ்ந்தின்புறல்வேண்டுமென்று விரும்புகின்றேன்; ஆயினும், மூப்புற்றுத் திறமையற்ற இந்த சரீரத்துடன் நெடுங்காலம் வாழவும் விரும்புகின்றிலேன், ஆதலின், இந்த சரீரத்தை விட்டு விடவும் வானேற விரும்புகின்றேன்; ஆதலால், நீ இவ்விடத்திலேயே வாழுக; என்று முக்காலப்பொருள்களையும் உணர்ந்தவராதலின், மனமகிழ்ந்து மொழிந்து தேற்றி யருளினர்

கிஷ்கிந்தாகாண்டத்தில் அறுபத்திரண்டாவது சருக்கம் முற்றிற்று.



## அறுபத்துமூன்றாவது சருக்கம்.

வாநரர்கள் ஸம்பாதியிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தென்கடலின் வடகரை சேர்ந்து அதனை எங்ஙனந் தாண்டுவதெனச் சிந்தையுற்றது.



கேளீர் வாநரர்களே! அந்த நிசாகரமாமுனி இவ்வகையாகப் பற்பல இனிய மொழிகளை மொழிந்து என்னைத் தேற்றி விடைகொடுத்தனுப்பித் தாமும் தமமாசிரமத்தினுள்ளே சென்றருளினர். யானும் அந்தக் குகையினின்றும் புறப்பட்டு மெல்ல மெல்ல இமமலையின் சிகரத்திலேறி யுங்கள் வரவையே எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன்; இப்பொழுது அந்த நிசாகர மாமுனி யுரைசெய்து சென்றது எண்ணாயிரம வருஷங்களாகின்றன: அதுமுதல் அவருடைய வாக்கியத்தைக் கருத்திற்கொண்டு தேசகாலங்களை எதிர் பார்த்திருந்தேன்; அம்முனிவர் மஹாப்ரஸ்தானஞ்சென்று பேறு பெற்றனர். யான் அதுமுதல் பற்பலச் சிந்தைகொண்டு வருந்தி யுயிரை விடுவதில் துணிவுகொண்டிருந்தும் அம்முனியின் மொழியை நினைந்து இறந்திலேன்; எழுந்தெரிகின்ற தீபம் இருளை யழித்து விடுவதுபோல அம்முனி வாக்கியமே என்னுடைய துயரத்தையும் அழித்துக்கொண்டு வந்தது; இராவணனுடைய திறமை என்னுடைய புத்திரன் திறமையினும் அற்பமானதென்று யான் அறிந்திருக்கின்றேனாதலின், அப்போது

இராவணனைத் தகைந்து பிராட்டியைப் பாதுகாத்து மீட்டுக்கொண்டு வந்திலையென்று என் மகனையும் இகழ்ந்து முனிந்தேன்; அவன் அவ்வண்ணம் வந்து விட்டமையின், பிராட்டியை விட்டுப் பிரிந்த அந்த ஸ்ரீராமலக்ஷ்மணர்களும் பாதுகாக்கப்பட்டிலர்கள்; ஆதலின், என் மகன் என் பொருட்டு நன்மைசெய்தானாகியிலன், எனக்கும் தசரதசக்கரவர்த்திமீதுள்ள நேசம் அத்தன்மையது, என்றிவ்வண்ணம் மொழிந்துகொண்டிருக்கையில், அவ்வானரர்களுக்கெதிரிலேதானே அந்த ஸம்பாதிக்குச் சிறகுகளிரண்டும் முன்போலவே முளைத்து வளர்ந்தன; ஸம்பாதியும் தனக்கிவ்வண்ணம் செவ்விய இறகுகளுள்ள சிறந்த சிறகுகளினால் தன்னுடைய சரீரம் திகழ்வதைக்கண்டு மகிழ்ந்து வானரர்களையும் நோக்கிப் பாரீர்கள் வானரர்களே! எனது சிறகுகளிரண்டும் சூரியனொளியினால் எரிந்துவிட்ட போதிலும் மீளவும் முன்போலவே தோன்றி விளங்குகின்றன; யான் சிறகுகளெரிவதன்முன்னம் இருந்தவண்ணமாகவே சிறகுகளும், தோள்வலியும், வலிமையும், திறமையும், பௌருஷமும், குறையின்றி யுண்டாயின; ஆதலின், நீங்களும் நன்றாக முயற்சிசெய்க; பிராட்டியாரைக் கண்டு மகிழ்வீர்கள், அவ்விஷயத்தில் எனக்கு இவ்வண்ணம் சிறகுகள் தோன்றியதே நற்குறியாகின்றது; என்றிவ்வண்ணமாக ஸம்பாதி யங்கதன் முதலாகவுள்ள வானரர்களை நோக்கி யுரைசெய்து தனக்கு வானிடையிற் பறக்குந்திறமை யுண்டாகியதைப் பரிக்ஷை செய்துகொள்வதன்பொருட்டு மேலெழுந்து பறந்து சென்றுவிட்டது; அந்த வானரயூதத்தலைவர்களும் அந்த ஸம்பாதியின் வாக்கியத்தைக்கேட்டு பெருமகிழ்வுகொண்டு சிங்கம் போலக் கர்ஜனைசெய்து அபிஜித்தென்னும் நடுப்பகல்வேளையில் அங்கிருந்தெழுந்து வாயுவேகமனோவேகமுற்றவர்களாதலாலும், ஸீதாபிராட்டியின் செய்தி கேட்டுப் பௌருஷம் அதிகமானமையினாலும், எவ்விதத்திலும் பிராட்டியைத் தேடிக் காண்போமென்னுமுறுதிகொண்டு தென்றிசை நோக்கிச் சென்றனர்கள்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் அறுபத்து மூன்றாவது சருக்கம்

முற்றிற்று.

---

ஸம்பாதி வானரர்களை நோக்கிச் சீதாதேவியை இராவணன் கொண்டுபோகும் போது என் சிறகுகளெரிந்தற் றிறமையற்றிருந்தமையின், அவனுடன் போர்செய்திலேனென்று மொழிந்தது; பின்பு, தன் மகன் அவர்களைக்கண்டும் சீதாதேவியைப் பாதுகாவாமல் வந்ததற்குச் சினங்கொண்டிகழ்ந்தேனென்றும் மொழிந்தது; ஸ்ரீராமனிடத்தில் அவ்வளவு பக்ஷங்கொண்டிருந்தும் பின்பு சிறகுகள் முளைத்தபின்னர் தனக்கு பல பராக்கிரமங்கள் முன்போலவே தோன்றினவென்றுரைசெய்தும், அவர்களைமாத்திரம் பிராட்டியைத் தேடும்படி சொல்லித் தான் பறந்துவிட்டதாகக் கூறப்பட்டிருக்கின்றது; இப்போது இதுவும் அவர்களுடன் சேர்ந்து ஏன் தேட முயற்சிசெய்திலதெனின்; ஸம்பாதிக்கு அம்முனிவர் உரைசெய்யும்போது அவர் முக்காலப

## அறுபத்துநான்காவது சருக்கம்.

வானரர்களெல்லோரும் தென்கடலைக்கண்டு அதனைத் தாண்டுவதன் பொருட்டுத் தந்தமக்குள்ள திறமையைக் கூறுமாறு நிச்சயஞ் செய்துகொண்டது.

இவ்வண்ணமாக வானரர்களெல்லோரும் ஸம்பாதி யுரைசெய்த வாக்கியத்தைக்கேட்டு மகிழ்ந்து இராவணனுக்கிருப்பிடமாகிய இலங்காத்தீவில் பிராட்டியைத் தேடும்படி நிச்சயஞ்செய்துகொண்டு அங்கிருந்து புறப்பட்டு உலகமனைத்துக்கும் பிரதிபிம்பமோ என்று ஐயமுறுமாறு ஸகல வஸ்துகளும் நிறைந்து விளங்குகின்ற கடலின் வடகரைசேர்ந்து சேனைகளை யிறக்கித் தாமுமிருந்து பருத்து நீண்ட உருவங்கொண்டு கோரமாகவும், விகாரமாகவுமுள்ள பற்பல ஜலஜந்துக்கள் வாய்திறந்து கூவி விளையாடவும், பேரலை சிற்றலைகள் மோதவும், நடுவிலுறங்குகின்றதுபோலும், மற்றோரிடத்திலாடுகின்றதுபோலும், சில விடத்தில் மலைகள்போல மேலெழுந்தோங்கியும், பாதாளதலத்தில் வாழுந் தானவர்களுறைந்தும், பார்ப்போர்க்கச்சந்தருவதுமாகிய கடலைக்கண்டனர்கள். அவர்களுள் அற்பர்களாகிய சிலர் அச்சமுற்றனர்கள், சிலர் ஆகாசம்போல முடிவிடமின்றி வியன்றகன்றுளதே ? இதனை எவ்வண்ணங்கடந்து சென்று பிராட்டியைத் தேடுவோமென்று திகைத்தனர்கள். இவ்வகையாகக் கடலைக்கண்டு துயரங்கொண்ட வலீமுகங்களை யங்கதகுமாரன் தேற்றி மொழியலுற்றனன் கேளீர் அன்பர்களே !—

నవిషాదేమనఃకార్యం విషాదోదోషవత్తమః
విషాదోహన్తిపురుషం బాలంక్రుద్ధఇవోరగః.

நவிஷாதே மநஃ கார்யம் விஷாதோ தோஷவத்தமஃ
விஷாதோ ஹந்தி புருஷம் பாலம் க்ருத்த இவோரகஃ

துன்பத்தின்மீது மனனைச் செல்லவிடலாகாது; துன்பமென்பதே மிகவுந் தோஷமுடையது; சினங்கொண்ட ஸர்ப்பம் பாலகனைக் கொலை

---

பொருள்களையுமுணர்ந்தவராதலின், பிராட்டியைச் சிறியதிருவடியே தேடி வந்து பெருமானுக்குச் செய்தி யுரைசெய்வார், ஆதலின், நீ யவர்களுக்குச் செய்திமாத்திரம் உரைசெய்து நீ வேண்டுமிடத்திற்குச் செல்லென்றும் உரைசெய்திருப்பார்; அதனை இங்கு மொழிவது முக்கியமன்றென்று உரைசெய்திலனென்றும் ஊகித்தல் வேண்டும்; இல்லாவிட்டால் இராவணன் ஜடாயுவைக் கொலைசெய்துவிட்டதுபோல நம்மையும் கொலைசெய்வானென்று அச்சமுற்றுச் சென்றிலனென்றோதல்வேண்டும், இவ்விருவழியை விட்டு வேறு வழி யவ்விணுவுக்கு விடையாகாதென்றுணர்க.

செய்வதுபோலத் துன்பமே மனிதனைக் கொலைசெய்வது; பராக்கிரம காலத்திலும் துன்பமென்பதுளதாயின், அது அதனை யடக்கிவிடுகின்றது; இவ்வாறு உறசாகமடங்கித் துன்பமதிகமாயின், யாது பயனதான் கைக்கூடும்; என்றிவ்வகையாக அங்கதகுமாரனுரைசெய்து தேற்றி யன்றிரவு போக்கி மறுதினமுதயத்திலெழுந்து மீளவும் ஸபைகூட்டி யாலோசனை செயலுற்றனன். அவ்வலீமுகசேனையும அந்த அங்கதகுமாரனைசசூழ்ந்து தேவேந்திரனைச் சூழ்ந்த தேவசேனைபோல விளங்கியது; அந்தக் கபி சேனையை யந்த யுவராஜனும, சிறியதிருவடியும் தவிர மற்று யாவனதான வசப்படுத்தியாள வல்லவனுளன, ஆதலின், அங்கதகுமாரன் அச்சேனையை யெல்லாம பேசாமலும, கூவாமலும, நகையாமலும, பகையாமலும, சத்து செய்யாமலுமிருக்கச்செய்து வானரயூதபாகளையும உடனபடுத்தி யவாகளை நோக்கிக் கேளீர் நேசாகளே! இப்போழுதிங்குளளோரில யாவன இக்கட லைக்கடந்து மஹாராஜனை சததியசந்தவருந்தாவாகச்செய்து நம்மெல்லோரை யும மகிழ்விக்க வல்லவன; நூறுயோஜனதூரம இடையிலிலளபபுருமலை தாண்டுந் திறமையுடையோன யாவன், யாவன் மஹாராஜா கட்டளையை நிறைவேற்றி நமமெல்லோரையும தண்டனையினின்றுய மீடகவல்லவன; யாம யாவனுடைய திறமையினால இங்கிருந்து மகிழ்ந்து திருமபிச்சென்று வீடு சோந்து புததிரமித்திரகளததிராதிகளுடன சோந்தின்புறுவோம்; யாருடைய பேருதவியினால மீணடெயதிப பெருமானினையபெருமாள மஹாராஜா இவாகளைக்கணடு மகிழ்வோம, நம்மில இவ்வண்ணத் திறமை கொணடவன் யாவனோ? அவன இப்போழுதங்ஙனமே செய்து மஹாராஜா கட்டளையை நிறைவேற்றுவேனென்று அபயமளித்தருளககடவன. என்றவ வண்ணம வாலி மைந்தன மொழிந்த மொழியை எல்லோருங்கேட்டும ஒருவரும் மறுமொழி மொழியாமல சித்திரமபோல அசைவற்றிருந்தனா கள். தாராகுமாரனதுகணடு மீளவுமவரை நோக்கிக் கேளீர யூதபாகளே! நீவிரெல்லீரும பலமுடையோருள சிறந்தவாகள; அழிவற்ற திறமையுடை யீர்கள; புகழுற்ற நறகுலததிற பிறந்தீரகள; பலமுறை யாவராலும புகழந் துரைக்கப்பட்டீர்கள; உங்களுக்கு மூவுலகிலும எவ்விடத்திலும் எவாக் காயினும் செல்லுங்காலையில இதுவரையில் தடை நேர்ந்திலது; ஆதலின, ஏன் சிந்தையுறுகின்றீரகள, இதனைத் தாணடும் விஷயத்தில யார்க்கு எவ்வளவு திறமையுளதோ? அதனை யுண்மையாக முறையே யுரைசெயமின; என்று வினவினன்.

கிஷ்கிந்தாகாண்டத்தில அறுபத்து நான்காவது சருக்கம

முற்றிற்று.

---

# அறுபத்தைந்தாவது சருக்கம்.

அங்கதன் முதலிய வானரர்களெல்லோரும் தந்தம் திறமையைக்கூறி யந்தக்
காரியத்தை முடிப்பவர் யாவருளரென்ச சிந்தையுறுகையில்,
ஜாம்பவான் சிறியதிருவடியை யேவ முயன்றது.

அநந்தரம் அங்கதன் வாக்கியத்தை வானரர்களெல்லோரும் கேட்டுத்
தத்தந் திறமையை முறையே கூறலுற்றனர். அவர்களுள் கஜனென்பவன்
யான் பத்துயோஜனந் தாண்டுவேனெனவும், கவாக்ஷன் இருபது யோஜனந்
தாண்டுவேனெனவும், கவயன் முப்பது யோஜனந் தாண்டுவேனெனவும்,
சரபன் நாற்பது யோஜனந் தாண்டுவேனெனவும், கந்தமாதனன் ஐம்பது
யோஜனந் தாண்டுவேனெனவும், மைந்தன் அறுபதுயோஜனந் தாண்டுவே
னெனவும், துவிவிதன் எழுபதுயோஜனந் தாண்டுவேனெனவும், ஸுஷே
ணன் எண்பதுயோஜனந் தாண்டுவேனெனவும் முறையே மொழிந்தனர்கள்
அப்போழுது ஜாம்பவான் அதுகேட்டு அவர்களை நோக்கிக் கேளீர் யூதபா
கர்களே! யான் முன்னம் மூப்பின்றி இளமையோடிருக்கையிலே எனக்கும்
மிகவும் தாண்டுந் திறமையும், தோள்வலியுமிருந்தன, இப்பொழுது வயது
சென்று மிகவும் மூப்புடையேனாயினேன், ஆதலின், மிகத் திறமைகொண்
டிலேன்; ஆயினும், இக்கருமத்தில் உபேக்ஷைசெய்வது தகுதியற்றது;
இவ்விஷயத்தில் பெருமாள் மஹாராஜர் இருவரும் மிகவும் அன்புகூர்ந்து
ஆவல்கொண்டு நம்பி நம்மை யெதிர்பார்த்திருக்கின்றாரல்லரோ? ஆதலின்,
எனக்கிப்போதுள்ள திறமையை யறிவிக்கின்றேன்; யானிப்பொழுது
தொண்ணூறு யோஜனந் தாண்டுவேனென்பதில் சந்தேஹமில்லை; என்
றுரைசெய்து மீளவும் அவர்களை நோக்கி, வீரர்களே! தாண்டுவதில் எனது
திறமை இவ்வளவேயென் றெண்ணற்க, மஹாபலிசக்கரவர்த்தி யாகத்தில்
ஸ்ரீமஹாவிஷ்ணு திரிவிக்கிரமாவதாரஞ்செய்தருளுகையில், அவரைப்
பிரதக்ஷிணஞ்செய்து மகிழ்ந்தேன்; இப்பொழுது மூப்புடையேனாயின
மையின், தாண்டுந்திறமை குறைவுற்றமையின், இப்போது எனது திறமை
இவ்வளவேயென்று எண்ணுகின்றேன், யானிவ்வளவு தூரஞ் செல்வதி
னாலும் நமது காரியம் முடிவுபெறுகின்றிலது, ஆதலின், யாது செய்வே
னென மொழிந்தனர். அப்பொழுது மஹாதீரனான யுவராஜன் ஜாம்பவானை
நோக்கிக் கேளீர் ரிக்ஷபதியே! யான் இந்த நூறுயோஜனதூரமுஞ்சென்று
அக்கரை சேர்வேனென்பதில் ஐயமில்லை; ஆயினும், மீண்டிங்கெய்துவேனோ
வெய்தேனோவென்று ஐயமுறுகின்றேன்; எய்துவேனென்று மனம் உறுதி
கொள்ளுகின்றிலது; என்றுரைத்தனன் ஜாம்பவானதுகேட்டு அவனை
நோக்கி, இளவரசே! நீர் இக்காரியத்தை முடிக்குந் திறமையுடையீரென்
பதில் ஐயமில்லை, நூறென்பதென்ன கணக்கு ஆயிரம், லக்ஷம் யோஜனையாயி

னும் நீர் தாண்டுவதற்கும் மீண்டுவருவதற்குந் திறமையுடையீரோ? ஆயினும், யாவரையும் கட்டளைசெய்தனுப்பவல்ல யஜமானன் எங்கும அனுப்பத்தக்கவனுகான்; நீர் இவவானரர்களனைவர்க்கும் யஜமானன் இவரெல்லோரும் உமக்கு அடிமை பூண்டவர்கள; அன்றியிலே, பிரபுவென்பவன் படர்களுக்கு மனையாளை நிகர்த்தவன்; இவவண்ணம் முனனேர் மொழிந்திருக்கின்றனர்கள். ஆதலின், பாரியையைபபோல நீா எங்களால் பாதுகாக்கத்தககவா; அனறியிலே, இக்காரியமென்னுங் கனிக்கு நீர் வேரபோன்றவர்; ஆதலின், கனி பழுப்பதன்பொருட்டு வேரோ பாதுகாக்கத்தக்கது; இதுதான் காரியவாதிகளின் நீதி; வோ அழியாதிருந்தாலன்றோ? தளிர், பூ, காய், கனிகள் உண்டாகும்; ஆதலின், இக்காரியததிறகு வேர்போலக் காரணமாகிய நீா பாதுகாக்கத்தக்கவா; அன்றியிலே, எங்களுக்கெலலாம் நீர் இளவரசனும், இராஜபுத்திரனுமாகினறீா, ஆதலின், உம்மைப்பறறியே யாங்கள காரியங்களை யெல்லாம் நிறைவேறறவேண்டும், ஆதலின், நீர் செலவது தகுதியற்றது; என்று மொழிந்தனா. அங்கதகுமாரன அது கேடடு மீளவும் அவரை நோககிக சேளீா ஜாம்பவானே! யான இபபோழுது உமது வாக்கியத்தின்படி செல்லேனாயின், வேறே செலல வல்லவன யாவனுமிலனே? ஒருவருமு செல்லாமல காரியம கெடுமாயின், மீளவும் நாமெலலோருமு முன்போலவே பராயோபவேசம செயதிறக்கவேண்டு மல்லது வேறு கதி யாதுமாது, மஹாராஜா கடடளையைச செயது முடிக்காமல் அங்கே செலவோமாயின, உயிாவாழ்ந்தெவவண்ணமின்புறுவோம்; மஹாராஜா அருளசெயவதறகும, வெகுண்டு தணடனை செயவதறகுந் திறமை யுறறவரல்லரோ? ஆதலின், நீவா கட்டளையைச் செய்யாமல் அங்குச செலவோமாயின், உடனே யிறபபோமே? ஆதலின். நீா யாவுமுணாந்தவராதலின, இககாரியததிறகுத் தீமை யெவவண்ணம் நேராமல் நிறைவேறுமோ? அவ்வண்ணம் நனறுக ஆலோசனை செய்து மொழிக, என்று மொழிந்தனா. ஜாம்பவானும அதுகேட்டாராயநது மீளவும அங்கதனை நோக்கிக் கேளீர் யுவராஜனே! நாம மேறகொண்ட இககாரியததிற்கு ஒரு குறையும் நேர்வதில்லை; யாவன இக்காரியத்தைக் குறையின்றிச செய்து வருவானே? அவனைக்கண்டறிந்து ஏவுகின்றேன் பாரீர், என்று மொழிந்து பின்பு, வானரர்களெல்லோர்க்கும் சிறநதவரும், பல பராக்கிரமமுடையவரும், நறபுகழும், நன்மதியும, நட்புமுடையவருமாகிய அனுமான் ஓரிடத்தில் தனியே வீறறிருக்ககண்டு அவர் மகிழ்ந்தெழுந்து செல்லுமாறு ஏவுதல் செய்ய முயன்றனா.

கிஷ்கிந்தாகாண்டததில் அறுபத்தைந்தாவது சருக்கம்

முறறிறறு.



## அறுபத்தாறாவது சருக்கம்.

ஜாம்பவான் சிறியதிருவடியின் மகிமையைப் புகழ்ந்து அவனைச் சென்று காரியத்தை முடிக்குமாறு உடன்படுத்தியது

அநேக நூறாயிரம் வானரசேனைகள் அலைகடலைக்கண்டு அச்சங்கொண்டு வருந்துவதை ஜாம்பவான் கண்டு சிறியதிருவடியைநோக்கி, வாரீர் மாருதி! நீர் மஹாவீரமுடையோரும், பற்பல நூல்களையுங் கற்றவரும், தீரமுடையோருமாகியும் ஏகாந்தமாக வீற்றிருப்பதேன், யாங்களிவ்வண்ணமாலோசனைகொண்டிருக்கையிலும் ஏன் மறுமொழி மொழிகின்றிலீர்? நீர் பராக்கிரமத்திலும், தேஜஸ்விலும், தீரத்திலும், மஹாராஜனையும், பெருமானையும், இளையபெருமானையும் நிகர்த்திருக்கின்றீர்; அரிஷ்டநேமியென்னும் காசியபருக்கு விநதையிடத்திலவதரித்த கருத்மானென்று புகழ்கொண்ட பெரியதிருவடி மகாபலமுடையவர், பறவைகளெல்லாவற்றிற்கும் இறை; அவர் அடிக்கடி பன்னகர்களைக் கொலைசெய்வதன்பொருட்டுக் கருங்கடலிடையில் வேகமாகப் பறந்து வருவதை யான் கண்ணுற்றிருக்கின்றேன். அவருக்குச் சிறகிலுள்ள பலம் உமக்குப் புஜத்திலிருக்கின்றது; உமது விக்கிரமமும், வேகமும், பலமும், புத்தியும், தேஜஸும், வல்லமையும், அவருக்குக் குறைந்தனவல்ல; இவ்வண்ணம் எல்லாக்குணங்களும் சிறந்திருக்கையில், ஏன் மௌனமுற்றிருக்கின்றீர், உமது தன்மையை நீர் அறிகின்றிலீரோ? புஞ்சிகஸ்தலையென்னும் தெய்வப்பொதுமகள் சாபத்தினால் அஞ்சனையென்னும் வானரப்பெண்ணாகப் பிறந்து பெரும்புகழ்கொண்டு கேஸரியென்னும் வானரசிகாமணிக்குப் பத்தினியாக விருந்தனள், அவள் மூவுலகிலும் மிக்க வழகுடையவள், சாபவசத்தாலேயே யிவ்வண்ணம் வானரியாகிக் குஞ்சரனென்னும் வானரயூதபனுக்குப் புத்திரியாகிக் கேஸரிக்கு மணமாலை சூட்டினள். அவள் ஒருநாள் மானிடப்பெண்ணுருவங்கொண்டு மிகவும் அழகுடையவளாகிப் பற்பல கலனையுமணிந்து வெண்பட்டுடுத்து மலையினுச்சியிலுலாவுகையில், அவளை வாயுபகவான் கண்டு மயல்கொண்டு வெண்பட்டையசைத்துத் தவிழ்த்துவிட்டு திரண்டுருண்ட விரண்டு துடைகளையும், பருத்துயர்ந்த கொங்கைகளையும், மலர்ந்த முகத்தையும், பருத்தகன்ற நிதம்பங்களையும், நுண்ணிய பிடியுள்ளடங்குந் துடியிடையினையும், ஆழ்ந்த நாபியையும், மற்றுமுள்ள குற்றமற்ற அவயவங்கள் யாவற்றையும் கண்டு காமவேட்கை மிகுந்து அவளை இருகைகளாலுமெடுத்தணைத்துத் தழுவிக்கொண்டனன். உடனே யந்த அஞ்சனாதேவி கண்டு அச்சங்கொண்டு யாரடா நீ என்னுடைய கற்பினை யழிக்க விரும்புகின்றவன்; என்று சினந்தோன்ற வினவினள். வாயுபகவான் அதுகேட்டு அவளை நோக்கிக் கேளாய் பெண்மணியே! யான் உனது கற்பினை யழிக்க வந்திலேன்; மனதினாலுன்மீது மயல்கொண்டு மயல்

நீருமாறு கைகளினால் தழுவிக்கொண்டேனல்லது, மற்று யாது தீமையும் செய்யேன்; இதனாலுனது கற்பு அழியாது; என்னருளினாலுனக்கொரு நற்புதல்வன் பிறக்கப்போகின்றான். அவன் மிகவும் திறமையும், வலிமையும், மதியும், பலமும் பராக்கிரமமும், உடையனாகித்தாண்டுவதிலும், மென மேல் செல்வதிலும் பாய்வதிலும் எனக்கு நிகராகுவான்; என்றுமொழிந்து மகிழ்வித்தனன், அஞ்சனையதுகேட்டுப்பெருமகிழ்வுகொண்டு உடனே கருவுடையளாகிக் குகையில் உம்மைப்பெற்றனள்; உடனே நீர் எழுந்து பாலஸூரியன்? அப்பொழுதே உதயமாகக்கண்டு செவ்வியதோர் பெரும் கனியென்றெண்ணி யதனைப்பறித்துப் புசிப்பதன்பொருட்டு வானமீது அநேகமாயிரம் யோஜனதூரம்சென்று! அந்தக்கிரவனுடைய வெப்பத்திலெரிக்கப்படினும், சிறிதும் துன்புறாமல் மேன்மேலும், செல்வதை நவக்கிரஹங்களும் கண்டச்சங்கொண்டோடுகையில், தேவேந்திரனது கண்டோடிவந்து, சதகோடியினாலும்மையடித்தனன்; உடனே நீர் அந்தமலையினுனியில் பக்கமாக விழுந்தமையின் உமது கபோலம் கல்லுறைப்பட்டு முறிந்தும், அழியாமலிருந்ததனால், உமக்கு அனுமான்னெனும், திருநாமமுண்டாயிற்று, இவ்வண்ணம் நீர்தம்போளியினாலும், கலனினாலும், கபோலங்களில் அடிபட்டுவிழுந்ததைவாயுபகவான்கண்டு சினங்கொண்டு, மூவுலகினிலெங்கும் வீசாமல் நலமேலோர்களுடைய வுயிர்களையும் அடக்கி, யடங்கியிருந்தனன், அப்போழுதெல்லோரும் மூச்சின்றித்தவிக்கையில் இந்திரன்முதலியதேவர்களெல்லோரும் அச்சங்கொண்டோடிவந்து வாயு பகவானைக்கண்டு, நன்மொழிமொழிந்து சினத்தையாற்றி மகிழ்விக்கையில் அப்பொழுது நான்முகதேவன் உமக்கு ஆயுதங்களொன்றினாலும் அழிவில்லையென்று வரமளித்தனன், தேவேந்திரனும் நீர்வச்சிராயுதத்தாலடிபட்டும் அழியாதிருந்தது கண்டு மகிழ்ந்து, நீரெப்பொழுது மரணத்தைக் கோருகின்றீரோ! அப்பொழுதுதான் இறக்கக்கடவீரென்று வரமளித்தனன். ஆதலின் நீர் அவ்வண்ணம் கேசரிக்கு க்ஷேத்திஜனும, வாயுபகவானுக்கு, ஔரசனும் அஞ்சனானந்தனனும் தேஜஸ்வியினாலும், தாண்டுவதினாலும், வாயுதேவனையே நிகர்த்தவரும் ஆயுதாதிகளால்தீங்கும், இறப்பும், அற்றவரும் ஆகிச்சிறப்புற்றிருக்கின்றீர்; யாங்களிப்போழுது திறமையற்றிருக்கின்றோம்; ஆதலால், நீரொருவரே யிப்பொழுதெங்களைப்பாதுகாத்தளிக்கக்கடவீர் நீர்திறமையும், கேள்வியும், வலிமையும்கொண்டு பெரிய திருவடிபோலவே விளங்குகின்றீரல்லீரோ; யானமுன்னே மூப்புறாதிருக்கையில் பெருமாள் த்ரிவிக்கிரமாவதாரஞ்செய்தருளுகையில் அவரை இருபத்தோருதரம் வலஞ்செய்துபணிந்தேன்; தேவர்கள் திருப்பாற்கடலைக்கடைகையில் அப்போழுது அமிழ்ந்தோற்றுவதற்குவேண்டியமூலிகைகளைப்பற்பலவிடங்களிலிருந்தும் விரைவாகக்கொணர்ந்தளித்தேன; அத்தன்மையனாகியும் நானிப்பொழுது மூப்புற்றுத்திறமைகுன்றி யொடுங்கி,

யிருக்கின்றேன் ; இப்போழ்து நீர் ஒருவரே எம்மெல்லோரினும் சிறப்புடையீர்; ஆதலின் நீர் இப்பொழுது பெருகிவளர்ந்து, கடலைத்தாண்டமுயற்சிகொள்க ; உமது திறமையைக்கண்ணுறக்கண்டுமகிழ இவ்வாநரசேனைகளெல்லாம் விரும்புகின்றன; ஆதலின யூதபாதலைவரே எழுந்திருக்க, கடலைத்தாண்டுக ; உமதுகதி, யெல்லாபூதங்களையும் விடச்சிறந்ததன்றோ ; இவ்வாநரர்களெல்லோரும துணைபுறநிருக்கின்றார்களே ; இத்தருணத்திலும நீர் உபேக்ஷையேன் செய்கின்றீர் பெருமாள் வளர்ந்து மூவுலகங்களையும மூன்றடிகளாக அளந்ததுபோல நீரும்வளர்ந்து இக்கடலையோரடியாக அளக்கக்கடவீர் என்றிவ்வகையாக ஜாம்பவான்புகழ்ந்துரைசெய்தனர் ; சிறிய திருவடியதுகேட்டு மகிழ்வுகொண்டு அவ்வண்ணமேசெய்வேனென்று உறுதிகூறி யவ்வாநரர்களெல்லோரும மகிழுமாறு பேருருவங்கொண்டெழுந்தருளினர்.

கிஷ்கிந்தாகண்டத்தில் அறுபத்தாறுவது சருக்கம்.

முற்றிற்று

---

## அறுபத்தேழாவது சருக்கம்

சிறியதிருவடி யலைகடலைததாண்டுவதன் பொருட்டு மகேந்திர மலைமேலேறினது வாநரங்களை மகிழ்வித்தது மகிழ்ந்தது.

---

இவ்வண்ணம, சிறியதிருவடி நூறுயோஜநதூரங் கடலைததாண்ட முயற்சி கொண்டதை வாநரர்களெல்லோருங்கண்டு பெருமகிழ்வுகொண்டு கிலு ! கிலு! என்று கூவியும, சிறியதிருவடியைப்புகழ்ந்தும வியப்புகொண்டு பெருமாள் உலகமளக்குங்கால், ப்ரஜைகளெல்லோரும கண்ணுற்றாற்போலக் கண்ணுற்றிருந்தனர். இவ்வண்ணம புகழப்பட்ட சிறியதிருவடியும, மிகவளர்ந்துலாங்கூலத்தை யுதறியடித்துமகிழ்வினால் பல மதிகமாகி மிகவொளிகொண்டு பேருருவமபூண்டு மலைக்குகையிலசிறியசிங்கம வளர்வதுபோல வளர்ந்து திகழ்ந்தனர் ; அப்போதவருடைய முகம்புழுக்கக் காய்ச்சின மடக்குபோலவும; புகையின்றி யெழுந்தெரிகின்ற, அக்கினி போலவும், விளங்கிற்று அவர் அப்பொழுது வாநரர்களினடுவினின்று, எழுந்து பெரியோர்களைப்பணிந்தவரை நோக்கிமொழியலுற்றனர். கேளீர்! அன்புள்ளதோழர்களே ! என்தந்தையாகிய வாயுபகவான், வானிடையிலெழுந்து, வீசுவாராகில மலைச் சிகரங்களையும் வேகத்தினால முறித்துத் தள்ளவல்லவர் ; அவருடைய வேகம், வைநதேயாதிகளுக்குமில்லது. யானவருக்குமௌரஸகுமாரனாகையால் வேகத்தில எனக்கு நிகராகியவன் ஒருவனுமிலன். யானிங்கிருந்தே மிகவுயர்ந்துள்ளமேருகிரியையும் இடையிலெங்கு மூட்காரமல் சென்றடைவேன். இவ்வண்ணம் ஒருதரமேயன்று பலமுறை செலவினும வருத்தமுறேன். அலைகடலையும , கைகளினால்

கலக்கி', யதின்வேகத்தினால் ஆறு, குளங், கடல், மலைகளுடன் கூடிய பார முழுமையும் சூழத்திரிந்திடவும் வல்லேன். இக்கடலும்; என்னுடையதுடை யின வேகத்தால் மேலெழுந்து பெருமுதலைகளும ? புரண்டு கரைகடந்து, செல்லும பெரியதிருவடி வானிடையில், முன்னெழுந்துபறந்து, சென்றி னும் ; யான்பின்சென்று பலமுறையிலும அவரைப்பிடிக்கவல்லேன்? உதய கிரியினின்றும் கதிரவனுடன, புறப்பட்டு அவன் அததகிரியையடையுதன, முன்னமேயான அத்தகிரிசேர்ந்து பூமியைத்தொடாமலேமீளவும உதயகிரி வந்துசேர்வேன் இவவண்ணம வானிடையில், செல்லுகின்ற உயிர்களெல் லாவறறையும யான்வேகததினால மீறிச்செல்வேன் ; கடலையும், சொஷிக கும்படிசசெயவேன பூமியையும பிளபபேன , மலைகளையும் பொடிசெய் வேன்? தாண்டுகையில் ஊருவின வேகத்தினால், கடலையும்மேலெழசசெய வேன், யானிப்போழுது ஆகாயததிலெழுமபிச் செல்லுகையில், பறபல; மரஞ்செடிகொடிகளின மலாகள, பின்றொடாந்துவரும ; ஆகலின் எனது வழிவானிடையில் சுவாதிநக்ஷததிரத்தின் வழிபோல விளங்கும். யான் ஆகாயததில்பாயந்து, பறந்தும் உயாந்தும இறங்கியுமசெலலுகையில், எல லாப்பூதாகளுமஎனனைககண்டுமகிழவாாகள, எனனுடைய மிகப்பெரியவு ருவத்தையுங்கண்டு மாமுகிலெனவும எண்ணுவாாகள். அவவணணமயாஞ செலவேனாகில் மேகங்களையுஞ்சிதறவடிபபேன் மலைகளையும்அசைபபேண கடலையும கலக்குறசசெய்வேன்; தாணடும்விஷயத்திலஎனககுளளதிறமை வாயுபகவான் வைநதேயா இவவிருவாக்குமேயனறிமற்றெவருக்குமில்லை. ஆதலின் யான்செலவேனாகிலெனனைத்தொடர்நது வரத்தக்கவ னொரு வனுமிலன்; மேகத்தினின்றும மின்னறகொடிதோன்றி மினனுவதுபோல மின்னி ஒருநொடிக்குளளாகவே நெடுந்தூரஞ்சென்று அக்கரைசேர்வேன். எனது உருவமும், உலகமளந்த மகாவிஷ்ணுவின உருவமபோல வளரும; என்னுடையமனம் மிகவும தெளிவுற்றிருக்கின்றமையினாலும் , செயலும் தடையின்றிவளர்கையாலும் பிராட்டியையான்கண்டு களித்தே மீண்டெய் துவேனென்று நிச்சயமுறுகினறேன். ஆதலின் நீவிரெல்லீரும் மகிழக, துஞ்சறக, வேகததில் வாயுபகவானுக்கும, பலததில் பெரியதிருவடிக் கும் நிகராகுவேன். பதினாயிரம்யோஜனதூரம, தடையின்றிச செல்வே னெனவுறுதி செயவேன். சதகோடியைக்கையிலேந்திய தேவேந்திரனாயி னும் நாலுமுகங்களையுடைய விதாதாவாயினும் அமிழததைக் கையில் வைத்துக்கொண்டு பாதுகாக்கினும் அவாகளையும் வென்று, அவ்வமிழ்த த்தைப்பறித்துக் கொணடுவருவேன் ; அநேகமாயிரம், அரககாகளுடன் கூடிய இலங்காததீவையே! வேருடன்பறித்தெடுத்துக்கிகையிலேந்திவரு வேன். என்றிவ்வாறுயாகச சிறியதிருவடி வாநரர்களை நோக்கிவிறுகூறினா

இவ்வண்ணங்கர்ஜனைசெய்து மொழிந்த சிறியதிருவடியின்மொழியை யவ்வானரர்களெல்லோரும்கேட்டு மிகவும் மகிழ்ந்து பார்த்துக்கொண்டிருக்கையில், ஜாம்பவான மகிழ்வுகொண்டு சிறியதிருவடியை நோக்கிக் கேளீர அநுமானே! நீர் வீரங்கொண்டு இவ்வண்ணம மொழிந்ததினால் இவ்வானரர்களெல்லோருடையவும் சோககடல் வற்றி யாநந்தகடல் பொங்குகின்றது; இவ்வாநரர்கள உமக்கு நலமவினையுமாறுகூடி வாழ்த்துகின்றனர்கள். ஆதலின், நமதுகாரியம் தடையின்றிக்கைக்கூடும; இவர்களின் ஆசீர்வாதத்தினாலும், முனிவர்களுடையவும் ஆசிரியர்களுடையவும அருளினாலும், காரியம ஜயம் பெறுமாறு நீரமேலெழுந்து தாண்டுக; நீர் மீண்டு வருமளவும, யாங்களெல்லோரும் ஒரு காலில் நின்றெதிர் பார்த்திருப்போம ; இனி எங்களெல்லோர்களினுடைய வுயிர்களும உம்முடைய அதீனமாயினவல்லவோ என்று வேண்டினர். சிறியதிருவடி யதுகேட்டு மகிழ்ந்து அவர்களை நோக்கி, யூதபதிகளே ! யானிங்கிருந்தே மேலெழுவேனாயின, என்னுடையவேகத்தை இந்தப்பூமிபொறாமலழுந்திவிடும; இம்மகேந்திரமலையின் சிகரங்கள திடங்களாகவும், விஸ்தாரமாகவுமிருக்கின்றன ; ஆதலின, அச்சிகரங்களின்மேலேறித் தாண்டுமாறு வேகங்கொள்ளுகிறேன், இச்சிகரங்கள பற்பல மரங்களடர்ந்தும, பலவகைத் தாதுக்கள நிறைந்தும இருக்கின்றமையின், யான நூறுயோஜனதூரஞ்செல்லுமாறு வேகமுறுங்கையில, என்னுடைய பாதங்களின வேகத்தைப பொறுக்கும என்று மொழிந்து அவர்களை யுடன்படுத்தி யந்த மகேந்திரமலையின சிகரத்தின்மேலேறினர் ; அம்மலை பலவகைப்பட்ட மரங்களடர்ந்தும், மான்களடர்ந்து புல்லுள்ள பூமியுடையதாகியும், பற்பல மலர்கள மலர்ந்த கொடிகள் நெருங்கியும, எல்லாமரங்களும எப்பொழுதும தளிர்த்தும, பூத்தும, காய்த்தும, கனிந்தும், தழைந்தும, சிங்கம யானை புலி கரடிகளுலாவியும, பற்பல பறவைகளொலித்தும, மலையருவிகள பெருகியும, சிகரங்களினால மிகவுமுயர்ந்தும இருக்கினும மகேந்திரனுக்கு நிகரான பராக்கிரமமுள்ள இந்தச் சிறியதிருவடியின் திருவடிகளினால் பீடிக்கப்பட்டதாகி யழுந்தினமையின், சிங்கத்தினாலடிக்கப்பட்ட மதயானைபோல வொலிசெய்தது ; மலையருவிகளை மிகவும பெருக்கிற்று; சிகரங்கள் முறிந்து வீழ்ந்தன; ம[illegible]ங்கள சாயந்தன; மான்களும், யானைகளும், அச்சங்கொண்டலைந்தன; [illegible] ...ாபிரியாமல் ...மதுபானஞ்செய்தினபுறுகின்ற கந்தர்வர்களும், வித்தியாத[illegible] ...ரும, மற்று ...முள்ள தேவகணங்களும், பறவைகளும், அச்சமுற்று [illegible] ...ந்தனர்கள்; ...மலைநாகங்களும் அச்சமுற்றடங்கின்; சிகரங்களைசங் [illegible] ...ப்பொழுது

புற்றினின்றும் பாதி வெளியில்வந்த பாம்புகள் அப்படியே யமுங்கிவிட்டமையின், அலைகளினல் அம்மலை பதாகைகளையுடையதுபோலவும், முனிவர்களும் அச்சங்கொண்டு தனவிட்டோடினமையின் பெருங்காட்டில் துணைவிட்டுப்பிரிந்த வழிநடப்பவன் போலவும் விளங்கிற்று; அந்த சிறியதிருவடியும இவ்வகையாக அமமகேந்திரமலையினமேலேறி இயல்பாகவே வேகமுடையராதலின, வேகஞ்செய்வதிலூக்கமுற்றும; வாநரர்களுள் மிகவீரமுடையராதலின், பகைவாகளைககொலைசெய்ய வல்லவரும், சிறநத மகிமையுடையராதலின், நன்மனமுடையவருமாகியும், மனத்தைத தன்வசமாககி யசசமென்பதை யகற்றி யிலங்கையை மனதினல் நினைநது அங்குசசென்று செயற்குரியகாரியங்களையெலலாமசெயதுமுடிததுவருவேனென்று உறுதிகொண்டு தாமும மகிழநது தமமுடன வநத வாநரர்களெலலோரையும் மகிழவித்தனர்.

கிஷ்கிநதாகாண்டத்தில அறுபத்தேழாவது சருககம் முறறிறறு.

## கிஷ்கிந்தாகாண்டமும்

முற்றுப்பெற்றது.



# பீடிகை.

ஸ்ரீமத் வால்மீகிராமாயணம் ஏழுகாண்டங்களுள் ஸ்ரீமத் ஸுந்தர காண்டம் மிகச் சிறந்ததும், நாடோறும் யாவராலும் பாராயணஞ்செய்யப் பட்டதும், அவரவர்கள் கோரிக்கையின்படி அறம்பொருளின்பம் வீடு களைத் தடையின்றித் தருவதும் ஆகின்றதென்பது பிரபஞ்சஸாரம், உமா ஸம்ஹிதை முதலிய முதனூல்களில் நன்றாகக் கூறப்பட்டிருக்கின்றது ; பதபொருளை யுணராமல் பாராயணஞ்செய்வது அவ்வளவு சிறந்ததன்று, என்றும் முனிவர்களால் அருளிச்செய்யப்பட்டுளது, ஆதலால், இந்தக் காண்டத்தைமாத்திரம் தெலுங்கு லிபியில் சலோகமும், தமிழெழுத்தில் அந்வயவரிசையாக பதங்களும், பொழிப்புரைபோல் கதையுமாகச்செய் வது யாவர்க்கும் இனியதாகுமென்று எண்ணி இவ்வண்ணமே செய்யத் தொடங்கலாயிற்று

இதையறிந்து பல கையொப்பக்காரர்களும் இவ்வாறே செய்கவென்று கேட்டுக்கொண்டிருக்கின்றனர்கள் ; ஆதலின், இது லோகோபகார மென்று எண்ணி கையொப்பக்காரர்களெல்லோரும் மகிழ்வுறுவார்க ளென்று நம்புகின்றனன்.

இதில் கதை யிசைந்து தொடர்ச்சியாய் வருவதற்குப் பலவிடங்களில் விசேஷணங்களைப் பெயரெச்சமாகவும், வினையெச்சமாகவும், வினைமுற்று க்களை வினையெச்சமாகவும், சிலவிடங்களில் கர்மணி ப்ரயோகத்தைக் கர் த்ரிப்ரயோகமாகவும் மாற்றியெழுதப்படும். பதங்களிலும், கதைகளிலும், ஒவ்வொருபதங்களுக்கும், அவ்வவற்றின் பொருள்களுக்கும், கடையிலே ஒவ்வொரு ஷ்டார (* என்னுங்குறி) போடப்படும்

ஒவ்வொரு சலோகங்களின் கடையிலும், அவற்றின் பொருள்களின் கடையிலும் முறையே கணக்குபோடப்படும். ஆதலின், இப்பதந்திறந்து பொருளொன்று எளிதாக அறிந்துகொள்ளத் தடையில்லை, சிலவிடத் தில் கருத்துப்பொருளையும், பதபொருளாகவே சேர்த்தெழுதப்படும். நவீனத அர்த்தங்களுக்கு இருபுறமும் ( ) இக்குறி போடப்படும் ஆதலின்,இப்பீடிகையிலெழுதப்பட்ட சங்கதிகளை யாவரும் ஞாபகத்தில் வைத்துப் பாராயணஞ் செய்யவேண்டும்.

ஹரிஓம்.

ஸ்ரீஸீதாலக்ஷ்மண பரதசத்ருக்ந ஹநுமத்ஸமேதாய

ஸ்ரீமதேரகுநந்தந பரப்ரஹ்மணே நம:.

# சுந்தரகாண்டம்.

ஸ்ரீமத்ராமாயணம் பாராயணஞ்செய்யுங்காலையில், முதலில் தம் தம் ஆசார்யர் முதல் பரமாசாரியனான ஸ்ரீமந்நாராயணன் வரையில் உள்ள தனியன்களை முறையே அநுசந்தித்த பின்பு, இந்த அடியில்வரும் தனியன்களையும் அநுஸந்தித்த பின்பு, பாராயணஞ் செய்ய வேண்டும்.

## ஸ்ரீவால்மீகிபகவான் தனியன்.

కూజన్తం రామరామేతి మధురమ్మధురాక్షరమ్
ఆరుహ్యకవితాశాఖాం వన్దేవాల్మీకికోకిలమ్

கூஜந்தம்ராமராமேதி மதுரம்மதுராக்ஷரம்
ஆருஹ்யகவிதாசாகாம் வந்தேவால்மீகிகோகிலம்.

## சிறியதிருவடி தனியன்.

గోష్పదీకృతవారాశిం మశకీకృతరాక్షసమ్
రామాయణమహామాలా రత్నంవన్దేనిలాత్మజమ్

கோஷ்பதீக்ருதவாராசிம் மசகீக்ருதராக்ஷஸம்
ராமாயணமஹாமாலா ரத்நம்வந்தேநிலாத்மஜம்.

## ஸ்ரீமத்ராமாயணத் தனியன்

వాల్మీకిగిరిసమ్భూతా రామసాగరగామినీ
పునాతుభువనంపుణ్యా రామాయణమహానదీ

வால்மீகிகிரிஸம்பூதா ராமஸாகரகாமிநீ
புநாதுபுவநம்புண்யா ராமாயணமஹாநதீ.

# வால்மீகிராமாயணம்

## நூற்சிறப்பு.

వేదవేద్యే పరే పుంసి జాతే దశరథాత్మజే
వేదః ప్రాచేతసాదాసీ త్సాక్షాద్రామాయణాత్మనా.

*வேதவேதயேபரேபுமஸி ஜாதேதசரதாதமஜே*
*வேத:பராசேதஸாதாஸீ தஸாக்ஷாதராமாயணாதமநா.*

## நூலின்பொருள்.

తదుపగతసమాససంధియోగం సమమధురోపనతార్థవాక్యబద్ధం
రఘువరచరితం మునిప్రణీతం దశశిరసశ్చ వధం నిశామయధ్వం

*ததுபகதஸமாஸஸநதியோகம ஸமமதுரோபநதாரதவாகயபநதம*
*ரகுவரசரிதம முனிபரணீதம தசசிரஸசசவதம நிசாமயதவம.*

## தியானம

వైదేహీసహితం సురద్రుమతలే హైమే మహామండపే
మధ్యే పుష్పకమాసనే మణిమయే వీరాసనే సుస్థితమ్
అగ్రే వాచయతి ప్రభంజనసుతే తత్త్వం మునిభ్యః పరం
వ్యాఖ్యాంతం భరతాదిభిః పరివృతం రామం భజే శ్యామళం.

*வைதேஹீஸஹிதமஸுரதருமதலே ஹைமேமஹாமணடபே*
*மதயேபுஷபகமாஸநேமணி மயேவீராஸநேஸுஸதிதம*
*அகரேவாசயதிபரபஞஜ நஸுதேததவமமுனிபய:பரம*
*வயாகயாநதமபரதாதிபி: பரிவருதமராமமபஜேஶ்யாமளம.*

## சுந்தரகாண்டத்தியானம்.

వన్దే లక్ష్మణవానరేన్ద్రమహితం వన్దారుమన్దారకం
చన్ద్రాలోకనిరాసికాయసుషమం చార్వంచితభ్రూలతం.
సీతామౌళినివేశధన్యమమలం వాతాత్మజేనార్పితం
చూడారత్నమురోనివేశ్య వివశం శోకైరశోకైశ్చితం,

வநதேலக்ஷமணவாநரேநதர மஹிதமவநதாருமநதாரகம்
சநத்ராலோகநிராஸிகாய ஸுஷமம்சாரவஞ்சிதப்ரூலதம்.
ஸீதாமௌளிநிவேசதன்ய மமலம்வாதாதமஜேநாபிதம
சூடாரத்நமுரோநிவேச்ய விவசம்சோகைரசோகைசசதம்.

# முதலாவது சருக்கம்.

## சிறியதிருவடி கடலைக்கடந்து அக்கரைசேர்ந்தருளியது.

 శ్లో॥ తతో రావణనీతాయాస్సీతాయాశ్శత్రుకర్శనః
ఇయేష పదమన్వేష్టుం చారణాచరితే పథి.

(பதம்.) ததஃ*சத்ருகர்சநஃ*ராவணநீதாயாஃ*ஸீதாயாஃ* . *
பதம*அன்வேஷ்டும*சாரணாசரிதே*பதி*இயேஷ* .. ..(க)

దుష్కరం నిష్ప్రతిద్వంద్వం చికీర్షన్ కర్మ వానరః
సముదగ్రశిరోగ్రీవో గవాంపతిరివాబభౌ.

நிஷ்பரதித்வந்த்வம*துஷ்கரம*கர்ம*சிகீர்ஷன*வானரஃ* *
ஸமுதக்ரசிரோக்ரீவஃ*கவாம*பதிஃ*இவ*ஆபபௌ* . (உ)

అథ వైడూర్యవర్ణేషు శాద్వలేషు మహాబలః
ధీరస్సలిలకల్పేషు విచచార యథాసుఖమ్.

அத*மஹாபலஃ*தீரஃ*வைடூர்யவர்ணேஷு*... ... *
ஸலிலகல்பேஷு*சாத்வலேஷு*யதாஸுகம*விசசார*. (௩)

ద్విజాన్ విత్రాసయన్ ధీమానురసా పాదపాన్ హరన్
మృగాంశ్చ సుబహూన్ నిఘ్నన్ ప్రవృద్ధ ఇవ కేసరీ

தீமான*பாதபான்*கேஸரீ*இவ*த்விஜான*வித்ராஸயன* ... *
உரஸா*பாதபான*ஹரன*ஸுபஹூன*ம்ருகாம்ச்ச*நிக்னன* (௪)

## தாத்பர்யம்.

அநந்தரம் * பகைவர்களைக் கொல்லவல்ல சிறியதிருவடி * ராவணனாலபஹரிக்கப்பட்ட * பிராட்டியார் * எழுந்தருளியிருக்குமிடத்தைத் * தேடுவதின்பொருட்டு * சாரணரென்னும் தேவர்கள் ஸஞ்சரிக்குமிடமான * ஆகாசமார்க்கத்தில் * எழுந்தருளவேண்டுமென்று நினைத்து (க) தடையில்லாமல் * பிறரால் செய்யக்கரிய * காரியத்தைச் * செய்ய நிச்சயங்கொண்டு * வானரஜாதியாரியும் * மிக உயர்ந்த தலை கழுத்துகளையுடையவராய் * ஆவினங்களுக்குப் * பதியான காளை * போல * மிக விளங்கி (உ) பின்பு * சிறந்த தோள்வலியுற்றவரும் * தீரமுடையவருமான * (ஆதலின்) வைடூரியமணிபோன்ற வர்ணமுடையனவும் * நன்னீர்போலக் குளிர்ந்தனவுமாகிய * இளம்புல்லுடைய மகேந்திரமலையின் மேற்புரங்களில் * ஸுகமாக * உலாவி (௩) சிறந்த புத்தியுடையோராதலின், * மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்ட * சிறிய சிங்கம் * போல * பறவைகளை * அச்சமுற்றோடச்செய்தும், * மார்பினாலே * மரங்களை * முறித் திழுத்துக்கொண்டும் * பற்பல * மிருகங்களை * யடித்தும்,........(௪)

నీలలోహితమాంజిష్ఠపత్రవర్ణైస్సితాసితైః
స్వభావవిహితైశ్చిత్రైర్ధాతుభిస్సమలఙ్కృతం.

(பதம்) நீல*லோஹித*மாஞ்சிஷ்ட*பத்ரவர்ணை:*ஸிதாஸிதை:* ... *
ஸ்வபாவவிஹிதை:*சித்ரை:*தாதுபி:*ஸமலங்க்ருதம்* ... (௫)

కామరూపిభిరావిష్టమభీక్ష్ణంసపరిచ్ఛదైః
యక్షకిన్నరగన్ధర్వైర్దేవకల్పైశ్చపన్నగైః

காமரூபிபி:*ஸபரிச்சதை:*யக்ஷகின்னரகந்தர்வை:*... ... *
தேவகல்பை:*பந்நகை:ச*அபீக்ஷ்ணம்*ஆவிஷ்டம்* (௬)

సతస్యగిరివర్యస్య తలేనాగవరాయుతే
తిష్ఠన్కపివరస్తత్ర హ్రదేనాగఇవాబభౌ.

தஸ்ய*கிரிவர்யஸ்ய*நாகவராயுதே*தத்ர*தலே*திஷ்டன்* ... *
ஸ:*கபிவர:*ஹ்ரதே*நாக:*இவ*ஆபபௌ* . .. (௭)

ససూర్యాయమహేంద్రాయపవనాయస్వయంభువే
భూతేభ్యశ్చాఞ్జలిం కృత్వాచకారగమనేమతిం.

ஸ:*ஸூர்யாய*மஹேந்த்ராய*பவநாய*ஸ்வயம்புவே* ... *
பூதேப்ய:ச*அஞ்சலிம்*க்ருத்வா*கமநே*மதிம்*சகார* (௮)

நீலவண்ணமுற்றும்,*செவ்வரத்தும்,*ரத்தவண்ணமுற்றும்,*பச்சையிலே போலக்கறுத்தும்,*வெளுத்தும் கறுத்தும்,*இயல்பாகவே தோன்றியும்,* பலவண்ணமுற்றுமிருக்கின்ற*கைரிகாதி தாதுக்களினாலே* அலங்கரிக்கப் பட்டும், (௫) நினைத்தபடி ரூபந்தரிக்கவல்ல * இனபுற்று வாழ்வதற்குரிய பரிஜந பரிவாரங்களையுமுடைய * யக்ஷகின்னர கந்தர்வர்களாலும், * தேவர்களுக்கு நிகரான*பன்னகர்களாலும்*இடைவிடாதெப்பொழுதும் எங்கும்* அடையப்பட்டதுமாகி (௬) (விளங்கியது எந்த இடமோ) அந்த*வரையரனை மஹேந்திரமலையினுடைய * சிறந்த மால் யானைகள் நிறைந்த* அந்த * இடத்திலே*நின்ற*அந்த*வாநரர் கோமான * (வியன்றகன்ற) மடுவினில* (திரிகின்ற) மதவேழம்*போல*மிகத் திகழ்ந்தனர். (௭) (பின்பு) அந்தச் சிறியதிருவடி*தமக்கு ஆசார்யனான ஸூர்யனுக்கும், * ஜகத்ரக்ஷா கரணத்தை இயற்றிய தேவேந்திரனுக்கும்,*தமக்குப் பிதாவாகிய வாயுபக வானுக்கும், * தமக்கு வேண்டும் வரங்களை யளித்த நான்முகனுக்கும்,* மற்றுமுள்ள பூதங்களுக்கும் * கைகூப்பித்*தொழுது * வான்மிசை செல் வதில்*மனங்*கொண்டு, .. ... ... ... ... (௮)

అఞ్జలిం ప్రాఙ్ముఖః కృత్వా పవనాయాత్మయోనయే
తతో హి వవృధే గన్తుం దక్షిణో దక్షిణాం దిశం

(பதம்.) தக்ஷிண:*ஆத்மயோநயே*பவநாய*ப்ராங்முக:*அஞ்ஜலிம்* ... *
க்ருத்வா*தக்ஷிணாம்*திசம்*கந்தும்*தத:*வவ்ருதே* ... (௯)

ప్లవఙ్గప్రవరైర్దృష్టః ప్లవనే కృతనిశ్చయః
వవృధే రామవృద్ధ్యర్థం సముద్ర ఇవ పర్వసు.

ப்லவங்கப்ரவரை:*த்ருஷ்ட:*ப்லவநே*க்ருதநிச்சய:* .. *
பர்வஸு*ஸமுத்ர:*இவ*ராமவ்ருத்த்யர்த்தம்*வவ்ருதே* ... (௧௦)

నిష్ప్రమాణశరీరస్సన్ లిలఙ్ఘయిషురర్ణవం
బాహుభ్యాం పీడయామాస చరణాభ్యాం చ పర్వతం.

நிஷ்ப்ரமாணசரீர:ஸந்*அர்ணவம்*லிலங்கயிஷு:* ... *
பாஹுப்யாம்*சரணாப்யாம்*ச*பர்வதம்*பீடயாமாஸ* ... (௧௧)

స చచాలాచలశ్చాపి ముహూర్తం కపిపీడితః
తరూణాం పుష్పితాగ్రాణాం సర్వం పుష్పమశాతయత్.

ஸ:*அசல:*ச*அபி*கபிபீடித:*முஹூர்த்தம்*சசால* .. *
புஷ்பிதாக்ராணாம்*தரூணாம்*ஸர்வம்*புஷ்பம்*அசாதயத்* . (௧௨)

மிகத் திறமையுடையோராதலின், * தமக்குத்தந்தையாகிய * வாயுபகவான்பொருட்டு * க்கிழக்குமுகமாகக் * கை*கூப்பி * த்தென * திசையை நோக்கி*ச்செல்வதன்பொருட்டு*பின்பும்*வளர்ந்து* (௯) வாநர தலைவர்களால்*பார்க்கப்பட்டு*மேலே எகிறுவதில * உறுதிகொண்டு*பர்வகாலங்களிலே*பொங்கோதம்*போல*ப்பெருமானுக்குநலமுடவளர்வதன்பொருட்டு*த்தாமும் மிகவளர்ந்து(௰) அளவிடற்கரிய மேனியுடையராய*அலைகடலைத்*தாண்டிச்செல்ல விருப்பங்கொண்டு * கைகளினாலும், * கால்களினாலும் * அந்த மஹேந்திரமலையைப்பற்றிப் * பிடித்தசைத்தனர். (௧௧) அந்த * மஹேந்திரமலையும் * சிறியதிருவடியினால் பிடிக்கப்பட்டதாகி * முகூர்த்த காலம் * அசைந்து * மலர்ந்த கிளைகளையுடைய * பற்பல மரங்களிலுள்ள * எல்லா*மலர்களையும்*உதிர்த்து, ... ... ... ... (௧௨)

తేన పాదపముక్తేన పుష్పౌఘేణ సుగన్ధినా
సర్వతస్సంవృతశ్శైలో బభౌ పుష్పమయో యథా

(பதம்) பாதபமுக்தேந*ஸுகந்திநா*தேந*புஷ்பௌகேண*ஸர்வதஃ*... *
ஸம்வ்ருதஃ*புஷ்பமயஃ*சைலஃ*யதா*பபௌ* .. ... (க௩)

తేన చోత్తమవీర్యేణ పీడ్యమానస్స పర్వతః
సలిలం సంప్రసుస్రావ మదం మత్త ఇవ ద్విపః

உத்தமவீர்யேண*தேந*பீட்யமாநஃ*ஸஃ*பர்வதஃ* .. *
மத்தஃ*த்விபஃ*மதம*இவ*ஸலிலம*ஸம்ப்ரஸுஸ்ராவ* .. (க௪)

పీడ్యమానస్తు బలినా మహేన్ద్రస్తేన పర్వతః
రీతీర్నిర్వర్తయామాస కాఞ్చనాఞ్జనరాజతీః.

பலிநா*தேந*பீட்யமாநஸ்து*மஹேந்த்ரஃ*பர்வதஃ* .. *
காஞ்சநாஞ்ஜநராஜதீஃ*ரீதீஃ*நிர்வர்தயாமாஸ* .. (க௫)

ముమోచ చ శిలాశ్శైలో విశాలాస్సమనశ్శిలాః
మధ్యమేనార్చిషా జుష్టో ధూమరాజీరివానలః.

சைலஃ*ஸமநச்சிலாஃ*விசாலாஃ*சிலாஃ*மத்யமே* . ... *
அர்சிஷா*ஜுஷ்டஃ*அநலஃ*தூமராஜீஃ*இவ*முமோச*... (க௬)

அம்மரங்களினின்றுமுதிர்ந்த*நறுமணமவீசுகின்ற*அந்த*மலர்களின குவையினால*எங்கும*மறைக்கப்பட்டதாகி*மலர்மயமான*மாமலை*போல வே*விளங்கிற்று*(க௩) நிகரற்ற தேஹபலமுடைய*அந்த மாருதியினாலே* பிடிக்கப்பட்ட*அந்த*மகேந்திரமலை*மதமேறிய*மால்யானை*மதஜலத்தை* (பெருக்குவது) போல*அருவிநீரை*ப்பெருக்கச்செய்தது, (க௪) மஹாபல முள்ள*மஹாபலகுமாரரான அந்த அனுமானாலே * பிடிக்கப்பட்ட*அந்த* மஹேந்திரமலை * ( அழுந்திப் பிளவுற்று ) பொன் அஞ்சனம் வெள்ளி களின் நிறமுற்ற*ரேகைகளை*யுண்டாகச்செய்தது. (க௫) அம்மலை * மநச் சிலையென்னும் கற்களுடன கூடிய * விசாலமான * சிலைகளையும் * நடுவி லெழுந்தெரிகின்ற * ஜ்வாலையுடன்*கூடிய *அக்கினி*புகை வரிசைகளை* (மேலெழச் செய்வது) போல*மேலெழச்செய்தது. ... ... (க௬)

భూతైరయంగిరిస్సంగృహీత ఇతి మత్వా తపస్వినః
త్రస్తా విద్యాధరా స్తస్మా దుత్పేతు స్స్త్రీగణై స్సహ.

(பதம்.) அயம்*கிரி:*பூதை:*ஸங்க்ருஹீத:*இதி*மத்வா*தபஸ்வின:* ... *
வித்யாதரா:*த்ரஸ்தா:*ஸ்த்ரீகணைஸ்ஸஹ*தஸ்மாத்*உத்பேது:(௨௨)

పానభూమిగతం హిత్వా హైమ మాసవభాజనం
పాత్రాణి చ మహార్హాణి కరకాంశ్చ హిరణ్మయాన్.

பாநபூமிகதம்*ஹைமம்*ஆஸவபாஜநம்*ஹித்வா* ... *
பாத்ராணிச*மஹார்ஹாணி*கரகாம்ச*ஹித்வா* ... (௨௩)

లేహ్యానుచ్చావచాన్ భక్ష్యాన్ మాంసాని వివిధాని చ
ఆర్షభాణి చ చర్మాణి ఖడ్గాంశ్చ కనకత్సరూన్.

உச்சாவசான்*லேஹ்யான்*பக்ஷ்யான்*விவிதானி*மாம்ஸானிச* ... *
ஆர்ஷபாணி*சர்மாணிச*கனகத்ஸரூன்*கட்காம்ச* .. (௨௪)

కృతకణ్ఠగుణాః క్షీబా రక్తమాల్యానులేపనాః
రక్తాక్షాః పుష్కరాక్షాశ్చ గగనం ప్రతిపేదిరే

புஷ்கராக்ஷா:*ரக்தாக்ஷா:*ரக்தமால்யானுலேபனா:* . *
மத்தா:*க்ருதகண்டகுணா:*ககனம்*ப்ரதிபேதிரே* .. (௨௫)

హారనూపురకేయూర పారిహార్యధరాః స్త్రియః
విస్మితాస్సస్మితాస్తస్థు రాకాశే రమణైస్సహ

ஹாரநூபுரகேயூர பாரிஹார்யதரா:*ஸ்த்ரிய:*ரமணை:* .. *
ஸஹ*விஸ்மிதா:*ஸஸ்மிதா:*ஆகாசே*தஸ்து:*... ... (௨௬)

இந்த*மலை*பூதங்களாலே * பீடிக்கப்படுகின்றது *என்று*எண்ணி*த்தவசிகளும்* (மேலெழுந்தனர்கள்) வித்யாதரர் என்னும் தேவர்களும்* அச்சமுற்று* பெண்களின் கூட்டங்களுடன் கூடி * அம்மலையினின்றும்* மேலெழுந்து* (௨௨) பானசாலையிலிருந்த*பொன்னாற்செய்த*கள் நிறைந்த பாத்திரத்தையும்*மிக விலை பெற்ற*உண் கலங்களையும்*பொன்மயமான* பானபாத்திரங்களையும்* விட்டு விட்டும்* (௨௩) மிகவும் மிகுதியான*லேகியங்களையும்*பக்ஷியங்களையும்* பலவகைப்பட்ட *மாம்ஸங்களையும் * எருத்துத் தோலினாற் செய்த * கேடயங்களையும் * தங்கப்பிடி கட்டிய * வாள்களையும்* (௨௪) வெண்டாமரைபோன்ற கண்களையுடையவர்களாயிருந்தும்* மதுபானத்தால் சிவந்த கண்களை யுடையவர்களாகியும்*செம்மலர் சூடிச் செஞ்சாந்தம் பூசிக்கொண்டவர்களாயிருந்தும் * மதமயக்குற்றிருந்தனும் பின் * அம்மலர்மாலைகளை யறுத்துவிட்டும் * ஆகாசத்தை * யடைந்தனர்கள்* (௨௫) முத்துவடம் சதங்கைத் தண்டை தோளவளை கைவளைகளை யணிந்துகொண்ட*பெண்களும்* கணவர்களுடன்*கூடி * வியப்புடையவர்களும்*புன்னகை யுடையவர்களுமாகி*விண்மிசை*யேறி நின்றனர்கள்(௨௬).

త్రాసయంతో మహావిద్యాం విద్యాధరమహర్షయః

సహితాస్తస్థురాకాశే వీక్షాంచక్రుశ్చ పర్వతం.

(பதம்.) வித்யாதரமஹர்ஷய: * மஹாவித்யாம் * த்ராஸயாந்த: * ... *
ஸஹிதா: * ஆகாசே * தஸ்து: * பர்வதம் * வீக்ஷாஞ்சக்ருச்ச *... (உஎ)

శుశ్రువుశ్చ తదా శబ్ద మృషీణాం భావితాత్మనాం

చారణానాం చ సిద్ధానాం స్థితానాం విమలేఽంబరే.

ததா * விமலே * அம்பரே * ஸ்திதாநாம * பாவிதாத்மநாம் *  ... *
ருஷீணாம் * சாரணாநாம் * ஸித்தாநாம * சப்தம * சுச்ருவுச்ச *... (உஅ)

ఏష పర్వతసంకాశో హనూమాన్మారుతాత్మజః

తితీర్షతి మహావేగ స్సముద్రం మకరాలయం.

ஏஷ: * மாருதாத்மஜ: * ஹநூமாந * பர்வதஸங்காச: * ... ... *
மஹாவேக: * மகராலயம * ஸமுத்ரம * திதீர்ஷதி *. ... ... (உகூ)

రామార్థం వానరార్థం చ చికీర్షన్కర్మ దుష్కరం

సముద్రస్య పరం పారం దుష్ప్రాపం ప్రాప్తుమిచ్ఛతి.

ராமார்த்தம * வாநரார்த்தஞ்ச * துஷ்கரம * கர்ம * சிகீர்ஷந * ... *
துஷ்ப்ராபம * ஸமுத்ரஸ்ய * பரம * பாரம * ப்ராப்தும * இச்சதி *. (௩௦)

ఇతి విద్యాధరాః శ్రుత్వా వచస్తేషాం మహాత్మనాం

తమప్రమేయం దదృశుః పర్వతే వానరర్షభం.

இதி * மஹாத்மநாம * தேஷாம * வச: * வித்யாதரா: * ... ... *
ச்ருத்வா * அப்ரமேயம * வாநரர்ஷபம * தம * பர்வதே * தத்ருசு: * (௩௧)

மஹாமுனிவர்களைப்போன்ற மகிமையுடைய சிறந்த வித்தியாதரர்களும் * அணிமை முதலிய எட்டு சித்திகளையும் * ஸாதித்துக்கொண்டிருந்து * எல்லோரும் சேர்ந்து * வான்மிசை * யேறி நின்று * அம்மயேந்திரமலையையும் * நோக்கி * (உஎ) அப்பொழுது * நிர்மலமான * விண்ணிடையில் * நிற்கின்ற * யோகத்தில் நிலைகொண்ட சிந்தையரான * மாமுனிவர்களினுடையவும் * சாரண தேவர்களினுடையவும் * சித்த தேவர்களினுடையவும் * சத்தத்தைச் * செவியுற்றனர்கள் * (உஅ) இந்த * வாயு குமாரனை * சிறிய திருவடி * மாமலை போலப் பருத்துயர்ந்து * மஹாவேகங்கொண்டு * மகரமீன்களுக் கிருப்பிடமாகிய * ஆழ்கடலை * கடந்து செல்லக் கருதுகின்றனன் * (உகூ) சக்கரவர்த்தித் திருமகனான பெருமானுக்காகவும் * மஹாராஜர் முதலிய வானரர்களுக்காகவும் * செயற்கரிய * செயலைச் * செய்யக் கருதி * அடைதற்கரிய * பெருங்கடலினுடைய * அந்த * க்கரையை * யடைக் * கோருகின்றனன். (௩௦) என்று * மஹாத்துமாவான * அந்த தேவகணங்களினுடைய * வாக்கியங்களை * அந்த வித்தியாதரர்கள் * கேட்டுணர்ந்து * அளவிடற்கரிய * வானரர் கோமானை * அந்தச் சிறியதிருவடியையும் * மலையின்மிசை * கண்டனர்கள் *.........(௩௧)

దుధువే చ స రోమాణి. చకంపే చాచలోపమః

ననాద సుమహానాదం సుమహానివతోయదః

(பதம்.) ஸ: * ரோமாணிச * துதுவே * அசலோபம: * சகம்பேச * ..
ஸுமஹான் * தோயத: * இவ * ஸுமஹாநாதம் * நநாத * ... (௧௨)

ఆనుపూర్వ్యేణ వృత్తం చ లాంగూలం రోమభిశ్చితం

ఉత్పతిష్యన్విచిక్షేప పక్షిరాజ ఇవోరగం.

ஆனுபூர்வ்யேண * வ்ருத்தம் * ரோமபி: * சிதம் * லாங்கூலம் * ...
பக்ஷிராஜ: * உரகம் * இவ * உத்பதிஷ்யன் * விசிக்ஷேப * ... (௧௩)

తస్య లాంగూల మావిద్ధ మాత్తవేగస్య పృష్ఠతః

దదృశే గరుడేనేవ హ్రియమాణో మహోరగః.

ஆத்தவேகஸ்ய * தஸ்ய * ப்ருஷ்டத: * ஆவித்தம் * லாங்கூலம் * .. *
கருடேந * ஹ்ரியமாண: * மஹோரக: * இவ * தத்ருசே *. ... (௧௪)

బాహూ సంస్తంభయామాస మహాపరిఘసన్నిభౌ

ససాద చ కపిః కట్యాం చరణౌ సంచుకోచ చ.

கபி: * மஹாபரிகஸந்நிபௌ * பாஹூ * ஸம்ஸ்தம்பயாமாஸ * ... *
கட்யாம் * ஸஸாதச * சரணௌ * ஸஞ்சுகோசச * .. ... (௧௫)

సంహృత్య చ భుజౌ శ్రీమాన్ తథైవ చ శిరోధరాం

తేజస్సత్త్వం తథా వీర్య మావివేశ స వీర్యవాన్.

வீர்யவான் * ஸ்ரீமான் * ஸ: * புஜௌ * ததைவச * சிரோதராம் * ... *
ஸம்ஹ்ருத்ய * தேஜ: * ஸத்வம் * ததா * வீர்யம் * ஆவிவேச * ... (௧௬)

அம்மாருதியும் * ரோமங்களைச் * சிலிர்த்தும் * பெருமலைபோல் * அசைந்தும் * நீருண்டுயர்ந்து முழங்குகின்ற * மேகம் * போல * பேரொலியெழுமாறு * முழங்கியும் * (௧௨) அடி முதல் நுனிவரையில் முறையே * நீண்டு திரண்டும் * மயிர்கள் * அடர்ந்து முள்ள * லாங்கூலத்தைப் * பெரிய திருவடி * பெருநாகத்தை * (ச்சுழற்றுவது) போல * வானமிசையெழ விருப்பங்கொண்டு * சுழற்றியுதறினார் * (௧௩) வேகமுற்ற * அந்த மாருதியினுடைய * பின்புறத்தில் * சுழற்றியுதறப்பட்ட * அந்த லாங்கூலம் * பெரிய திருவடியினாலே * பற்றியிழுக்கப்பட்ட * கொடிய நாகம் * போல * க்காணப்பட்டது. (௧௪) அம்மாருதி * பருத்து நீண்ட கோட்டைவாயில் குறுக்குத்தடிகள்போன்ற * கைகளை * மலையைப் பற்றியசையாமலூன்றியும் * இடுப்பைச் * சுருக்கியும் * கால்களை * மடக்கியும் (௧௫) (இயல்பாகவே) வீரியமுடையவரும் * காந்தியுடையவரும் * புகழுடையவரும் * (ஆகிய) புஜங்களையும் * அவ்வண்ணமே * கழுத்தையும் * சுருக்கியும் * தேஜஸ்ஸையும் * பலத்தையும் * அப்படியே வீரியத்தையும் * அதிகமாக மேற்கொண்டும் ... ... (௧௬)

మార్గమాలోకయన్ దూరా దూర్ధ్వం ప్రణిహితేక్షణః
రురోధ హృదయే ప్రాణా నాకాశమవలోకయన్.

(பதம்.) ஊர்த்வம * ப்ரணிஹிதேக்ஷணஃ * தூராத * மார்கம் * ஆலோகயன * ... *
ஆகாசம * அவலோகயன * ஹ்ருதயே * ப்ராணான * ருரோத * ... (௧௭)

పద్భ్యాం దృఢమవస్థానం కృత్వా స కపికుంజరః
నికుంచ్య కర్ణౌ హనుమా నుత్పతిష్యన్ మహాబలః.

கபிகுஞ்சரஃ * மஹாபலஃ * ஸஃ * ஹநுமான * உத்பதிஷ்யன * ... ... *
பத்ப்யாம * த்ருடம * அவஸ்தானம * க்ருத்வா * கர்ணௌ * நிகுஞ்ச்ய * ()

వానరాన్ వానరశ్రేష్ఠ ఇదం వచనమబ్రవీత్
యథా రాఘవనిర్ముక్త శ్శరశ్శ్వసనవిక్రమః.

வானரச்ரேஷ்டஃ * வானரான * இதம * வசனம * அப்ரவீத * .. *
ராகவநிர்முக்தஃ * ச்வஸனவிக்ரமஃ * சரஃ * யதா * ... ... (௧௯)

గచ్ఛేత్తద్వద్గమిష్యామి లంకాం రావణపాలితాం
నహి ద్రక్ష్యామి యది తాం లంకాయాం జనకాత్మజాం

கச்சேத * தத்வத * ராவணபாலிதாம் * லங்காம் * கமிஷ்யாமி * ... *
லங்காயாம் * தாம * ஜநகாத்மஜாம * நஹி த்ரக்ஷ்யாமி * .... (௨௰)

மேற்புறத்திலே * நோக்குற்ற கண்களையுடையராகி * நெடுந்தூரம் * தான் செல்லும் வழியைப் * பார்த்து * (பின்னர்) ஆகாசத்தை * நோக்கிக்கொண்டு * இதயத்திலே * மூச்சை * யடக்கியும * (௧௭) வானரர்களுள் சிறந்தவரும * மஹாபல முற்றவரும * புகழுடையோரும * அநுமானென்றுகாரண விடுகுறிப் பெயருடையோரும் * (ஆதலின்,) வான்மிசை யெழுந்தெகிரக்கருதி * கால்களினுமேல * திடமாக * ஊன்றியிருக்குநிலையை * மேற்கொண்டு * காதுகளையும * மடக்கிக்கொண்டும் (௧௮) வானரர்களுள் சிறந்தவராதலின், * தம்முடன்வந்த அங்கதன்முதலான வானரர்களைநோக்கி * இவ்வண்ணம் * மொழியலுற்றனர். (கேளீர்! அன்பர்களே) பெருமாளையத * வாயுவேகமுள்ள * பாணம் * எவ்வண்ணம் * (௧௯) (தடையின்றிச்) செல்லுமோ * அவ்வண்ணமே * (யான்) ராவணனால் பாதுகாக்கப்பட்ட * இலங்கையை நோக்கி * ச்செல்வேன * அந்த லங்காபுரியிலே * அந்த ஜநகராஜன் திருமகளைக் * கண்டு மகிழ்வுறேனாகில் (௨௰)

